
மூதறிஞர் செம்மல் வ. சுப. மாணிக்கனார்
(17.04.1917 - 24.04.1989)
நூற்றாண்டு
திருவுருவச்சிலை
தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்
தலைமையில்
உயர்திரு கருமுத்து தி. கண்ணன் அவர்களால்
திறந்துவைக்கப்பெற்றது.
(திருவள்ளுவர் ஆண்டு 2048 ஆவணித் திங்கள் 17)
02.09.2017
மேலைச்சிவபுரி


செம்மல்
வ.சுப.மா 100




மூதறிஞர் செம்மல்
வ.சுப.மாணிக்கனார்
நூற்றாண்டு விழா மலர்
1917-2017
பதிப்பாசிரியர்கள்
பேராசிரியர் முனைவர் பழ. முத்துவீரப்பன்
முனைவர் சொ. சேதுபதி

முதறிஞர் செம்மல்
வ.சுப.மாணிக்கனார்
நூற்றாண்டுவிழா மலர்
(1917-2017)

மலர்க்குழுவினர்
செம்மல் வ.சுப.மா.குடும்பத்தார்

பதிப்பாசிரியர்கள்
பேராசிரியர் பழ.முத்துவீரப்பன்
முனைவர் சொ.சேதுபதி

வடிவமைப்பு
சொ. அருணன்

அச்சு
சூர்யா பிரிண்ட்ஸ் சொலூசன்ஸ்
சிவகாசி

வெளியீடு
கதிரகம்
சுப்பிரமணியபுரம் 6ஆவது தெரு,
காரைக்குடி-2

தொடர்புகளுக்கு:
கபிலன் பதிப்பகம்
321, மூன்றாவது முதன்மைச் சாலை,
மகாவீர் நகர், இலாசுப்பேட்டை,
புதுச்சேரி - 605008
arunankapilan@gmail.com




# நூற்றாண்டு விழா

**2016 - 2017**





# மலர் கொண்டு பணிந்தோம் மகிழ்ந்து!

**'மா'** என்னும் ஓர் எழுத்து ஒருமொழியாகிய சொல்லுக்கு எத்தனையோ பொருள் உண்டு. ஆனால், அதற்குத் தமிழ் வாழ்வான தம் வாழ்வு கொண்டு பொருள் விளக்கம் தந்த பெருமை, செம்மல் வ.சுப. மாணிக்கனாருக்கு உண்டு.

வாய்மை நெறிநின்று வாழ்வாங்கு வாழ்ந்து நூற்றாண்டு கண்ட தூய்மை நிறை வாழ்க்கை உடைய மனித மாணிக்கம் அவர்.

அவருக்குத் தமிழ்தான் தெய்வம். தொல்காப்பியரும் திருவள்ளுவரும் மெய்யறிவு புகட்டிய மேன்மைசால் ஆசான்கள். சங்கத் தமிழ் அவருக்குத் தாய்ப்பால் நிகர்த்தது. கம்பரும், இளங்கோவும், இன்னபிற இலக்கியவாணர்களும் அவருக்குள் நல்லறிவு கொளுத்திய ஞான தீபங்கள். குருநாதரான பண்டித மணியார்பால் பத்திமை கொண்ட உத்தமசீலர்.

மறைமலை அடிகள் தனித்தமிழ் இயக்கங் கண்டதுபோல், செம்மலார் தோற்றுவித்த தமிழ்வழிக் கல்வி இயக்கம் வரலாற்றுச் சிறப்புடையது. தென் பாண்டி நாட்டானாகிய தில்லையுட் கூத்தன் திருச்செவிகள் புளகமுறத் தேவாரத்திருமுறைகளை அம்பலத்தில் ஏற்றுதற்கு அரும்பாடுபட்டவர்.

சங்ககாலச் செய்யுள்நடை சமகாலத்து உரைநடை யானது அவர்தம் எழுதுகோலால். முத்தமிழுக்கும் வித்துக்களைப்போல் நல்ல ஆக்கங்களை நல்கிய அவர்தம் படைப்புளம், மாணாக்கர்குழாமையும் மக்கள் உளங்களையும் செம்மைப்படுத்தியதுதான் சிறப்பு.

பதவி பல ஏற்றும், பணிகள் பல புரிந்தும், தன்னை எவ்விடத்தும் முன்னிலைப்படுத்திக் கொள்ளாத தமிழ்த்தவக்குன்று அவர்.

வாணாள் ஒருபோதும் வீணாள் ஆகாமல் தன்னைத் தமிழுக்கு நல்கிய அவர்தம் தனிப் பெருங்கொடைமையை எண்ணிவியக்காதார் இலர் எனும் மெய்ம்மைக்குச் சான்றாக மலரும் இந்த மலர், அவர்தம் பான்மையை விளக்கும் பானைச்சோற்றுக்குப் பதச்சோறாகிறது.

உற்றார், உறவினர், நட்டோர், நன்மாணாக்கர், கற்றோர், இன்னும் கற்போர் எனப்பலரும் தாம் கண்ட தமிழ்மாணிக்கத்தின் தனியாளுமையைத் தத்தம் தமிழ்கொண்டு நுண்ணிதின் விளக்கிய சொல்லோவியங்களின் அணிவகுப்பாய் அமைகிறது இந்தக் குறுந்தொகுப்பு.

அருளாளர்களின் 'வாழ்த்துமலரை' அடுத்துக் கவிவாணர்களின் 'கவிமலர்' இடம்பெற வளரும் இம்மலரில், 'மாணிக்க நினைவுகளை'ச் சான்றோர் பலரும் பதிவு செய்திருக்கிறார்கள். வரலாறு சார்ந்த அப்பதிவுகள் யாவும் அவர்களது கண்ணோட்டத்தில் விளைந்த கருத்துக்கனிகள்.

பின்னர் வளரும் பக்கங்கள் முப்பெரும் பிரிவுகளாக அமைகின்றன. முன்னது, 'தமிழ் மாணிக்கம்' என்பதாகும். செம்மல் வ.சுப.மா. வழங்கிய செழுமைநிறை படைப்புகளில் மூழ்கித் திளைத்த ஆய்வாளர்களின் உள்ளத்துணர்வுகளை வெள்ளமாய்க் காட்டும் பகுதி இது.

அடுத்து அமைவது, 'மாணிக்கத்தமிழ்'. படைப்பு பல படைத்த அப்பெருமகனார், மதுரை வானொலி நிலையத்திற்கு அளித்த பேட்டியின் எழுத்தாக்கம், அவர் எழுதிய சில மடல்கள், அணிந்துரையிலிருந்து ஒன்று எனச் சில பகுதிகள் இதில் இடம்பெறுகின்றன. காலத்தின் சாட்சியங்களாக அமையும் அவர்தம் ஆக்கங்களில் இருந்து, இந்தக் காலத்திற்கு இன்றியமையாத- செயல்படத்தூண்டும் சிந்தனைக் கருவூலங்களாக இவை அமைகின்றன என்பதால் இந்த மலரில் இடம்பெறுகின்றன. இடையிடையே மாணிக்கச் சிந்தனைகளையும் இயன்றவரையில் அமைத்துத் தந்திருக்கிறோம்.

மூன்றாவது பகுதி, நிலை கொண்ட வாழ்வால் சிலை கண்ட செம்மலாரின் நூற்றாண்டு நிறைவுவிழாச் செய்திகள், ஒரு பருந்துப் பார்வையாகப் பதிவு பெறுகிறது. கூடவே, அவ்விழாவில் அறிஞர்கள் ஆற்றிய உரைகளின் சில பகுதிகளும். முழுக்கவும் தர இயலாமை பொறுத்தருள்க!

இடையில் அமைந்துள்ள வண்ணப்பக்கங்களில் ஒருசில நிழற்படங்கள் அத்திருமகனாரின் வாழ்க்கைப்பக்கங்களை நம் எண்ணத்துள் கிளர்த்துகின்றன.

இன்னும் எவ்வளவோ இம்மலருள் கொண்டு நிறைத்துக் கொடுக்கப் பேராவல்.

காலமும் சூழலும் கைகொடுத்த அளவிற்குள் இவ்வளவுதான் முடிகிறது. ஆனாலும், காலத்தை வென்ற அக்காவியநாயகரின் மேன்மையைத் தமிழுலகம் நன்கு உணர்ந்து செயற்படத் தொடங்கினால், இன்னும் ஒரு நூற்றாண்டு மலர் கொண்டு வருவதற்கு வேண்டிய சாத்தியக்கூறுகள் ஏராளம் உண்டு.

இந்த மலர் உருவாக எல்லாநிலைகளிலும் ஆக்கமும் ஊக்கமும் அளித்த அத்துணை பெருமக்கள் யாவருக்கும் நன்றி.

வாழ்த்துரை நல்கியதோடு, செம்மலார் பிறந்த மேலைச்சிவபுரிக்கு எழுந்தருளி, சிலை திறப்பு விழாவிற் பங்கேற்றுச் செழுந்தமிழ் உரை நல்குகின்ற குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனக் குருமகாசந்நிதானம் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார், கோவிலூர் ஆதீனக் குருமாமணி சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள், சிலையைத் திறந்து வைத்து உரையாற்றிய திரு. கரு முத்து தி. கண்ணன் அவர்கட்கும், மருத்துவர்கள், பேராசிரியர்கள், செம்மலார்தம் உற்றார், உறவினர், நட்பினர், நன் மாணாக்கர்கள் ஆகிய சான்றோர்கள் அனைவருக்கும் நெஞ்சம் நிறை அன்பும் நன்றியும்.

உரிய காலத்தில் சிரமம் பாராமல் கட்டுரைகள் நல்கிய சான்றோர் பெருமக்கள், செம்மலாரின் நன்மாணாக்கர்கள், ஆய்வாளர்கள், கவிவாணர்கள், செம்மையுற வடிவமைத்த இளவல் சொ.அருணன், நலமுற அச்சிட்ட சிவகாசி சூர்யா அச்சக உரிமையாளர் திரு.சொ. முருகேசன் உள்ளிட்ட அன்பர்கள் யாவருக்கும் நன்றி.

இந்த மலர் கொண்டு பணிவதற்கு வாய்ப்பளித்த வ.சுப.மா.குடும்பத்தார், சுற்றத்தார் யாவருக்கும் அன்புநிறை நன்றி என்றும் உரியது. இந்த மலரை ஏற்று மகிழும் நல்லுள்ளங்க ளாகிய வாசக உள்ளங்களுக்கு வரவேற்பு.

**நிலைகொண்ட வாழ்வால் சிலை கண்ட செம்மலாரை,**
**மலர் கொண்டு பணிவோம் மகிழ்ந்து!**

**பேராசிரியர் முனைவர் பழ.முத்துவீரப்பன்**
**முனைவர் சொ.சேதுபதி**
*(பதிப்பாசிரியர்கள்)*



# மலரகம்

## வாழ்த்து மலர்



## கவி மலர்

# உரை மலர்

## மாணிக்க நினைவுகள்

# உரை மலர்

# உரை மலர்

## தமிழ் மாணிக்கம்



## மாணிக்கத் தமிழ்

# சிலை கொண்ட செம்மல்



# நல்ல தமிழ் நெஞ்சம்

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

மேலைச்சிவபுரி செந்தமிழ்க் கல்லூரி, காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி தனித் தமிழ்க் கழகம் ஆகிய அமைப்புகளின் பின்னே ஓர் உந்து ஆற்றல் இருந்து உருவம் கொடுத்துவருகிறது. பலர் தமிழ் அறிஞர்களாக மட்டுமே இருப்பர். மிகச்சிலரே தமிழ் அறிஞராக மட்டுமின்றித் தம்மைத் தமிழ் இயக்கமாக நிறுவனமாக, அமைத்துக் கொண்டவர்கள். இனிய அன்ப, அத்தகையோர் இன்று எண்ணிற் சிலராகக் கூட இல்லாதது ஒரு பெரிய குறையே. நமக்குத் தெரிந்து இரண்டு தமிழறிஞர்கள் தம்மையே தமிழ் இயக்கமாக்கிக் கொண்டவர்கள். அவர்களில் ஒருவர் டாக்டர் வ.சுப. மாணிக்கம். ஆரவாரமில்லாத ஆழமான தமிழ்ப்புலமை, நல்ல தமிழ் நெஞ்சம், சில பிடிப்புகளில் உறுதி ஆகியவை அவருடைய தனித்த இயல்புகள். அவர்தான் இந்த மூன்று நிறுவனங்களுக்கும் இன்றைய உயிர்ப்பாற்றல்.

– திருமுகம், (தமிழகம் 17.10.1972 இதழில்)

உ
சிவ சிவ
தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே

தவத்திரு **குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்**

குன்றக்குடி - *630 206*
சிவகங்கை மாவட்டம்
*04577 - 264227*



## வாழ்த்துரை

மூதறிஞர் வ.சுப.மாணிக்கனார் நூற்றாண்டுவிழாக் கொண்டாடப்படுகிறது. வ.சுப.மா. அவர்கள் அறச் சிந்தனையாளர். அன்புச் சிந்தனையாளர். செயலாண்மை மிக்க ஈடு இணையற்ற அற்புத நிர்வாகி. தமிழாய் வாழ்ந்த தலைமகன். தமிழுக்காய் வாழ்ந்த அற்புத மனிதர்.

இளமைக்காலத்தில் பொய் சொல்ல மறுத்து அதன் விளைவாக, ‘பொய் சொல்லா மாணிக்கம்’ என்று பெயர் பெற்றவர்.

அறிவு அறிந்த மக்கட்பேறு என்ற குறளுக்கு இலக்கணமாக அரிய மக்கட்பேறு பெற்றவர். தமிழ் இலக்கியத்தில் மாணிக்கமாய்ச் சுடர்விட்டுப் பிரகாசித்தவர்.

எளிமை, நேர்மை, உண்மை, அன்பு, அடக்கம், ஆற்றல், அனைத்தின் உறைவிடமாய் விளங்கியவர்.

இப்பெருமானின் தமிழ்ப்பணியைப் பாராட்டி, நமது குன்றக்குடி ஆதீனம், ‘முதுபெரும்புலவர்’ என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது.

எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்று முழங்கிய அந்தத் தமிழ்ப் பேரறிஞர் அந்த முழக்கத்தை நனவாக்கப் பாடுபட்டவர்.

மூதறிஞர் வ.சுப.மாணிக்கனார் கனவுகள் நனவாகப் பாடுபடுவோம்!

---

**❋ திருக்குறளே நமது பொதுமறை ❋ திருமுறைகளே நமது மறை ❋**

கோவிலூர் மடாலயம்
கோவிலூர் - 630 307.
(வழி - மானகிரி)
சிவகங்கை மாவட்டம்

உ
சிவமயம்



☎ 04565 - 236846

நாள் 11.08.2017

## ஆசியுரை



தமிழ்ச் செம்மல் தெய்வத்திரு வ.சுப.மா. அவர்கள் தமிழகத்தில் தோன்றிய மிகச் சிறந்த தமிழறிஞர்களிலே சிகரமானவர் ஆவார். நல்ல தமிழாசிரியர் மட்டுமல்லாமல், நல்ல நிர்வாகியும் கூட, அக்காலத்தில் பெற்ற பட்டங்களைவிட, சிறந்த புலமையுடைய மிகச்சிறந்த அறிஞர்கள் அழகப்பக் கல்லூரி தமிழ்த்துறையில் பணியாற்றினார்கள். வ.சுப.மா. பணியிலே சேர்கின்ற காலத்தில் அழகப்பாக் கல்லூரியிலே தமிழ்ப்பேராசிரியராக இருந்தவர் ஆ.முத்துசிவன் அவர்கள் **B.A.** மட்டுமே படித்தவர். சிறந்த ஆசிரியர். பேச்சாளர். எழுத்தாளர். மிகச்சிறந்த இலக்கியவாதி. அவர்களுக்குக் கீழே **M.A., M.O.L,.Ph.D.,** முடித்திருந்த பேராசிரியர் மாணிக்கனார் சேர்ந்து பணியாற்றினார். ஆ.முத்துசிவனுடைய இலக்கியப் புலமையையும், ஆங்கில அறிவையும், அற்புத மொழிபெயர்ப்பு முதலியவைகளையும் அறிந்து அனுபவித்துப் பாராட்டினார்கள்.

அதேபோல, துறைத்தலைமை ஏற்றபின்னர் மிகச்சிறந்த தகுதி வாய்ந்த தமிழறிஞர்களைக் கல்லூரி ஆசிரியர்களாக நியமித்தார்கள். இரா.சாரங்கபாணி, அ.மா.பரிமணம் போன்ற முனைவர் பட்டம் பெற்றவர்களையும், க.தேசிகன், பூ.அமிர்தலிங்கம் போன்ற புலவர், வித்வான் பட்டங்களைப் பெற்றவர்களையும் அவர்களுடைய கற்பிக்கும் திறமை மற்றும் இலக்கியத்திறமைக்காக ஆசிரியர்களாக நியமித்துச் சிறப்பித்தார்கள். **1957-60**ல் நாம் அழகப்பா கல்லூரியில் **B.Sc (Feology)** படித்த காலத்தில் அழகப்பா கல்லூரியில் எல்லாத் துறைகளிலும் மொத்த மதராஸ் பல்கலைக்கழகத்திலும் (முதலாவதாக) **(I Rank)** தேர்ச்சி பெற்றார்கள். பின்னர் திரு.மாணிக்கனார் கல்லூரி முதல்வர். பல்கலைக்கழகத் துணைவேந்தர் போன்ற பெரிய பதவிகளைப் பெற்றுச் சிறந்த தொண்டாற்றினார்கள். தலைமைப்பொறுப்பில் இவருடைய நிர்வாகத் திறமையும், சிக்கனமும், நேர்மையும் எல்லோராலும் பாராட்டப்பெற்றன. அவருடைய எளிமை போற்றப்பட்டது.

திரு. மாணிக்கனார் ஆய்வு நூல்கள் மிக மிக ஆழமானவை, சிறந்தவை எனப் பாராட்டக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் பதிப்பித்த இரட்டைக் காப்பியம், (சிலப்பதிகாரம், மணி மேகலை) இன்றும் போற்றப்படுகின்ற செம்பதிப்பாகும். ஆனால், நம்மைப் பொறுத்த வரை அவருடைய படைப்பின் சிகரமாக விளங்குவது, 'கொடைவிளக்கு'. இன்றைக்கும் அந்த வெண்பாக்கள் அதனுடைய ஓசை நயத்திற்காகவும், பொருள் சிறப்பிற்காகவும் படிக்கின்றவர்களால் பாராட்டப்படுகின்றன.

மாணிக்கனார் அவர்களுடைய ஆய்வும், நூல்களும் அவர்களுக்கு என்றென்றும் புகழ் சேர்க்கக்கூடியவை. மாணிக்கனார் புகழ் என்றும் நிலைத்திருக்கும்; வளரும்; வாழும். மாணிக்கனார் தமிழ்த்தொண்டுக்கு நம்முடைய பாராட்டுக்கள்; ஆசிர்வாதங்கள்!





கலைஞர் மு. கருணாநிதி,

தலைவர் தி.மு.க

## வாழ்த்துரை

6-3-2016

மூதறிஞர் செம்மல், டாக்டர் வ.சுப. மாணிக்கனார் அவர்களின் நூற்றாண்டு விழா 2016 ஏப்ரல் திங்களில் தொடங்குவதும் அதனையொட்டி விழா மலர் வெளியிடப்படுவதும் அறிந்து பெரிதும் மகிழ்கிறேன்.

டாக்டர். வ.சுப. மாணிக்கனார் அவர்கள் மதுரை- காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக விளங்கிப் புகழீட்டியவர்; நல்ல தமிழறிஞர்; நூல் பல படைத்த நுண்மாண் நுழைபுலம் மிக்கவர்; என்பால் பற்றும் பரிவும் பாசமும் கொண்ட பண்பாளர்; யாவினும் மேலாகத் தமிழ் மொழி, இனமானம் வளர்த்த ஏந்தலாகத் திகழ்ந்தவர்.

அத்திருமகன், நான் எழுதிய "குறளோவியம்" நூலுக்கு அணிந்துரை எழுதித் தந்து அழகு சேர்த்ததுடன், 17-2-1985 அன்று சென்னையில் நடைபெற்ற "குறளோவியம்" நூல் வெளியீட்டு விழாவிலும் பங்கு கொண்டு என்னையும், அந்நூலையும் பாராட்டிப் போற்றிய பெருந்தகையாளர் என்பதை நன்றியுடன் நினைவுகூர்கிறேன்.

டாக்டர் வ.சுப. மாணிக்கனார் அவர்களின் நூற்றாண்டுத் தொடக்க விழா அவர் புகழ் போற்றும் பெருவிழாவாக நிகழ்ந்திடவும், விழா மலர் அவர் ஆற்றிய அருந்தமிழ்த் தொண்டுகளைத் தொகுத்தளித்துத் தமிழ்ச்சமுதாயத்திற்கு நாளும் நினைவூட்டிடும் நல்லதொரு ஆவணமாக மிளிர்ந்திடவும் எனது நெஞ்சார்ந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்து மகிழ்கிறேன்.



**பேராசிரியர் க.அன்பழகன்**

**பொதுச்செயலாளர், தி.மு.க.**

## வாழ்த்துச் செய்தி

தமிழ் இலக்கண இலக்கிய ஆய்வுகளில் தனித்திறம் படைத்தவராக விளங்கி, தமிழ் மக்களின் ஒருமித்த போற்றுதலுக்குரியவராகத் திகழ்ந்த மூதறிஞர் வ.சுப.மாணிக்கனார் அவர்களின் நூற்றாண்டு விழாவைச் சிறப்பிக்கும் வகையில் எழில்மிக்க மலர் ஒன்று வெளியிட இருப்பது அறிந்து மகிழ்கிறேன். செம்மல் பிறந்த ஊரான மேலைச்சிவபுரியில் அவருக்குச் சிலை எழுப்பி, சீரிய முறையில் விழாக் கொண்டாடும் தமிழ்க் குடும்பத்தாரின் செயல்நலம் கண்டு பூரிக்கிறேன்; உளமாரப் பாராட்டுகிறேன்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் தமிழ்மொழி வளர்ச்சிக்கும் தமிழின வளர்ச்சிக்கும் தமிழிசைப் பரவலுக்கும் ஆற்றியுள்ள பணிகள், தமிழர் வரலாற்றில் என்றென்றும் நிலைத்து நிற்பன. இப்பல்கலைக் கழகத்தில் உருவான ஆழங்காற்பட்ட தமிழ்ப் பேராசிரியர் பலராவர். இவர்களுள் தன் மதிநுட்பத்தால் முதல் வரிசையாளர்களில் ஒருவராகச் சிறந்து விளங்கியவர் மாணிக்கனார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் யான் எம்.ஏ. தமிழ் பயின்றபோது திராவிட இயக்கத்தால் ஈர்க்கப்பட்ட என்னைப் போன்றவர்களை எல்லாம் தன் தமிழறிவால் மதிக்க வைத்த இளைய ஆசிரியர் அவர்.

பண்டிதமணியால் பட்டை தீட்டப்பட்டவர்; பாட்டுலகில் பாரதி, பாரதிதாசனைப் போல, தமிழ் ஆய்வுலகில் தெ.பொ.மீ., மு.வ., இவர்களை அடியொற்றித் தனக்கென ஒரு ஆய்வுப் பரம்பரையை, அறிவார்ந்த பேராசிரியர்களை உருவாக்கியவர். இவர் படைத்த வள்ளுவம், தமிழ்க்காதல்,



கம்பர், தொல்காப்பியக்கடல் போன்ற ஆய்வு நூல்கள் ஆழ்ந்தகன்ற புலமையாளர் இவர் என்பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

இத்தமிழறிஞர் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் துணைவேந்தராகப் பொலிந்தபோதுதான் அப்பல்கலைக்கழகத்தில் அறிவியல் துறைகள் பல ஆக்கம் பெற்றன என்பது தமிழரின் அறிவியல் வேட்கைக்குச் சான்றாகும். பணி நிறைவிற்குப் பின்னர் தமிழ்வழிக் கல்வி இயக்கம் தொடங்கி, தமிழ்நாடு முழுவதும் நல்லறிஞர் துணையுடன் சென்று, தமிழ்நலக் கருத்துப் பரப்பி வந்த தமிழ்க்கதிர் அவர். மழலையர் பள்ளிகள் எல்லாம் தமிழ்வழிப் பள்ளிகளாக விளங்க வேண்டும் என்று வற்புறுத்தி வந்தவர். இச்சிறப்பினைச் செய்ந்நன்றி மறவாத தமிழர்கள் சிந்தையில் வைத்துப் போற்றுவார்கள்.

தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் தொடர்பான தன்னுடைய கருத்துக்களை, தமிழக அரசின் அமைச்சகப் பொறுப்பில் இருந்த கலைஞர் அவர்களிடமும் என்னிடமும் உரிமையோடும் உணர்ச்சிப் பெருக்கோடும் துணிவாகவும் உறுதியாகவும் வலியுறுத்திய பெருமகன் அவர். இந்தியத் திருநாட்டில் எட்டாம் அட்டவணையில் எண்ணப்பட்ட பதினான்கு மொழிகளும் ஆட்சி மொழிகள் ஆக வேண்டும். இந்தி ஒன்றே பொதுமொழி என்பது இந்தியர் எவராலும் ஏற்க முடியாதது என்பதைத் தமிழ் வீரத்தோடும் அறிவார்ந்த புலமையோடும் தக்க காரணங்களோடும், ‘தலைவர்களுக்கு’ என்ற நூலில் விளக்கியிருப்பவர் அவர்.

தமிழின் உரிமையை நிலைநிறுத்த வேண்டும் என்ற கொள்கையால், சிதம்பரம் கோயிலில் திருமுறைகள் பாடப் பெற வேண்டும் என்று தமிழ் ஆர்வலர் துணையோடு போராட்டம் நடத்தி, அதில் வெற்றி கண்டவர்.

முதுபெரும் புலவர் மாணிக்கனார் தாம் படைத்த நூல்களால் தமிழுலகில் நிலைத்தவர். வகித்த பதவிகளுக்குப் பெருமை சேர்த்தவர். தனித்தமிழ் இயக்கம் தோற்றிய மறைமலையார் போல, தமிழ்வழிக் கல்வி இயக்கம் தோற்றிய வரலாறு படைத்தவர்.

‘புலமையும் நேர்மையும் மாணிக்கமாகும்’ என்று சொல்லத்தக்க வகையில் வாழ்ந்த இச்செம்மலின் நூற்றாண்டு விழா சீருஞ்சிறப்புமாக நடைபெறவும், அளப்பரிய தமிழ்ப் பணிகளால் அவர் பெற்ற புகழ் என்றென்றும் நிலைபெறவும் தமிழ்க் காதலோடு உளமகிழ்ந்து வாழ்த்துகிறேன்.






Padmashri
**Dr.AVVAI NATARAJAN**
CHANCELLOR - BHARATH UNIVERSITY
FORMER VICE-CHANCELLOR
FORMER SECY TO GOVT. OF TAMILNADU (RETD.)






OFFICE :
# 30, B.B.C. ORCHID APARTMENTS
TILAK STREET, THEAGARAYA NAGAR,
CHENNAI - 600 017.
98410 19950 | 044-28340020
thamizhavvai @ hotmail.com


# நுண்ணறிவுக்கு ஒரு நூற்றாண்டு

*09.08.2017*

தமிழ்க்கடலின் நிலைகண்டு உணர்ந்த பெரும்பேராசிரியர் வ.சு.ப.மாணிக்கச்செம்மலின் நினைவு என்றும் நிலைப்பதாகும். எண்ணிய போதும் எழுதியபோதும் இன்னியல் தமிழ்ச்சொற்களைக் கண்டறிந்து வரைந்து காட்டிய திருக்கரமும் நினைந்து சொன்ன திருமுகமும் எங்களை வாழ்வித்துள்ளன.

ஆன்றறிந்து அடங்கிய கொள்கைச் சான்றோராக அறந்தழுவிய நெஞ் சோடும் பயின்றது கெழீஇய பரிவும் காட்டிய சான்றோரின் புகழால் தமிழ்மண் சிறந்து ஒளிரும்.

சொல்லுருவாக நிலைத்த நூல்களைத் தாண்டி அழகிய சிலையுருவில் அவர் திருவுருவத்தைக் காண்பதை சென்னையில் இருந்தே கண்டு மகிழ்கிறேன்.

அருமருந்தனைய அன்புச்செல்வியாகிய தென்றலின் நற்பணிகள் நாளும் வெல்க!





# வ.சுப.மா. பிறந்தபோது....

## மகாகவி ஈரோடு தமிழன்பன்

எழுத்தாணிக்
காலத்துப்
பழுத்த புலவன்
இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த
எங்கள் வ.சுப.மா.

வள்ளுவன் வந்து பிறந்தபோது
அடைந்த மகிழ்ச்சி
தமிழ்த்தாய்க்கு வ.சு.மா. பிறந்தபோது.

எண்ணத்தில் ஆயிரம் விளக்குகள்
எப்போதும் சுடர்விட
வண்ணத்தமிழ் கற்றவன்

அவனுக்கென்று ஒரு பார்வை
அது
தொலைதூரங்களைப் பக்கத்தில்
தூக்கிக் கொண்டுவரும்

அவனுக்கென்று ஒருசொல்
அது
கண் திறந்து செய்த கடுந்தவங்கள்
வரமாகப் பெற்றளித்த
தனித்தமிழ்ச்சொல்.

அவனுக்கென்று ஒருநடை
அது
தமிழ்த்தாய் பாதம் பதித்து
நடக்கத் தக்க
பட்டுநெசவுக்குப்
பாடம் நடத்திய பாட்டு நடை.

அவனுக்கென்று ஒரு சிந்தனை
அது
வள்ளுவன் வழியில் அவனிடம்
வந்து சேர்ந்த வாழ்வியல்
சொந்தச் சிந்தனை.

தமிழை மறக்காத மனங்களில்
வ.சு.ப.
காலம் அழிக்க முடியாத
கல்வெட்டாக நிற்பார்.

வெளிச்சம் இழந்த சூரியன்
மூச்சிழந்த
வெறும் வட்டம்தான்;

அலைகளின் ஆயுள் முடிந்ததென்றால்
அது கடல் அல்ல
வெறும் சவப் பள்ளம்தான்;

தமிழை மறந்த
தமிழ்நாட்டைஎந்தப் பெயரால்
அழைப்பது?

வ.சு.ப.மாணிக்கனாரைத்தான்
கேட்கவேண்டும்.

# எல்லாமே தமிழ்வடிவாய் இலங்குகின்ற ஏந்தல்!

பேராசிரியர் **கு.வெ.பாலசுப்பிரமணியன்**

தொல்காப்பி யம்போலத் தூயர்; சங்கத்
    தூய்தமிழ்போற் சால்புடையர்; வள்ளுவத்தின்
நல்லறம்போல் வாழ்நெறியர்; வாசகம்போல்
    நைந்துருகும் மொழியாளர்; கம்பனைப்போல்
சொல்லூறும் உவமையினர்; சுபமாணிக்கத்
    தோன்றலவர் சுருக்கமுற உரைப்பதென்றால்
எல்லாமே தமிழ்வடிவாய் இலங்குகின்ற
    ஏந்தலவர் என்பதிலே மிகையே இல்லை!

பொய்சொல்லா மாணிக்கம்; வள்ளுவத்தின்
    புறம்போகா முழுவைரம்; பகட்டே யில்லா
மெய்யொளிசேர் நன்முத்து; மினுக்கி டாத
    விடிவெள்ளி; சாயாத கதிரின் வீச்சு;
மையிருள்சூழ் அறியாமை அறத்துடைக்கும்
    வெண்டிங்கள்; செய்யதமிழ்ச் சுடர்விளக்கம்
ஐயனவர் தமிழுலகில் அணைந்தி டாத
    அருட்சோதி அவர்தாளை வணங்குவோமே!



# மாணிக்கப் பேரொளி

கவிமாமணி, பொற்கிழிக்கவிஞர்
முனைவர் **ச. சவகர்லால்**

மாணிக்கப் பேரொளியை அளந்து காட்ட
மண்விளக்குச் சிறுதிரியின் நாவா? ஈடில்
மாணிக்க அறிவொளியின் கீற்றைத் தொட்டு
விளக்கிடவோர் மடமையிருள் அடர்வா? அந்த
மாணிக்கப் பண்பொளியை வியந்து பார்த்து
மதிமயக்கம் பெருவியப்புக் கொண்டே நாளும்
மாணிக்கச் சுடரையென்றன் உளத்தில் ஏற்றி
வழிபட்டு நெறிப்பட்ட சின்ன வன்நான்.

வாழ்வுக்குத் தமிழெடுத்தார். தமிழோ அந்த
மணிமகனைத் தத்தெடுத்துக் கொள்ளக் கண்டோம்.
வாழ்வெல்லாம் தமிழுக்கே என்ன வாழ்ந்தார்.
மதிநுட்ப ஆய்வுணர்வைத் தமிழுக் கீந்தார்.
தாழ்வில்லாப் பண்புநெறி நழுவி டாமல்
தன்னளவிற் பற்றிக்கொண் டுயர்ந்தார்; சொந்த
வாழ்வெல்லாம் தமிழ்வளர்ச்சிக் கெனவே வாழ்ந்த
மாணிக்கப் பேரொளியை வணங்கி உய்வோம்.

அவரென்ன நம்மைப்போல் பிறந்து வாழ்ந்து
அவனியிலே மறையுமொரு பிறப்பா? இல்லை;
அவருளத்தில் ஒருநெறியைக் கோளாய்க் கொண்டார்;
அணுவளவும் நெகிழாமல் அதனைக் காத்தார்
எவரைப்போல் வாழ்ந்திடவும் நினைத்தி டாமல்
இணையில்லாக் குறிக்கோளைக் கொண்டு வாழ்ந்த
அவரைப்போல் வாழ்ந்திடவே நினைத்தாற் போதும்;
அன்றாடம் நம் வாழ்வில் தூய்மை சேரும்.

அந்தமகன் எளிமையினைக் கண்டால் எந்த
    ஆர்ப்பாட்ட உணர்வுமுள்ளே ஒடுங்கி வீழும்.
அந்தமகன் நேர்மையினைக் கண்டால் கோணல்
    அகமெல்லாம் செம்மையாகி நிமிர்ந்து வாழும்;
அந்தமகன் பண்புயர்வைக் கண்டால் பொய்ம்மை
    அகன்றோடி நம்நெஞ்சம் தூய்மை யாகும்;
அந்தமகன் தனைப்பற்றிக் கவிதை பாடும்
    அரியதொரு பெருவாய்ப்பை என்ன சொல்வேன்?

உரையாடி மகிழ்விக்கும் செயல்சொல் வேனா?
    ஒப்பரிய கூர்நோக்குப் பார்வை யாலே
உரைவீச்சில் நமைவீழ்த்தும் புகழ்சொல் வேனா?
    ஒருசொற்குள் பலபொருளைப் புகுத்திக் காட்டி
உரையாடிக் கேட்போரை வியப்பி லாழ்த்தும்
    உயர்சிறப்புச் சொல்லாட்சித் திறம்சொல் வேனா?
வரையில்லாப் பேராற்றல் கொண்டு வாழ்ந்த
    மாண்புமகன் புகழ்க்கீற்றில் எதைச்சொல் வேன்நான்?

எதைச்சொல்லி எப்படித்தான் பாடி னாலும்
    என்னுள்ளம் நிறைவுறாதே! ஆற்றல் வீச்சின்
எதைச்சொல்லிப் புகழ்ந்தாலும் நெருங்கி வாழ்ந்த
    இதயங்கள் அமையாது; புதுமைப் பார்வை
எதைச் சொல்லிப் போற்றிடினும் அறிஞர் நெஞ்சம்
    எப்பொழுதும் போதுமெனச் சொல்ல மாட்டா.
இதைச்சொல்லி அதைச் சொல்லி எதைச்சொன் னாலும்
    ஈடில்லா அவர்புகழைக் கூறல் ஆகா

ஆனாலும் பாட்டினிலே அளந்து பார்க்க
    அடியேன்நான் துணிந்துவிட்டேன்; நிறைந்து பாயும்
தேனாற்றில் ஒருதுளியைச் சுவைத்துப் பார்த்துத்
    தடுமாறிச் சிறகடிக்கும் ஈயைப் போல
வானாளும் கதிரொளியின் கீற்றை யுண்டு
    மலர்கின்ற மலரிதழின் அசைவைப் போல
நானேதோ நாவசைப்பேன்; அதிலே தோன்றி
    நடமிடுவ தோஅந்த மாணிக் கம்தான்.

பாட்டெடுத்த பெரும்பயனைப் பெற்று விட்டேன்;
பார்பாடி, வான்பாடிக், கதிரைப் பாடி,
நீட்டுமிள ஒளிநிலவைப் பாடி, எங்கும்
நிலவும்தன் குளுமையினைப் பாடிப், பூத்துக்
காட்டுமிளஞ் சோலையினைப் பாடி, அங்கே
கலகலக்கும் புள்ளினத்தைப் பாடி, நாட்டைக்
காட்டுகின்ற வகைபாடி மகிழ்ந்த நான்தான்
கவிஞனெனும் பேறதனை இன்றே பெற்றேன்.

மாணிக்கப் பேரொளியைப் பாட்டில் வைத்தே
மகிழ்வுநிறை உள்ளத்துப் பொங்க லிட்டே
நானிற்கக் களமீந்த செம்மல் பாடும்
நற்செயலுக் கீடுண்டா? என்றன் பாட்டுத்
தேனிற்கும் மலராகப் பூக்கு மென்றால்
சத்தியமாய் என்பெருமை ஏது மில்லை;
மாணிக்கப் பாடுபொருட் சிறப்பே என்று
மனதுக்குள் இன்பவெள்ளம் பெருக்கெ டுக்கும்.

என்னையிவர் படிக்கவைத்தார்; அந்த நன்றி
இதயத்துள் பொங்கிவர மாசில் லாத
பொன்னொளியை, நிறைபண்பைப் பாட்டில் வைத்தேன்;
புகழ்வீசி நின்றிட்ட என்றன் பாடல்
இன்றைக்கே பயன்பெற்ற தென்ப துண்மை
என்வாழ்க்கைப் பயணத்தைத் துவக்கு தற்காம்
என்மணத்தைத் திருமணத்தைச் செய்து வைத்த
ஏந்தலினை வாழ்நாளில் மறக்கப் போமோ?

ஆதலினால் கவிதையிலே அவரை வைத்தே
அணிபெறவே பாடுதற்கு முயலு கின்றேன்;
காதலினால், பேரன்பால், அவர்பாற் கொண்ட
கட்டில்லா மரியாதை பொங்கும் நெஞ்ச
மோதலிலனால் கவிசொன்னேன்; அதுவே யல்லால்
மாணிக்கப் பேரொளியின் கீற்றா யேனும்
ஆதலெனும் ஆசையினால் பாடு கின்றேன்;
அவரடியைப் போற்றிநாளும் அடிவைக் கின்றேன்.

# மாணிக்கனார் புகழ்மை வாழ்க!

கவிச்செம்மல் ரெ.முத்துக்கணேசன்

*தனியொரு மனித னாகத்*
*தகுதியை, அறிவைத் தூண்டிக்*
*கனிதமிழ் தழைக்க வென்றே*
*கட்டுரையும், நூலும் நெய்தோன்;*
*பனிமலர் மணப்ப தேபோல்*
*பணியெலாம் தமிழ்ம ணக்கும்;*
*மனிதரில் மாண்பு மிக்கோன்*
*மாணிக்கர் புகழ்மை வாழ்க!* 1

*பெய்தமழைத் துளியி னுள்ளே*
*மின்சக்தி பிறப்ப தேபோல்*
*கைவிளக்காம் குறளினுள்ளே*
*கலந்தோங்கும் வாழ்வைக் காட்டச்*
*செய்தவுரை வயிரம் அன்றோ!*
*செந்தமிழ்க்கோர் அணிகள் பூட்டி,*
*செய்தவமாய் மொழியைப் பேணும்*
*மாணிக்கச் சேவை வாழ்க!* 2

*வார்த்திட்ட சிற்பம் ஒன்றின்*
*வடிவழகைச் சிதைப்பா ருண்டோ!*
*சீர்மொழியில் கலந்து பேசல்*
*செம்மொழியைச் சிதைப்ப தொக்கும்!*
*வேர்போலும் சங்கப் பாக்கள்*
*வினைபோக்கும் திருமு றைகள்*
*தேர்மருந்தாம் என்பர்; அன்னார்*
*திருமொழிகள் 'சொத்தாம்' போற்று!*

# வான் கலந்த மாணிக்க வாசகம்

## காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர்

## நா. மீனவன்

கவிதைகள் நாடகங்கள் கட்டுரைகள் உரை நடையில்
வல்லதோர் பெருமகனாய் வாழ்ந்தவர்எம் வ.சுப.மா
அவரிடத்தில் தமிழ்பயின்ற மாணவரில் யானொருவன்
நடைவல்ல பேராசான் நடக்கையிலே துணைபோவேன்
நடக்கையிலே அவர்சொல்லும் தமிழ்கேட்கத் தவம்கிடப்பேன்
கம்பனுக்கும் நல்லதொல் காப்பியருக்கும் நூலெழுதி
வள்ளுவத்தைப் பெருநூலாய் வரை ந்திட்ட பேராசான்
மூதறிஞர் இராசாசி அடுத்தவர் நம் வ.சுப.மா
மேலைச் சிவபுரியாம் மேன்மையுள்ள சிற்றூரில்
சுப்பிர மணியருக்கும் தெய்வானை ஆச்சிக்கும்
இரண்டாம் மகனாக அவதரித்தார் பேராசான்
அய்யாவின் இயற்பெயரோ அண்ணாமலை மாணிக்கம்
மாணிக்கம் தமிழுக்கும் மாணிக்கம் ஆயிற்று.
பொய்சொல்லா மாணிக்கம் புகழ்பூத்த மாணிக்கம்
பன்முகச் சிந்தனைசேர் பண்பாளர் மாணிக்கம்
பண்டிதமா மணியெங்கள் கதிரேசர் பார்வைபடப்
பட்டைதீட்டி மாணிக்கம் தமிழ்மாணிக்கம் ஆயிற்று
தக்கபல பட்டங்கள் தான்பெற்ற மாவன்னா
தமிழில் அகத்திணைக் கொள்கை பற்றியதோர்
ஆராய்ச்சி நூல்எழுதி அவர் முனைவர் விருது பெற்றார்
அண்ணா மலையாரின் அருமைமிகு பல்கலையில்
ஆசானாய் விளங்குகளையில் அவரிடத்தே பயின்றவர்கள்
நாவலரோடு அன்பழகன் நாற்பத்தி எட்டுக்குப் பின்
அழகப்பர் பார்வைபட ஆற்றல்மிகு தமிழ்த்துறைக்குத்
தலைவரென ஆனார் கல்லூரித் தலைவரென
ஆறாண்டு பணி செய்தார் அருமைப் பேராசான்
மீண்டும் இவர் அண்ணா மலைக்கு மீண்டார்
ஏழாண்டு தமிழ்த்துறைக்கு இவர்தலைவர் மேலும்அன்று

இந்திய மொழிப்புல முதன்மையராய் இருந்தார்நல்
மதுரைப்பல்கலையில் மூன்றாண்டு துணைவேந்தர்
யாப்பு வரலாற்றை ஆங்கிலத்தில் எழுதியவர்
ஏகம்மை ஆச்சி இவருடைய மனையாட்டி
தொல்காப்பியன் பூங்குன்றன் பாரிஎன மூன்று ஆண்கள்
தென்றலொடு மாதரி பொற்கொடி என மூன்று பெண்கள்
கனிவுடையர் ஆனாலும் கண்டிப்பு மிக்கதந்தை
எழுதிய நூல்களோ முப்பதைத் தாண்டும்
அத்தனையும் இங்கே அரசுடைமை ஆயிற்று
வள்ளலைப்பற்றி வரைந்தநூல் கொடை விளக்கு
தமிழகப் புலவர்குழுத் தலைவராய் பல்கலையின்
தமிழாசிரியர் மன்றத் தலைவராய் தமிழ்ப்பல்கலைத்
தொல்காப் பியத்தகைஞராய்ப் பலபணிகள் இவர்செய்தார்
குன்றக்குடி ஆதீனம் கொடுத்தபட்டம் முதுபெரும்புலவர்
தமிழக அரசு வழங்கிய வள்ளுவர் விருது
இறுதியில் இவர்இங்கே எழுதி வைத்த விருப்பமுறி
இதுதான் மாணிக்கம் எழுதி வைத்த விருப்பமுறி*
எண்பத்தொன்பது ஏப்பிரல் 25, வயதோ எழுபத்திரண்டு
புதுச்சேரிச் சீமையிலே போயிற்று அவர்ஆவி
ஆவியது பிரிகையிலே அவர்கையில் இருந்தநூல்
தித்திக்கும் இனியதமிழ்த் திருவாசக நூலேதான்
வாசகம் மாணிக்கத்தோடு வானிலே கலந்தது.

* 1. சொத்தில் ஆறில் ஒருபங்கை அறநிலையத்திற்கு வழங்குதல்.

2. தாம் பிறந்த மேலைச்சிவபுரியில் தம் சேமிப்பில் இருந்து செலவு செய்து மருத்துவம் குழந்தை நலம் நலவாழ்வு கல்வி போன்ற தொண்டுகளைச் சாதி வேறுபாடின்றி வழங்க வேண்டும்.

3. சொந்த நூலகத்தில் இவர் தொகுத்து வைத்த 4500 நூல்களைக் காரைக்குடி அழகப்பா கல்லூரி நூலகத்திற்கு வழங்க வேண்டும்.

# வாழ்க நீ எந்தாய்!

பேராசிரியர் **சரசுவதி வேணுகோபால்**

*அன்பின் உருவே! அறிவுச் சுடரே!*
*இன்பத் தமிழின் இளைய மகனே!*
*என்ன சொல்லி உன்னைப் புகழ்ந்து*
*கன்னல் தமிழில் கவிதை படைப்பேன்?*
*கோதில்புலமை கொண்ட அறிஞ! உன்*
*தீதில் ஆய்வில் திளைத்தோம் யாமே!*
*அறிஞர் குழுவில் அரிய முத்தே!*
*நறிய மலரே! நன்மா ணிக்கமே!*
*தாயின் தலைமகன் தொல்காப் பியனில்*
*தோய்ந்த நின்றன் ஆய்வுத் திறனோ*
*புதுமையோ கடலோ புகழீட் டியதே!*
*எதுவும் வேண்டா எனத்துறந்த இளங்கோ*
*எல்லாம் அறிந்த எம்மான் வள்ளுவன்*
*சொல்லுக்கு வேந்தன் சுந்தரக் கம்பன்*
*எல்லாக் காவிலும் இளைப்பா றினையே!*
*பல்லோர் நெஞ்சிலும் இடங்கொண் டனையே!*
*சங்க நெறியினை, தமிழன் காதலை,*
*சிங்க நோக்குடன் கண்டு மகிழ்ந்தனை!*
*இலக்கியச் சாறு பிழிந்து விளக்கி*
*இலக்கணம் நாடகம் இன்புறு கவிதை*
*உரையும் நீதியும் பட்டயம் தாமும்*
*திரைகடல் கடந்து வாழும் அறிஞர்*
*புகழும் வகையில் ஆங்கில நூற்களும்*
*திகழும் அறிவுடன் படைத்திட் டாயே!*
*தாழ்விலாப் பெருமையும் தகுதியுங் கொண்டோய்!*
*வாழ்கநீ எந்தாய்! வையகந் தனிலே!*



# அறிஞர்கள் போற்றிய அறிஞர்!

முனைவர் **ந.முருகேசன்**
தமிழ்ப் பேராசிரியர் (பணிநிறைவு)

என்ஆ சிரியர் இனியநல் மனிதர்
தன்னலம் கருதாத் தனிப்பெரும் புனிதர்
மன்பதை போற்றிடும் 'வ.சுப. மா'வை
இன்று நினைப்பினும் என்உளம் சிலிர்க்கும்
அவர்....
மீன்கொடி பறந்த மதுரைமா நகரில்
பாண்டிய மன்னர்கள் பற்றுடன் வளர்த்த
அமிழ்தினும் இனியநம் அருந்தமிழ் மொழியைத்
தமிழகம் முழுவதும் தழைத்திட வைக்க
அயரா துழைத்தவர்; அரும்பாடு பட்டவர்;
துயிலும் போதும் தமிழ்மற வாதவர்.
வண்தமிழ், செந்தமிழ், வற்றாப் புகழ்சேர்
தண்தமிழ், நற்றமிழ், தீந்தமிழ், இன்தமிழ்,
பண்பயில் பொற்றமிழ், பூந்தமிழ், எழில்தமிழ்,
விண்ணுறை தெய்வமும் விரும்பிய தமிழ்எனப்
புகழ்ந்து புகழ்ந்து போற்றித் தொழுது
தகைசால் தமிழைத் திருவுளம் வைத்தவர்.
தென்றல் உலாவும் தீந்தமிழ் நாடாம்
பொன்றாப் புகழ்சேர் பாண்டிய நாட்டுப்
பெருந்தமிழ்க் கவிஞர், பிறையணி பெருமான்
பெருமையும் அருமையும் பாடி அருளிய
திருவா சகமாம் தேன்தமிழ்ப் பாக்களும்
கொற்றவர் மதிக்க, குவலயம் மதிக்க,
சொற்றமிழ் கேட்ட சிவனரு ளாலே
அற்புதம் நிகழ்த்திய அருந்தமிழ்க் கவிகளாம்
பொற்புடை மூவர் பாடிய பாக்களும்
அரியபொற் சபையில் அன்பாய்ப் பாடிட
வீரத் தோடும் தீரத் தோடும்
போரா டியசீர் போராட்டக் காரர்.



உயர்வெலாம் கொண்டொளிர் ஒண்தமிழ் நாட்டில்
பயில்மொழி தமிழே பாங்குடன் இருக்க'
இயக்கம் கண்டவர்; எழுச்சி கொடுத்தவர்
தயக்கம் இலாமல் தினம்தினம் உழைத்தவர்.
இயற்றமிழ் உணர்ந்தவர்; இசைத்தமிழ் அறிந்தவர்;
நயத்தகு நாடகம் நன்றினி தெழுதி
முத்தமிழ் அறிஞராய் விளங்கிய பெரியவர்;
சொத்தெனத் தமிழைத் திண்ணமாய் நினைத்தவர்;
ஆய்வு நூல்களை ஆழமாய் எழுதிய
ஓய்வி லாத ஒளிர்தமிழ்ச் செல்வர்;
கற்றவர் போற்றும் கம்பன் போலச்
சொற்கள் தமிழ்க்குத் தந்த வித்தகர்;
அறிஞர்கள் போற்றிய அறிஞர்; நல்ல
நெறிவகுத் ததிலே நின்றநல் அண்ணல்.
தங்கம் ஒத்தசீர்த் தொல்காப் பியமும்
பங்கம் இலாத சங்கத் தமிழும்
எங்கும் பரவிட எண்ணி முயன்றவோர்
சிங்கம் நிகர்த்த செந்தமிழ் நம்பி
திருக்குறள் கருத்தெலாம் திக்கெலாம் செப்பித்
திருக்குறள் பயின்றிடத் தூண்டிய நாவலர்;
குறள்நலக் கருத்துகள் கூறிய தோ(டு)அக்
குறள்வழி நின்ற கொள்கை யாளர்.
தவறெனத் தெரிந்தால் தம்உற வாயினும்
புவியன் றாண்ட புலிக்கொடிச் சோழர்
தண்டனை தந்த தன்மைபோல் நின்று
தண்டனை தந்திடும் திண்மை யாளர்
கோடி ரூபாய் கொடுப்பினும் வாய்மை
கோடி டாத கொற்றவர்; பொய்மை
பாடி டாத பாவலர்; எதற்கும்
வாடி டாத மனங்கொள் வீரர்.
மானத் தோடு மண்ணில் வாழ்ந்திட
மானத் தோடு வாழ்ந்து காட்டிய
புகழ்மிகு செம்மல்; பொய்உரைப் போரை
இகழ்ந்து சினந்த இன்தமிழ்ப் புலவர்
அவர்மொழி மனத்தில் எவர்ஏற் றாலும்
புவியினில் வாழ்க்கை பொருள்மிக் குடையதே!



# வாழ்க அண்ணல் மாணிக்கனார்!

திருமதி **எஸ்.மணிமேகலை**

கோடி கொடுத்த கொடைஞன் கோட்டையூர்
வள்ளல் அழகப்பர்தாள் போற்றித் துதித்தமகன்
வாழ்நாளில் தமக்கென வாழாமல் தமிழுக்கே
தன் வாழ்வை உவந்தளித்த வ.சுப.மாணிக்கர்.
பண்டிதமணி புகழ்பரப்ப நூல்களெல்லாம்
பதிப்பித்து நூற்றாண்டு விழா நடத்தி
மகிபாலன் பட்டியிலே சிலை நிறுவி
மனமகிழ்ந்து வாழ்ந்திட்ட வ.சுப.மாணிக்கனார்
வள்ளுவன் வழிநடந்து அவர்போல
மாணிக்கக் குறள் தந்து இறுதிவரை
தமிழுக்குத் தொண்டாற்றி தன் மூச்சே
தமிழாக வாழ்ந்திட்ட வ.சுப.மாணிக்கனார்
தான் பெற்றிட்ட மக்களுக்கு தூய தமிழ்ச்
சொல்லெடுத்து தொல்காப்பியன் தென்றல்
பாரி-பூங்குன்றன், மாதரி, பொற்றொடிஎனும்
பெயர்சூட்டி இல்லத்தில் தமிழ் வளர்த்தார்.
வளர்தமிழை ஒளிர் தமிழாய் ஆக்கிவைத்துத்
தன் வாழ் நாளில் ஒருபோதும் பொய் சொல்லா
மெய்யரென வாழ்ந்ததாலே எந்நாளும் பொய்
சொல்லா மாணிக்கர் எனும் பெயர் பெற்றார்
பிறருக்கெனப் பயன்பட வாழ்ந்த வாழ்வும்
நல்லோர் புகழ்ந்திட வாழ்ந்த வாழ்வும்
பின்னோர் தமைப் பின்பற்ற வாழ்ந்த வாழ்வும்
பெருமைசேர் வாழ்வும் வாழ்ந்த அண்ணல்
மாணாக்கர் தமிழ் அறிவை வளர்த்த அண்ணல்
உற்றவரைச் செந்நெறிப்படுத்தி வளர்த்த செம்மல்
கடியாது மற்றவரை அன்பாலே திருத்தும் அண்ணல்
சிக்கனத்தின் சிறப்புணர்ந்து வாழ்ந்த செம்மல்
இவர் பிறந்து ஒரு நூற்றாண்டு ஆனதெனச்
சொன்னாலும் எளிமைமிகு மாணிக்கக் குறள்
தந்தெம்மை இப்போதும் வழிநடத்தும் மாணிக்கர்
தாள் பணிந்து போற்றுகிறோம் வாழ்க வாழ்க!

# கல்மேல் எழுத்தாய் வாழ்வீரே!

முனைவர் **எம்.எஸ்.ஸ்ரீலட்சுமி,** சிங்கப்பூர்

மேலைச் சிவபுரி பெற்ற நன்மகன்
மேதினி மெச்சும் மேதகு அறிஞர்
சிந்தனைத் திறனால் செந்தமிழ் ஆய்வுகள்
சீர்மையாய்ப் பெருகப் பாதை சமைத்த
அன்னவர் தமக்கு ஆய்வே உயிராம்
அகத்திணை ஆய்விலோர் 'தமிழ்க் காதல்'
வையகம் உய்ந்திட வான்குறள் வழங்கிய
'வள்ளுவர் நெஞ்சம்' ஓர்ந்திட்ட வ.சுப.
இலக்கணக் கடலாம் தொல்காப் பியத்தில்
இழைந்திடும் புதுமையும் இனியநல் திறனும்
இவர்தம் ஆய்வின் உரைகல் என்றே
இன்றும் மகிழ்கிறாள் என்றமி ழன்னை;
புலத்திறம் மிக்கநல் புலவர் பெருந்தகை!
படைப்பில் உறையும் ஒப்பியல் நோக்கும்
கற்கண்டுத் தமிழின் காப்பிய ஆய்வும்
கற்பவர் தம்மைக் கயிறாய்ப் பிணித்திடும்
சுந்தரத் தமிழின் சொல்வளம் பெருக்கச்
சொற்களை ஆக்கிய சொக்கரும் இவரே!
புதுச்சொல் புதுக்கிய பெருமகன் இவர்போல்
பூமியில் யாங்கணும் கண்டிலன் பொய்யிலை!
வித்தகர் இவரோ வியன்மிகு தமிழில்
வெல்லும் கவிதையும் நாடகமும் பலவும்
வடித்திடும் விற்பனர்; பல்துறைப் புலமையும்
கற்றவர் தமக்கே உரியநல் அடக்கமும்
கொண்டவர்; குணங்களின் குன்றாம் கதிரகம்
வாழ்ந்ததோர் தமிழ்க் கதிரவன் போல்வார்;
அரும்பெறல் ஆசான் அன்னார் துணைவியும்
அடியேன் தாயும் இனிய தோழியர்;
அத்துடன் அன்றியும் அறிவேன் அறிஞரை
அழகப்பர் ஆய்வியல் மைய மாணவி
என்றன் ஆய்வுத் தலைப்பாம் மிதிலைப்
பட்டிப் பாவலர் பரம்பரை தன்னைப்
பல்கலைக் கழகம் ஆண்டுகள் ஒன்றரை
கடந்தும் கூட ஏற்கா நிலையில்
கவலையில் தோய்ந்த யானோர் மடலினைத்
துணைவேந் தராம் மாணிக்க னார்க்கே;
துணிந்தே அனுப்பினன் நிலைதனை விளக்கி
வில்லினில் அம்பாய் விரைந்தே வந்தது
பல்கலைக் கழகப் பதிலது தானும்;
புதியதோர் ஆய்வாய்க் கனிந்ததென் முயற்சி;
கடலாம் ஆய்வினில் செல்லும் எமக்குக்
கலங்கரை விளக்கே! காலம்
கடந்தும் கல்மேல் எழுத்தாய் வாழ்வீரே!

# இவர் எங்கள் வ.சுப. மாவே!

## பொன்னரசி

குறிக்கோளில் உயர்ந்து வென்றார்!
குணங்களால் நிமிர்ந்து நின்றார்!
அறிஞருள் அறிஞர் என்றே
அனைவரும் போற்ற வாழ்ந்தார்!
திறமைக்கே பதவிஎன்றார்!
புலமையே தகுதிஎன்றார்!
இறைமையும் தமிழே என்றார்!
இவர் எங்கள் வ.சுப. மாவே!

கலைஞரோ எம்.ஜி. ஆரோ
கருத்துரைகூற அஞ்சார்;
தலைவர்கள்அனைவ ருக்கும்
தமிழ்வளர் நெறிகள் சொன்னார்;
தலைமைகொள்பணியில் எல்லாம்
தமிழுக்கே தலைமைதந்தார்;
மலைதமிழ் சிறக்க வாழ்ந்த
மாமணி வ.சுப. மாவே!

திருக்குறள் உயர்நூல் என்றார்;
வாசகம் “வாழ்வு” என்றார்;
திருமுறை மன்றில் ஏறப்
போராட்டம் நடத்தி வென்றார்;
ஒருவர் யார் உவமை சொல்ல?
ஒளிசிந்தும் மாணிக்கச்சொல்
அருமையில் எளிமையான
செம்மல்சீர் வ.சுப. மாவே!



## பணிக்காகவே வாழ்ந்த பண்பின் திருவுரு!

**- பேராசிரியர் முனைவர் இரா.சாரங்கபாணி**

எளிய தோற்றமும் உயரிய நோக்கமுங் கொண்ட பழுத்த தமிழறிஞர்; சிறந்த சிந்தனையாளர்; தனித்தமிழ் ஆக்கத்திற்குத் தாமே புதிய சொற்களைப் படைத்து எல்லா நிலையிலும் எங்குந் தமிழ்வளர ஓய்வென்பதறியாது உழைத்த உரஞ்சான்ற வித்தகர்; அனைத்துக்கும் மேலாகப் பண்புவழி உலகினை நடத்தித் தம் மதிநுட்பத்தையும் நூற்புலமையையும் அசைவிலா ஊக்கத்தோடு பயன்படுத்தி வந்த சான்றோர். இருபதாம் நூற்றாண்டின் இறுதியில், இத்தலைமுறையில், பல நிலைகளிலும் சிறந்தோங்கித் தமிழ்ப்பணிக்காகவே வாழ்ந்து பண்பின் திருவுருவாகத் திகழ்ந்த மூதறிஞர்.



# வ.சுப.மா.வின் எளிமைப் பண்பு

செந்தமிழ் அந்தணர் **திரு. இரா.இளங்குமரன்**

***“எளிமை - இனிமை - தூய்மை - நிறைமை - இறைமை”***

*இவை, எளிமையின் வளர்மான மாளிகை - எழில் மாளிகை - அடுக்குகள்! ஆம்! அரும்பு - முகை - மொக்கு - மலர் - சுலர் - நிலைகள்!”*

***இவ்வைந்தன் வளர்தொகை வடிவம் வ.சுப.மா.***

*‘வள்ளுவம்’ என்ப இந்நாளில் குறள் பயின்றார் அனைவருக்கும் வழக்குச் சொல்! பயில வழங்குஞ் சொல்! இதற்கு, இச்சொல்லைத் தமிழுலகில் வெளியிட்ட, பொழியாப் பொழிவாய் - எழுத்துப் பொழிவாய் - வ.சுப.மா. வெளியிட்ட வள்ளுவம் தானே மூலம்!*

*வள்ளுவம் என்னும் எளிமைச் சொல், வெல்லும் சொல்லாய் உலக உலாக் கொண்டுவிடவில்லையா?*

*வள்ளுவ ‘அன்புறை’ இரண்டு வெண்பாக்கள்! வ.சுப.மா. அவர்களின் அண்ணல் பெரியோர் திருப்பதியார்க்கு! இவை கோடிகோடியாய்க்* ***குவியும்****, திருப்பதியின் உண்டியலிற் குவியும், பொன்னை வெள்ளியை கற்றை உருவாக்களை ஓடி வந்து பார் என்று கூறி அழைப்பவை அல்லவா!*

“எங்கள் குலமுதல்வன்; இல்லாண்மை ஏற்றமகன்;
பொங்கல் மனைபோல் பொலிவுடையன் - சங்கத்
தமிழனைய தூயன்; தனைமறந்த தொண்டன்
கமழும் குடிமைக்கோர் காட்டு”

*இந்நேரிசை வெண்பா எளிமை முதல் - இறையமையாம் வளர்மான மாளிகைச் சான்று அல்லவா!*

*இருசீர்த் தொடர்கள் மூன்று; முச்சீர்த் தொடர்கள் மூன்று! பதினைந்து சீர் கொண்ட ஒரு வெண்பாவில் ஆறு சொற்றொடர்கள்! வள்ளுவம் தந்த வ.சுப. மாணிக்கம், வள்ளுவமே வாழ்வாகிய வாழ்வியல் தொண்டாக்கிய வேலா. அரசமாணிக்கரைப் படைப்போவியமாகத் தீட்டுகிறார்! அண்ணல் திருப்பதியார்க்குப் படைத்தது போலவே இரண்டு வெண்பாக்கள்! முதல் வெண்பா:*

“செந்தமிழே, நம்தாய்; திருக்குறளே, நம்மறை;
நந்தா ஒழுக்கமே நம்படை - உந்துமுனை

வேலாவே, நம்தலைவன்; வெள்ளைக் குறளியமே
தோலாத நம்முரசத் தூண்”

*என்பது.*

*வெண்பாப் பாடுதலில் புறப்பொருள் வெண்பாமாலையாரையும் புகழேந்தியாரையும், கவிமணியாரையும் ஒப்ப, மூவரும் ஒருவராம் மூர்த்தியாக விளங்குகிறாரே வ.சுப.மா.*

*‘கல்லாப் பெட்டிக்’ கடையூழியராக இருந்து ‘கல்லாத நூலில்லை’ எனக் கற்று, ‘கல்வி வல்ல’ முனைவர்களுக்குப் பட்டம் வழங்கும் இணையில்லாத் துணைவேந்தராகத் திகழ்ந்த வ.சுப.மா.வின் நடைமுறை வாழ்வியல் எப்படி இருந்தது?*

*எப்போதுமே தரையில் அமர்ந்து எழுத்துப் பலகையைப் பயன்படுத்தியே எழுதுவார். மை எழுதுகோலாலேயே எழுதுவார். காலையில் ஒன்பதில் இருந்து ஒன்பதே முக்கால் மணிக்குள் குளியல், துவைத்தல், உணவுண்ணல் போன்ற பணிகளை முடித்துக் கொள்வார்.*

*அறையைத் தூய்மை செய்தல், செம்பில் தண்ணீர் எடுத்து வைத்தல் போன்ற அவரது வேலைகளை அவரே செய்துகொள்வார்; அன்றன்று அவரது துணிகளை அவரே துவைத்துக்கொள்வார்; சட்டை, நான்கு முழ வேட்டி, துண்டு என எளிய உடைகளையே எப்போதும் அணிவார். வழக்கமாகத் தரையில் ஓரிடத்தில் உட்கார்ந்தே சாப்பிடுவார். பாயில் தான் படுத்து உறங்குவார். வீட்டில் முழுவதும் தூய தமிழிலேயே பேசுவார்.” (இந்திய இலக்கியச் சிற்பிகள் வ.சுப.மாணிக்கம்; இரா.மோகன் பக்.17) என்பது எளிமை தொட்ட இறைமை அல்லவா!*

“தேவையைச் சுருக்கி, சேவையைப் பெருக்கு”

*என்பதற்கு மாணிக்கர் வாழ்க்கை எடுத்துக் காட்டாவது இவ்வாழ்வியல் விளக்கப் பகுதி.*

> “நாளும் செய்ய வேண்டியவற்றைத் தம் கையேட்டில் குறித்துக் கொண்டு எவர் உதவியும் இன்றித் தாமாகவே முடிவு எடுக்கும் திறன் பெற்றவர். பல்கலைக் கழக வளர்ச்சியில் எப்போதும் நாட்டம் உடையவர். அதனால், கல்லூரி அல்லது பொதுநிகழ்ச்சிகளுக்குப் போவதை நிறுத்திக்கொள்வார். மடலோ கோப்போ எதுவாயினும், நன்றாகப் படித்துப் பார்த்த பின்பே கையெழுத்திடுவார்; முடிந்தால் உயர் அலுவலர்களிடமே கலந்து சிந்திப்பார். பொதுமக்களுக்கும், மாணவர்களுக்கும் பயன்படும்படியாகவே எல்லாச் செயல்களும் அமைய வேண்டும் என்பார். ஒரு காசு செலவு செய்வதானாலும் அதனால் விளையும் பயனைத் தான் எண்ணுவார்; தமது சொந்த வாழ்க்கையானாலும், பல்கலைக்கழகமானாலும் வசதிகளைப் பெருக்கிக் கொள்ளல் ஆகாது என்பார். கல்விப்பணி ஒன்றே நோக்கமாகக் கொண்டிருந்தார். பலவழிகளிலும் வரவு செலவுக் கணக்குப் பார்ப்பார். தரம் பார்த்தே படிப்புக்கும் ஆராய்ச்சிக்கும் மாணவர்களைச் சேர்க்க வேண்டும் என்பார். பெரிய இடங்களிலிருந்து வரும் பரிந்துரைகளுக்குச் செவிசாய்க்க மாட்டார்”

*என்கிறார், அவர் மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராக இருந்தபோது அவருக்கு நேர்முக உதவியாளராக இருந்த திரு.சத்தியமூர்த்தியார் (தமிழ்மாருதம். வைகாசி, **1993**)*



"எளிய வாழ்வு; அளவான பேச்சு; எந்நிலையினும் எதிர்கால நம்பிக்கை; பதவிகளைத் தொண்டாக மதித்தல்; தன்னைப் பற்றிய திருத்தமான சிந்தனைகள்; வாழ்க்கைத் திட்டங்கள்; பெரியவர்களின் வரலாறுகளைப் படித்தல்; சோர்வுக்கு இடம் தராத ஊக்கங்கள்; பகட்டின்றித் தூய எண்ணத்தால் வழிபடுதல். இவையெல்லாம் நான் கண்ட முன்னேற்ற நெறிகள். தமிழுக்குத் தொல்காப்பியமும், வாழ்வின் உயர்வுக்குத் திருக்குறளும், உயிர்த் தூய்மைக்குத் திருவாசகமும் எனக்கு வழிகாட்டிய தமிழ் மறைகள்!"

*- இது வ.சுப. மா. எழுதிய விருப்ப முறியின் ஒரு பகுதி.*

*23.07.88 மாலை 5 மணி. வள்ளுவர் கோட்ட வாயிலின் முன்னுள்ள அண்ணா சிலை முன் மூதறிஞர் செம்மல் வ.சுப.மா.நிற்கிறார். தமிழ்வழிக் கல்வி இயக்க ஊர்வலம் தொடங்கப்போகும்வேளை. வ.சுப.மா. அவர்களுக்கு நெஞ்சு வலி வந்தது! மருத்துவர் தந்த சில வில்லைகளை எடுத்து நாவின் அடியில் இட்டுக் கொண்டு, மனத் துணிவால் உடலைத் தெளிவாக்கினார். தம்பிணியை மறந்தார்; தமிழன்னை உற்ற பிணியைத் தீர்க்க நடையிட்டார். நான்கு கல் தொலைவு ஊர்வலம்!*

*பணி ஒய்வு! பிணி வாட்டல்! தொண்டு துணிவாக நடையிட வைக்கிறது!*

*வ.சுப.மா. ஈரோட்டுக்குச் சொல்கிறார்! தமிழ் வழிக் கல்வி இயக்க ஏடாகத் திகழ்ந்த குறளியம் 'வேலா'வுக்குத் தொலைபேசி வழியே தாம் வருவதை உரைக்கிறார், தாம் தங்கியிருந்த விடுதியில் இருந்து! "தாங்கள் அங்கேயே இருங்கள். நான் வந்து பார்க்கிறேன்" என்கிறார் வேலா. "நீங்கள் வரவேண்டா. நானே வருகிறேன்" என்கிறார் மூதறிஞர்!*

*அவரும் வருகிறார்! இவரும் செல்கிறார்! இடைவழியில் சந்திக்கின்றனர். "தமிழுக்குத் தொண்டு செய்பவர்களை அவர்கள் வாழும் இடத்திற்கு வந்து கண்டு செல்லுதலே சால்பு" என்கிறார் மூதறிஞர் செம்மல் வ.சுப.மா! அகவையாலும் முதிர்ந்தவர் வ.சுப.மா. தொண்டர்களில் ஓங்கிய திருத்தொண்டர்!*

"என்றும் பணியுமாம் பெருமை"

*என்னும் வள்ளுவமே சான்று!*

*வ.சுப.மா. அவர்கள் தோற்றுவித்து நடையிடச் செய்த தமிழ்வழிக் கல்வி இயக்கத்தைத் தோளில் தாங்கி, அவருக்குப்பின்னே நடையுறுத்தியவர் 'வேலா' என்பது எண்ணத் தக்கது!*

*மதுரையில் மருத்துவர் ஒருவரைக் காணச் செல்கிறார் வ.சுப.மா. மருத்துவரிடம் தம் அறிமுக அட்டையைத் தருகிறார்! வாங்கிய மருத்துவர் 'உடனே வரச் சொல்லுங்கள்' என்கிறார்! 'நான் தான்' என்கிறார் மருத்துவர். விதிர்விதிர்த்து இருக்கையில் இருந்து எழும்புகிறார்! 'நீங்களா! நீங்களா!' என்கிறார்! அவர்தம் தோற்றமும், ஏற்றமும் செய்த திருவிளையாடல் இது!*

*இராசபாளையத்தில் திருவள்ளுவர் மன்றத் திறப்புவிழாக் கட்டடத் திறப்பாளர் மூதறிஞர்; நூலகத் திறப்பாளன் எளியேன் 'வாடகி வைக்கலாம்' என்றேன்! வேண்டா! "பேருந்துதான் உண்டே! அதிலேயே போகலாம்" என்றார். நான் என்ன சொல்ல முடியும்?*

இராசபாளையம் பேருந்து நிலையத்தில் அன்பர்கள் எதிர்பார்த்திருந்தனர். அழைத்துக் கொண்டு சென்றனர். திறப்பு விழா, சிறப்பு விழாவாக நிகழ்ந்தது! உணவும் அங்கேயே வழங்கப்பட்டது. தனிவண்டியில் விடுக்க அன்பர்கள் முயன்றனர்; தோற்றனர்! பேருந்திலேயே மீண்டோம்!

பேருந்து 'மூவரை வென்றான்' என்னும் இடத்தில் சிற்றுண்டிக்காக நிறுத்தப்பட்டது. "ஐயா, குளம்பி(காபி) பருகலாம்" என்றேன். "பருகலாம்" என்றார். "நீங்கள் வண்டியில் இருங்கள்; நான் வாங்கிக்கொண்டு வருகிறேன்" என்றேன்.

"ஏன், நானும் வருகிறேன்" என்றார்!

"அங்கு நின்றுகொண்டு அல்லவா பருக வேண்டும்" என்றேன்.

"எல்லாரும் நின்று கொண்டு தானே பருகுகிறார்கள்" என்றார்.

ஓர் ஒப்புரவு மலையின் பக்கத்தில் நிற்பதாக உணர்ந்து உருகினேன்!

யான் பொறுப்பாளனாக இருந்து நடத்திய குறளியம் இதழில் முனைவர் இரா. சாரங்கபாணியார்,

"உலாவச் சென்றபோது ஒரு வண்டி மணலில் சிக்கிக்கொண்டு செல்ல முடியாமல் தடைப்பட்டது கண்டு தாமே சென்று வண்டியைத் தேடிக் காய்கறிக் கூடைச் சுமையை இறக்கி வைத்துவிட்டுத் தூக்கிவிட ஆள் இல்லாமல் ஏங்குபவரின் குறிப்பறிந்து தாமே சென்று உதவுவார்" என்னும் குறிப்புகள் என்னுள் பளிச்சிட்டன!

தில்லையில் திருவாசகத்தொடர் பொழிவு, முனைவர் மெய்யப்பனார் ஏற்பாட்டால் செய்து கொண்டிருந்தேன். 25.4.89 விடியலில் மெய்யப்பனார், "மாணிக்கனார் போய்விட்டாரே ஐயா" எனக் கதறினார். 'நம் மாணிக்கமா, நம் மாணிக்கமா' என்றேன்; யானும் அழுதேன்; உடனே புறப்பட்டோம்! அமரர் மாணிக்கர் - வள்ளுவத் தோன்றல் - 'நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும் பெருமை'யர் ஆயமை உருக்கியது!

குறளாய வேலா, பெரும்புலவர் தங்கவேலர், ஈவப்பனார், யான் திருக்குறள் முற்றோதல் செய்தோம்!

மாலையில், முதுகாட்டில் இரங்கல் உரை! செவ்வானில் கதிர்மறை நிலை! பாவேந்தர் காட்டிய கதிர்மறைவுக்காட்சி என்னுள் பளிச்சிட்டது!

"தங்கத்தை உருக்கிவிட்ட வானோடை தன்னி லேஓர்
செங்கதிர் மாணிக்கத்துச் செழும்பழம் முழுகும் மாலை"

என மாணிக்க உடலையும், மாணிக்கக் கதிரையும் காட்டி உருகினேன்!

'எளிமை - இனிமை - தூய்மை - நிறைமை - இறைமை' என்பவற்றை உருவாகக் காட்டுக என்றால் மாணிக்கர் படத்தைப் போட்டு விடலாம்!



# நல்லன எல்லாவற்றிலும் வல்லவர் வ.சுப.மா

அறிஞர் திரு. **மா. நன்னன்,**
சென்னை.

வ.சுப.மா. அவர்களுக்கு நூற்றாண்டுவிழா கொண்டாடுவது வரவேற்கப்படும் ஒரு விழுமிய முயற்சியேயாகும். அதற்காக அதில் ஈடுபட்டுள்ள அனைவரையும் நான் உளமாரப் பாராட்டுகிறேன்.

பவணந்திமுனிவருக்குப் பின் தமிழ்மொழியின் மாசுதுடைக்கப்பட்டு மண்ணிய மணியாய் அதை ஒளிரச் செய்யும் சரியான முயற்சி. ஆகவே ஒரு பெருநிதியத்தை உருவாக்குவதோடு அதைக் கொண்டு வல்லார் குழு ஒன்றைச் சிறியதாக அமைத்து இக்கால நிலைக்கேற்றதொரு செந்தமிழ் இலக்கணமொன்றை உருவாக்கலாம். அது நாம் வ.சுப.மா. பெயரால் காலத்தாற் செய்யும் அரும்பெருந்தமிழ்ப் பணியாகும் என நான் கருதுகிறேன்.

வ.சுப.மா. அவர்கள் மாணவநிலை கடந்து ஆசிரியநிலையெய்திக் கற்பிக்கத் தொடங்கிய போது அவரின் நன் மாணவருள் ஒருவனாய்ப் புறப்பட்டவன் நான். 1941-1942 முதல் 1945 வரை அணணாமலைப் பல்கலைக்கழகத்தில் புலவர் வகுப்பில் படித்த போது திருக்குறள் அறத்துப்பாலை எமக்குப் புகட்டியவர். அவர் ஒருவர்தாம் வகுப்பறையில் சித்திரப்பாவைபோல் நின்ற திருக்கோலத்தில் அமைதியாகவும் அழுத்தமாகவும் குழப்பமில்லாமலும் பாடம் நடத்தியவர்.

மாலையில் உலாவச் செல்வது போன்ற பலவகையில் நான் அவரோடு நெருங்கிப் பழகியவன். மாலையுலாவில் காலில் செருப்புமணியாமல் நடத்தல், கழிப்பறைப் பழக்கம் போன்றவற்றுள் அவர் பல தனிப்பழக்கமுடைவர். பிற்காலத்தில், காரைக் குடிக்குப் பல்கலைக்கழத்திற்குத் தவறாமல் அழைக்கப்பட்டு நான் அங்கு சென்று, சொற்பொழிவாற்றிட்டபோதும் அப்பழக்கங்கள் பல அவரிடம் நிலைத்திருக்கக் கண்டவன்.

பிறகு ஓர் தமிழ் அமைப்பு அமைக்கும் முயற்சியில் ஈடுபட்டு அதற்கென ஒரு தனிக் கலந்தாய்வுக் கூட்டத்தைச் சென்னையில் அவர் நடத்திய போது அவர் கருத்து ஒன்றோடு முரணி நின்றவனும் நானே.

அவருடைய நூல்களில் அலைவீசும் கடல் போன்று கருத்துகள் காணப்படும். பேராற்றின் அமைதியான ஓட்டமும் அதில் அடித்து வரப்படும் அரும்பொருள்களும் நிறைந்திருக்கும். நூற்றாண்டைத் தொட அடி வைக்க முயன்று கொண்டுள்ள என்னால் அவற்றை நினைவுகூர முடியாமல் தவிக்கிறேன். அவற்றை இப்போது எண்ணிப் பார்க்கும் தன்மையும் என்னிடம் அற்றுப்போயிற்று.

அவர் ஒரு நல்ல புலவர்; அவர் ஒரு நல்லாசிரியர்; அவர் ஒரு நல்ல நண்பர்; அவர் ஒரு நல்ல தமிழர்; அவர் ஒரு நல்ல மாந்தர்; அவர் நல்லன எல்லாவற்றிலும் வல்லவரும் ஆவார்; அவர் புகழ் என்றும் நின்று நிலவும்.



# அறிஞர் வ.சுப. மா. அவர்களும் நானும்

திரு. **க.ப. அறவாணன்**
முன்னாள் துணைவேந்தர்
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி.

அறிஞர் வ.சுப.மாணிக்கம் இறுதி நாளும் உயிர் இறுதியும் நான் பார்க்க நிகழ்ந்தவை. என் நெஞ்சைவிட்டு நீங்காத அவலங்கள் அவை. அக்காலங்களில் வ.சுப.மாணிக்கனார் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகம் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் ஆகியவற்றில் தமிழ்த்துறைத் தலைவராக இருந்து பின்னாளில் மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தராகச் செயல்பட்டவர். அறிஞர் தெ.பொ.மீ., அறிஞர் மு.வ. ஆகியோர்க்குப் பிறகு வெற்றிகரமான துணைவேந்தராக இயங்கிய பெருந்தகை. வ.சுப.மிகக் கண்டிப்பானவர்; உண்மை யானவர்; நேர்மையானவர்; நான் புதுவைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றிய காலங்களில் அங்கு அடிக்கடி இந்தியக்குடியரசுத் தலைவரின் சார்பாளராக நேர்முகத்தில் இடம்பெறுவார். இலயோலா கல்லூரியில் பணியாற்றிக்கொண்டிருந்த நான் புதுவைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த் துறைத்தலைவராகத் தெரிவு செய்யப்பட்டபோது அந்தக்குழுவில் ஒருவராக இருந்து கையொப்பமிட்டவர். என்னுடன், செல்லம்மாள் மகளிர் கல்லூரியில் பணியாற்றிக் கொண்டிருந்த என் துணைவியார் தாயம்மாளையும் புதுவைப் பல்கலைக்கழக விரிவுரையாளராகத் தேர்ந்தெடுத்தபோது அந்தக் குழுவில் இடம்பெற்றிருந்த வ.சுப. கொள்கைக்காக அதை ஏற்றுக்கொள்ள மறுத்தார். ஒரே துறையில் கணவனும் மனைவியும் பணியாற்றுவது அவருக்கு உடன்பாடு இல்லை. எனவே, என் துணைவி புதுவைப் பல்கலைக்கழக விரிவுரையாளராகப் பணி செய்யும் வாய்ப்பை அப்போது பெறமுடியாமல் போய்விட்டது. எத்துணை நெருக்கமானவராயினும் எதற்காகவும் தம் கொள்கையை விட்டுத் தராதவர் என்பதற்கு இந்நிகழ்வு ஒரு சான்று.

இந்தியப்பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தலைவராக அவர் செயல்பட்ட போது நான் அந்த அமைப்பின் செயலாளராக இருந்தேன். பல நம்பிக்கையான பொறுப்புகளை என்னிடம் ஒப்படைப்பார். செயற்குழுக் கூட்டத்திலும் அப்போது செயலாளராக இருந்த பேரா.ச.அகத்தியலிங்கம் கணக்கு வழக்குகளை ஆண்டுதோறும் ஒப்படைத்துவிட வேண்டும் என்பதில் மிகக் கண்டிப்பாக இருப்பார்.

புதுவைப் பல்கலைக்கழகத்துக்கு நான் பணியாற்றிவந்த காலத்தில் நாடகத் துறைக்கு ஆசிரியர்களைத் தேர்ந்தெடுக்க வல்லுநராக அவர் அழைக்கப்பட்டிருந்தார். மறுநாள் நேர்முகம் நிகழ இருந்தது. முதல் நாள் இரவே புதுவை வந்துவிட்ட அவரை, புதுவைக் கடற்கரையோர விருந்தினர் இல்லத்தில் தங்க வைத்திருந்தோம்.




அவர் உடன் இருந்து வல்லுநராகச் செயல்படும் ஒருவராக திருப்பதி வேங்கடவன் பல்கலைக்கழகப் பேராசிரியர் டாக்டர் சௌரிராஜனை அழைத்திருந்தோம். அவரும் வ.சுப. அவர்கள் தங்கியிருந்த அதே விருந்தினர் இல்லத்தில் தஙக வைக்கப் பட்டிருந்தார். நான் வழக்கம்போல இவ்வேலைகளை முடித்துக்கொண்டு என் வீட்டிற்கு வந்துவிட்டேன். இரவு தனக்கு நெஞ்சு வலிப்பதுபோல் இருப்பதாக வ.சுப. சொல்ல, உடன் சௌரிராஜன் பக்கத்தில் உள்ள அரசினர் மருத்துவமனையில் பல்கலைக்கழக அதிகாரிகளின் ஒத்துழைப்போடு உடனே சேர்த்துவிட்டார். ஆனால் என்ன அவலம்! மருத்துவமனையிலேயே அறிஞர் வ.சுப. காலமாகிவிட்டார். எனக்குச் செய்தி அனுப்பப்பெறப் பதைபதைத்து ஓடினேன். எல்லாம் முடிந்துவிட்டன. இனி அவரை அவர் ஊரான காரைக்குடிக்குக் கொண்டு செல்ல வேண்டும். துணைவேந்தராக இருந்த, எதற்கும் கலங்கா அறிஞர் வேங்கடசுப்பிரமணியம் ஓர் அமரர் ஊர்தி ஏற்பாடு செய்து அதில் வ.சுப. வை ஏற்றி ஓட்டுநருக்குப் பக்கத்தில் என்னையும் பேரா.அறிவுநம்பியையும் உடன் அனுப்பி காரைக்குடியில் வ.சுப. இல்லத்தில் கொண்டுவிட்டு வருமாறு பணித்தார். புதுவையில் இருந்து காரைக்குடிக்கு வேனில் பயணம். ஏறத்தாழ ஆறு மணி நேரம். மூன்று மணி வாக்கில் காரைக்குடி வந்து சேர்ந்தோம். காரைக்குடி நகரை நாங்கள் வந்த வேன் தொட்டவுடன் மழை கொட்டத் தொடங்கியது. தொலைபேசி வழி நாங்கள் நெருங்கிக் கொண்டிருப்பதை வ.சுப. இல்லத்தினருக்குத் தெரிவித்தோம். நாங்கள் வ.சுப.வின் வீட்டை அடையும்போது உள்ளூர்ப் பிரமுகர்கள் அத்தனை பேரும் கண்கலங்கிக் கூடியிருந்தார்கள். உள்ளே ஒரே அழுகை ஒலி. அவர் மனைவியார், மக்கள், பெண் உறவினர்கள் அனைவரும் கதறி அழுதுகொண்டு, அமரர் வண்டியில் இருந்து வ.சுப.வை இறக்கி உள்ளே கொண்டு சென்றோம். அடுத்த ஒரு சில மணி நேரங்களில் நாங்கள் திரும்பி வந்து விட்டோம். இதுபோன்ற துன்பகரமான சூழ்நிலை யாருக்கும் வாய்க்கக் கூடாது.

இதே அறிஞர் வ.சுப. முதல் முதல் எனக்கு அறிமுகமானது திருவனந்தபுரத்தில். அப்போது திருவனந்தபுரத்தில் வி.ஐ. சுப்பிரமணியம் கீழ் நான் படித்துக் கொண்டிருந்தேன். வ.சுப.வின் நேர் மாணவராகிய அறிஞர் இரா. இளவரசு அங்கே பிஎச்.டி. ஆய்வு செய்து கொண்டிருந்தார். வ.சுப. எழுதிய தமிழ்க் காதல் என்ற நூல் உட்பட பல நூல்களைப் படித்துக் கொண்டிருந்தேன். அவர் நூலில் உள்ள சிறப்பு என்ன என்றால், சிறு கட்டுரையாக இருந்தாலும் புதிய செய்திகள் ஏதேனும் சொல்லியிருப்பார். அவருடைய மொழி நடை அவருக்கே உரிய தனி நடை. வேற்றுமொழிச் சொற்கள் கலக்கப்படாமல் தனித்தமிழில் எழுதப்பட்டிருக்கும். சிறுசிறு தொடராக இருந்து தனித் தமிழுக்கும் உணர்ச்சி ஊட்டும் ஆற்றல் உண்டு என்பதை எடுத்துச் சொல்வது போல் இருக்கும்.

எங்கள் பேராசிரியர் வி.ஐ. சுப்பிரமணியம் அவர்களுக்கு வ.சுப. மாணிக்கம் என்றால் மிகப் பிடிக்கும். எனவே, திருவனந்தபுரத்திற்கு காரைக்குடியில் இருந்து இரயிலில் வருவதும் இரயிலில் திரும்புவதுமாக ஆண்டுக்கு இரண்டு மூன்று தடவை வ.சுப.மாணிக்கம் வந்து போய்க் கொண்டு இருப்பார். அவரை வரும் இரயில்

அறிந்து அழைத்துக் கொண்டு வருவதும், தங்க வைப்பதும் உணவு ஏற்பாடுகளைக் கவனிப்பதும் திரும்பச் செல்ல அவரை அழைத்துக் கொண்டு செல்வதும், இரயிலில் ஏற்றிவிடுவதும் எனக்கு வழக்கங்கள். இந்தத் தொண்டில் மிக உதவியாக இருந்தவர் அக்காலத்துத் திருவனந்தபுரத்தில் திருக்குறளை ஒட்டி பி.எச்.டி. பெற்றவரும், பல்கலைக்கழகத்தில் பேராசிரியராக இருந்தவரும் ஆகிய டாக்டர் அ.தாமோதரன் அவர்கள் ஆவார். இரயிலில் வ.சுப. சாதாரண வகுப்பில்தான் பயணம் செய்வார். எளிய உடை, பெரும்பாலான நேரங்களில் அவரை வெள்ளை வேட்டி, வெள்ளைச் சட்டை, தோளில் துண்டுமாகப் பார்க்கலாம். கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்தாலும் பயனுள்ளவற்றைச் சொல்லுவார். நல்ல கேள்விகள் கேட்பார். ஆனால், வ.சுப. என்றாலே பயமூட்டும் அளவுக்கு வினாக்களை எழுப்ப மாட்டார். நாம் பாராட்டிச் சொல்லுகின்ற கருத்துக்களைக் கூர்மையாகச் செவிமடுப்பார். பின்னாளில் நான் படிப்பு முடித்து வேலையில் சேர்ந்து ஒரு நிலையில் இருக்கும்போது அவரை அண்ணாமலைப் பல்கலைக்கழக விருந்தினர் இல்லத்தில் சந்தித்தேன். ஏதோ ஒரு கடமையை நிறைவேற்றுவதற்காக அவர் அழைக்கப்பட்டிருந்தார்.

பிறிதொரு நாளில் **1977** ஆக இருக்கலாம். நான் செனகால் அதிபர் செங்கோர் அழைப்புக்கு இணங்க செனகால் எனும் மேற்கு ஆப்பிரிக்க நாட்டிற்கு ஐந்தாண்டுகள் டக்கார் பல்கலைக்கழகத்தில் பணியாற்ற அழைக்கப்பட்டிருந்தேன். பயண ஏற்பாடுகளில் மும்முரமாக இருந்தேன். மிக மிக வேகமாக இயங்க வேண்டிய தருணம் அது. ஒருபக்கம் என் பிஎச்.டி. ஆய்வேடு சென்னைப் பல்கலைக்கழகத்தில் வழங்கப்பெற்று வாய்மொழித் தேர்வுக்காகக் காத்திருந்தேன். நடக்குமா? நடக்காதா? என்பது போன்ற சிக்கல். இச்சூழலில் துணைவேந்தர் டாக்டர் மால்கம் ஆதிசேஷையா உடனடியாக என்னுடைய பிஎச்.டி. வாய்மொழித் தேர்வு நடக்க ஏற்பாடு செய்திருந்தார். அந்தப் பொறுப்பு திருப்பதி வேங்கடவன் பல்கலைக்கழகப் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. அதற்காகப் பல்கலைக்கழக வளாகத்தில் நான் காத்துக்கொண்டிருந்தேன். அந்தச் சமயத்தில் டாக்டர் வ.சுப. அவர்களும் டாக்டர் சுப்புரெட்டியார் உடன் இருந்தார்கள். இலயோலா கல்லூரிப் பேராசிரியர் தவத்திரு ஞானப்பிரகாச அடிகளார் ஒரு தேர்வாளர். என் வாய்மொழித்தேர்வை வெற்றிகரமாக முடித்தேன். புதுவையில் கடைசித் தருணத்தில் அவரைச் சந்திப்பதற்கு முன்பு சென்னையில் பல்கலைக்கழக வளாகத்தில் இச்சூழலில் தான் சந்தித்தேன். பிற்காலத்து அவரே வல்லுநர் குழுவில் இடம்பெற்று என்னைப் புதுவைப் பல்கலைக்கழக முதல் தமிழ்ப் பேராசிரியராகத் தேர்ந்தெடுக்கும் சூழல் உருவாயிற்று. இந்நிகழ்வுகள் எனக்கும் அறிஞர் வ.சுப. அவர்களுக்கும் நெருக்கமாக இருந்த நினைவுகளை எடுத்துச் சொல்லும். மறக்க இயலா மாபெரும் அறிஞர்.



# மாணிக்க ஒளிவீசட்டும்

பேராசிரியர். **இ.சுந்தரமூர்த்தி,**
மேனாள் துணைவேந்தர், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்
.

*தமிழகத்தின் தலைசிறந்த தமிழறிஞர்களுள் ஒருவராக விளங்கியவர் மூதறிஞர் வ.சுப.மாணிக்கம் அவர்கள். சிறந்த அறிஞராக மட்டுமன்றித் தமிழுக்கு ஊறு நேரும்போது ஒரு தமிழ்ப்போராளியாகவும் திகழ்ந்தவர்.*

*தமிழ்ச்செம்மல் வசுப.மாணிக்கனாரின் அறம் சார்ந்த வாழ்விய நெஞ்சமும் எளிமையான வாழ்க்கையும் தமிழன்பர்களுக்கு முன்மாதிரியாக அமைபவை. வாய்மை, அஞ்சாமை, ஈகை, அறிவு ஊக்கம் பெற்ற குணக்குன்றாய்த் திகழ்ந்தவர்.*

*பல்வேறு கூட்டங்களில் அவர்களோடு பழகும் வாய்ப்புப் பெற்றமை எங்களுடைய நற்பேறாகும்.*

*1980களில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள், 'திருக்குறள் மூதறிஞர் குழு' என்னும் அமைப்பினை உருவாக்கித் திருக்குறள் பாடத்தையும் உரையையும் உறுதி செய்ய ஏற்பாடு செய்தார். முதல் கலந்தாய்வரங்கம் கும்பகோணத்தில் நடைபெற்றது. திருக்குறள் அறிஞர்கள் பலரும் தமிழ்ச்செம்மலோடு இணைந்து செயல்பட்டனர். அறிஞர்கள் ச.தண்டபாணிதேசிகர், இரா.சாரங்கபாணி, புலவர் மு.சண்முகம்பிள்ளை, டாக்டர் சாமி தியாகராசன், திரு .முருகரத்தினம், இ.சுந்தரமூர்த்தி எனப் பலரும் கலந்துகொண்டனர். அக்கலந்தாய்வரங்கத்தின்போது மூன்று நாட்கள் அங்குத் தங்கியிருந்தோம். ஐயாவின் புலமையும் எளிமையும் எங்களை வியப்பில் ஆழ்த்தின. அவர்களோடு பழகிய அந்த நாட்கள் என்றும் பசுமையாக நினைவில் நிற்கும்.*

*பெரும்புலவரான பண்டிதமணியாரிடம் பயின்ற பெருந்தகை தன் ஆசிரியர் நினைவாகத் தன் இல்லத்திற்குக் கதிரகம் எனப்பெயரிட்டார். ஆசிரியப்பணி, நிருவாகப்பணி எனப் பன்முக ஆளுமைகள் உடையவர் வ.சுப.மாணிக்கனார்.*

*புலவர் குழுவின் தலைவராக வீறுபெறச் செயல்பட்டவர். தாய்மொழி வழிக்கல்வியைப் போற்றவேண்டு என இடையறாது குரல் எழுப்பிய பெருந்தகை. 1981ஆம் உலகத் தமிழ் நாட்டில் உரையாற்றியபோது, 'என்னை ஒருநாள் முதல்வராக அமர்த்துங்கள். தாய்மொழி வழிக் கல்வியை ஏற்படுத்திவிட்டு என் பதவியைத் திரும்பத் தந்துவிடுவேன்' என்று சூளுரைத்தவர்.*

*தமிழாசிரியர்கள் அதிகமான அதிகாரம் படைத்தவர்கள். எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் எனப் பயின்றவர்கள் என நகைச்சுவையோடு தன் அஞ் சாமையையும் வெளிப்படுத்தியவர்.*

தமிழ்மொழி மென்மேலும் ஆக்கம்பெறப் புதிய சொல்லாக்கங்கள் படைத்தவர். குளிரகம், ஒலிப்பான், கட்டுத்தொகை, செல்லுரிமை எனப் பல சான்றுகள் கூறலாம்.

கலனும் புலனும் கலையும் நிலையும்
வலனும் தமிழால் வரும்

என்ற நம்பிக்கையை வளர்த்த நல்லறிஞர் மாணிக்கனார்.

'மாணிக்கக்குறள்' மூலம் தமிழின் மேன்மையைமட்டுமன்றிச் சமூக விழிப்புணர்வையும் ஊட்டியவர். வெண்சுருட்டு சமூகத்தில் உருவாக்கும் தீமையையும், நோயையும் சுட்டி அறிவுரை கூறுவார்.

'புற்று வளர்ச்சிப் புகைப்பிடிப்பு விட்டக்கால்
வற்றுமே நெஞ்சு வலி

கண்டபடி ஊதிக் கரித்தூள் உறிஞ்சற்க
உண்டபடி மாறும் உடல்

என்பன அக்குறட்பாக்களாகும்.

வரையறுத்து ஊதியம் வந்தால் செலவைக்
கரையறுத்துச் செய்தல் கடன்

எனச் சிக்கனச் செலவைப் போற்றுவார்.

தமிழ் படித்தால் வாழ்வில் அனைத்தும் கிடைக்கும் எனச் செம்மாந்து கூறியவர் தமிழ்ச்செம்மல் வ.சுப.மாணிக்கனார்.

உறையுளும் உணவும் எல்லாம் நிறையக்
கிடைக்கும் தமிழை நினை

என்பார் வ.சுப.மா.

தமிழ்ச்செம்மலின் நூற்றாண்டுவிழா மலர் தமிழ் மணமும் மாணிக்க ஒளியும் பெற்றுத் திகழுமாக.



## மாணிக்கச் சிந்தனைகள்

**எதற்கும் ஒரு சிறு பயிற்சியாவது வேண்டும். மிதிவண்டி ஓட்டுவ தாயினும் பழகி விழுந்து புண்படும் பயிற்சி வேண்டாமா? குழந்தை நடப்பதற்கும், உண்பதற்கும் உடுப்பதற்குமே எவ்வளவு ஆண்டுகள் பயில்கின்றது. கெடுதல்களுக்குத்தான் பயிற்சி தேவை-யில்லை. கவர்ச்சியால் அவை தாமே வந்து கவ்வும். நல்லது எதற்கும் அக்கறையும் முயற்சியும் கைப்பிடியளவாவது வேண்டும். ஆதலின் தொல்காப்பியம், சங்கவிலக்கியம் முதலான இவ்வுலக வாழ்வுச்சிந்தனை நூல்களைக் கற்கும் பயில்வைப் பெற்றுக் கொள்ளுங்கள். சின்னாட் பயிற்சியும் வாழ்வு நலம் பெறும்.**

(தொல்காப்பியக் கடல்)



# மூதறிஞர் செம்மல் வ.சுப. மா. தொடர்பு

பேராசிரியர் முனைவர் **செ.வை. சண்முகம்**
முன்னைஇயக்குநர், மொழியியல் உயராய்வு மையம்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், சிதம்பரம்.

என்னுடைய பேரா. தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் (அன்றைய மதுரைப் பல்கலைக்கழக முதல் துணைவேந்தர்) ஏற்பாட்டின்படி மதுரை தியாகராசர் கல்லூரியில் நடைபெற இருந்த அனைத்திந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் முதல் கருத்தரங்கு மாநாட்டில் கலந்துகொள்வதற்காக 1969 சூன் மாதம் ஒரு நாள் மதுரை தியாகராசர் கல்லூரி உணவு விடுதியில் மாலைச் சிற்றுண்டி சாப்பிட நானும், பேரா. அகத்தியலிங்கமும் போனபோது, வ.சுப.மா., பேரா. இரா. சாரங்கபாணி ஆகிய இருவரும் சிற்றுண்டி அருந்திக்கொண்டிருந்தார்கள். அதுதான் வ.சுப.மா.வுடன் ஏற்பட்ட முதல் சந்திப்பு.

பின்னர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழியல் துறைத்தலைவராய் இருந்தபோது அடிக்கடி சந்திப்பு. மாதந்தோறும் சனிக்கிழமை தமிழ்த்துறை ஆசிரியர்கள் கலந்துகொண்டு சந்தித்து உரையாடியது உண்டு.

வ.சுப.மா. காரைக்குடியில் ஒரு தமிழ்ச் சங்கம் நிறுவி, மாதந் தோறும் சங்க இலக்கியத்தில் முனைவர்பட்டம் பெற்ற தமிழ் அறிஞர்களை அழைத்துச் சொற் பொழிவு செய்ய ஏற்பாடு செய்துகொண்டிருந்தார். அப்போது பத்துப்பாட்டில் முனைவர் பட்டம் பெற்ற இராம. சுந்தரம் அவர்களை ஒரு மாதம் சொற்பொழிவு ஆற்றும்படி கேட்டிருக்கிறார். ஆனால் முனைவர் இராம. சுந்தரம், நான் கல்வெட்டுத் தமிழில் முனைவர் பட்டம் பெற்றிருந்தாலும், சங்கம், தமிழ் மொழி ஆய்வில் ஈடுபாடுகொண்டு என்னுடைய ஆங்கில நூல்களில் நிறைய மேற்கோள் காட்டியுள்ளேன் என்பதனால் என் பெயரைப் பரிந்துரைத்துள்ளார்.

எனவே, 1971இல் ஒரு நாள் அழைத்துச் “சங்க இலக்கிய மொழி பற்றிப் பேச முடியுமா?” என்று கேட்டார். நானும், “சங்க கால மொழி அமைப்பு என்ற தலைப்பில் பேசுகிறேன்” என்று கூறியதால், என்னை அந்தத் தலைப்பில் பேசச் சொன்னார். அந்தக் கூட்டத்துக்குப் பேரா.இரா. சாரங்கபாணி தலைமை வகித்தார்.

என் வாழ்நாளில் மூதறிஞர் செம்மல் வ.சுப. மாணிக்கம் அவர்களோடு நெருங்கிப் பழக வாய்ப்பு ஏற்பட்டதைப் பெரும் பேறாகக் கருதுகிறேன்.



# மேல வட்டகைச் செட்டிநாடு அளித்த கொடை

அறிஞர் **திரு. பழ.கருப்பையா**
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்

வ.சுப.மாணிக்கம் ஒரு நல்லாசிரியர்; பேராசிரியர்; சிறந்த உரையாசிரியருங்கூட! மாணிக்கம் என்னும் பெயருக்கு ஏற்ப மாணிக்கமாகத் திகழ்ந்தவர்!

தொல்காப்பியத்தையும், குறளையும் தன் இரு கண்களாகப் போற்றியவர்! இரண்டுக்கும் அவரே உரை எழுதினார்!

ஐம்பது ஆண்டுகளுக்கு முந்திய காலம் தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் ஏன் இந்தியாவுக்கே பொற்காலம்! அது காந்தி உருவாக்கிய காலம்!

இராசாசி, காமராசர், பெரியார், அண்ணா எனத் தன்னலமில்லா, அறிவார்ந்த தலைவர்களைப் பெற்றிருந்த காலம் அது!

'உயரியது, பெரியது, எளியது' என்னும் பண்புகள் போற்றப்பட்ட காலம் அது!

நுனிப்புல் மேய்பவர்களே எக்காலத்திலும் மிகுதி எனினும், அவர்கள் தங்களை வெளிச்சம்போட்டுக் காட்டிக்கொள்ளக் கூசிய காலம் அது.

அறியாமை; போதாமை ஆகியவை ஒதுங்கிநின்றதோடு, அறிவு வெளிச்சத்திற்கு வந்த காலம் அது!

அத்தகைய பொற்காலத்தில் கோலோச்சிய அறிஞர்களில் ஒருவர் வ.சுப.மாணிக்கம்!

தமிழுக்கு ஆணிவேரான மனோன்மணீய சுந்தரம்பிள்ளை, பரிதிமாற்கலைஞர், தன்னேரிலாத மறைமலை அடிகள், நிகரற்ற தேவநேயப்பாவாணர் என்று இத்தகையோருடன் அவர்களின் காலத்திலோ, சற்றுஅடுத்தோ வாழ்ந்தவர் வ.சுப.மாணிக்கம்!

மொழிப்பற்றில், இனப்பற்றில், மொழிப்புலமையில், தமிழுக்கு ஆக்கப்பணிகள் செய்ததில், இவர்களுக்குச் சற்றும் குறையாதவர் வ.சுப.மாணிக்கம்!

இவர்களோடு தமிழ்ப்பணியில் முன்னின்ற பலப்பலர் உண்டு; ஆனால், மேற்குறித்த ஐவரையும் நீக்கித் தமிழ்கூறும் நல்லுலகம் என்பது இல்லவே இல்லை!

துணைவேந்தராக இருந்து ஓய்வுபெற்ற பிறகு வ.சுப. நாடெங்கும் சுற்றித் தமிழ்ப்பணி செய்த காலம் அது.

சென்னைக்கு அடிக்கடி வருவார்! மகன் தொல்காப்பியன் வீட்டிலிருந்தோ, மகள் தென்றல் வீட்டிலிருந்தோ புறப்பட்டு அவர்களின் மகிழ்வுந்தை எடுத்துக்கொண்டு, எல்லா வேலைகளையும் முடித்துக்கொண்டு, நடுப்பகல் உணவுக்கு என் வீட்டுக்கு வருவார்!



உண்டபிறகு, சற்று நேரம் படுப்பார்! என்னுடைய மனைவி தனக்குத் தாய்வீட்டில் வைத்த சீதன மெத்தைப்பாயை எடுத்து விரிப்பாள்! அது விலையுயர்ந்தது என்பதால், வெகுசிலருக்கே அதில் படுக்கும் பேற்றினை அளிப்பாள்! அவர், 'வேண்டாம்' என்பார்! 'மேலு வலிக்காதய்யா; சுகமா இருக்கும்' என்பாள்! 'தலையணை மட்டும் தா' என்று அதை வாங்கி, மூன்று பேர் அமரும் இன்னிருக்கையில், (sofa) நீட்டிப்படுப்பார்!

அவர் குட்டை; அவருடைய உயரத்திற்குச் சரியாக இருக்கும்!

அவர் துயின்ற இன்னிருக்கை என்பதால், இன்றும் அதைத் தைத்துத் தைத்துப் பேணி வைத்திருக்கிறோம்.

தூங்கி எழுந்த பிறகு ஒரு குளம்பி அருந்துவார்! நான் திரைப்படத்துறையில் பரபரப்பாக இயங்கிய காலம் அது! ஆனாலும், அவரிடம் பேசிக்கொண்டிருப்பதற்காக எல்லா வேலைகளையும் ஒதுக்கிவிட்டு அணியமாக இருப்பேன்! என்னோடு உரையாடிக் கொண்டிருந்துவிட்டு விடைபெறுவார்.

உரையாடல் என்னும் சொல் பொருத்தமற்றது; ஏனெனில், உரையாடல் என்பது சம நிலையில் நிகழ்வது! ஆனால் அவரோ அறிவூட்டும் நிலை; நானோ அறிவைப்பெறும் நிலை!

அவருடன் உரையாடுவதே ஒரு தனிப்பேரின்பம்! அப்போது தமிழ்ப்பற்றாளர்கள், 'மொழி வெறியர்கள்' என்று இழித்துரைக்கப்பட்ட காலம். அரசியலில் திராவிட இயக்க எதிர்ப்புணர்வு தமிழ் எதிர்ப்புணர்வாகத் திரிந்து நின்றது!

வ.சுப. சொன்னார்: "இனப்பற்றும், மொழிப்பற்றும் இயல்பானது; துறவி இளங்கோ வடிகளால் எல்லாவற்றையும் துறக்க முடிந்தது; ஆனால், இனப்பற்றைத் துறக்க முடிய வில்லை; பற்றற்றவனையும் பற்றிக் கொண்ட பற்று அது!"

"பண்டைக்காலத்தில் கன்னியாகுமரிக்குத் தெற்கே மலை இருந்தது. தமிழ் மக்கள் அந்தக்

குமரிமலையில் வாழ்ந்தார்கள். கடல் கொந்தளித்து அந்த மலையையும் மக்களையும் விழுங்கிவிட்டது; பெரும் தமிழ் நிலப்பரப்பு கடலில் சுவடு காண இயலாவாறு மூழ்கிப் போனது!""இந்தச் செய்தியைச் சொல்ல வருகின்ற இளங்கோ, குமரிக்கோட்டைக் கடல் விழுங்கிற்று என்று இயல்பாகச் சொல்லாமல், குமரிக் கோட்டை, 'கொடிய' கடல் விழுங்கிற்று என்று சொல்கிறான்! குமரிக்கோட்டையும் அதில் வாழ்ந்த தமிழ் மக்களையும் விழுங்கிய கடலை, 'கொடிய' என வாயார வைகின்றான்! பற்றற்றவனையும் பற்றிக் கொள்ளும் பற்று மொழிப்பற்றும் அதன் அடிப்படையிலான இனப் பற்றும்!"

வ.சுப.மாணிக்கம் அளித்த இந்த நெடிய விளக்கம் என் நெஞ்சில் இன்று வரை நீங்காமல் நிற்கின்றது! எந்த ஒன்றையும் புதிய கோணத்தில் பார்ப்பார்!

இவ்வளவுக்கும் வ.சுப.விடம் நேரடியாகப் பயின்றவனில்லை நான். நான் படித்துக்கிழித்ததெல்லாம் அழகப்பா கல்லூரியில் ஓராண்டுதான். அதையே மூன்றாண்டு படித்தேன்!

“வராத சனியனை விட்டுத் தொலைடா’ என்று என் தகப்பனார் மதுரையில் இருந்த எங்களுடைய கடையில் கொண்டுபோய் விட்டுவிட்டார்கள்! பதினெட்டு வயதோடு படிப்பு முடிந்தது!

நான் தனித்தமிழ் இயக்கத்தவன்; வ.சுப.வோ அதே கொள்கையுடைய அறிஞர்; எப்படி இணையாமல் இருக்க முடியும்? தமிழ்தான் இணைப்புப் பாலம்!

‘தனித்தமிழ்’ என்று ஏன் சொல்கிறாய்? அதுதான் தமிழே! கலந்து பேசுகிறவர்கள் வேண்டுமானால் தங்களுடைய தமிழை இனம் பிரித்துக் காட்டுவதற்கு, ‘கலப்புத் தமிழ்’ என்று அடைகொடுத்துச் சொல்லிக் கொள்ளட்டும்; அவர்களுக்குத்தான் அந்த அடை தேவை! இடைக்காலத்தில் இத்தகையோர் தங்கள் நடையை, ‘மணிப்பிரவாள நடை’ என்று பெருமையாக வேறு கூறிக்கொண்டார்கள்” என்று நகையாடுவார்!

என்னுடைய தமிழ் சார்ந்த தெளிவுகள் வ.சுப.விடமிருந்து பெறப்பட்டவைதாம்!

ஆனால், தொடர்ந்து நான் தமிழிலே ஊற முடியவில்லை; அதைப் பெருக்கிக்கொள்வதில் நான் தொடர் முயற்சியுடையவனாக இருக்க முடியவில்லை! திரைத்துறையும் அரசியலும் அதன் சிறைவாசங்களும், போராட்டங்களும், அது ஒரு முழுநேரக் காலக்கழிப்பு என்பதால், வாழ்க்கைப் போக்கையே மாற்றிவிட்டன!

ஆனாலும், தமிழோடும் அதன் காரணமாக வ.சுப.வோடும் இருந்த இணைப்பு இறுகியதே ஒழியக் குறைவுபடவில்லை.

நான் சட்டமன்றத் தேர்தலில் நின்றேன். அப்போது அண்ணாமலையில் தமிழ்த்துறை மேல்நிலைத் தலைவராக (Dean) வ.சுப. இருந்தார்.

அப்போது, வ.சுப. எனக்கொரு அஞ்சலட்டை எழுதியிருந்தார்! எனக்கு வாக்களிப் பதற்காகக் காரைக்குடிக்கே வருவதாகவும், வாக்களித்த இரவே திரும்பிவிடப் போவதாகவும், தன்னைச் சந்திக்க மற்ற வேலைகளைக் கெடுத்துக்கொள்ள வேண்டாம் என்றும் வெற்றிபெற வாழ்த்துகிறேன் என்றும் எழுதியிருந்தார்!

அந்தத் தேர்தலில் தோற்றுவிட்டேன். தோல்வி வாழ்வின் ஒரு பகுதி என ஆறுதல் கூறினார் வ.சுப.

அப்போது சொன்னேன்: “எனக்கு அளிக்கப்படாத வாக்குகளின் கனத்தைவிட, எனக்கு அளிக்கப்பட்ட உங்களுடைய வாக்கின் கனம் கூடுதலானது!”

வ.சுப. சலனமின்றி, என்னையே பார்த்துக்கொண்டிருந்தார்! இதுபோன்ற முகமன் களையோ, புகழ்ச்சிகளையோ அவர் ஏற்பதில்லை! அவை வெற்றானவை என்று கருதுவார்!

நான் ஒவ்வொரு நாளும், அடுத்தடுத்துக் காண நேரிட்டாலும், வ.சுப.வைக் கண்ட வுடன் கும்பிடுவேன்! அவர் எப்போதும் யாரையும் திருப்பிக் கும்பிட மாட்டார்!

“ஏன்பா... அடிக்கடி பார்க்கிறோம்; மிகுந்த நெருக்கம் இருக்கிறது! பின் ஏன் கும்பிடு கிறாய்? அது அயன்மைப்படுத்தாதா?” என்று கேட்பார்.



அதற்குப் பிறகும், அவர் இறக்கும் வரைக்கும் அவரைக் கும்பிடுகிற பழக்கம் என்னிடம் இருந்தது!

நான் சொன்னேன்: "ஐயா..! நமக்குப் புகலிடமான இறைவனையும், தமிழுக்குப் புகலிடமான தங்களைப்போன்ற சான்றோர்களையும் கும்பிடுவதற்கும், இளநங்கையரைத் தழுவவும்தானே கைகள் இருக்கின்றன!"

"என்னப்பா, பன்மையில் சொல்கிறாய்? பலரோ?" என்று அவர் நகையாட ஒரே சிரிப்பு!

அவரை மென்மையாக, அதேசமயத்தில் மேன்மையாகக் கேலி செய்யும் பழக்கம் என்னிடமிருந்தது. அதை அவர் சுவைப்பார். அவர் இறுக்கமானவர் என்று கருதும் பிழையான மதிப்பீடு சிலரிடம் இருக்கிறது! அவர் மிகமிக நெகிழ்வானவர்; மிகுந்த அன்பானவர்; மிகமிக நேரியர்; காந்திக்குப் பிறகு வாய்மையை வாழ்வின் குறிக்கோளாகக் கொண்ட வெகுசிலரில் ஒருவர்!

துணைவேந்தராக இருந்தபோது, அலுவல் காரணமாக அவருக்கு அளிக்கப்பட்ட மகிழ்வுந்தை மதுரைப்பேருந்து நிலையத்தோடு விட்டுவிட்டு, வார இறுதியில் தன் மனைவி மக்களைக் காணப் பேருந்தில் காரைக்குடிக்கு வந்து செல்வது வ.சுப.வின் வழக்கம்!

இதுபோன்ற எளிமையையும் நேர்மையையும் கேள்விப்பட்டவராவது உண்டா?

இன்றைக்கு அந்தத் துணைவேந்தர் பதவியைப் பத்துக்கோடி விலைகொடுத்து வாங்கு கிறார்கள்! மீனாட்சி அம்மன் கோயிலில் செருப்புக் குத்தகை எடுப்பதுபோல் துணைவேந்தர் பதவி தொழிலாகிவிட்டது!

'கல்வியின் பயன் அறிவு; அறிவின் பயன் ஒழுக்கம்' என்று தமிழின் முகவரியான வள்ளுவனுக்கு முகம் வரைவான் பரிமேலழகன்! கல்விப்பணி செருப்புக் குத்தகையாக மாறிவிட்ட நிலையில், இளைய தலைமுறையின் உருவாக்கத்திற்கு யார் பொறுப்பு?

சிந்துச்சமவெளி நாகரிகம் சீரழிகின்ற அழகினைப் பாருங்கள்!

பரிமேலழகனின் உரைநடை பாவின் கவர்ச்சியுடையது; தருக்கபூர்வமானது; அவன் கருத்தை வளர்த்தெடுத்துச் செல்லும் அழகுக்கு நிகரானது எதுவுமில்லை! பரிமேலழகன் உரை கிடைத்திருக்காவிட்டால், பாதித்திருக்குறளுக்குப் பொருளே புரிந்திருக்காது!

பரிமேலழகனுடைய உரைநடையை நான் வாய்விட்டுப் படித்து மகிழ்வது வழக்கம்!

'என்ன பள்ளிக்கூடத்துப் பையனாட்டம் முறை வச்சுப் படிக்கிறீக...?' என்று என் மனைவி கேட்பாள்!

"பரிமேலழகன் உரையை உரக்கப்படிக்கும்போது வாயும், அதைக்கேட்கின்ற காதுகளும் இன்பமடைகின்றன. மனம் மட்டும் இன்புற்றால் போதுமா? அதனால்தான்!"

"உன்னை உங்க ஆத்தா வீட்டிலேயிருந்து பொண்ணழைச்சுக் கூட்டியாந்தபோது, நீ எப்படிச் சிலிர்ப்பா இருந்தியோ, அப்படி இருக்கு, பரிமேலழகன் தமிழும்" என்பேன்!

"பார்த்தியளா... உங்களுக்குக் கொழுப்புத்தானே! இப்ப வயசாயிருச்சின்னுதானே சொல்றீக..."

"அப்படிச் சொல்லலே... தமிழுக்கு எப்பவுமே வயசாகாதுன்னு சொல்றேன்!" இது எனக்கும் என் மனைவிக்கும் நடந்த உரையாடல்!

பரிமேலழகனின் உரைநடைபோல் நான் மயங்கும் இன்னொரு உரைநடை, வ.சுப. மாணிக்கத்தின் உரைநடை! அழகுநடை; அறிவு நடை; கருத்து நடை! கருத்தின் தேவைக்கு மேல் ஒரு சொல்கூடப் பெய்யப்படாத சின்ன நடை!

வ.சுப. நடையும் சிக்கனம்; வாழ்க்கையும் சிக்கனம்! வ.சுப. உண்மையின் உறைவிடம்; நேர்மையின் புகலிடம்;தமிழுக்குக் காப்பிடம்! ஒப்பாரும் மிக்காரும் இல்லாத நிகரற்ற ஞானி பட்டினத்தார் நீங்கலாக, நிகழ்கால இன்பத் தமிழ் நாட்டுக்கு மேலைவட்டகைச் செட்டிநாடு அளித்த கொடை மூன்று!

1. பண்டிதமணி கதிரேசச்செட்டியார்.
2. பண்டிதமணியைப் போற்றிய வ.சுப.மாணிக்கம்.
3. வ.சுப.வைப்போற்றிய தமிழண்ணல்!

## தமிழ்மொழிக்கல்வி இயக்கம் தோற்றிய மூத்த தமிழறிஞர்

திரு. பழ.நெடுமாறன்

செம்மல் வ.சுப.மாணிக்கம் அவர்கள், தமிழ்வழிக்கல்வியை முக்கியமானதாகக் கருதினார்கள். அதற்காகத் தனியே ஒரு இயக்கமே கண்டார்கள். தமிழ்மொழிக்கல்வி இயக்கம் என்ற ஒன்றை அமைத்தார்கள். தமிழ்நாடு முழுவதும் சென்று அதற்காகப் பரப்புரை செய்தார்கள். நம்முடைய குழந்தைகளைப் பெற்றோர்களே ஆங்கில வழிப்பள்ளிக்கூடங்களில் சேர்ப்பதுதான் பெருமை என்று நினைத்துச் சேர்த்துக்கொண்டிருந்த காலக்கட்டத்தில், சரியான நேரத்தில் ஐயா அவர்கள் அந்த இயக்கத்தைத் தொடங்கினார்கள். தொடங்கி, ஒரு விழிப்புணர்வைத் தமிழகம் முழுவதும் ஏற்படுத்த வேண்டும் என்பதற்காக முதிர்ந்த வயதிலும் தமிழகமெங்கும் சுற்றுப் பயணம் செய்து பரப்பினார்கள். அதைப்போல, ஆங்கிலத்திமிங்கிலத்தின் வாயில் சிக்கிக் கொண்டிருக்கக்கூடிய, நம்முடைய தமிழ்க்குழந்தைகளை மீட்பதற்கான முதல் நடவடிக்கை மேற்கொண்ட அத்தனை பெருமையையும் ஐயா வ.சுப. மாணிக்கனார் அவர்களையே சாரும். அன்றைக்கு அவர் துணைவேந்தராக இருந்தவர்கள். மூத்த தமிழறிஞராக இருந்தவர்கள், மக்களாலே மதித்துப் போற்றப்பட்டவர்கள் இந்தப் பிரச்சனையைத் தன் கையிலெடுத்துக் கொண்டு ஊர் ஊராகச் சென்று, அவர்கள் சொன்ன காரணத்தினாலேதான் ஏராளமான பேர் அவருக்கு ஆதரவாகத் திரண்டார்கள். (ஆவணப்படத்திலிருந்து....)



# அறிவை அறிந்திடும் அறிவு

திரு. **சுப.வீரபாண்டியன்**

*"தமிழால் பாரதி தகுதி பெற்றதும், தமிழ் பாரதியால் தகுதி பெற்றதும்" என்னும் வரிகள், தமிழறிஞர் வ.சுப.மாணிக்கனார் அவர்களுக்கும் பொருந்தும். தமிழால் அவரும், அவரால் தமிழும் தகுதிபெற்ற தகைமையை நாடு அறியும். அது குறித்த அரிய செய்திகளை ஆழங்கால் பட்ட அறிஞர்கள் கூறுவதே சால்புடைத்து. பேராசிரியர் அவர்களின் மாணவனாக, அவர் நூல்களைப் பயின்றவனாக, அதனால் பயன் பெற்றவனாக மூன்று நிலைகளில் நின்று கருத்தினைச் சொல்வதே என் தகுதிக்கு ஏற்றதாகும்!*

*1967-71இல். காரைக்குடியில், வள்ளல் அழகப்பர் கல்லூரியில் புகுமுக வகுப்பும், இளம் அறிவியல் (இயற்பியல்) பட்டப் படிப்பும் படித்தவன் நான். அப்போது அய்யா வ.சுப.மா. அவர்கள் தான் கல்லூரி முதல்வர். மிக எளிமையான தோற்றமும், மிக இனிமையான தமிழும் அவரது அடையாளங்கள். இந்த இரு உயர்ந்த பண்புகளும் அன்றைய மாணவர்களாகிய எங்களைக் கவரவில்லை. அவரை ஒரு சாதாரண மனிதராக நாங்கள் கருதினோம். முதல்வர் என்றால், கோட்டும் சூட்டுமாய் ஆங்கிலேயர் போல் இருக்க வேண்டும். மிரட்டல் தொனியில் பேச வேண்டும் அதுவும் ஆங்கிலத்தில் தான் பேசவேண்டும். அவரைக் கண்டாலே மாணவர்கள் அஞ்சி ஓட வேண்டும். அதுதான் கல்லூரி முதல்வரின் இலக்கணம் என்று எங்களின் 'பேரறிவு' அப்போது எங்களுக்குச் சொல்லியது.*

*நாங்கள் கல்லூரிக்கு வருவதற்கு முன்னால், முதல்வராக இருந்த ஆங்கிலப் பேராசிரியர் அலெக்ஸ்சாண்டர் ஞானமுத்து அவர்களைப் பற்றிக் கேள்விப்பட்டுள்ளோம். அவர் அப்படித் தான் இருந்தாராம். அப்படி அய்யா அவர்களை நாங்கள் எதிர்பார்த்தோம். ஆனால் அலெக்சாண்டரே அப்போது தமிழ்ப் பேராசிரியராக இருந்த வ.சுப.மா. அவர்களைப் பெரிதும் மதித்தார் என்பது எங்களுக்குத் தெரியாது.*

*1968ஆம் ஆண்டு பட்டப்படிப்பில் சேர அனுமதி கோரி விண்ணப்பத்துடன் அய்யாவை முதல்வர் அறையில் பார்த்தேன். அப்போது ஒரு வேடிக்கையான நிகழ்வு நடந்தது. நான் வேதியியல் படிக்க வேண்டும் என்று நினைத்தேன். என் நண்பர்களோ, நீ இயற்பியல் துறையில் சேர விருப்பம் என்று சொல். முதல்வர் அதனைக் கொடுக்க மாட்டார். மாற்றித்தான் கொடுப்பார். உனக்கு வேதியியல் துறையில் அனுமதி கிடைத்துவிடும் என்று கூறினர். அதனை நம்பி, உள்ளே சென்ற நான் எனக்கு இயற்பியல் துறையில் படிக்க ஆர்வம் என்றேன். 'மதிப்பெண்கள் குறைவாக இருக்கிறதே' என்று தயங்கிய முதல்வர், பிறகு, 'சரி, அனுமதி தருகிறேன்; படி' என்று கூறிவிட்டார். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. உடன்*

நான் பதறிப்போய், "அய்யா நான் தவறுதலாகச் சொல்லிவிட்டேன். எனக்கு வேதியியல் படிப்பில்தான் ஆர்வம்" என்றேன். என்னை முறைத்துப் பார்த்த முதல்வர், 'என்ன, இப்படி உறுதியற்று இருக்கிறாய், உனக்கு இயற்பியல் துறையில் அனுமதி கொடுத்தாயிற்று, போய் நன்றாகப் படி' என்று கூறிவிட்டார். இப்படித்தான் நான் இயற்பியல் மாணவன் ஆனேன்.

எனினும் எனக்கு இயல்பாகவே தமிழ் மீது ஆர்வம் இருந்ததால், தமிழ்த் துறை நடத்தும் கூட்டங்களுக்கும் செல்வேன். அங்கே அய்யாவின் பேச்சைக் கேட்டு மகிழ்ந்துள்ளேன். மிக ஆழமான செய்திகள் அவர் உரையில் இருக்கும். அதனைத் தாண்டி, அய்யா, பிற துறை மாணவர்களுக்கான அமைப்பாகத் தொடங்கிய, 'கலைக்கழகம்' என் போன்றவர்களுக்குப் பேருதவியாக இருந்தது. கலைக்கழகம்தான் எங்களுக்குப் பேச்சுப் பயிற்சி தந்தது. அன்று அக்கழகத்தில் பேராசிரியர் இரா. சாரங்கபாணி அவர்கள் கற்பித்த யாப்பிலக்கணமே எனக்கு முதுகலை வரையில் உடன் வந்தது. அக்கழகம் அறிஞர் வ.சுப.மா. அவர்களின் மூளையில் உதித்ததுதான்.

சென்னைப் பச்சையப்பன் மாலைக் கல்லூரியில் முதுகலைத் தமிழ் பயின்றபோதுதான் பேராசிரியரின் பெருமையை உணர்ந்தேன். வ.சுப.மா. அவர்கள் முதல்வராக இருந்த கல்லூரியில் படித்தவன் என்பதையே என் முதுகலை ஆசிரியர்கள் பாராட்டிற்குரியதாய்ப் பார்த்தார்கள். அய்யாவின் தமிழ்க்காதல் நூல் படித்தேன். அந்த நிலையிலும் அந்த நூல் எனக்கு ஓரளவுதான் புரிந்தது. அவருடைய 'வள்ளுவம்' படித்தேன். அந்த நூல்தான். ஓர் அறிஞரின் அருகில் இருந்தும், அவருடைய அறிவை அள்ளிக்கொண்டு வரவில்லை என்றாலும், கிள்ளிக்கொண்டு கூட வராமல் விட்டுவிட்டோமே என்ற ஏக்கத்தை எனக்குக் கொடுத்தது.

அய்யா எழுதியுள்ள திருக்குறள் உரை என்னும் சிறு நூல் ஒன்றினையும் வாங்கினேன். அந்த நூல் எனக்குள் ஒரு வியப்பை விதைத்தது. அனைத்துக் குறட்பாக்களுக்கும் ஒன்றே முக்கால் அடியிலேயே உரை எழுதப்பட்டிருந்தது. அந்த நூலின் முதற்பக்கத்தில், "பார்த்தால் குறள், படித்தால் பொருள்" என்று எழுதி வைத்தேன்.

1976ஆம் ஆண்டு சென்னை, எஸ்.ஐ.வி.இ.டி கல்லூரியில் நானும் தமிழ் ஆசிரியரானேன். பிறகு இரண்டாண்டுகள் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் மாற்றுப்பணித் திட்டத்தின்கீழ் பணியாற்றினேன். அங்குதான் முதுகலைத் தமிழ் மாணவர்களுக்கு வகுப்பெடுத்தேன். எங்கள் அய்யா வ.சுப.மா. அவர்களின் நூல்களை எல்லாம் புரிந்து படித்தேன். அவர் உயரம் புரிந்தது; நான் இழந்த பயனும் புரிந்தது.

ஒருவரின் உயரம், அவருடைய உயரத்தை மட்டும் பொறுத்ததில்லை; அவரை மதிப்பிடுகின்றவரின் உயரத்தையும் பொறுத்தது. அய்யாவின் உயரத்தை நிமிர்த்து பார்க்கின்ற அளவிற்குக் கூட நான் இன்னும் உயரவில்லை.



# பைந்தமிழ்ப்பற்றாளர் வ.சுப.மாணிக்கனார்

திரு. **ஆறு.இராமசாமி**
காந்திநகர், சென்னை.

செந்தமிழ்ச்செம்மல், பெரும்பேராசிரியர் காட்சிக்கு எளியவர்; தனித்தமிழ்ப்பற்றாளர்; கொள்கைப் பிடிப்புடையவர்; உண்மையாளர் என்று அனைவராலும் போற்றப் பட்ட முனைவர் வ.சுப. மாணிக்கனார் பண்டிதமணி மு. கதிரேசஞ்செட்டியார் அவர்களின் உதவியால் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் புலவர் வகுப்பில் சேர்ந்து கசடறக் கற்றுத் தலைசிறந்த மாணாக்கனாகத் தேர்ச்சி பெற்றார். பின்னர் அங்கேயே விரிவுரையாளராக ஏழு ஆண்டுகள் பணியாற்றினார். பணியாற்றிக்கொண்டே பி.ஓ.எல்., எம்.ஏ., எம்.ஓ.எல்., ஆகிய பட்டங்களைப் பெற்றார். தமிழில் 'அகத்திணைக் கொள்கைகள்' என்ற தலைப்பில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றார்.

காரைக்குடி அழகப்பா கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றியபோது அவருடைய புலமைச் சிறப்பைக் கேள்வியுற்ற டாக்டர் இராஜா சர். முத்தையா செட்டியார் அவர்கள், 'அவரை நம் பல்கலைக்கழகத்திற்கு அழைத்து வந்தால் நம் மாணவர்களுக்குச் சிறப்புடையதாக இருக்கு'மென என்னிடம் கூறினார்கள். நானும் இராஜாவின் கருத்தை முனைவர் மாணிக்கனார் அவர்களிடம் கூறிய பொழுது அவரும் மறுக்காமல் ஒப்புக்கொண்டு வந்து பணியாற்றினார். இந்நிகழ்வு பெரியோரின் கருத்தை மதித்தல் வேண்டும் என்னும் உயர்ந்த பண்பைக் கொண்டவர் அவர் என்பதை அறிவுறுத்துகிறது.

முனைவர் மாணிக்கனார் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகவும் இந்திய மொழிப்புல முதன்மையராகவும் சிறப்பாகத் தொண்டாற்றிய பொழுது எண்ணற்ற நூல்களைப் பதிப்பித்துள்ளார். சிதம்பரம் நடராஜர் கோயிலில் புலவர்கள் புடைசூழத் தமிழிலேயே வழிபாடு நடத்த வேண்டுமெனக் கிளர்ச்சி செய்து வெற்றிவாகை சூடினார்.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகப் பதவியேற்றுச் சிறப்பாகப் பணிபுரிந்தார். கேண்டின் என்பதை 'உண்டியகம்', ஆசிரியர் குடியிருக்கும் குவாட்டர்சை 'குடிமனை', கெஸ்ட்கவுசை, 'முதன்மை விருந்தினர் இல்லம்' எனவும் மாற்றிட நடவடிக்கை மேற்கொண்டார். தன்னுடைய குழந்தைகளுக்குத் தொல்காப்பியன், பூங்குன்றன், பாரி, தென்றல், மாதரி, பொற்றொடி எனத் தமிழ்ப் பெயர்களைச் சூட்டி மகிழ்ந்தார். இந்நிகழ்வு மூலம் மறைமலை அடிகளார், பாவாணர், பெருஞ்சித்திரனார் போன்று தனித்தமிழ்ப் பற்றாளராக விளங்கினார் என்பதை அறியலாம்.

மாணவர்களுக்கு விடாமுயற்சி, பயிற்சி, வாழ்வில் உயர்ச்சி என்ற கருத்தை வலியுறுத்தினார். 'தொல்காப்பியக்கடல்', 'தமிழ்க்காதல்' போன்ற எண்ணற்ற நூல்களைத் தமிழ்ச் சமுதாயத்திற்குப் படைத்துள்ளார். பண்டிதமணியாருக்கு நன்றி செலுத்தும்முகத்தான் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில், "பண்டிதமணி அரங்கு" என்ற ஒன்றை ஏற்படுத்தி பண்டிதமணிக்குச் சிறப்புச் சேர்த்துள்ளார். முனைவர் மாணிக்கனார் அவர்களின் குடும்பத்தார் தம்முடைய தந்தையாரின் தொண்டினை மறவாது அவருக்கு நூற்றாண்டு விழா எடுப்பது பாராட்டுக்குரிய செயலாகும்.

தமிழ், தமிழ்ச் சமுதாயத்திற்குச் சிறப்பாகப் பணியாற்றிய முனைவர் வ.சுப. மாணிக்கனார் அவர்கள் மறைந்தாலும் அவர் ஆற்றிய பணி, அவருடைய தமிழ்த்தொண்டு இச்சமுதாயம் உள்ளவரை நிலைபெற்றிருக்கும் என்பதில் ஐயமில்லை. அவர் புகழ் நீடு வாழ்க.



# தமிழ்வழிக் கல்வி இயக்கம் கண்ட தகைமையாளர்

மனிதத்தேனீ **ரா. சொக்கலிங்கம்**
தலைவர், கவியரசு கண்ணதாசன் நற்பணி மன்றம், மதுரை.

கவியரசு கண்ணதாசன் நற்பணி மன்றம் சார்பில், பகட்டின்றி வாழ்ந்த தமிழ் மூதறிஞர் முனைவர் வ.சுப.மாணிக்கம் அவர்களது நூற்றாண்டு விழா டி.பி.கே.ரோடு நற்பணி மன்ற அலுவலகத்தில் அதன் செயற்குழு உறுப்பினர் தியாகதீபம் அ. பாலு தலைமையில் நடைபெற்றது. முதுகலைத் தமிழாசிரியர் மு. முருகேசன் வரவேற்புரை ஆற்றினார்.

'உயர்ந்த குறிக்கோள் உடைய வாழ்வே வாழ்வு; குறிக்கோள் இல்லையென்றால் அதற்குப் பெயர் வீழ்வு!' என்று கூறும் வ.சுப.மா. குறிக்கோள் இல்லாத வாழ்வு எத்தகையது என்பதை ஒரு கவிதை மூலம் அழகாக, தெளிவாகச் சுட்டிக் காட்டியுள்ளார்.

"குறிக்கோள் இலாத வாழ்வு கோடுகள் இலாத ஆட்டம்,
நெறிக்கோள் இலாத நெஞ்சு, நிறைநீர் இலாத யாறு,
மறிக்கோள் இலாத கல்வி, வரப்புகள் இலாத நன்செய்,
செறிக்கோள் இலாத மேனி, திறவுகோல் இலாத பூட்டாம்"

தமிழின் வளர்ச்சிக்குப் புதிய சொல்லாக்கங்களை உருவாக்குவது மிகவும் இன்றியமையாதது என்பது வ.சுப.மா.வின் அசைக்க முடியாத கருத்து. இத்தகைய சொல்லாக்கங்களைப் படைப்பது அவருக்குக் கைவந்த கலை. 'தமிழ்வழிக் கல்வி இயக்கம்' என்ற அமைப்பின் தலைமைப்பொறுப்பை ஏற்று, தமிழகம் முழுவதும் தமிழ் பரப்ப, தமிழ் யாத்திரை மேற்கொண்டார்.



# என் உணர்வில் எங்கள் தந்தை வ.சுப.மாணிக்கனார்

திருமதி. **தென்றல் அழகப்பன்**

வள்ளுவமாய் வாழ்ந்த எங்கள் தந்தையார் பலருக்கும் தமிழ்த்தந்தை.

எங்கள் தந்தையாரின் நூல்கள், கல்லூரி, பல்கலைக்கழகங்களில் ஆற்றிய பணிகள், தமிழ்த்தொண்டுகள் குறித்துப் பல அறிஞர்கள் நூல்கள் எழுதியிருக்கிறார்கள். அவர்தம் நூற்றாண்டில் இன்னும் பல நூல்கள் வெளிவர உள்ளன. தந்தையாக என் உணர்வில் உள்ளனவற்றைப் பதிவு செய்ய விழைகின்றேன்.

நாங்கள் ஆறு குழந்தைகள்; ஆண் மூவர்; பெண் மூவர்; எங்கள் பெற்றோர் தாய்ப்பாலொடு தமிழ்ப்பாலையும் ஊட்டி வளர்த்தார்கள். தாலாட்டுப் பாடல்கள் பெரும்பாலும் பாரதியார் பாடல்கள், திருவாசகம் போன்றவைதாம். பள்ளி விடுமுறையில் தம்பி தங்கைகளுடன் சுற்றுலா சென்றோம். அழைத்துச் சென்ற இடம் எட்டையபுரத்தில் உள்ள பாரதியார் பிறந்தவீடு. மிகப்பழமையான வீடு. அந்த வீட்டை வணங்கித் தரையில் அமர்ந்தார்கள். நீண்ட நேரம் அமைதியாக இருந்து பின் அந்த வீட்டின் மண்ணை எடுத்துத் திருநீறு போல் பூசிக்கொண்டார்கள். அங்கு இருந்த கிணற்றுநீரை எடுத்துக் குடித்தார்கள்; எங்களையும் எடுத்துக் குடிக்கச் செய்தார்கள்.

அப்போது அதன் பெருமை தெரியவில்லை. ஆனால் பசுமரத்தாணி போல் அந்த நிகழ்வு மனதில் பதிந்து விட்டது.

எங்கள் தந்தையாரின் நூலகத்தில் எண்ணற்ற நூல்கள். அவற்றைப் பெரும்பாலும் நாங்கள் படித்ததில்லை. எங்களுக்கும் அந்த நூல்களுக்குமான தொடர்பு என்ன தெரியுமா? அந்தநூல்களுக்கு அட்டை போட்டுப் பெயர் எழுதுவது தான். தினமும் மாலை நேரத்தில் திருக்குறள், திருவாசகம், நீதிநூல்கள் போன்றவற்றை, சரியான உச்சரிப்புடன் படிக்கச் சொல்லிக்கொடுப்பார்கள். ஒரு குறள் சொன்னால் பத்துக்காசுகளும் பிழையின்றி எழுதிக் காட்டினால் இருபது காசுகளும் கிடைக்கும். எங்களுடைய சிறு தேவைகளுக்கு வேகவேகமாகப் படித்துப் பணம் பெற்றிருக்கின்றோம்.

எங்கள் தந்தையார் குழந்தைகளுக்குப் பெயர் வைப்பதே ஒரு புரட்சி. அனைவருக்கும் அரிய தமிழ்ப் பெயரிட்டார்கள். அந்தக்காலத்தில், பெண் பிள்ளை களையும் பட்டப்படிப்புப் படிக்க வைத்தது ஒரு குலப்புரட்சி. பெண் வேலைக்குச் செல்வது, பொருளாதார சுதந்திரம் பெறுவது கட்டாயத் தேவை என்பதில் உறுதியாக இருந்தார்கள். இளம் வயதில் பெற்றோரை இழந்து வறுமையில் வளர்ந்ததால் எங்களை வறுமை தெரியாமல் வளர்த்தார்கள். அதிகமான உழைப்பு, எளிமை இவற்றைக்

கடைப்பிடித்தமையால்தான் எங்கள் ஆறுபேரையும் நன்கு படிக்க வைக்க முடிந்தது.

எங்கள் தந்தையார் எப்போதும் எழுதிக்கொண்டும் படித்துக் கொண்டும்தான் இருப்பார்கள்; அதிகம் வீணே பேச மாட்டார்கள்.

குழந்தைகளுடனும் பேரன் பேத்திகளுடனும் பந்து, தாயம் எல்லாம் விளையாடு வார்கள்; ஆனால் விளையாட்டில் விட்டுக்கொடுக்க மாட்டார்கள்.

இக்காலத்தில் கணவன் மனைவிக்குள் சண்டை என்பது மிக அதிகமாக உள்ளது. எங்கள் பெற்றோரிடம் சிறு சிறு கருத்து வேறுபாடு இருந்திருக்கலாம். அவர்கள் குழந்தைகள்முன் சண்டைபோட்டு நாங்கள் பார்த்ததில்லை. தந்தையாரின் 'தற்சிந்தனைகள்' நூலைப் படிக்கும்போதுதான் ஒருவரை ஒருவர் எப்படி மதித்து நடந்தார்கள் என்பது தெரிகின்றது.

'பின் தூங்கி முன் எழுவாள் பெண் என்பது என் வாழ்வில் ஒரு நாளும் நடைபெற இயலாது' என்று எங்கள் தாயார் கூறுவார்கள். இரவு பதினொரு மணிக்கு மேலும் காலை ஐந்து மணிக்கு முன்பும் அவர்கள் அறையில் விளக்கு எரியும். எப்போது உறங்குவார்கள் என்பதே எங்களுக்குத் தெரியாது. பேரக் குழந்தைகளிடம் மிகவும் பாசமாக இருப்பார்கள்.

குழந்தைகளின் மழலைப்பேச்சுக் கேட்டு மகிழ்ச்சியடைவார்கள்; அந்த மகிழ்ச்சி உதட்டோரம் ஒரு புன்சிரிப்பாகத்தான் வெளிப்படும். குழந்தைகளுக்குப் படிப்பு, எழுத்து என்பது அறிமுகமாவதற்கு முன்னரே ஆத்திசூடி, கொன்றைவேந்தன், திருக்குறள் முதலியவற்றை மடியில் உட்கார வைத்துக் கொண்டு சொல்லிக்கொடுப்பார்கள். அதனால் குழந்தைகளுக்கு நினைவாற்றல் அதிகமாக வளர்ந்தது.

எங்கள் தந்தையார் அறையில் அமர்ந்து படிப்பதையும் எழுதுவதையும் பார்த்தால் தவக்கோலம் பூண்டு இருப்பதுபோல் தோன்றும்.

அப்பாவின் மாணவர் ஒருவர் இந்நிலையில் பார்க்கும்போது திருவள்ளுவர் நினைவு வருவதாகச் சொன்னார். முழுக்கவனமும் எழுதுவதில்தான் இருக்கும். காரைக்குடியில் கொசுத்தொல்லை அதிகம். ஒருமுறை அப்பாவின் தோளில் ஒரு கொசு கடித்து நன்கு இரத்தத்தைக் குடித்துக் கொண்டிருந்தது. அறையில் நுழைந்து அப்பாவின் தோளில் இருந்த கொசுவை அடித்தபோது என் கை முழுவதும் இரத்தம். அப்பாவிற்கு நல்லது செய்ததாக எண்ணி அவர்களின் பாராட்டிற்காகக் காத்திருந்தேன். அதற்கு மாறாக, என்னை மிகவும் கடிந்து கொண்டார்கள். "படிப்பதில் கவனம் இருக்கும்போது கொசு கடிப்பது எப்படித் தெரியும்? நீ எனது தோளில் அடித்ததால் என் சிந்தனையோட்டம் தடைப்பட்டு விட்டது" என்றார்கள்.

பலமுறை மனது ஒருநிலைப்படாது அலைபாயும்போதெல்லாம் அப்பா சொன்னதுதான் நினைவில் வரும்.



*தமிழ்வழிக்கல்விக்காகப் பல நகரங்களிலும், கிராமங்களிலும் ஊர்வலங்கள், தெருக்கூட்டங்கள் நடத்திப் போராட்டம் புரிந்து மக்கள் மற்றும் ஆட்சியாளர்களின் சிந்தனையைத் தூண்டிய முன்னைத்துணைவேந்தர் இவர் ஒருவராகத்தான் இருக்க முடியும்.*

## அப்பாவின் விருப்பமுறி

என் எஞ்சிய உடைமைகளில் ஆறில் ஒரு பங்கினை அறநிலையத்தின் வைப்பு மூலநிதியாக வைத்து அதிலிருந்து வரும் வருமானத்தினை நான் பிறந்த ஊரான மேலைச்சிவபுரியில் கல்வி, மருத்துவம், நலவாழ்வு, குழந்தைகள் நலம், அஃறிணை உயிர்களின் நலம் முதலான ஊர்ப்பொதுநலங்கட்குச் சாதிசமய எவ்வகை வேறுபாடுமின்றி இலவசமாகச் செலவுசெய்யவேண்டியது.

என் நூலகத்தில் நான் தொகுத்து வைத்துள்ள நூல்கள் எல்லாவற்றையும் ஒவ்வொரு நூலிலும் இன்னார் அன்பளிப்பு என்று முத்திரை யிட்டு, காரைக்குடி அழகப்பர் பல்கலைக்கழகத்துக்கு அன்பளிப்பாக வழங்க வேண்டியது.

*அவ்வாறே செய்யப்பெற்றன; நூல்கள் வழங்கப்பட்டன.*

*அப்பாவின் தமிழ் உணர்வுக்கும்,தொண்டுக்கும் துணை நின்ற எங்கள் தாயார் திருமதி ஏகம்மை ஆச்சி அவர்கள் முயற்சியால், முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்களால் 1992-ஆம் ஆண்டு அறக்கட்டளை தொடங்கப்பெற்று இன்றுவரை தொடர்ந்து நடத்தி வருகிறோம்.*

*வாழ்வில் அனைவரும் கடைப்பிடிக்க வேண்டிய, "குறிக்கோள்" மாணிக்கனாரின், "என் குறிக்கோள்"- அதை இங்கே பதிவு செய்வதைக் கடமையாக எண்ணுகிறேன்.*

தமிழுக்குத் தொல்காப்பியமும், வாழ்வின் உயர்வுக்குத் திருக்குறளும், உயிர்த் தூய்மைக்குத் திருவாசகமும் எனக்கு வழிகாட்டிய தமிழ் மறைகள்.

"எளிய வாழ்வு, அளவான பேச்சு, எந்நிலையிலும் எதிர்கால நம்பிக்கை, பதவிகளைத் தொண்டாக மதித்தல், தன்னைப்பற்றிய திருத்தமான சிந்தனைகள், வாழ்க்கைத் திட்டங்கள், பெரியவர்களின் வரலாறுகளைப் படித்தல், சோர்வுக்கு இடங் கொடாத ஊக்கங்கள், பகட்டின்றித் தூய எண்ணத்தால் இறைவனை வழிபடுதல்"

*எங்கள் தந்தையார் வாழ்வில் நல்ல மாணவராக, நல்ல ஆசிரியராக, நல்ல கணவராக, நல்ல தந்தையாக எல்லாவற்றிற்கும் மேலாக நல்ல மனிதனாக வாய்மை வாழ்க்கை வாழ்ந்ததை எண்ணிப் பெருமிதம் அடைகின்றேன்.*



# காட்சிக்கு எளியன்; கடுஞ்சொல்லன் அல்லன்!

பேராசிரியர் முனைவர் **சரசுவதி வேணுகோபால்**
நாட்டுப்புறவியல் துறைத் தலைவர் (ஓய்வு)
முன்னாள் தலைவர் & ஒருங்கிணைப்பாளர், தமிழியற்புலம்,
காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

1977 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் சென்னையில் உள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் நடத்திய நாட்டுப்புறவியல் கருத்தரங்கில் கலந்து கொள்ள நான் சென்னை சென்றிருந்தேன். அங்கே தான் முதன் முதலில் மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார் அவர்களை நேரில் கண்டேன். அதற்கு முன்பு அவரைப் பற்றிப் பலரும் கூறக் கேட்டிருந்தாலும், அவருடைய நூற்களை நான் படித்திருந்தாலும் நேரடியாக அவரைக் காணக்கூடிய பேறு அப்பொழுதுதான் கிட்டியது.

அக்கருத்தரங்கில் அவர் முதன்மையுரை ஆற்றினார். நான் ஓர் அமர்வில் "நாட்டுப்புறப் பாடல்களில் நம்பிக்கைகள்" என்னும் தலைப்பிலான ஒரு கட்டுரையை அளித்தேன். அதைத் தொடர்ந்து அமைந்த விவாதத்திலும் பங்கு கொண்டு அதற்கு மேலும் தம் கருத்தையும் அறிவுரையையும் வழங்கிய அவர்தம் புலமை கண்டு வியந்தேன். அந்த எளிமை அவர் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தர் ஆனபிறகும் இறுதிவரை அவரிடம் குடிகொண்டிருந்தது. அதற்கு முன்பும் இருந்திருக்கும்!

அந்தக் கருத்தரங்கு முடிந்தவுடன் நான் சென்னையிலிருந்து சிதம்பரம் செல்ல வேண்டியிருந்தது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் மொழியியல் துறையில் நிகழ்ந்த ஒரு கருத்தரங்கில் பங்குகொள்ளச் சென்றேன். இரயில் பெட்டியில் ஏறினேன். எனது இருக்கைக்கு எதிர் இருக்கையில் செம்மல் வ.சுப. மாணிக்கனார். எனக்குப் பெருமகிழ்ச்சி ஏற்பட்டாலும் அச்சமும் ஏற்பட்டது. "ஐயா, வணக்கம்" என்றேன். அவரும் சிரித்தவாறு "அந்தக் கருத்தரங்கு முடித்துவிட்டு இந்த வண்டியில் ஏன் ஏறினாய்? மதுரை தானே போக வேண்டும்?" என்றார். அக்காலத்தில் ஜனதா விரைவு வண்டி சென்னையிலிருந்து சிதம்பரம் வழியாகச் சென்றுகொண்டிருந்தது. "இல்லை, ஐயா! அண்ணாமலைப் பல்கலை.யில் ஒரு கருத்தரங்கம். அதில் பங்குகொள்ளச் சென்று கொண்டிருக்கிறேன்" என்றேன். "அப்படியா? பரவாயில்லையே. காலத்தையும் பணத்தையும் விரயமாக்காமல் இரண்டு கருத்தரங்குகளில் பங்குகொள்கிறாய்" என்று கூறினார்.கேலி செய்கிறாரோ என்று கூட எண்ணினேன். ஆனால் முகத்தில் உண்மையான அன்பும் பரிவும் தெரிந்தது.

காலை ஐந்தரை மணி. கீழிருந்து "சரசு! எழுந்திரு" என்ற சத்தம் கேட்டுப் பதறி எழுந்தேன். என் தந்தை என்னை எழுப்புவதுபோல் உணர்ந்தேன். "முகங் கழுவு; சிதம்பரம் வந்துவிடும்" என்றார்.

அச்சந்திப்பை என்னால் மறக்கவே இயலாது. மீண்டும் அக்கருத்தரங்கிலும் அவர் சிறப்புரை ஆற்றினார். அக்கருத்தரங்கு "சமுதாய மொழியியலும் வட்டார வழக்கியலும்"



*என்ற தலைப்பில் அமைந்திருந்தது. அவர் உரையை நான் மிகுந்த உரிமையோடு முதல் வரிசையில் அமர்ந்து கேட்டேன்.*

*துணைவேந்தராகப் பதவியேற்ற நிலையில் அவரை அவர் அலுவலகத்தில் எல்லாத் துறையினரும் சென்று கண்டு வந்தனர். தமிழியற்புலத்தைச் சேர்ந்த நாங்களும் அவரைக் கண்டு வணங்கி வாழ்த்துத் தெரிவிக்கச் சென்றோம். எல்லோரையும் கைகூப்பி வணங்கி "மகிழ்ச்சி. உங்கள் கடமைகளைச் செவ்வனே செய்யவேண்டும்" என்று கூறினார். எல்லோரும் திரும்பிய பொழுது "என்னம்மா சரசுவதி! கட்டுரையெல்லாம் எழுதிக்கொண்டிருக்கிறாயா?" என்று கேட்டதைக் கேட்டு அதிர்ந்து போனேன். இத்துணை நினைவாற்றலா? இத்துணை எளிமையா? என்னவென்று சொல்வது?*

*அறிவும் எளிமையும் நிரம்பிய அன்னாரின் முதற்சந்திப்பை நான் அடிக்கடி எண்ணிப் பார்த்து மகிழ்வேன். பேரறிஞர்களெல்லாம் தன்னடக்கமும் எளிமையும் கொண்டுதான் விளங்குவார்கள் என்பதற்கு வ.சுப.மா. அவர்கள் ஓர் எடுத்துக்காட்டு.*

## ........அவருக்கு ஈடு அவர்தான்.......

*சிலம்பொலி சு.செல்லப்பன்*

மதுரைப்பல்கலைக்கழகத்தில் இருந்தபொழுது மதுரையில் எம்.ஜி.ஆர் அவர்கள் உலகத்தமிழ் மாநாடு நடத்தினார்கள். அந்த உலகத்தமிழ் மாநாட்டினுடைய கருத்தரங்குகள் மதுரைப் பல்கலைக்கழகத்தில்தான் நடந்தன. அந்தக் கருத்தரங் கினுடைய முழுப்பொறுப்பையும் ஐயா அவர்கள் ஏற்று மிகச்செம்மையாகச் செய்து கொடுத்தார்கள்.

சொல்லை ஆளுவதில் அவருக்கு ஈடு அவர்தான். தனித்தமிழ்ச் சொற்கள், தூய சொற்கள் உடனடியாக வரும். ஒருமுறை நான், முடியரசன், தமிழண்ணல் இவர்களெல்லாம் பேசிக்கொண்டிருக்கிறோம். ஐயா அவர்கள் தொலைவில் வந்துகொண்டிருந்தார்கள். முடியரசன் அவர்கள் எப்போதுமே நிறையப் புகைப்பார்கள். அப்போதுதான் புதிதாகச் சுருட்டை எடுத்துப் புகைக்க முயன்றார். ஐயாவைத் தொலைவிலே பார்த்தவுடனே அதை அப்படியே மறைத்துப் பின்னால் வைத்துக்கொண்டார். ஐயா அவர்கள் வந்தவுடனே வேறுவகையாகக் கேட்டிருக்கலாம். 'என்ன முடியரசன், தீ நட்பு?' என்று கேட்டார்கள். அவ்வாறு புகைப்பதை, 'தீ நட்பு' என்று சுருக்கமாக, ஆனால் பொருள் நிறைந்த சொல்லைத் தேர்ந்து சொல்வதிலே ஐயா அவர்களுக்கு ஈடு ஐயா அவர்கள்தான்.

(ஆவணப்படத்திலிருந்து...)



# தமிழ்க்காதல்

திரு. நாராயணன் மகரிபா

அந்தத் துணிச்சல் எப்படி வந்தது என்று இப்போது நினைத்தாலும் வியப்பாக இருக்கிறது. “ஐயா உலாவப் போயிருக்கிறார்கள், வருவதற்கு அரை மணி நேரம் ஆகும்” என்று துறைப்பணியாளர் மணி சொன்னதும், எங்கள் பரபரப்பும் பதற்றமும் கூடுதலாகி விட்டன.

விருந்தினர் மாளிகை வராந்தாவின் மறுமுனைக்குச் சென்று அமர்ந்தோம். என்ன பேசுவது என்று ஏற்கெனவே தீர்மானித்தவற்றை மீண்டும் ஒருமுறை ஒத்திகையாய்ப் பார்க்கப் பார்க்கக் குழப்பமே அதிகரித்தது. ஒருகட்டத்தில், அவரவர் விடுதிக்கே திரும்பிப் போய்விடலாமா என்றுகூடத் தோன்றியது. ’வந்தது வந்துவிட்டோம்: சந்திக்காமல் போகப்போவதில்லை’ என்று உறுதிப்படுத்திக்கொண்டோம்.

தேர்வுக்குப் படித்ததைவிடத் தீவிரமாகத் ‘தமிழ்க்காதல்’ படித்தும், குறிப்புகள் எடுத்தும், மேற்கோள்கள் திரட்டியும், ஒருவருக்கொருவர் பகிர்ந்துகொண்டும், எந்தக் கேள்விக்கும் எப்படிப்பட்ட விசாரணைக்கும் தருக்க முறையில் ஆணித்தரமாக எங்கள் தரப்பு நியாயத்தை நிலைநாட்டிப் பேசவுமாய் நாங்கள் எடுத்துக்கொண்ட ஆயத்தங்கள் பல நாட்கள் தொடர்ந்தன. ஆனால், இப்போது சந்திப்புக்குச் சற்று நேரம் இருக்கிறது என்ற கால இடைவெளிகூட, ஆசுவாசத்தை ஏற்படுத்துவதற்கு மாறாக, கண்ணிலும் நெஞ்சிலும் ஒருவகைக் கலவரத்தைக் கொண்டுவந்தது.

அந்தத் தருணமும் வந்தது. “ஐயா உங்களை வரச் சொன்னார்கள்” என்ற மணியின் அறிவிப்பைத் தொடர்ந்து, தயங்கித் தயங்கி அறைக்குள் நுழைந்தோம்.

“மணி, நீ போய் மணிவாசகர் நூலகத்தில் இதைக் கொடுத்துவிட்டு, அப்படியே வழக்கமாக வாங்கும் கிளப்புக் கடையில் இரவுச் சாப்பாடும் வாங்கிவந்துவிடு” என்று தரப்பட்ட உறையை மணி வாங்கிக்கொண்டு வெளியேறினார்.

“என்னப்பா, இந்த நேரத்தில் இருவருமாய்...?” என்ற கேள்வியைத் தொடர்ந்து, எங்கள் மீது விழுந்த ஆழமான அந்தப் பார்வை, நூறு நூறு துணைக் கேள்விகளைப் பொதித்து வைத்திருந்தது. தன்னை நன்றாகத் தயார்ப்படுத்திக் கொண்டு நீதியரசர் முன் நிற்கும் தேர்ந்த வழக்குரைஞராய்க் கற்பனையில் பல நாள் எடுத்துக்கொண்ட பயிற்சிகள் எல்லாம் இப்போது எங்கோ காணாமல்போய்விட்டன. கண்கள் கலங்க, சொற்கள் மாயமாகிவிட்டதை உலர்ந்துபோன உதடுகள் உணர்த்தின.



“இந்தா தண்ணீர்...” என்று நீட்டப்பட்ட குவளையும் பரிவும் எனக்குள் மூலைக்கு ஒன்றாய் ஓடி ஒளிந்துகொண்டிருந்த சொற்றொடர்களைத் தேடித் திரட்டி ஓரளவுக்கு இயல்பு நிலைக்குக் கொண்டுவந்து நிறுத்தின.

“நாங்கள் இருவரும் மதுரையைச் சார்ந்தவர்கள். ஒரே வகுப்பு என்பதால், அடிக்கடி சந்தித்துக்கொள்வதில் இருவர் வீட்டிலும் தொடக்க நிலையில் பெரிய எதிர்ப்புக்கள் எதுவுமில்லை. இப்படித் தொடர்ந்த பழக்கம், ஒருவரை ஒருவர் ஆழமாய்ப் புரிந்துகொள்ள உதவியது: வாழ்க்கை குறித்த கனவுகளுக்கும் வாயிலாக அமைந்தது.

எங்கள் நெருக்கம், வகுப்பில் உண்டாக்கிய சலசலப்பைத் தாண்டி, கிண்டலாய், கேலியாய், அதையும் தாண்டிச் சீண்டலாய், ஒருவகை எதிர்மறை வினையாய் வளரத் தொடங்கிவிட்டது.

ஆசிரியர்கள் - எங்கள் மீது அன்பும் அக்கறையும் கொண்டவர்கள் - எங்களுக்குக் கூறும் அறிவுறுத்தல்களில் ஒருவித எச்சரிக்கைக் குறிப்பும் இடம்பெறத் தொடங்கியிருக்கிறது.

பல்கலைக்கழக வளாகத்திலும் அம்பலாய்த் துளிர்த்தது, அலராய் வேகமெடுத்திருக்கிறது. ஊரிலும் அவரவர் வீடுகளுக்கும் செய்தி தெரிந்து இப்போது கண்காணிப்பும் காவலும் அதிகமாகியிருக்கின்றன. வேறு வேறு மதத்தினர் என்பதால் கலக்கமூட்டும் அச்சுறுத்தல்களையும், விளைவுகள் குறித்த மிரட்டல்களையும் அடிக்கடி சந்தித்துக்கொண்டிருக்கிறோம்.

படிப்பை முடிக்கவிடுவார்களா? வாழ்வைத் தொடங்கவிடுவார்களா? இந்தச் சூழலில் நாங்கள் என்ன செய்ய வேண்டும்? ஒரே குழப்பமாக இருக்கிறது. ஆனால் ஒன்று மட்டும் உறுதி - எத்தனை எதிர்ப்பு வந்தாலும் அது எங்கிருந்து வந்தாலும் நாங்கள் வரித்துக்கொண்ட வாழ்க்கைக் கனவை, பொய்யாய் வெறும்கனவாய்ப் போகவிடமாட்டோம்; போராடி வாழ்ந்தே தீருவோம்.”

இவ்வளவும் ஒரே மூச்சில் சொன்னவை அல்ல: அப்படியே சொல்லப்பட்டவையும் அல்ல. தட்டுத் தடுமாறி, திக்கித் திணறி ஒருவழியாய் சொல்லப்பட்டவை. மொழி ஆளுமையைச் செழுமைப்படுத்தும் முதுகலைப் படிப்பும், நினைத்ததைச் சொல்லத் துணைக்கு வரவில்லை. சொன்னவனின் ‘சொலமாட்டாமை’க் குறையைப் பொருட்படுத்தாமல் கேட்டுணர்ந்த பேராசிரியப் பெருந்தகை, “என்னம்மா, இவன் சொல்வதெல்லாம் உண்மைதானா?” என்று பார்வையைத் திருப்பினார்.

“ஆமாம்” என்று அவளிடமிருந்து வெளிப்பட்ட ஒற்றைச் சொல்லைத் தொடர்ந்து, ஏற்கெனவே எழுதிவைத்த தீர்ப்பை அறிவிப்பதைப் போன்று, “தேர்வுக்கு இன்னும் சில நாட்களே உள்ளன. முழுக்கவனமும் தேர்வு நோக்கியதாக இருக்கட்டும். எழுதிய கையோடு இருவரும் மதுரை சென்று பதிவுத்திருமணம் செய்துகொண்டுவிடவேண்டும். நேர்முகத் தேர்வுக்குக் காத்திருக்க வேண்டியதில்லை” என்றார்.

துறை நெறிகள், பல்கலைக்கழக நடத்தை விதிமுறைகள், மாணவப் பருவக் கடமைகள், சமூக எதிர்பார்ப்புக்கள், அனைத்துக்கும் மேலாக, துறைத்தலைவர் என்ற முறையில் மேற்கொள்ள வேண்டிய ஒழுங்கு நடவடிக்கை எனப் பல்வேறு சிக்கல்களையும் கேள்விகளையும் எச்சரிக்கைகளையும் முன்வைப்பார், அவற்றை எல்லாம் எப்படி எதிர்கொள்வது, குறிப்பாக அவர் எழுதிய "தமிழ்க்காதல்" மேற்கோள்களைக் கொண்டு எதிர்வாதங்களை எப்படி அடுக்குவது போன்றவற்றில் ஒத்திகை பார்த்துக்கொண்டிருந்த எங்களுக்கு மிகப் பெரிய அதிர்ச்சி - அந்த நொடிநேரத் தீர்ப்பில் நாங்கள் துரும்பாய்ச் சுருங்கிய அதிர்ச்சி - சொற்களுக்குள் அடைபட மறுக்கும் அந்த இன்ப அதிர்ச்சியில்- அந்தக்கணமே மானசீகமாய் எங்கள் திருமணம் நடந்து முடிந்துவிட்டதாய், நடத்தி முடிக்கப்பட்டதாய் எங்களுக்கு ஏற்பட்ட அந்த உணர்வதிர்வில் அனைத்தையும் மறந்து நின்றோம்.

"தன்னை மறந்தாள் தன் நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே"

என்ற அந்தப் பரவச நிலையில் மானசீகமாய் அவர் திருத்தாள்களை எங்கள் தலையில் சூடித் "தமிழ்க்காதல்" தம்பதியராய் அவர்முன் நின்று கண்ணீர் பெருக்க மட்டுமே எங்களுக்குத் தெரிந்தது.

அதைவிடவும் ஆனந்தக் கண்ணீர் பெருக்கிய வேறு நாள் ஒன்றும் வந்தது. எங்களுக்கு மகன் பிறந்து "மாணிக்கம்" எனப் பெயர் சூட்டிய செய்தியை எங்கள் பேராசிரியத் தெய்வத்திற்குத் தெரியப்படுத்தியதற்கு விடைமடல் வந்த நாள் அது. 1973 ஆம் ஆண்டு நவம்பர் திங்கள்.

"மகள் மகரிபா,
நாராயணன் தந்தையானார்; நீ தாயானாய்; நான் உங்கள் சேயானேன்."

என்று வாழ்த்தி, இன்றும் எங்கள் வாழ்வாய்த் தொடர்கிறார்!



## மாணிக்கச் சிந்தனைகள்

**நல்ல அறிவான நயமான நாணயமான கடுமையான உழைப்பினாலும் திட்டத்தாலும் போதிய பொருள் தொகுக்க முடியும் என்பது என் வாழ்க்கைத் தெளிவு.**

**நான் இன்னும் எவ்வகையில் திருந்த வேண்டும் எக்குற்றங் குறைகளைக் கைவிடவேண்டும் என்று எண்ணிப் பார்க்கின்றேன். இத் தன்னுணர்வு நல்லது.**

–'தற்சிந்தனைகள்'



# மாணிக்க நினைவுகள்!

பேராசிரியர் **பழ.முத்துவீரப்பன்**
முன்னைத் தமிழியல் துறைத்தலைவர் மற்றும்
இந்திய மொழிப் புலமுதன்மையர், முன்னை ஆட்சிக்குழு உறுப்பினர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்

சான்றோர் வ.சுப. மாணிக்கனார் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் கலைத்துறை, கீழைக் கலைத்துறை, ஆராய்ச்சித்துறை ஆகிய மூன்று துறைகளும் இணைந்த தமிழ்த்துறையின் தலைவராகவும் இந்திய மொழிப்புல முதன்மையராகவும் 1970 முதல் 1977 வரை ஏழு ஆண்டு காலம் சிறப்புறப் பணி செய்தார்கள். அவர்கள் ஆட்சி செய்த காலத்தில் 1971 முதல் 1976 வரை இளங்கலை (தமிழ்) முதுகலை (தமிழ்) பட்டப் படிப்புகளைப் பயிலும் பேறு பெற்றவன் அடியேன். முதுகலை முதலாண்டில் தொல்காப்பியம் சொல்லதிகாரம், தெய்வச்சிலையார் உரையையும், இரண்டாமாண்டில் பொருளதிகாரம் களவியல், கற்பியல் நச்சினார்க்கினியர் உரையையும், எங்கள் வகுப்பு மாணவர்களுக்குப் பாடம் நடத்தினார்கள். எம்.ஜி.ஆர். தங்கப் பதக்கம் பெற்று முதல் மாணவனாகத் தேர்ச்சி பெற்றேன். முதுகலைப் பட்டம் பெற்ற பின் 1976 ஜூலைத் திங்கள் ஆய்வு மாணவனாகச் சேர்ந்தேன். செட்டி நாட்டரசர் அன்பால் 1976 ஆகஸ்டு முதல் 1977 வரை ஓராண்டு காலம் மூதறிஞர் தலைமையில் விரிவுரையாளராகப் பணிபுரிந்தேன். ஏறத்தாழ ஆறாண்டு காலம் மாணவனாகவும், ஆய்வாளனாகவும், ஆசிரியராகவும் செம்மலின் அண்மையில் இருந்து அவர் தமிழறிவையும், தமிழ்க் காப்புணர்வையும், நேர்மைப் பண்பையும், கடமைச் சிறப்பையும், கற்பிக்கும் திறனையும், கால ஒழுங்கையும், கட்டுப்பாட்டையும் போற்றிக் காத்த சிறப்பையும் கண்டு அவர்களை என் வாழ்வியல் வழிகாட்டியாகக் கொண்டேன்.

## முதல்முறையாகப் பார்த்தபோது...

என் தந்தையார் புலவர் நா.மு.மாணிக்கம் அவர்கள் பணித்த வண்ணம், அண்ணாமலைப் பல்கலையில் இளம் அறிவியல் வேளாண்மைப் பட்டப் படிப்பில் சேர்வதற்கு உதவி புரிய வேண்டி, பேராசிரியர் வ.சுப.மாணிக்கம் அவர்களைச் சந்திக்கச் சென்றேன். அப்போது முதுகலை தமிழ்த் தேர்வாளர் கூட்டம் பேராசிரியர் தலைமையில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. கூட்டம் முடிந்ததும் சந்தித்தேன். பேராசிரியரோடு சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்மொழித் துறைத் தலைவர் ந. சஞ்சீவியும் பேராசிரியர் க. வெள்ளை வாரணம் அவர்களும் மேலும் ஒரிருவரும் உடனிருந்ததாக நினைவு. என் வேண்டுகோளைக் கேட்டு, மதிப்பெண் பட்டியலை வாங்கிப் பார்த்த பேராசிரியர் புகுமுக வகுப்பில் தமிழில் 'A' கிரேடு வாங்கியிருப்பதைப் பார்த்து விட்டு, 'நீ தமிழ் படிக்கலாமே' என்றார்கள். தமிழ் படித்தால் வேலை கிடைக்காது என்று இளமைத் துடிப்போடு பதில் கூறினேன். நன்றாகப் படித்தால் வேலை கிடைக்கும். நீ தமிழிலேயே சேர். நான் சொன்னதாக அப்பாவிடம்

சொல்' என்றார்கள். இப்படித்தான் என் ஊழ்வினை, செம்மல் வ.சுப. மாணிக்கனாரின் வாய்மொழிவழி என்னைத் தமிழ் மாணவன் ஆக்கியது. அன்னைத் தமிழுக்கு அணிவிரல் மோதிரமாகக் கொடைவிளக்கு நூலை நெய்தளித்த, பென்னம்பெரிய அறிஞரால் துறை மாற்றப்பட்டேன்.

### துறை வளர முறை செய்தவர்

நாள்தோறும் காலந்தவறாமையைப் போற்றிக் குறிப்பிட்ட நேரத்தில் துறைக்கு வருவார்கள். எல்லா ஆசிரியர்களும் குறித்த நேரத்தில் பணிக்கு வர வேண்டும் என்பதைத் தான் முன்மாதிரியாக இருந்து உணர்த்தினார்கள். காலத்தாழ்வாக வந்து அவர் அறையில் உள்ள பதிவேட்டில் ஆசிரியர்கள் ஓரிருவர் கையெழுத்திட்டால் அவர்களிடம் கடிந்து பேசாமல் சுவரில் மாட்டப்பட்டிருக்கும் கடியாரத்தைப் பார்த்துவிட்டுத் தலையைத் தாழ்த்திக் கொள்வார்கள். மறுநாள் முதல் அந்த ஆசிரியர் மந்திரம் போட்டாற்போல துறைக்கு உரிய நேரத்தில் வருவார். துறையைச் சுற்றி வந்து ஆசிரியர்களின் பணியை அவர்கள் மனங்கோணாத வண்ணம் மேற்பார்வை செய்வார்கள். பிற துறை மாணவர்களும் பயன் பெறும் வகையில் தமிழ்த்துறையின் சார்பாக இலக்கியச் சுற்று என்னும் நிகழ்ச்சியைத் திங்கள்தோறும் பல்கலைக்கழக ஆளவை மன்றத்தில் நடத்தி வந்தார்கள். இந்நிகழ்வின் வழி தமிழ்த்துறை ஆசிரியர்கள் அவரவர் விரும்பும் இலக்கியங்கள் குறித்துச் சொற்பொழிவாற்றவும் பிற துறை மாணவர்களும் தமிழிலக்கியச் சுவையை அனுபவிக்கவும் வழி செய்து தந்தார்கள்.

ஆண்டுதோறும் ஏதேனும் ஒரு பொருளில் (சிலப்பதிகாரம், மணிமேகலை, திருக்குறள் இலக்கணம்) கருத்தரங்குகள் நடத்தி வந்தார்கள். துறை ஆசிரியர்களின் ஆய்வுப் பயிற்சிக்கு இது களமாக அமைந்தது. பின்னர் இக்கருத்தரங்குகளில் வாசிக்கப்பட்ட கட்டுரைகளைச் செம்மை செய்து சிலப்பதிகாரச் சிந்தனைகள். மணிமேகலைச் சிந்தனைகள், திருக்குறட் சிந்தனைகள், இலக்கணச் சிந்தனைகள் என்ற தலைப்புகளில் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை வாயிலாக நூலாக வெளியிட ஆவன செய்தார்கள்.

முனைவர் பட்டத்திற்குப் பதிவு செய்திருந்த ஆசிரியர்கள் வாரந்தோறும் ஞாயிற்றுக் கிழமை முற்பகல் துறைக்கு வந்து தங்கள் ஆய்வு தொடர்பாகக் கட்டுரை எழுதி அளிக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்திருந்தார்கள். அக்கட்டுரைகளைத் திருத்தம் செய்து அடுத்த வாரம் உரியவர்களிடம் திரும்பத் தருவார்கள். அவர்கள் திருத்தி அளித்த கட்டுரைகள் என்னிடம் உள்ளன. இவ்வாறு ஆசிரியர்களை உழைக்கச் செய்து முனைவர் பட்டம் நீர்த்துப் போய்விடாமல் தான் பணிபுரிந்த ஏழு ஆண்டுகளில் ஏழு ஆசிரியர்களுக்கு முனைவர் பட்டம் பெற்றுத் தந்தார்கள். முனைவர் ஆய்வுப்பட்டத்திற்குத் தகுதியுடைய ஆசிரியர்கள். என்று கருதுபவர்களையே பதிவு செய்ய அனுமதிப்பார்கள். அப்போது துணைவேந்தராக இருந்தவர் தமிழ்த்துறையில் நான்கு உரையாளர்களை நியமிக்க வேண்டி இருந்தபோது, வ.சுப.மாவின் நேர்மைத்திறத்தில் நம்பிக்கை கொண்டு அவர்களிடமே உரையாளர்களை நியமிக்கும் பொறுப்பை ஒப்படைத்தார்கள். அதனால் அண்ணாமலையில் முதுகலை பயின்ற செம்பியன், பத்மநாபன், சந்திரசேகரன், மதுரையில் பயின்ற பழநியப்பன் ஆகியோர் பேராசிரியர் முன்மொழிவால் உரையாளராகப் பணி நியமனம் பெற்றார்கள்.



## பாடத்திட்ட மாற்றமும் பாடம் கற்பித்த முறையும்

இளங்கலைப் பாடத்திட்டத்தின் தொடர்ச்சியாக முதுகலைப் பாடத்திட்டத்தை மாற்றி அமைத்தார்கள். ஓரிலக்கியத்தில் ஒருசில பகுதிகளை மாத்திரம் கற்பது போதுமானதல்ல என்பது அவர்கள் கருத்தாக இருந்தது. எடுத்துக்காட்டாகச் சிலப்பதிகாரத்தில் இளங்கலையில் புகார்க்காண்டம் பாடம் என்றால் முதுகலையில் மதுரைக் காண்டத்தைப் பாடமாக அமைத்தார்கள். தமிழ் மாணவர்கள் எல்லா இலக்கியங்களையும் கூடிய வரையில் முழுமை யாகவும் ஆழமாகவும் நுணுக்கமாகவும் கற்க வேண்டும் என்பதில் அக்கறை காட்டினார்கள்.

எல்லாப் பல்கலைக்கழகங்களையும் போல, அண்ணாமலையிலும் நீண்ட நெடுங்கால மாகத் தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்குச் சேனாவரையர் உரையே பாடமாக இருந்து வந்தது. துறைத்தலைவரான இரண்டு மூன்று ஆண்டுகளில் தெய்வச்சிலையார் உரையைப் பாடமாக அமைத்தார்கள். அப்பாடத்தை அவர்களே நடத்தினார்கள். அவர்கள் வகுப்பிற்கு முந்தைய வகுப்பு ஆசிரியர் சிறிது நேரம் முன்னதாக வகுப்பை முடித்துவிட்டால், மாணவர்களுக்கே உள்ள இயல்பின் வண்ணம் துறைத்தலைவர் அறைச் சாளரத்தின்வழி உள்ளே நடப்பதை வேடிக்கை பார்ப்போம். பேராசிரியர் குனிந்த தலை நிமிராமல் எங்கட்கு நடத்த வேண்டிய பாடத்தைப் (தெய்வச்சிலையார் உரை) படித்துக்கொண்டிருப்பார்கள். எவ்வளவு படித்திருந்தாலும் பாடம் தயார் செய்யாமல் வகுப்பிற்கு வருவது அவர்கள் பழக்கம் இல்லை.

இரண்டாமாண்டில் களவியல், கற்பியல் பாடம் நடத்தும்போது நச்சினார்க்கினியரின் புலமை நலத்தைப் போற்றுவார்கள். அதேவேளையில் அவர்தம் அல்லுரைகளைக் குறிப்பிட்டு நல்லுரை கூறுவார்கள். 'கற்பெனப்படுவது' என்ற நூற்பாவை விளக்கும்போது தொல்காப்பியர் எக்காலத்திற்கும் பொருந்தும் வண்ணம் எவ்வாறு நூற்பாக்களை ஆக்கியுள்ளார் என்பதை விளக்கிப் பாராட்டியது இன்னும் பசுமையாக நினைவில் உள்ளது.

## மரபுவழித் தடம் ஒற்றியவர்

பேராசிரியர் புதுமை நாட்டம் உடையவர்கள். இருப்பினும் மரபிற்கு முதன்மை இடம் அளித்தவர்கள். அந்நாளில் தமிழ்த்துறைக்கு எதிரில் ஒரு தார்ச்சாலையும் அதற்குப் பக்கத்தில் இருந்த திடலில் ஒரு ஒற்றையடிப் பாதையும் இருந்தன. இராணி சீதை ஆச்சி பள்ளியில் பயின்ற மாணவர்கள் அப்பாதை வழியே தான் நடந்து செல்வார்கள். மழைக் காலத்தில் அப்பாதை கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விட்ட நிலையிலும் பள்ளிப் பிள்ளைகள் நன்றாக உள்ள தார்ச்சாலையைப் பயன்படுத்தாமல் மழைநீர் சூழ்ந்த ஒற்றையடிப் பாதையையே பயன்படுத்துவதைச் சுட்டிக் காட்டி, 'மரபு வழி ஈடுபாடு மாறாத இந்தப் பிள்ளைகளைப் பாருங்கள்' என்று சூழ இருந்த ஆசிரியர்களிடம் பாராட்டியதை அடியேன் கேட்டுள்ளேன்.

## தன்மானம் பேணியவர், தகுதியைப் பாராட்டியவர்

இளையேன் முதுகலை வகுப்பில் படித்துக் கொண்டிருந்தபோது துறையில் இணைப் பேராசிரியராக இருந்த அறிஞர் ஒருவர், பேராசிரியரின் ஒரு ஆய்வுக் கட்டுரை, தன்

ஆய்வைப் பின்பற்றியது என்று ஒரு கருத்தைத் துறையில் வெளியிட்டார்கள். அவ்அறிஞர் நூல் எழுதுவதற்குப் பல்லாண்டுகள் முன்பே பேராசிரியர் எழுதி வெளியிட்ட கட்டுரை அது. எனவே, துறைத்தலைவரைப் பற்றி முறையற்ற கருத்தை வெளிப்படுத்தியது குறித்துச் சம்பந்தப்பட்ட இணைப்பேராசிரியருக்குக் கடிதம் அனுப்பி விளக்கம் கேட்டார்கள். துறையில் பேராசிரியருக்கு அடுத்த நிலையில் இருந்த மூத்த பேராசிரியர் அவ்வாசிரியரின் தவறான செயலைப் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்று நேரில் சென்று வேண்டுகோள் விடுத்தபோது, அவர்மீது மிகுந்த அன்பு வைத்திருந்தாலும் அவர் கருத்தை ஏற்காமல் 'எழுத்துமூலமாகத் தான் வெளியிட்ட கருத்திற்கு அவர் விளக்கம் அளித்தே தீர வேண்டும் என்பதில் உறுதியோடு இருந்தார்கள். சிறிது காலம் கழித்து அதே ஆசிரியர் வெளிமாநிலப் பல்கலைக்கழகத்திற்கு உயர் பதவிக்கு விண்ணப்பித்தபோது துறைத்தலைவர் சான்றிதழ் தேவைப்பட்டது. தயங்கித் தயங்கித் துறைத்தலைவராக இருந்த மூதறிஞரிடம் தன் தேவையைச் சொல்ல, அவரை எதிரில் உட்காரச் சொல்லித் தட்டச்சுச் செய்வதற்காக ஆங்கிலத்தில் அந்தப் பேராசிரியரின் புலமைச் சிறப்புகளைப் பாராட்டி அவரையே சான்றிதழ் எழுதச் செய்தார்கள். இதன் மூலம் நடுநிலை தவறாத தன் பண்பை வெளிப்படுத்தினார்கள். அவர் சொல்லிச் சொல்லச் சான்றிதழை எழுதிக் கொண்டிருந்த பேராசிரியர், ஒரு கட்டத்தில் நெஞ்சு நெகிழ்ந்து தழுதழுப்பான குரலில் தன் முன்னைய கருத்திற்கு வருத்தம் தெரிவிக்கத் தொடங்கியபோது, 'நீங்கள் எதுவும் சொல்ல வேண்டாம். நான் சொல்வதை எழுதுங்கள் போதும்' என்று தன் பெருந்தன்மைப் பண்பைப் புலப்படுத்தினார்கள். மூத்த ஆசிரியர்கள் சொல்ல யான் அறிந்த செய்தி இது.

## மாணவர் முன்னேற்றத்திற்கு வழி வகுத்தவர்

தமிழ்த்துறையும் ஆங்கிலத்துறையும் அண்ணாமலையில் ஒரே கட்டடத்தில் உள்ளன. பேராசிரியர் யாது காரணத்தாலோ தமிழ்த்துறைக் கருத்தரங்குகளை ஆங்கிலத்துறையைச் சேர்ந்த 010 என்ற அறையில் நடத்தி வந்தார்கள். இக்கருத்தரங்குகளில் ஆசிரியர்கள் கட்டுரை வாசித்த பின்னர் கேள்வி நேரத்தின்போது ஒரு மாணவர் ஒரு கட்டுரையாளரை ஒரு கேள்விதான் கேட்க வேண்டும் என்று வரையறை செய்திருந்தார்கள். இதனால் பெரும்பாலான மாணவர்கள் வினாக் கேட்கவும் சிந்திக்கவும் வாய்ப்பு ஏற்படுத்தித் தந்தார்கள்.

பல்கலைக்கழக நிறுவனர் நாளின்பொருட்டு பல்கலை.யின் அனைத்துத்துறை மாணவர்களுக்கும் நடத்தப்பெறும் பேச்சுப்போட்டி, கட்டுரைப் போட்டிகளில் பரிசுபெறம் மாணவர்களுக்கு உரிய பரிசுத் தொகைக்கு, அவர்கள் விரும்பும் நூல்களைக் கேட்டறிந்து அந்நூல்களைப் பரிசாக வழங்க ஏற்பாடு செய்திருந்தார்கள். யான் பயின்ற ஐந்தாண்டுக் காலமும் 'சில்வர்டங்' சீனிவாச சாஸ்திரி பெயரால் அமைந்த பேச்சுப் போட்டியிலும், சர்.சி.பி. இராமசாமி ஐயர் பெயரால் அமைந்த கட்டுரைப் போட்டியிலும் தொடர்வெற்றி பெற்ற யான் பேராசிரியரிடம் கண்ணதாசன் கவிதை நூல்களைப் பரிசாகப் பெற்றுள்ளேன்.

எம்.ஏ. மாணவர்களில் நூல்வாங்க விருப்பமுள்ள மாணவர்களுக்குப் பல தொகுதிகளாக வெளிவந்த திருச்சிற்றம்பலம் மு.அருணாசலம் பிள்ளையின் தமிழ் இலக்கிய வரலாறு நூல்களைச் சலுகை விலையில் வாங்கித் தந்தார்கள்.




எம்.ஏ. இரண்டாமாண்டு மாணவர்கள் ஏதேனும் ஒரு பொருளில் ஆய்வுக்கட்டுரை எழுதிப் படிக்க வேண்டும் என்பது அப்போது வழக்கமாக இருந்தது. ஆங்கிலத்தில் அக்கட்டுரைகளை எழுதுவதற்குத் தமிழ் மாணவர்கள் ஆங்கிலத்துறை ஆசிரியர்களை நாட வேண்டிய நிலை இருந்தது. எனவே, தமிழிலேயே ஆய்வுக்கட்டுரையைப் படிக்கலாம் என்று சட்டத்தை மாற்றிவிட்டார்கள். யான் இளங்கலை படிக்கும்போதே இம்மாற்றம் நடைமுறைக்கு வந்துவிட்டது.

ஆண்டுதோறும் ஒரு பொதுப்பொருளை (காப்பியம், சிற்றிலக்கியம், நாட்டுப்புறப் பாடல்கள், புதினம், சிறுகதை, நாடகம்) ஆய்வுக்களமாக அமைத்து ஒரு குறிப்பிட்ட படைப்பினை ஆய்வதற்கு வழி வகுத்திருந்தார்கள். சீட்டுக்குலுக்கல் முறையில் தலைப்பு களை மாணவர்களுக்கு வழங்கினார்கள். இளையேன் படித்தபோது நாடகங்கள் என்ற பொதுப்பொருளில் புதுமைப்பித்தன் நாடகங்கள் எனக்கு ஆய்வுப் பொருளாகக் கிடைத்தன. சிறுகதை மன்னரான புதுமைப்பித்தனின் நாடகநூல்கள் கிடைக்கவில்லை. எனவே, ‘தலைப்பை மாற்றிக் கொள்ளலாமா?’ என்று கேட்டு ஐயாவை அணுகினேன். உறுதியாக மறுத்துவிட்டார்கள். ‘சென்னை சென்று நூலகங்களில் தேடிப் பார்த்து ஆய்வைச் செய்க’ என்று கட்டளையிட்டு விட்டார்கள். அவர்கள் ஏவிய வண்ணம் சென்னை சென்று புதுமைப் பித்தனின் நண்பர் ரகுநாதன் அவர்களையும், அவர் வழிகாட்ட புதுமைப்பித்தனின் துணைவியாரையும் மகளையும் சந்தித்தேன். நூல்களைப் பெற்றேன். ஆய்வு செய்வோர்க்கு விடாமுயற்சியும், தொடர் உழைப்பும் தேவை என்பதை எனக்கு மட்டுமல்ல அனைத்து மாணவர்களுக்கும் இவ்வாறெல்லாம் வற்புறுத்தியவர்கள் அவர்கள்.

## ஆய்வு நெறியாளர்

முனைவர் பட்டத்திற்கு ‘இருபதாம் நூற்றாண்டுச் சிற்றிலக்கியங்கள்’ என்னும் தலைப்பை எனக்குத் தந்து முதல் நெறியாளராகவும் பேராசிரியர் வழிகாட்டினார்கள். சென்னையில் உள்ள நூலகங்கள் வழி அறுநூறுக்கும் மேற்பட்ட நூல்களின் விவரங்களைப் பட்டியலிட முடிந்தது. நூல் சேகரிக்கும் பணியின் பொருட்டு கோட்டையூரில் உள்ள ரோஜா முத்தையா அவர்களின் தனிப்பட்ட நூலகத்திற்குச் சென்று வரும்படி தெரிவித்தார்கள். அவர் தன் நூலகத்தைப் பயன்படுத்த ஆயிரக்கணக்கில் பணம் கேட்டதால், அத்தகவலைப் பேராசிரியர் அவர்களிடம் தெரிவித்தேன். அவ்வளவு பணம் கொடுத்தெல்லாம் தகவல் திரட்ட வேண்டாம். வேறு யாரிடமாவது நூல்களைத் திரட்டிவிடலாம் என்று ஆறுதல் வார்த்தை கூறினார்கள். வாரந்தோறும் ஆய்வுக்கட்டுரைகளை எழுதச் செய்து அவற்றைத் திருத்தம் செய்து தந்தார்கள்.

## ஆசிரியர் நலம் காத்தவர்

பேராசிரியர் துறைத்தலைவராக இருந்தபோது, துணைவேந்தர் ஒருவர் தமிழ்த்துறை ஆசிரியர் ஒருவர் மீது சரியான காரணமில்லால் யாரோ சொன்னதை நம்பி நடவடிக்கை எடுத்துக் கடிதம் அனுப்பிவிட்டார்கள். அக்கடிதம் துறைக்கு வந்ததும் துணைவேந்தர் அவர்களைச் சந்தித்து, ‘என்துறையில் பணியாற்றும் ஆசிரியர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுப்பதற்கு முன் என்னிடம் விசாரித்து அதற்குப் பிறகல்லவா இதைச் செய்திருக்கவேண்டும்.

*அவசர நடவடிக்கையாக இருப்பதால் இதைத் திரும்பப் பெறவேண்டும். இல்லையேல் என் பணி விலகல் கடிதத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று கூறி அந்த ஆசிரியரின் பணிநிலையைப் பாதுகாத்தார்கள்.*

## நேர்முக அனுபவங்கள்

*அண்ணாமலைப் பல்கலைக்கழக இணைவேந்தர் அரசர் முத்தையவேள் பல்கலைக்கழக விழாக்களில் பங்குபெற வரும்போது விருந்தினர் மாளிகையில் தங்கியிருப்பார்கள். நேரடித் தொடர்புடைய பல்கலைக்கழக ஆசிரியர்கள், அலுவலர்கள் மரியாதை நிமித்தம் அவர்களைச் சந்தித்து வணக்கம் தெரிவிப்பார்கள். யான் பணியில் சேர்ந்த முதலாண்டில் அரசர் வந்திருந்தபோது நான் அரசரைச் சந்திக்கவில்லை. செய்தி அறிந்த பேராசிரியர் என்னை அழைத்து, 'ஏன் இணைவேந்தரைப் பார்க்கவில்லை?' என்று கேட்டார்கள். 'நீங்கள் பார்த்தீர்களா?' என்று பதிலுக்குக் கேட்டேன். 'நான் போக வேண்டிய ஆள். நீ இருக்க வேண்டிய ஆள். எனவே கட்டாயம் போய்ப் பார்' என்று அறிவுரை கூறினார்கள். இறுதிவரை அதைப் பின்பற்றி வந்தேன். எனக்குப் பல்கலைக்கழகத்தில் பணியில் சேர்வதற்கு வந்த ஆணைக் கடிதத்தில் ஆகஸ்ட் 2 முதல் 10 ஆம் தேதிக்குள் சேர வேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. யான் நல்ல நாள் பார்த்து 1976ஆம் ஆண்டு ஆகஸ்ட் 9ஆம் நாள் பணியில் சேர்ந்தேன். ஒருவார ஊதியத்தை இழந்துவிட்டேன் என்று பேராசிரியருக்குச் சற்று வருத்தம். முதல் மாத ஊதியத்தை அவர்களிடம் தந்து ஆசி வழங்க வேண்டியபோது இதைத் தெரிவித்துக் 'குறைச் சம்பளமாக இருக்கிறதே' என்றார்கள். 'அடுத்த மாதம் முழுச்சம்பளம் வாங்கி மீண்டும் ஆசி பெற்றுக் கொள்கிறேன்' என்று கூறினேன். இதனால் இரண்டு முறை பேராசிரியரிடம் வாழ்த்துப்பெறும் பேறு கிடைத்தது.*

*முனைவர் பட்டத்திற்கு அவர்கள் தேர்ந்து தந்த தலைப்பு பரந்துபட்டதாக இருந்ததாலும் நூல்கள் அனைத்தும் கிடைக்கப் பெறாமையாலும் இக்கால இலக்கியங்களில் ஆய்வு மேற்கொள்ளக் கருதித் தலைப்பை மாற்றிக் கொண்டேன். மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராகப் பொறுப்பேற்ற பிறகு அண்ணாமலைக்கு அவர்கள் வந்திருந்தார்கள். நான் தலைப்பு மாற்றிக் கொண்டதைக் கேட்டு, 'நீ மதுரையில் இருக்க வேண்டிய ஆள்' என்றார்கள். 1984ஆம் ஆண்டு தொடக்கத்தில் யான் முனைவர் பட்டம் பெற்ற செய்தியை அவர்களுக்குக் கடிதம் எழுதித் தெரிவித்தேன். 'அறிஞர் முத்துவீரப்ப, டாக்டர் பட்டம் பெற்ற நலச்செய்தி அறிந்தேன். பாராட்டி வாழ்த்துகின்றேன். நின் புலமைத் தந்தையும் நானும் நிகரான மகிழ்ச்சியடைகின்றோம். இளமையிலேயே இப்பட்டம் பெற்றது. நின் ஆள்வினைக்குச் சான்று. முன்னேற்றத்திற்கு நேர்வழி. என் நிறைந்த வாழ்த்துக்கள்.' என்று எழுதியிருந்தார்கள். அக்கடிதத்தை எனக்குக் கிடைத்த நிகரற்ற பாராட்டாகக் கருதிப் பாதுகாத்து வருகிறேன்.*

*பேராசிரியர் வாழும்போதே 'மாணிக்கனாரின் சொல்லாக்கம்' என்னும் தலைப்பில் அவர்கள் தமிழ்ப்பணி குறித்து முதல் ஆய்வு நூலை வெளியிட்டவன் அடியேன். நூல் வெளிவந்த ஒரு சில நாள்களுக்குப் பிறகு நடராசர் ஆலயத்தின் சன்னதியில் அவர்களைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. 'உன் புத்தகம் பார்த்தேன். நல்ல முயற்சி, நீ ஒரு சில*



சொற்கள் பற்றி மேலாய்விற்கு உரியது என்று கருத்துத் தெரிவித்துள்ளாய் என்று சிலர் சொன்னார்கள். அது ஆய்வாளனின் உரிமை என்று சொன்னேன்' என்று கூறித் தன் பெருந்தன்மையைப் புலப்படுத்தினார்கள்.

பேராசிரியர் பணி ஓய்வு பெற்ற பிறகு, கரூரில் நடந்த கம்பன் விழாவில் அவர்கள் தலைமையில் நடைபெற்ற கருத்தரங்கில் எம்.எஸ்.நாடார், அடியேன், அ.ச.ஞானசம்பந்தன் மூவரும் முறையே கம்பன் காட்டிய மூவகை அரசுகளைப் பற்றிப் பேசினோம். விழா முடிந்து தங்கியிருக்கும் இடத்திற்குச் செல்லும்போது அவர்கள் பெட்டியை எடுத்துக்கொண்டேன். 'அதைக் கொடப்பா, என் சுமையை நான்தான் சுமக்க வேண்டும்' என்று வாங்கிக் கொண்டார்கள். அந்த அளவு எளிமையும் பிறரை ஏவல் கொள்ளாத உயர் பண்பும் வாய்த்தவர்கள் பேராசிரியர் அவர்கள்.

### நிறைவுரை

புலமைச்சிறப்பாலும், நேர்மைப் பண்பாலும், கடமை உணர்வாலும் பலநூறு மாணவர்களின் நெஞ்சில் வாழ்வியல்நெறி காட்டும் பாடமாக இருந்தவர்; இருப்பவர் பேராசிரியர் வ.சுப. மாணிக்கம் அவர்கள். அண்ணாமலைப் பல்கலைக்கழகக் கவியரங்குகளில் பங்கேற்கும்போது,

'மாணிக்கச் சீடன் யான்; மரியாதைக்காரன் யான்;
ஆணிப்பொன் அம்பலத்தான் அடிப்பொடியாய் இருப்பவன் யான்'

என்று பாடியிருக்கிறேன். அவருடைய நெஞ்சின் ஓரத்திலாவது இளையேன் இருந்தேனா என்று எனக்குத் தெரியாது. ஆனால் பாரதி, பாரதிதாசனுக்குப் பிறகு இந்நூற்றாண்டின் மகாகவியாகத் திகழும் கவிஞர் ஈரோடு தமிழன்பன் என் மணிவிழா வாழ்த்துக் கவிதையில்,

'கருத்துக் கொழிக்கும் வ.சுப.மாவின் சுருக்கப்பதிப்பாக விளங்கும் முத்துவீ'

என்று பாடியிருப்பதே தமிழுலகில் எனக்குக் கிடைத்துள்ள மாணிக்க அங்கீகாரம் என்று மகிழ்கிறேன்.

வாழ்க மாணிக்கனார் புகழ்!



**மாணிக்கச் சிந்தனைகள்**

**தேசிய கீதம் இந்திய மொழிகளுள் ஒன்றான வங்காளத்தில் இருக்கும்போது தேசிய மறை இந்திய மொழிகளுள் ஒன்றான செந்தமிழில் இருக்கலாமன்றோ?**

–'திருக்குறட்சுடர்'



# நடையில் நின்றுயர் நாயகர் வ.சுப.மா.

பேராசிரியர் **தமிழாகரர் தெ.முருகசாமி**
முன்னை முதல்வர், இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி (புதுச்சேரி)

நடை என்பது மனிதப்பண்பான ஒழுக்கம் எனப் பொருள்படும். இத்தகு ஒழுக்கம் வாழ்வின் எல்லாத்தரப்பிலும் மேற்கொள்ளப்பட வேண்டிய சீலமாகும். அது 'வளர்வதன் பாத்தியுள் நீர் சொரிந்ததாய்' (குறள்-718) இளமைதொட்டே வளர்வதாகும். இதற்கேற்ப அமைந்ததே, இன்று நூற்றாண்டுவிழா நிறைவுகாணும் செம்மல் வ.சுப. மாணிக்கனாரின் வாழ்வு.

இளம் வயதில் பெற்றோரை இழந்தவர், தம் தாய்வழிப் பாட்டியாரால் புரக்கப்பட்டார். பெற்றோரிட்ட அண்ணாமலை என்ற பெயரோடேயே ஏழு வயதில் புதுக்கோட்டையில் ஏட்டுக்கல்வி பயின்றார். குடும்பச்சூழலால், நாட்டுக்கோட்டைச் செட்டியார் மரபுப்படி வட்டித் தொழில் காரணமாகப் பருமா தலைநகர் இரங்கூன் சென்று வட்டிக் கடையில் வேலை பார்த்தார். ஒருநாள் கடை முதலாளி, அண்ணாமலைச்சிறுவரிடம், இன்னார் வந்து கேட்டால், முதலாளி இல்லை எனச் சொல்லச் சொன்னபோது, முதலாளி இருக்கும்போது அப்படி எப்படிச் சொல்லமுடியும்? என்று எதிர்வினாவை விடையாகச் சொன்னதும் கடைக்காரர் கொஞ்சமும் தாமதிக்காமல் வேலையிலிருந்து நீக்கிவிடவே தாயகம் திரும்ப நேர்ந்தது.

திக்குத் தெரியாத மரக்கலத்திற்குக் கலங்கரை விளக்கம் போல் கல்விக் கலங்கரை விளக்காக விளங்கிய சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்புலவர் பயிலத் தம் பதினெட்டாம் வயதில் கல்விப் பயணத்தைத் தொடங்கினார். நல்ல தொடக்கம் நல்ல முடிவைத் தரும் என்பதற்கேற்பத்தமிழின் பதினெண் கீழ்மேல் கணக்குகளின் பெருமையாய், மாமலையின் விளக்காய், படிப்படியே ஒளிர்ந்தார். தமிழ்கூறு நல்லுலகின் மாணிக்கமணியாய் உயர்ந்தார்.

பதினோராம் வயதில், பருமாவில் பெற்ற பொய் சொல்லாப் பண்புதான், அவர் பின்னாளில் மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராய் ஆக அடிக்கல்லானது.

17.8.1979இல் துணைவேந்தரானதும், காரைக்குடிக்கு வந்த செய்தியறிந்து, தமிழாசிரியர் கழகத்தார் அன்னாரைப் பாராட்டிச் சிறப்பிக்கக் கவியரசு முடியரசன் தலைமையில் சென்றோம். அப்போது அவர் சொன்னார்: "மேதகு ஆளுநர் அவர்கள் பதவிக்கான ஆணை வழங்கும்போது, என் தலைமீது கைவைத்து வாழ்த்தியதோடு, நீங்கள் எவ்வளவோ, பட்டம் விருதுகள் பெற்றிருந்தாலும், பருமாவில் பொய் சொல்லா



மாணிக்கமாய் இருந்த ஒன்றே தங்களை இவ்வுயர் பதவிக்கு அடையாளம் காட்டியது" என வாயாரப் புகழ்ந்தார் என்றார்.

தாம் வாய்மையையே வாழ்க்கைக் குறிக்கோளாகத் தொடர்ந்து கொண்டிருந்தது பற்றி, அவரே தம் தொல்காப்பிய எழுத்ததிகார உரைப்பாயிரத்தில் குறித்துள்ளார்.

பண்டிதமணி கதிரேசன் செட்டியார், அ.சிதம்பரநாதர், பூவராகவன் பிள்ளை, மு.அருணாசலம்பிள்ளை போன்றோர் வ.சுப.மா.வின் ஆசிரியர்கள். அவ் ஆசிரியத் தாயர்களின் தமிழ்த்தாலாட்டில் வளர்ந்தவர்க்குப் பண்டிதமணியாரே குரு. வ.சுப. மா.வின் கல்விக்கெல்லாம் பண்டிதமணி கதிரேசனாரின் பொருளுதவி துணையாக இருந்ததோடு, வள்ளல் அண்ணாமலை அரசரிடம் பரிந்துரை செய்து, விரிவுரையாளராகப் பணியில் சேர்த்து, வ.சுப.மா.வின் வாழ்வில் ஒளியேற்றினார். இச்செய்ந்நன்றிக்காகவே, காரைக்குடியில் வ.சுப.மா, தம் இல்லத்திற்குக் கதிரகம் எனப் பெயரிட்டார்.

எதையும் மறித்தோடிச் சிந்திப்பதை இயல்பாகக் கொண்ட வ.சுப.மா.வின் வள்ளுவம் என்னும் கற்பனைப் பொழிவான நூலுக்கு, ஈடு இணையே இல்லை. அவரே, தம் முகவுரையில், வள்ளுவநூலின் நடை, கற்பவரை நிறுத்திப் படிக்கச் செய்யும். வேகப்படிப்பைக் குறைத்து விளங்கப் படிக்கத் தூண்டும் என எழுதியுள்ளார்.

வ.சுப.மா.வுக்குச் சங்கநூலும், திருக்குறளும் இரு கண்கள். தொல்காப்பியம் நெற்றிக்கண். பழந்தமிழ் நூல்களைப் போலவே இடைக்கால, தற்கால நூல்களையும் கற்றுத் தேர்ந்தார். திரைப்படப் பாடலாயினும் நாமறிய ஏதேனும் கிடைக்கும் என்ற பரிவோடே அப்புத்தகங்களை வாங்கிப் படிப்பார். ஒருமுறை அவரில்லம் சென்றிருந்த என்னிடம் சில திரைப்படப்பாடல் புத்தகங்களைக் காட்டி, இவற்றைச் சிற்றிலக்கியச் சார்பாகக் கொண்டு தேவைக்குரியதைத் தேடிக்கொள்ளல் தமிழ்க்கடன் என்றார்.

நவில்தொறும் நூல்களை மதித்தல்போல், பயில்தொறும் பண்புடைய சான்றோரை மதித்த ஒழுக்கசீலம் போற்றுதற்குரியதாகும். 20.11.1973இல் தந்தை பெரியார் காரைக்குடிக்கு வந்தார். அன்று மாலையே அவரைக் கண்டுவர, வ.சுப.மா.வும் திருக்குறள் விருதாளர் இரா.சாரங்கபாணியாரும் சென்று கண்டு வந்தனர். அவர்களைப்போலவே, காரைக்குடி இராமசாமி தமிழ்க்கல்லூரி முன்னாள் முதல்வர் கரந்தை ந.இராமநாதருடன் நானும் பேராசிரியர் தியாகராசன், அருச்சுனன் ஆகியோரும் சென்றோம்.

இடைமறித்த வ.சுப.மா. சொன்னார்: "ஐயாவைப் பார்த்து நூற்றாண்டை எட்டும் தங்களின் விழாவை நாங்கள் கொண்டாடி மகிழ வேண்டும்" என்றேன். அதற்கு அவர், "இருந்து பார்த்தாத் தெரியும் என்றார்கள்" என்றார். இப்படிச் சொன்னதோடு, "இருந்து பார்த்தாத் தெரியும் என்றதை ஒரு தட்டிலும், நாம் கற்ற நூல்களை ஒரு தட்டிலுமாக வைத்து நிறுத்தால் சமன்செய்து சீர்தூக்கியதாக உள்ளதல்லவா? வாழ்க்கைதான் நூல்கள். அவற்றின் சாரமே அனுபவ வார்த்தை என்பதைப் பெரியார் சொல்லாமல் சொல்லிவிட்டாரே" என்று கூறிவிட்டுப் பெரியாரைக் காண எங்களை ஆற்றுப்படுத்தினார்.

மற்றொரு நிகழ்ச்சி. குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்திற்குச் சொந்தமான, பாரியது பறம்புமலையின் (தற்போது பிரான்மலை) திருக்கோயில் சித்திரைப் பெரு விழாவில், பாரிவிழா, வ.சுப.மா. தலைமையில் நடந்தது. அதற்கு முடியரசன், பாவலர் மணி ஆ.பழநி, ஆகியோருடன் நானும் சென்றிருந்தேன். விழா தொடங்குமுன், வ.சுப. மா., தவத்திரு குன்றக்குடி அடிகளாரிடம், "கோயிலுக்குப் போய் வருகிறோம்" என்றார். "மங்கைபங்கன் கோயிலுக்கா? மாலையாகிவிட்டதே" என்றார் அடிகள். "இல்லை, மலையடிவாரக் கோயிலுக்கு" என, வ.சுப.மா. கூறிட, சிலரை உதவிக்காக அடிகளார் அனுப்பினார். நானும் உடன் சென்றேன். வ.சுப.மா. தோளின் துண்டை இடுப்பில் கட்டிக்கொண்டு, கோயிலுக்குள் சென்று சிவன் சந்நிதியில் கண்மூடி நின்று தியானம் செய்து விழித்ததும், என்னிடம் ஒரு திருவாசகம் பாடச் சொன்னார். நானும், 'இன்றெனக் கருளி இருள் கடிந்து உள்ளத்து எழு ஞாயிறே போன்று' என்ற திருப்பெருந்துறைப் பாடலைப் பாடி முடித்தேன். அடிகளார் ஆணைப்படி, திருக்கோயில் சிறப்பெல்லாம் செய்யப்பெற்றதைப் பெற்றுக்கொண்டு வெளியில் வந்தோம். துண்டைத் தோளில் போடும்போது, "நீங்கள் பாடிய பாடலில் கரு.முத்துவுக்குப் பெரிதும் ஈடுபாடுண்டு" என்றார். சேனாவரையரைச் சீடன் வினாவியதுபோல, அதனை விளக்கமாகக் கூறக் கேட்டேன்.

கலைத்தந்தை கரு.முத்து.தியாகராசருக்குக் கட்டிடக்கலையில் ஆர்வம் உண்டு. சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தோய்ந்து இருளில் நுண்ணிதாய் இருப்பவராகவே சிவனை மணிவாசகர் பார்த்த பார்வையில்தான் திருப்பெருந்துறை சென்று கரு.முத்து. தியாகராசர் வணங்கினார் என்றார்; பின்னர் பாரிவிழா முடிந்ததும், வ.சுப.மா அடிகளாரின் ஆசிபெற, அவர்தம் பாதம் தொட்டு வணங்க, நானும் நிழலாய் வணங்கினேன்.

பின்னர் மகிழுந்தில் பயணமானோம். அப்போது கவியரசு முடியரசன், "ஐயா, நீங்கள் இருவரும் அடிகளாரின் பாதம் தொட்டு வணங்கியதுபோல் நாங்கள் செய்யாமல் இருந்ததை அடிகளார் வேற்றுமையாகக் கருத நேர்ந்திருக்காதோ?" என்று கேட்டார். அதற்கு வ.சுப.மா சொன்னார்: "முடியரசன், அப்படி நினைக்காதவர் அடிகள். நாமாக, அவர்களின் கோலத்திற்கும் தமிழுக்குமாக வணங்குகிறோம். யார் இப்படிக் கோயில் விழாவில், பாரி விழா என்ற பெயரில் சங்கத்தமிழ் பரப்புவதைத் தெய்வத் தொண்டாகச் செய்கிறார்கள்? இல்லையே, அதற்காகவே அந்த வணக்கம்" என்றார்.

பதிலைக்கேட்ட முடியரசனார்க்கு இருக்கையில் இருப்புக்கொள்ளவில்லை. முன்னிருக்கையில் இருந்த வ.சுப.மா.விடம், "ஐயா நீங்கள் தமிழ்ச்செம்மல்தான்" என்று கூறிப் புளகாங்கிதம் கொண்டார்.

ஆராய்ச்சிப்பணியில் பலரைத் தூண்டிய செம்மல் வ.சுப.மா. அன்று பாரிவிழாவின் போது, திருவாசகப்பற்றாளர் கரு.முத்து. தியாகராசரைப் பற்றிச் சொல்லிய நினைப்பைத் தூண்டிய கருத்து, யானை அடக்கிய கல்லாக என்னுள் கிடந்தது. அது வெளிப்படுதற்கான வாய்ப்பும் வந்தது.



*கலைத்தந்தையாரின் துணைவி, திருமதி இராதா தியாகராசன் (முன்னாள் துணைவேந்தர், அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி) அவர்கள் தம் கணவர் நினைவாக நடத்தும் திருவாசகச் சொற்பொழிவுக்கு என்னைப் பேசும்படிப் பணித்தபோது, தியாகராசரின் வரலாற்றை முழுக்கப் படிக்க நேர்ந்தது. பேராசிரியர் குழந்தைநாதன் எழுதிய ஆலைஅரசர் பற்றிய நூலின் 19ஆம் பக்கம் படித்தபோதுதான் வ.சுப.மா. கூறிய சுருக்கம் நெஞ்சில் பெருக்கமானது.*

*துணைவேந்தரான பெரும்பதவிக்கு வ.சுப.மா. எடுத்துக்காட்டாய் இருந்தார். எளிமை, நேரந்தவறாமை, அன்றன்று கடமை முடிப்பு, அளவான பேச்சு, ஆரவாரமின்மை, உள்ளத்தனைய உயர்சிந்தனை, பிறர்க்குதவும் மனோலயம் என்பவையெல்லாம் இவர்தான் செம்மல் வ.சுப.மா. என அடையாளம் காட்டின; விளம்பரம் விரும்பாத வித்தகருக்குத் தாமாகவே இவையெல்லாம் களவிளம்பரமாயின.*

*சாதாரண வெள்ளை அரைக்கைச் சட்டை, வேட்டி,தோளில் துண்டு என்ற எளிய தோற்றத்துடன் துணைவேந்தராகக் காலடி எடுத்துப் பல்கலைக்கழகம் நுழைந்த போது, 'இவரா, இப்பெரிய பல்கலைக்கழகத்தை....' எனக் கூறி ஏக்கப்பெருமூச்சு விட்டவர்களெல்லாம் வியந்து பாராட்டும்படித் தம் மேலாண்மைத்திறனால் கோபுரக் கலசமாகத் தம்மை உயர்த்திய பல்கலைக்கழகத்தை உயர்த்தினார்.*

*வ.சுப.மா.வின் நூல்கள் தன்னேரில்லாத் தனித்த வழியானவை. உரைநடை, நாடகம், சிறுகதை நூல்களோடு கவிதைப்படைப்புகளையும் அவர் தமிழுக்கு அளித்துள்ளார். அவை, சங்கப்பாடல்கள் போல, நிலைபேறுடையனவாகும்.*

*கொடை விளக்கு என்ற அவர் கவிதை நூலில், வள்ளல் அழகப்பர் குறித்து, 'கோடி கொடுத்த கொடைஞன்', 'குடியிருந்த வீடும் கொடுத்த விழுச்செல்வன்' என்ற பாடல் இன்றும் அழகப்பர் கல்விவளாகத்தில் ஒலித்துக்கொண்டே இருக்கின்றது.*

*திருக்குறள்போல், மாணிக்கக்குறள் என்றதொரு கவிதை நூல், காலத்தின் கண்ணாடி நூலாகும்.*

போராட்டம் இன்றிப் பொருவில் தமிழுக்குத்
தேரோட்டம் இல்லை தெளிவு (163)

*என்ற மாணிக்கக்குறள் இன்றும் பொருத்தப்பாடுடையதாக விளங்கக் காணலாம்.*

*வ.சுப.மா.வின் தமிழ்மொழி வளர்ச்சிப்பயணத்தில் அமைந்த பன்முகப்பாங்கில், காரைக்குடியில் இராமசாமித் தமிழ்க்கல்லூரி என்ற ஒன்றைச் செந்தமிழ்ச்செல்வர் இராம. பெரியகருப்பர் நிறுவ உறுதுணையாக இருந்து வழிகாட்டியவர் வ.சுப.மா.ஆவார் என்ற செயல், வடலூரில் வள்ளலார் மூட்டிய நெருப்பு அணையாமல் அன்னதானச் சிறப்பைத் தொடர்ந்து செய்வதுபோன்றதாகும்.*

*ஓசைப்படாமல் அவர் செய்த எழுத்துச்சீர்திருத்தப்பணியில் ஒன்றுதான், மதுரை காமராசர் பல்கலைக்கழகம் என எழுதிக் காட்டியதாகும். மதுரைப்பல்கலைக்கழகம் என்று*

அது தொடங்கியபோது எவரது பெயரும் இணைக்கப்படவில்லை. காலப்போக்கில், காமராசர் பெயரைச்சேர்த்த நிலையில், மதுரைக் காமராசர் என எழுதப்பட்டது. இது கண்ட வ.சுப.மா., "தமிழறிந்த நெடுஞ்செழியன் கல்வியமைச்சராக இருக்கும்போது, இப்படி ஓர் எழுத்துப் பிழையோடு எழுதலாமா?" என்ற கருத்தை எடுத்துரைத்ததோடு, பிழை, பிழையின்மை பற்றியும் கூறினார்.

மதுரைக்காமராசர் என்றால், விருதுநகரில் பிறந்தவரை, மதுரையில் பிறந்தவராக மாறி நினைக்கும் வரலாற்றுப்பிழை நேர்ந்துவிடும். ஆதலால், தமிழின் சந்திக்குறியீட்டின்வழி, மதுரைக்குப்பிறகு ஒரு சிறு கோடிட்டு, பின் காமராசர் என எழுதினால் எழுத்துப்பிழை, பொருட்பிழைகள் வாரா என்று அறிவுறுத்தியபடி, மதுரை- காமராசர் பல்கலைக்கழகம் என்று எழுதப்பட்டது.

இந்த மிதவாதப்போராட்டம் போல, தீவிரவாதப்போராட்டத்தையும் வ.சுப.மா. செய்தார். தில்லைச்சிற்றம்பல மேடையில், திருமுறைப்பாடல்கள் பாடப்பெறவேண்டும் என்பதை முன்மொழிந்து நடத்திய போராட்டத்தில் திருமுறைச்செல்வர் க.வெள்ளை வாரணர் போன்ற பலர் செம்மலுடன் களம் கண்டனர். தில்லைக்கோயில் காணும் குடமுழுக்கு நினைவாகத் திருமுறைகள் பாடப்படத் தீட்சிதர்களுக்கு விண்ணப்பிக்கப்பட்டபடி, அவர்களும் ஏற்றுப் போற்றினர்.

தீட்சிதர்களில் 3 மணிநேரம் திருமுறைக் கச்சேரி செய்வோர், உளராயினும் சிற்றம்பல மேடையில் அவ்வக்காலப் பூசை வேளையில் பன்னிரு திருமுறையைத் தீட்சிதர்களைக் கொண்டே பாடச்செய்ததை, வ.சுப.மா. வெற்றியாகக் கொண்டார். அதற்காக, அவர் சொன்ன அமைதியே ஒரு சிறப்புத் திருத்தமாக இருந்தது. 'சொற்றமிழ் பாடுகென்றார் தூமறை பாடும் வாயால்' என்பது சேக்கிழார் வாக்கு. அதனை மாற்றி, 'தூமறை பாடும் வாயர் சொற்றமிழ்ப் பாடுகின்றார்' என்றார்.

தாய்மொழியாம் தமிழுக்குள்ள அடைமொழிச்சிறப்பு எந்தச் செம்மொழிக்கும் இல்லை என்று உறுதிப்படுத்தும் வண்ணம் வ.சுப.மா.வின் பாக்கள் உள்ளன. சிவபெருமானை, 'பிறவா யாக்கைப் பெரியோன்' என்ற சிலப்பதிகாரம் போலப் 'பிறப்பறியாத் தமிழன்னை' என ஒரு தனிப்பாடலில் வ.சுப.மா. பாடியுள்ளார். மாணிக்கவாசகர் சிவனை, 'தன்பெருமைத்தானறியாத் தன்மையன் காண்' (திருச்சாழல்-19) என்றபடி, வ.சுப.மா., 'சிறப்பறியாத் தெய்வம் நிகர் மொழிதான் வாழ' என்று அத்தனிப்பாடலில் குறித்தார்.

செம்மல் வ.சுப.மா. தாம் எழுதிய எந்த நூலுக்கும் அணிந்துரையை எவரிடத்தும் பெற்றதில்லை; அவ்வாறே எவர்க்கும் அணிந்துரை எழுதித் தந்ததும் இல்லை. ஆனால், ஒரோவழி விதிவிலக்காக, முத்தமிழறிஞர் கலைஞரின் குறளோவியத்திற்கு மட்டும் அணிந்துரை நல்கியிருக்கிறார்.

அவர்தம் வாழ்வில் அரசியல் தலைவர்கட்கும் பங்குண்டு. மூதறிஞர் இராஜாஜியிடம் பெருமதிப்புக் கொண்டவர். தமது வள்ளுவ நூலில், 'அரம்போலும் அறிவுக் கூர்மையர்' என்று அவரைப் பாராட்டியுள்ளார்.



'அரசியலில் துணிவுடன் விளங்கியவர் பெருந்தலைவர் காமராசர்' என்றும், 'தாமறிந்த தமிழ் ஒன்றாலேயே பிறர்க்கில்லாப் பெரும்புகழ் பெற்றார்' என மாணிக்கக்குறளில் (139) போற்றியுள்ளார்.

செம்மலை மதித்த அரசியல் தலைவர்களுள் புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர், குறிப்பிடத் தகுந்தவராவார். தஞ்சையில் தமிழ்ப்பல்கலைக்கழகம் அமையச் செம்மல் கூறிய அறுநூறு ஏக்கர் நிலம்போதாதென்று ஆயிரம் ஏக்கர்நிலம் ஒதுக்கிய முதல்வர் எம்.ஜி.ஆரை, 'உள்ளக்கருத்தின் அளவே பெருமை' எனப் பாராட்டியுள்ளார்.

'என் கடன் பணி செய்து கிடப்பதே" என்பதாகவும், 'செய்யும் தொழிலே தெய்வம்' என்பதாகவும், தாம் பணியாற்றிய காரைக்குடி அழகப்பா, சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைகளை முத்திரை பதித்ததாக உருவாக்கினார்.

'தகுதி என ஒன்று நன்றே' (குறள் 111) என்பதாக வாழ்வாங்கு வாழ்ந்த அன்னாரது நூல்களாயினும், வாழ்வியல்முறைகளாயினும் முரண்பாடில்லாத தொடக்கமும் முடிவும் கொண்டவையாகும். அந்நிலையில் அவர்தம் எண்ணத்தை மக்களுக்கு அறவுரையாகவும், அறிவுரையாகவும் பகர விரும்பியதை இருகூறாகக் காணலாம். ஒன்று அவர் எழுதிய பாடல்வழி கூறும் மேற்கோள். மற்றொன்று அவர் எழுதிவைத்த விருப்பமுறி (உயில்)

நல்லாவின் பால் முழுதும் கன்றுக் கில்லை;
நறும்பூவின் மணமுழுதும் சோலைக்கில்லை;
நெல்லாரும் கதிர் முழுதும் நிலத்திற்கில்லை;
நிறைகின்ற நீர்முழுதும் குளத்திற்கில்லை;
பல்லாரும் கனிமுழுதும் மரத்துக்கில்லை;
பண்நரம்பின் இசைமுழுதும் யாழுக்கில்லை;
எல்லாமே பிறர்க்குழைக்கக் காணுகின்றேன்
என் வாழ்வும் பிறர்க்குழைக்க வேண்டும்; வேண்டும்!

என்ற இப்பாடல், 'நெல்லிக்கனி' என்ற வ.சுப.மா. நாடகத்தில், ஒரு புரட்சிப்பெண் பாடுவதாக அமைந்தாலும், இது அவர்தம் குறிக்கோள் பாட்டாகவே விளங்குகின்றது.

வாழ்க்கை நடப்பியலுக்கேற்ப, அவர் எழுதிவைத்த உயிலில், தம் சொத்துக்களில் ஆறில் ஒரு பங்கை, அறநிலை வைப்பாக்கி, அதன் வருவாய் வருமானத்தில், தாம் பிறந்த ஊரான மேலைச்சிவபுரியின் ஏழை எளிய மக்களது கல்வி, மருத்துவம், பெண்மைநல வாழ்வு, குழந்தை நலம் மற்றும் அஃறிணை உயிர்நலம் போன்றவற்றைப் பேண வேண்டும் என்று குறித்தார்.

17.4.1917இல் மேலைச்சிவபுரியில் தோன்றி, அண்ணாமலை- காரைக்குடி நகர்களில் பூத்துக் காய்த்து, மதுரையில் பழுத்துக் கனிந்த அந்த மாணிக்கத் தீங்கனி, 25.4.1989இல் புதுச்சேரியில் தமிழ் தமிழ் தமிழ் என்றே ஒலித்து உதிர்ந்துவிட்டது. ஆம். தமிழ்க்காதல் எழுதிய செம்மல் வ.சுப.மா.வை, அவரின் இந்த நூற்றாண்டின் நிறைவில் போற்றி மகிழ்வோம்.



# வ.சுப.மா போற்றிய சன்மார்க்க சபை

பேராசிரியர் முனைவர் **விசு.பழனியப்பன்**
முன்னைத் தமிழ்ப்பிரிவுத் தலைவர், தொலைதூரக் கல்வி இயக்ககம்,
அண்ணாமலை பல்கலைக்கழகம், சிதம்பரம்.

## சபையில் ஈடுபாடு

புடம் போட்ட தங்கமாய்ப் பொய் சொல்லா மெய்யராய் பர்மாவிலிருந்து தாயகம் வந்து சேர்ந்த மாணிக்கனார் தன்முயற்சியால் தமிழ்க்கடலில் ஆழ்ந்து முத்தெடுத்து மீக்கூர்ந்த புகழ்பெற்ற சிறப்பு போற்றத்தக்கதாகும்.

மாணிக்கனார் தமிழ் மணம் மாறாப் புகழ்மணம் கொண்ட மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபையின்பால் மிக்க ஈடுபாடு கொண்டிருந்தார். பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் சபையின் தோற்றத்திற்கும், அதன் வளர்ச்சிக்கும் முதற்காரணமாய் அமைந்த சிறப்பிற்குரியவராவார். அப்பெருந்தகைக்குப் பின்னர் வ.சுப. மாணிக்கனார் சபையின் வளர்ச்சியில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டார். அவர் தன்னுடைய ஆசான் வளர்த்தெடுத்த சபையை மேன்மையுறச் செய்ய அயராது பாடுபட்டவராவர். பண்டிதமணியாரின் மறைவிற்குப் பிறகு 28.10.1953 ஆம் நாள் வ.சுப. மணிக்கனாரைத் தனது நிறைவேற்றக் கழக உறுப்பினராக அமைத்துக்கொண்டு, சபை தீர்மானம் இயற்றியது. அன்று முதல் சபை வளர்ச்சியைத் தன் வாழ்நாள் குறிக்கோளாகக்கொண்டு சபையில் மிகுந்த ஈடுபாடு காட்டி வந்தார்.

## கல்லூரிக்குழு வடிவமைப்பு

சபைதன்னை மேலைச்சிவபுரி வ.பழ.சா. குடும்பத்தார் தோற்றுவித்திருந்தாலும். அதனைத் தமிழுலகம் தழுவிய அளவில் வளர்த்தெடுத்த பெருமை பண்டிதமணியார்க்கும், பின்னர் வ.சுப. மாணிக்கனார்க்கும் உரியதாகும். சபையில் பாலபண்டிதம், பண்டிதம் என்ற பட்டயப் படிப்பினை வித்வான், புலவர், பி.லிட்., எம்.ஏ., எனக் காலத்திற்கேற்ப வடிவம் கொடுத்து கணேசர் செந்தமிழ்க் கல்லூரியை மேன்மைப்படுத்திய திறன் மாணிக்கனாருக்கே உரியதாகும்.

சபை நிறைவேற்றக் கழக உறுப்பினராய்ப் பரிணமித்த வ.சுப.மாணிக்கனாரை, சபையின் மூவர் குழுவில் ஓர் உறுப்பினராக நிதிக்குழுவிலும் கல்லூரிக்குழுவிலும் சபையினர் அழகுற அமைத்துக்கொண்டனர்.

25.3.1956இல் மாணிக்கனார் உட்பட மூன்று உறுப்பினர்களைக் கொண்ட கல்லூரிக்குழு அமைக்கப்பெற்றது. சென்னைப் பல்கலைக்கழக அறிவுறுத்தலின்படி, கல்லூரிக்குழு முழுமையாக அமைய ஓராண்டுக்காலம் தனது கவனத்தை முழுதுமாகச் செலுத்திக் குழுவிற்கு



*வடிவம் தந்தார். அவ்உழைப்பின் காரணமாக கல்லூரிக்குழுவின் முதல் கூட்டம் சன்மார்க்க சபையின் மண்டபத்தில் **23.5.1957**இல் நடைபெற்றது. அக்கூட்டத்திற்குத் தலைமையேற்ற மாணிக்கனார் கல்லூரிக்குழுவை முழுமையாகத் தலைவர், செயலாளர், உறுப்பினர்கள் என ஆறுபேரை நியமித்து மேலும் மூவரைச் சேர்க்க இசைவு பெற்று வடிவமைத்தார். தற்போது கலைக்கல்லூரிகளுக்குக் கல்லூரிக்குழு எப்படி அமைப்பது என்பதனைக் கல்லூரிக்கல்வி இயக்குநரகமே வடிவமைத்து விதிகளையும் இயற்றித் தந்துள்ளது. ஆனால் **1957**இல் கணேசர் செந்தமிழ்க் கல்லூரிக்குழுவின் அமைப்பு விதிகளை, ஏறக்குறைய தற்போதைய நடைமுறைக்கு ஏற்றவாறே அமைத்துத்தந்த பெருமை வ.சுப. மாணிக்கனாருக்கே உரியதாகும். குழுவின் உறுப்பினர் எண்ணிக்கை, எப்படித் தேர்வு செய்வது இனைய சாராம்சங்களும் உள்ளடங்கிய அமைப்பு விதிகளை உருவாக்கித் தந்தவர் இவரே. சன்மார்க்க சபையின் **8.9.1957**ஆம் தேதியிட்ட ஆண்டறிக்கையில் இவ்விவரங்கள் உள்ளன.*

## பண்டிதமணியாருக்குப் பட்டம்

*சபையின் பொன்விழாவில் மு.கதிரேசச் செட்டியார்க்குச் சன்மார்க்க சபை பண்டிதமணி என்னும் பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தது. அதற்குப் பின்னர் இந்திய அரசு அவருக்கு 'மகாமகோபாத்தியாய' என்னும் பட்டத்தை வழங்கியது. இந்நிகழ்ச்சியை மாணிக்கனார் 'பண்டிதமணியும் சபையும்' என்ற தனது கட்டுரையில் 'பண்டிதமணிப் பட்டத்தை என் ஆசிரியர் எவ்வளவு போற்றினார் என்பதற்கு ஒரு நிகழ்ச்சி' எனக் குறிப்பிட்டு, அந்நிகழ்ச்சியை விளக்குகின்றார். (நகரத்தார் - இதழ், ஆசிரியர் - புலவர் நாக.சண்முகம், நவம்பர்- **1969** ப.**13**)*

*'மகாமகோபாத்யாய என்னும் பட்டத்தினைத் தமக்கு அரசு வழங்கியதில் மகிழ்ச்சியடையும் பண்டிதமணி அவர்கள், அதே நேரத்தில் சபை வழங்கிய பண்டிதமணி என்ற பட்டத்தையும் அரசு ஏற்று ஒப்புதல் அளித்தது போலச் சான்றிதழில் குறிப்பிட்டுள்ளதில் மட்டற்ற மகிழ்ச்சியடைந்ததையும்' மாணிக்கனார் குறிப்பிடுகிறார்.*

## மாணிக்கனார் கூறியுள்ளது

> "இந்திய அரசுத் தலைவர் வைசிராய் "மகாமகோபாத்தியாய" என்ற பட்டத்தை வழங்கியபோது சான்றிதழ் ஒன்று அளித்தனர். அவ்விதழில் 'மகிபாலன்பட்டி பண்டிதமணி மு.கதிரேசச் செட்டியாருக்கு மகாமகோபாத்தியாய பட்டம் வழங்கப்பெற்றது' என்ற வாசகம் இருந்தது. இதனைப் படித்த புலவர் பெருமகனார்க்கு மகிழ்ச்சி. அரசிதழ் சபை வழங்கிய பண்டிதமணிப் பட்டத்தையும் ஒப்புக்கொண்டிருக்கின்றதன்றோ? தாய் பண்டிதமணி, மகாமகோ பாத்தியாய என்னும் மகவை ஈன்றார் எனப் பண்டிதமணியார் மகிழ்வெய்தியதாக"

*மாணிக்கனார் குறிப்பிடுகிறார்.*

## சபையோடு இணைந்த பணி

*அழகப்பா கலைக்கல்லூரியில் பேராசிரியராய், தமிழ்த்துறைத் தலைவராய், கல்லூரி முதல்வராய்ப் பல்வேறு நிலைகளில் உயர்வு பெற்றபோதும், பின்னர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் துறைத்தலைவராய், புலமுதன்மையராய் உயர்ந்தபோதும் பின்னர்*

மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தராய் மதிப்புறு நிலை எய்திய காலத்தும் சபை நிர்வாகக் குழுவிலும், கல்லூரிக்குழுவிலும் தொடர்ந்து பொறுப்பேற்று சபையின் வைரவிழாவை எண்ணிய வண்ணம் மேன்மையுற நடத்திக் கொடுத்த பெருமை மாணிக்கனாருக்கு உண்டு.

### வித்துவானைப் புலவராக்கியது

தமிழகத்தில் மக்கள் வழக்கிலும், அரசு பல்கலைக்கழக வழக்கிலும் வடசொற்கள் இடம்பெறுவதைத் தவிர்க்க வேண்டும் என்ற கருத்து மாணிக்கனார்க்கு ஏற்பட்டிருந்தது என்பதனைச் சபைத் தீர்மானம் ஒன்றால் அறியலாம். 'தமிழ் வழக்கில் ஸ்ரீ என்ற முன்னடையைத் திரு எனவும், வித்துவான் என்பதனைப் புலவர் எனவும் தமிழில் இனிப் பயன்படுத்த வேண்டும்' என்ற தீர்மானத்தை முதன்முதலில் சன்மார்க்க சபையில் முன்னெடுத்துக் கொண்டு வந்து நிறைவேற்றிய திறம் அவரது எண்ணக் கனவை வெளிப்படுத்துகிறது.

### பண்டிதமணியார்க்குப் பெருமை

சன்மார்க்க சபையில் பங்காற்றி வந்த காலத்தில் சபை ஆண்டுவிழாக்களில் மாணிக்கனார் உரையாற்றிய ஒவ்வொரு நிகழ்விலும் பண்டிதமணியார் குறித்த தலைப்புக்களில் சொற்பொழிவினை நிகழ்த்தியிருக்கின்றார். அத்தோடு மட்டுமல்லாது சபையின் வாயிலாக பண்டிதமணியாரின் நூற்றாண்டு விழாவினை மிகச் சிறப்பாக ஏற்பாடு செய்து நடத்தி வைத்தார். பல்வேறு பெருந்தகையாளர்களிடமிருந்து கட்டுரைகளையும் செய்திகளையும் சேகரித்து பண்டிதமணி மு.கதிரேசச் செட்டியார் நூற்றாண்டு விழா மலரினை வெளியிட்ட பெருமை மாணிக்கனாருக்கு உரியதாகும். அவ்விழாவில் பண்டிதமணியாருக்குப் பெருமை சேர்க்கும் வகையில் கீழ்வரும் நூல்களை, சபை வெளியிடத் துணை நின்றார்.

| வ.எ | நூல் | ஆசிரியர் | ஆண்டு |
|---|---|---|---|
| 1. | பண்டிதமணியின் நாடகத்தமிழ் | ஆ. பழநி | (1982) |
| 2. | பண்டிதமணியின் நடைநயம் | இரா. மோகன் | (1982) |
| 3. | ஊன்றுகோல் | முடியரசன் | (1983) |
| 4. | பண்டிதமணி பிள்ளைத்தமிழ் | சொ.சொ.மீ. சுந்தரம் | (1983) |

சபை நிலைபேறு பெறுவதற்குக் காரணமான தன் ஆசான் பண்டிதமணியாருக்கு திருவுருவச் சிலை நிறுவ நாளும் நினைந்து, தமிழக அரசினரால் அமைக்கப்பெற்ற சிலை அமைப்புக் குழுவிற்குத் தலைவராகப் பொறுப்பேற்று மகிபாலன்பட்டியில் அரசு விழாவாக, சிலைத்திறப்பு விழாவினை நடத்திய சிறப்பும் மாணிக்கனாரையே சாரும்.

### செம்மல் மாணிக்கனார்

சன்மார்க்க சபையின் வைரவிழா 1970 பிப்ரவரி 8ஆம் நாள் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. அவ்விழாவில் சபையின் அறுபது ஆண்டுக்கால இடையறாப்பணியினைப் பார்வையாளர் மனதில் பதியுமாறு மாணிக்கனார் புலப்படுத்திப் பேசினார். அவ் அறுபது ஆண்டுக்காலப் பணியில் செம்பாகம் மாணிக்கனார்க்குரியதாகும்.



சன்மார்க்க சபையின்பால் மாணிக்கனார் காட்டிய ஈடுபாட்டையும், தமிழ்மொழியின்பால் அவர் காட்டிய ஈடுபாட்டையும் தமிழ்த்தொண்டையும் சன்மார்க்க சபை பாராட்ட நினைத்து வைரவிழாவில் மாணிக்கனார்க்கு "செம்மல்" என்ற பட்டத்தை வழங்க முடிவெடுத்தது. வைரவிழா மேடையில். பல்லாயிரக்கணக்கான தமிழ்ச் சான்றோர் முன்னிலையில், தொழிலதிபர், மேலைச்சிவபுரி ஆ.நாகப்ப செட்டியார் அவர்கள் வ.சுப. மாணிக்கனாரின் சிறப்புக்களையும் அவர்தம் நூல்களையும் பாராட்டித் தகுதியுரை கூறத் துணைவேந்தர் நெ.து.சுந்தர வடிவேலு அவர்கள் "செம்மல்" என்ற பட்டத்தை வழங்கிப் பொற்பதக்கத்தையும் அணிவித்தார். அவ்விழாவில் டாக்டர். மு.வரதராசனார், தமிழ்க்கடல் ராய.சொ., தெ.பொ.மீ. முதலான பெருமக்கள் கலந்து கொண்ட சிறப்பும் குறிப்பிடத்தக்கது. அன்று முதல் மாணிக்கனாரைத் தமிழ்ப்பெருமக்கள், "செம்மல் வ.சுப. மாணிக்கனார்" என்றே அழைத்து வருகின்றனர். எப்படி ஆசானுக்கு, சபை வழங்கிய பண்டிதமணி நிலைத்த பேராய் அமைந்ததோ அதுபோல மாணிக்கனார்க்கு செம்மல் நிலைத்த சிறப்பினை வழங்கும் பட்டமாய் அமைந்துள்ளது.

## தளர்ச்சி நீக்கிய பெருந்தகையாளர்

சபையின் வளர்ச்சியில் சிறு தளர்ச்சி ஏற்பட்ட காலத்தில் அதனை மாற்றி ஏற்றமுறச் செய்யவும் நிதி ஆதாரத்தைப் பெருக்கித்தரவும் மலேசியா சைகோன் நாடுகளுக்கு நன்கொடை பெற, திரு. பழ. சிதம்பரம் செட்டியார், திருமதி. சேதுக்கரசி ஆச்சி, மற்றும் செம்மல் மாணிக்கனார் மூவரும் அப்பயணத்தை **25.5.1962**இல் மேற்கொண்டனர். அப்பயணம் சபை வரலாற்றில் ஒரு இன்றியமையாத நிகழ்வாகும்.

அதனால் சபை, மேலும் வளர்ச்சியுறும் எனக் கருதியதால், "இவ்வண்ணம் சபைதன் பணிகளைத் தங்கு தடையின்றி மங்கலமாக என்றும் இயற்றிவர நிலையான மூலதனம் சேர்த்து வளம் செய்த திரு. பழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் டாக்டர். வ.சுப. மாணிக்கம் அவர்கள் ஆகியோருக்கு இச்சபை என்றும் நன்றிக்கடப்பாடு கொண்டதாகும். இவர்களுக்குச் சபையார் தமது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகின்றனர்" எனத் தீர்மானம் நிறைவேற்றி இதனைப் பதிவிட்டிருக்கின்றனர்.

இப்பயணத்தில் பெற்ற நன்கொடையில் பழ. சிதம்பரம் செட்டியார். மற்றும் செம்மல் மாணிக்கனார் இருவரின் பயணச்செலவு நீங்கலாக எஞ்சிய தொகை வ.சுப. மாணிக்கனாரின் எண்ணப்படி வைப்புத் தொகையாக வைக்கப்பெற்றது. அத்தொகை செம்மலின் பார்வையிலேயே இருந்து வந்தது. அவரது மறைவிற்குப் பின்னர் அவர்தம் குடும்பத்தார் சபையாரிடம் ஒப்படைத்த பாங்கு போற்றத்தக்கதாகும்.

அப்பயணத்தால் பெற்றுவந்த நன்கொடை ரூ. **91,185/-** ஆகும். இருவரின் பயணச்செலவு போக எஞ்சிய தொகை ரூ.76,000/- மூலதன வைப்பு நிதியாக வைக்கப்பெற்றதாக, சபையின் **54, 55, 56** ஆண்டுகளுக்கான ஆண்டறிக்கை குறிப்பிடுகிறது.

## மழலையர் பள்ளி

ஆங்கில வழிக் கல்வியில் பெற்றோர் ஆர்வம் காட்டி, தமிழ் வழிக் கல்வியைச் சீர்

குலைத்து வரும் நாளில் மனம் வருந்திய செம்மல் மாணிக்கனார். குழந்தைகளுக்கான மழலைக் கல்வியைச் சபையின் மூலம் தரம் வாய்ந்ததாக தமிழ் வழிக் கல்வியாய்த் தரக் கருதினார். அதுவே கணேசர் செந்தமிழ் மழலையர் பள்ளியாய் அமையக் காரணமாயும் அமைந்தது.

செம்மலின் செம்மாந்த நினைவுகளின்படி கணேசர் செந்தமிழ்க் கல்லூரி முதுகலைத் தமிழ்ப் படிப்புடன் உயராய்வு நிலையமாகவும் பரிணமித்து வருகிறது. பின்னாளில் வருவாய் மிக்க சுயநிதிப் பிரிவுகள் எம்.ஏ., பி.எஸ்.இ., பி.காம்., என வளர்வதற்கும் அடித்தளம் அமைத்த பெருமையும் அவரைச் சார்ந்ததாகும். நல்ல தரம் வாய்ந்த ஆசிரியர்களைத் தேர்வுக்குழுவில் தாமே இடம்பெற்றுத் தேர்ந்தெடுத்துப் பணியில் அமர்த்திய பாங்கும் சபையை வழி நடத்த நல்ல ஆக்கக் கருத்துக்களையும், தக்க அறிவுரைகளையும் வழங்கிய நேர்த்தியும் சபையின் நூற்றாண்டுத் தடத்தில் வரலாறு படைக்க உதவியுள்ளது என்பதனை நாம் ஆழச் சிந்தித்துப் போற்ற வேண்டும்.

இவ்வாறு தம் எண்ணக் கனவுகளை, சன்மார்க்க சபை என்னும் நிர்வாகத்தாருடன் இணைந்து வண்ணக் கலவையாய்த் தந்த பெருமைமிக்க செம்மல் மாணிக்கனார் புகழ் போற்றிப் பெருமைப்படுத்துவோம்.

## மாணிக்கச் சிந்தனைகள்

- **திருக்குறள் ஒரு மருந்துக்கடை. அவரவர் நோய்க்கேற்ப உரிய மருந்துகள் கடையில் உளவாதல்போல, திருக்குறளகத்தும் தம் வாழ்நிலைக்கேற்ப உரிய அறங்கள் உண்டு.**
- **உரிமை பெற்ற இந்தியாவின் தலைக்கடன் மக்கட்கு அறிவு வழங்குவது. அவரவர் தாய்மொழி வாயிலாகப் பல்துறையறிவும் நல்குவது.**
- **ஒருவன் வாழ்க்கை அவனைப் பொறுத்தது என்ற உண்மை அறைவது திருக்குறள்.**
- **அறிவின்றிச் செயலமையாது; செயலின்றிப் பயன் பிறவாது.**
- **தமிழ் நூல் அனைத்தும் பொருள் பற்றி வலியுறுத்தும் ஒருமுகக் கோட்பாடுகள் ஈதலும் துய்த்தலும் என்ற இரண்டு.**
- **மக்கட்பேற்றால் உலகம் நீடு வாழ்தல்போல் சங்க நூற்பேற்றால் நம் தமிழ்த்தாய் என்றும் வாழ்வாள்.**
- **குறள் நூல் சங்கக்குடிப்பிறப்பு உடையது. அது சங்கத் தமிழ்த்தாய் பெருநலத்தோடு ஈன்ற ஈற்றுக்குழவி.**
- **இற்றைக் கல்வி வேண்டி நிற்பது செம்மை, செம்மை, செம்மை.**
- **கல்வி என்பது பிறர் அறிவுத் தொகுதி; இறந்த கால நிகழ்காலக் கருத்துத் தொகுதி; அறிவு எனப்படுவது வருங்கால முன்னுணர்வு.**
- **குடும்பம் அன்புத்தொழில் நிலையம்.**
- **தன்குடி காக்கப் பிறர் குடி கெடுப்பவன் அறிவிலி; தன்குடியையும் காக்க மாட்டா தவன். ஏனைக் குடிகட்குத் தீமை செய்யாது தன்குடி பேணுபவன் இயல்பன்; தன் குடியோடு பிற குடிகளையும் காப்பவன் சான்றோன்.**

–‘வள்ளுவம்’



# எங்கள் அம்மான் மூதறிஞர் வ.சுப.மாணிக்கனார்

திரு. **ஆறு.கதிரேசன்**
மேலைச்சிவபுரி.

## இளமைப் பருவமும் குடும்பச் சூழலும்

புதுக்கோட்டை மாவட்டம் மேலைச்சிவபுரியில் 17.4.1917இல் வ.சுப.மா. அவதரித்தார்கள். அவருடன் உடன் பிறந்தவர்கள் நால்வர்; குல முதல்வன் அண்ணன் திருப்பதி செட்டியார், அருமைத் தம்பி சொக்கலிங்கம் செட்டியார், பாசமுள்ள சகோதரிகள் மீனாட்சிஆச்சி, மற்றும் சிட்டாள் ஆச்சி ஆகியோர் ஆவர்.

டாக்டர் வ.சுப.மா அவர்கள் தம் ஆறாம் வயதில், தன் தாய், தந்தையரை, இழந்தார். அண்ணன் திருப்பதி செட்டியாரின் அயரா உழைப்பினாலும், தம் தாய் வழிப் பெற்றோர்களாகிய அண்ணாமலை செட்டியார், அவர்தம் துணைவியார் அழகம்மை ஆச்சி ஆகியோரின் வளர்ப்பினாலும் வளர்ந்தார்கள். இதனை வ.சுப.மா. தனது தம்பி சொக்கலிங்கத்தின் திருமண நிகழ்வின்போது தனது பாச வரிகளால்,

"குழவியால் ஐவர் நம்மைக் குற்றமில் தந்தை தாயார்
அழுகையாய் உலகில் விட்டே அவனடி சேர்ந்த அந்நாள்" -

"தந்தைநல் எண்ணத்தாலும் தாய்தெய்வம் பிறந்தவீட்டுத்
தந்தை நல்லருளினாலுமத் தாயின்நற் காப்பினாலும்
இந்தமா வாழ்வைநாமும் இன்றுநாள் எய்தல்உற்றோம்"

என்றெல்லாம் நினைவு கூர்ந்துள்ளார். அதுமட்டுமன்றி அண்ணன் திருப்பதி செட்டியாரின்பால் கொண்ட பாசத்தால் 'வள்ளுவம்' என்ற நூலில் அவரின் உயர்வு மற்றும் உழைப்பினைச் சித்திரிக்கும் பாங்கு அளப்பரியது.

"எங்கள் குலமுதல்வன்; இல்லாண்மை ஏற்ற மகன்,
பொங்கல் மனை போல் பொலிவுடையன்; சங்கத்
தமிழனைய தூயன்; தனைமறந்த தொண்டன்;
கமழுஞ் குடிமைக்கோர் காட்டு"

தன் தாயாரின் பெற்றோரின் அரவணைப்பின் உயர்வினை, தான் எழுதிய ''மனைவியின்' உரிமை'' என்ற நூலில்,

"என்னை உடனைவர் ஏங்காதே வாழ்வளித்த
அன்னை முதல்வர் அடிபணிந்தோம்; பொன்னை
உறவினர் வாழ உவந்தளித்தார்; ஆயுள்
நிறைவினர் நின்ற நெறி.

எனவும் நன்றிப் பெருக்கோடு பகர்ந்துள்ளார்.

## தமிழ்மொழியின்மீது ஆர்வம்

வ.சுப.மா. அவர்கள் தமிழ்மொழியின்மீது கொண்ட பற்றால் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வித்துவான் வகுப்பில் மாணவராகச் சேர்ந்து தன் அயராத முயற்சியினாலும், உழைப்பினாலும், முதல் மாணவராகப் படித்துச் தேர்ச்சி பெற்றார். அப்போது ஆசிரியராக இருந்த மகிபாலன்பட்டி பண்டிதமணி கதிரேசன் செட்டியாரிடம் மாறாத அன்பும், பாசமும் கொண்டு, அவர் தம் அடிபணிந்து, அன்னாரின் வழிகாட்டுதலின்படி மேன்மேலும் பயின்று MA; B.O.L; M.O.L; Ph.D; போன்ற பட்டங்களைப் பெற்றுத் தேறினார். பின்னர் தாம் பயின்ற அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் முதலில் தமிழ் விரிவுரையாளராகச் சேர்ந்து தம் பணியைத் தொடங்கினார். அன்னாரின் ஆசான் பண்டிதமணியார் தொடர்ந்து அளித்த ஆக்கமும், ஊக்கமும், உதவியும், அம்மான் மா.வன்னா அவர்களை காரைக்குடி அழகப்பா கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராக உயர்த்தியது. தம் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவிய தம் ஆசான் பண்டிதமணியாரை நினைவுகூர்ந்து, தாம் காரைக்குடியில் கட்டிய இல்லத்திற்கு "கதிரகம்" எனப் பெயர் சூட்டி மகிழ்ந்தார்கள்.

## டாக்டர் வ.சுப. மா. வின் குடும்பம்

வ.சுப.மா.அவர்கள், தம் 28 -ஆவது வயதில் நெற்குப்பையில் பிறந்த ஏகம்மை ஆச்சியைத் திருமணம் செய்துகொண்டு இல்லறவாழ்க்கையை இனிதே நடத்தினார். வ.சுப. மா.வின் குழந்தைகள் அறுவராவர்; ஆண்மக்கள் மூவர்; பெண்மக்கள் மூவர். தாம் பெற்ற குழந்தைகள் அனைவரையும் தம்மைப்போல் வெவ்வேறு துறைகளில் பயில வைத்து, பட்ட மேற்படிப்புத் தேர்ச்சி பெற வைத்தார்கள். ஆறுபேரும் நல்முத்துக்களாய் இன்றும் ஒற்றுமை உணர்வுடன் வாழ்ந்துவருவது கண்கூடு. தம் தகப்பானரின் உயர்வினை மேன்மேலும் உலகறியச் செய்திட, இன்று நூற்றாண்டுவிழாக் கொண்டாடுகின்ற பாங்கினைக் கண்ணுறும் நானும் பெருமை கொள்கிறேன். நற்றமிழ் நாடும், நல்லறிஞர்களும் பெருமை கொள்கின்றனர்.

வ.சுப.மா.அவர்களின் துணைவியார் ஏகம்மை ஆச்சி அவர்கள், கணவரின் குறிக்கோள் மற்றும் நெறிமுறைகளை நன்கு உணர்ந்தவர்கள். அவர் தன் கணவரின் பணிக்கும் தொண்டுக்கும், இடையூறு ஏதும் இன்றி குடும்ப வருவாய்க்கு உட்பட்டு சிக்கனமாகக் குடும்பத்தை நடத்தியும் குழந்தைகளைப் பேணியும் காத்தார்கள். குடும்பத்தைக் கோவிலாக எண்ணிக் குறையேதுமின்றி இல்லறம் நடத்திய பாங்கினை அம்மான் அவர்கள் பாராட்டி மகிழ்ந்தார்கள்.

## ஒற்றுமையால் உயர்வு

வ.சுப.மா. அவர்களும், அவருடைய சகோதர, சகோதரிகளும் ஒற்றுமையாக வாழ்ந்து காட்டியவர்கள்; ஒருவருக்கொருவர் புரிந்து, தெரிந்து வாழ்ந்தவர்கள்; தம்முள் எந்தப் பிணக்கமும் இன்றி இணக்கமாய் இருந்தார்கள். ஒற்றுமையின் உயர்வு குறித்து, தன் தம்பி சொக்கலிங்கத்தின் திருமணநிகழ்வில் அறிவுரையாக வழங்கிய பாடல் வரிகள்:

"நன்றுநாம் வாழ வேண்டின்
நமக்குள்ளே ஒருமை வேண்டும்




ஒன்றுதாய் வயிற்று மக்கள்
ஒற்றுமைக் குறைவா லன்றோ
வென்று வாழ்பெருமை யின்றி
விலங்கின மாக்கள் ஆனார்."

## வ.சுப.மா.வின் குறிக்கோளும் முன்னேற்றமும்

*டாக்டர் வ.சுப.மா. அவர்கள் தமக்கெனச் சில குறிக்கோள்களை அமைத்துக்கொண்டு, சிறிதும் வழுவாது வாழ்ந்து காட்டினார்கள்.*

"குறிக்கோள் இல்லாத வாழ்வு
கோடுகள் இல்லாத ஆட்டம்"

*எனக் குறிப்பிடுவார்கள். தன் வாழ்நாள் முழுதும் சிக்கனமாகவும், எளிமையாகவும் வாழ்ந்தார்கள். அளவான பேச்சும், எண்ணத்தில் தூய்மையும், தன்னை உணர்ந்து திருந்திய சிந்தனையும், பகட்டில்லா இறைவழிபாடு செய்தும் வாழ்ந்தார்கள். மேலும், தமிழ் கற்றலுக்குத் தொல்காப்பியத்தையும், வாழ்வின் தூய்மைக்குத் திருவாசகத்தையும் தனக்கு வழிகாட்டியாக அமைத்துக்கொண்டு வாழ்ந்தார்கள். வ.சுப.மா. அவர்கள் மிகச் சிறந்த ஆராய்ச்சியாளர். தன்னுடைய கொள்கை, கோட்பாடுகள், நெறிமுறைகளில் இருந்து சிறிதும் வழுவாமல் நூல்களைப் படைத்து, தன் கருத்துக்களை, எண்ணங்களைத் தொகுத்தவர்கள். தான் எழுதிய கருத்துக்களின் ஆழத்தையும், தெளிவையும், தகுந்த ஆதாரங்களின் அடிப்படையில், உறுதியாக அறுதியிட்டுச் சொல்வார்கள். எதிர்ப்புகளைக் கண்டு அஞ்சாமல் தன் கருத்தை ஆணித்தரமாக, அழுத்தம் திருத்தமாகச் சொல்வார்கள். எதிர்காலச் சந்ததியினர் தமிழ்மொழி ஆராய்ச்சிகளில் ஈடுபடுங்கால் தன் கருத்துக்களை, தொடர்ந்து பயன்படுத்தும்படியாக எழுதியதால் இன்றும், என்றும், அவர்தம் நூல்கள் ஏற்றம் பெற்றுள்ளன என்றால் அது மிகை ஆகாது.*

*மேலைச்சிவபுரியில் சன்மார்க்க சபையின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைநின்று வழிகாட்டினார்கள்; சன்மார்க்க சபையினரால் செம்மல் என்ற உயர் பட்டம் பெற்றுப் பாராட்டப் பெற்றார்கள்; தான் பிறந்த மண்ணில் இயங்கிய அரசினர் உயர்நிலைப் பள்ளியில் +2 வகுப்புத் தொடங்கிட வழிவகுத்தார்கள்; இன்று மேலைச்சிவபுரியில் ஆரம்பப்பள்ளி முதல் கல்லூரிப் படிப்பு வரை படிக்கும் வாய்ப்பை ஏற்படுத்தித் தந்துள்ளார்கள்.*

*கல்வி வளர்ச்சிக்கு அள்ளிக் கொடுத்த வள்ளல்கள் தமிழ்மொழி வளர்ச்சிக்குத் துணையிருந்த அறிஞர்கள் பாராட்டிய டாக்டர் வ.சுப.மா. கல்வி வளர்ச்சிக்காக அள்ளிக் கொடுத்த வள்ளல்களையும், தமிழ் வளர துணை நின்ற அறிவு சார்ந்த அறிஞர்களையும், மறக்காமல் தம் பாடல்கள் வாயிலாக இவ்வுலகிற்குத் தந்துள்ளார்கள். சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தைத் தோற்றுவித்த ராஜா சர் அண்ணாமலை செட்டியாரைப் பாராட்டும் முகத்தான்,*

குனித்தவடி நடம்பயிலும் தில்லை மண்ணில்
கோதற்ற தமிழ்நடமும் காண வேண்டித்

தனித்தபெருங் கொடைமழையால் கழகம் கண்டான்;
தமிழ் மன்னன் என்ற பெரும் புகழும் கொண்டான்;

*என்று தன் நூலில் நினைவு கூர்ந்துள்ளார்கள்.*

*காரைக்குடி அழகப்பா கல்லூரியைத் தோற்றுவித்த வள்ளல் அழகப்பா செட்டியாரின் கொடைத் தன்மையை,*

காரைக் குடியெல்லாம் கல்விப் பயிர் வளரக்
கூரைக் குடியெல்லாம் கூனிமிர - நீரைப்
புழங்கினா லென்னப் பொருட்செல்வ மெல்லாம்
வழங்கினான் வாழ்க வழி.

கோடி கொடுத்த கொடைஞன்; குடியிருந்த
வீடுங் கொடுத்த விழுச் செல்வன்; - தேடியும்
அள்ளிக் கொடுத்த அழகன்; அறிவூட்டும்
வெள்ளி விளக்கே விளக்கு.

*என்று தாம் எழுதிய "கொடை விளக்கு" என்ற நூலில் பாராட்டியுள்ளார்.*

*அறிஞர் மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்கள் தமது தள்ளாத வயதிலும் பட்டி தொட்டியெல்லாம் அலைந்து, திரிந்து, பழைமையான தமிழ்ச் சுவடிகளைச் சேகரித்துத் தமிழ்மொழியை அரியணை ஏற்றித் தந்த பாங்கினை,*

பார்காத்தார் ஆயிரம்பேர்; பசித்தார்க் காகப்
பயிர்காத்தார் ஆயிரம்பேர்; பாலர்க் காக
மார்காத்தார் ஆயிரம்பேர்; வாழ்ந்த நாட்டில்
மானங்காத்த தமிழ்த்தாய் 'என் உடைமையெல்லாம்
யார் காத்தார்' எனக் கேட்க ஒருவன் 'அம்மா
யான் காப்பேன்' எனவெழுந்தான் சாமி நாதன்!

*எனப் பாராட்டினார்.*

*தமிழ்நாட்டில் மைய அரசியலார் இந்திமொழியை வலுக்கட்டாயமாக திணிக்க முயன்றகாலை முத்தமிழ் அறிஞர். கி.ஆ.பெ.விசுவநாதன் அவர்களைத் தளபதியான நினைந்து,*

இந்திப் பகைஞன் எழுபத்தைத் தாண்டினன்
முந்தி இனங்காக்கும் முத்தமிழன் - பிந்தி
வருதமிழர் நெஞ்சில் வரலாறு தீட்டும்
திருவிசுவ நாதன் சிறப்பு

*- எனப் பொங்கி எழுந்த பெருந்தகைக்குப் புகழ்மாலை சூட்டினார்.*

*அறிஞர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார் செந்தமிழைச் சீராட்டி, பாராட்டி, வாழ்த்தியமையை,*

என்றும் தமிழுக் கினியானை நூல் நிலைய
மன்றுள் நடமாடும் மாணவனை - நன்றும்
பல்கலைதேர் வண்டானைப் பாடியக்கால் நாமும்
சில்கலைதேர் வண்டாவோம் சென்று

*எனப் பாராட்டி மகிழ்ந்தார்.*

*தாம் வடித்த நூல்களின் வாயிலாக தமிழ்மொழி ஏற்றத்திற்கும், தமிழர்தம் வாழ்வின் உயர்விற்கும் அயராது பாடுபட்ட நல்லறிஞர், மூதறிஞர், செம்மல் டாக்டர் வ.சுப. மாணிக்கனார். தேமதுரத் தமிழோசை தெருவெல்லாம் முழங்கிடச் செய்தார். உடல் மண்ணுக்கு, உயிர் தமிழுக்கு என வாழ்வாங்கு வாழ்ந்த அன்னார் தமிழ்ப்பணி ஆற்றச் சென்றபோது பாண்டிச்சேரி மண்ணில் தம் இன்னுயிரை ஈந்து 25.4.1989 ஆம் நாள், இம் மண்ணுலகம் விட்டு மறைந்தார்கள். அன்னாரின் மறைவு தாங்க முடியாத பேரிழப்பாகும்.*

*அன்னார் வடித்த நூல்களும், அவர் தம் சொல்லாற்றலும் இன்றும் என்றும் நிலைத்திருக்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.*

*வாழ்க தமிழ்; வளர்க வ.சுப.மா. வின் புகழ்.*



## தமிழ்ச்சுடர் வ. சுப. மா.

***பழமை நேசனாகவும் புதுமை விரும்பியாகவும் வாழ்ந்து, தமிழ் மொழியின் அகல, நீள, ஆழங்களை அளக்க முயல்வதிலும் தான் கண்டெடுத்த இரத்தினங்களை வரையாது வழங்குவதிலும் வாழ்க்கையைச் செலவழித்த - இல்லை- சம்பாதித்துக் கொண்ட வள்ளல். புதுப்புதுத் தொடர்களைக் கோத்து ஒளிசிந்திய தமிழ்ச்சுடர்.***

குமுதம் வாரஇதழ்



# தமிழ்த்துணைவேந்தர்

திரு. **ஆர்.ஆர்.சத்தியமூர்த்தி**
துணைவேந்தர்தம் நேர்முக உதவியாளர்,
காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

## முன்னுரை

*மதுரை காமராசர் பல்கலைக் கழகத்துத் தமிழ்த் துணைவேந்தருள் ஒருவர் மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார். அவர், துணைவேந்தராக இருந்தபோது, நேர்முக உதவியாளர் என்ற முறையில், நானறிந்த சில செய்திகள் இக்கட்டுரையில் தரப்படுகின்றன.*

## துணைவேந்தர் பொறுப்பு

*முனைவர் திரு. வா. செ. குழந்தைசாமி அவர்கட்குப் பின், 1979 ஆகஸ்ட் முதல் 1982 சூன் திங்கள் வரை, வ.சுப.மா. துணைவேந்தர் பொறுப்பேற்றிருந்தார். சாதாரண வெள்ளை அரைக்கைச் சட்டை, வேட்டி, தோளில் துண்டுடன் மிக எளிய முறையில், துணைவேந்தர் இல்லத்திற்குள் நுழைந்தபோது ஆசிரியர், அலுவலர், மாணவர், பொதுமக்கள் எனப் பலரும் வாழ்த்துக் கூறினர் இவரது தோற்றத்தைக் கண்டு பலரும், "இத்தகைய பெரிய பல்கலைக்கழகத்தை இவரால் எப்படிக் கொண்டு செலுத்த முடியும்?" என்றே மனதில் நினைத்தனர்.*

*பொறுப்பேற்ற முதல் ஐந்து நாட்களில், எத்தகைய கோப்புகள், கோரிக்கைகள், விண்ணப்பங்கள் வருகின்றன எனக் கண்டு கொண்டார். அடுத்த பத்து நாட்களில் அனைத்தும் அறிந்து கொண்டு, பதிவாளர் துணையுடன் கோப்புகளில் ஆணையிடத் தொடங்கி விட்டார்! நாளும் செய்ய வேண்டியவற்றைத் தம் கையேட்டில் குறித்துக் கொண்டு எவர் உதவியுமின்றித் தாமாகவே முடிவு எடுத்துக் கூறும் திறன் பெற்றார்! கையேட்டில் குறித்தவாறு செயல்கள் முறையாக நடைபெறுகின்றனவா என்றும் கண்காணிப்பார். இதனால், அலுவலகம் சுறுசுறுப்பாக இயங்கலாயிற்று!*

## ஆக்கப் பணிகள்

*பல்கலைக்கழக வளர்ச்சியில் எப்போதும் நாட்டமுடையவர். அதனால், கல்லூரி அல்லது பொது நிகழ்ச்சிகளுக்குச் செல்வதை நிறுத்திக்கொள்வார். மடலோ, கோப்போ எதுவாயினும், நன்றாகப் படித்துப் பார்த்தபின்பே கையெழுத்திடுவார். முடிந்தால், உயர் அலுவலர்களிடமும் கலந்து சிந்திப்பார். பொதுமக்கட்கும் மாணவர்கட்கும் பயன்படும்படியாகவே எல்லாச் செயல்களும் அமைய வேண்டும் என்பார். ஒரு காசு செலவு செய்வதானாலும் அதனால் விளையும் பயனைத்தான் எண்ணுவார். தமது சொந்த வாழ்க்கையானாலும், பல்கலைக்கழகம் ஆனாலும், வசதிகளைப் பெருக்கிக் கொள்ளலாகாது என்பார். 'கல்விப் பணி' ஒன்றே நோக்கமாகக் கொண்டிருந்தார். பல வழிகளிலும் வரவு*



செலவுக் கணக்குப் பார்ப்பார். இவர்காலத்தில் அஞ்சல் வழிக் கல்வியில் பெருந் தொகை மிச்சப்படுத்தப்பட்டது! தரம் பார்த்தே படிப்புக்கும் ஆராய்ச்சிக்கும் மாணவர்களைச் சேர்க்க வேண்டும் என்பார். பெரிய இடங்களிலிருந்து வரும் பரிந்துரைகளுக்குச் செவிசாய்க்க மாட்டார். உரிய மதிப்பெண்கள் இருப்பின் சேர்க்கைக்கு இசைவு தருவார்!

*5*ஆவது உலகத் தமிழ் மாநாடு ***4.1.1981*** இல் தொடங்கியது. உலகத் தமிழ் மாநாட்டை மதுரையில் நடத்த வேண்டுமென்ற எண்ணத்தைத் தமிழக முதல்வருக்கு ஏற்படுத்தியவரும் துணைவேந்தரேயாவார்! மதுரைத் தமுக்கம் அரங்கில் தமிழ் வரலாறு, தமிழனின் வளர்ச்சி, மூதாதையர் வரலாறு மற்றும் இலக்கியச்செய்திகள் இவற்றைப் படங்கள், உருவங்கள் வாயிலாக வெளிப்படுத்தப் பெரியதொரு கண்காட்சி அமையத் தம் முழு ஆற்றலையும் செலவழித்தார் துணைவேந்தர்! இத்துணைப் பெரிய மாநாடு நடந்தாலும் பல்கலைக் கழக அலுவல்கள் வழக்கம்போல் நடைபெறச் செய்தார்! மாநாடு முடிந்தவுடன், தமிழ்ப்பல்கலைக்கழகம் அமைய, அரசு எடுத்த முயற்சிகளுக்குத் தாமே உருக்கொடுத்து, அதன் அமைப்புக் குழுவுக்கும் தலைமை ஏற்றுச் சிறப்புப் பணிகளாற்றினார். அதன் விளைவே, இன்று தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத் தோற்றம் எனலாம்!

## போராட்டம்

மூதறிஞர் வ.சுப. மா. தம் காலத்தில் மிகப்பெரிய போராட்டத்தைச் சந்திக்க நேர்ந்தது. மாணவர்கள், ஆசிரியர்கள், அலுவலர்கள் எனும் மூவகையினரும் ஒன்றுசேர்ந்து, பல கோரிக்கைகளை முன்வைத்துத் தொழிலாளர் போராட்டம்போல நடத்தினர். கோரிக்கை, நிதித்தொடர்பாக இருந்தமையால், துணைவேந்தர், அதனை ஏற்க இசையாததால் போராட்டம் வலுத்தது; ஆசிரியரும் அலுவலரும் சிறைக்குச் செல்லவும் நேர்ந்தது! பல்கலைக்கழகம் மூடப்பட்டது! பின்னர் அமைச்சர் துணைவேந்தர் ஆட்சிக்குழுவினரும் ஆகியோருடன் போராட்டக் குழுவினர் நடத்திய பேச்சுவார்த்தையால் நல்லதொரு முடிவு ஏற்பட்டது; அனைவரும் சிறை வீடு பெற்றனர்.

## பண்பு நலன்கள்

இப்போராட்டத்தால் துணைவேந்தர், மனக்கசப்பும் காழ்ப்புணர்ச்சியும் கொள்வார் என்றே பலரும் கருதினர். ஆனால் அவரோ, எதுவுமே நிகழாததுபோல, என்றைக்கும் போல அனைவரிடமும் நடந்துகொண்டார். அஃது அவரது சீரிய பண்பு எனலாம். சிறையில் இருந்து விடுபட்டாலும், அவர்கள் மீது பதிவாகியிருந்த வழக்கு விடுபடவில்லை. அதற்கும் துணைவேந்தரே பொறுப்பேற்று, அரசுக்கு எழுதி, வழக்கினைத் திரும்பப் பெறவும் ஏற்பாடு செய்த பெருந்தகைமையினை யாரும் மறக்கஇயலாது. சம்பள விகிதம், பதவியேற்றம், பணி நிலையாக்கல், மருத்துவப்படி உயர்வு போன்ற பல செயல்களை நிறைவேற்றினார் துணைவேந்தர்!

## புதிய துறைகளும் தொண்டும்

வ.சுப. மா. காலத்தில், பல்கலைக்கழகத்தில் பல புதிய துறைகள் உருவாக்கப்பட்டன. அவற்றில் குறிப்பிடத்தக்கவை ஆள்வினைத்துறை (M.B.A.) மொழியியல் துறை, தமிழியற்

புலம், வணிகவியல் துறை, வடமொழியியல் எம்.ஃபில், உலகத் தமிழ்ப்பணி, பதிப்புத்துறை அஞ்சல் வழிக்கல்வித் துறையில் ஆய்வுப்பணி ஆகியவை.

பண்டிதமணி அரங்கு நிறுவினார்; நுழைவாயிலில் கலைவாயில் உருவாக்கினார்; தெ.பொ.மீ.யின் சிலை நிறுவ ஆயத்தம் செய்தார்; ஐந்தமிழ் நிகழ்ச்சிகளை ஒருமுகப்படுத்தினார். முதன்முதலாக ஆசிரியர்கள் -அலுவலர்கட்கு வீடுகட்டக் கடன் வழங்கும் திட்டத்தைக் கொண்டு வந்தார்!

**தமிழ்ப்பற்று**

எல்லாவற்றுக்கும் மேலாக இவர்பால் அமைந்த தமிழ்ப் பற்றுக்கு எல்லையே இல்லை எனலாம். இவர், தாம் பதவி பெற்ற பின் நடந்த முதல் பேரவைக்கூட்டத்திலேயே (Senate) 'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' என்று முழங்கினார். 'தமிழ் ஓர் அறிவியல் மொழியாக வர வேண்டும்' என்றார். 'தமிழில் எதுவும் முடியும்' என்பது மெய்ப்பிக்கப்பட வேண்டும்' என்றார்! 'அனைத்துக் கோப்புக் குறிப்புகளும் தமிழிலேயே இருக்க வேண்டும்; தமிழில்தான் கையொப்பமிட வேண்டும்' என்று ஆணை பிறப்பித்தார். மழலையர் பள்ளிகளில் ஆங்கிலப் பயிற்சியை அறவே வெறுத்தார். அது குறித்து அரசுக்கும் வேண்டுகோள் விடுத்தார்! 1980 ஆம் ஆண்டில் அண்ணாமலைப் பல்கலைக்கழகம், இவருக்கு 'மதிப்புறு முனைவர்' பட்டம் வழங்கிப் பெருமைப்படுத்தியது!

எப்போதும் கல்வி கற்கும் மாணவனாகவே இருந்து வந்தார். தான் படித்து அறிந்தது தமிழ், அதன் இலக்கணம், இலக்கியம் மட்டுமே என்பதால், பல்நோக்கு வளர்ச்சியையும் துறைகளையும் கொண்ட பல்கலைக்கழகத்தின் வளர்ச்சிக்கும் தம்மால் முயன்றதை யெல்லாம் செய்ய முயன்று வெற்றி கண்டார். பதவியில் அமர்ந்த சில நாட்கள் தமிழிலேயே உரையாற்றிவந்தார். அறிவியல், பொருளியல், ஆற்றல் சக்தி, கணிதவியல் போன்ற துறைகளில் உரையாற்றுவதற்குத் தன்னைத் தயார்ப்படுத்திக்கொள்ளத் தினமும் அதிகாலை முதலே துறைகள் சேர்ந்த அருஞ்சொற்கள் மற்றும் கலைச்சொற்களைப் பிழையற எழுதவும் உச்சரிக்கவும் அறிந்து அவைகளை அன்றாட வழக்கில் உபயோகிக்கும் அளவிற்குத் தம்திறனை வளர்த்துக்கொண்டார். நாட்குறிப்புப்புத்தகங்களில் குறிப்புகள் எழுதி அவற்றை மேன்மேலும் படித்து அறிந்து உபயோகத்திற்குக் கொண்டு சென்றார். அனைத்துக்கூட்டங்களிலும் ஆங்கிலத்தில் நேர்த்தியாக உரையாற்றுவதிலும் எழுதுவதிலும் வல்லவரானார். அவரது அந்த ஆவல் ஆற்றல் வியக்கத்தக்கதாகும்.

சிறு குழந்தைகள் இரண்டு வயது முதலே தமிழ்மொழி கற்க வேண்டுமென்ற ஆர்வ மிகுதியில், அஞ்சல்வழிக் கல்வித்துறைமூலம் ஒரு தமிழ்த்துறைப் பேராசிரியரை நியமித்து "குழந்தைத்தமிழ்" அடங்கிய இரண்டு ஒலிநாடாக்களை வெளியிடச் செய்தார். 'அறிமுகத்தமிழ்', 'ஆத்திசூடி', 'ஔவையார் பாடல்கள்' முதல் இலக்கியத்தமிழ் வரை எளிய வரிகளில்/வாத்தைகளில் இசையுடன் ஒலிநாடாக்கள் தயாராயின. அந்தத் திட்டம் பின்வரும் நாட்களில் தொடர இயலவில்லை.

வளாகத்தில் பற்பல கட்டிடங்கள் கட்டப்பட்டன. 'அனைத்துக் கட்டிடங்களுக்கிடையே சிமெண்ட் தரை அமைக்காமல் மணல் தரையாக இருக்கவேண்டும்' என்றார். காரணம்,




'மழைநீரை மணல் தரை வெகு எளிதில் உள்வாங்கும்; அதனால் நிலத்தடி நீர்மட்டம் உயரும்; நகரத்தார் வாழும் காரைக்குடி, கானாடுகாத்தான் போன்ற சிவகங்கை மாவட்டத்திலுள்ள ஊர்களில் அவ்வாறு வீடுகள் கட்டப்படுகின்றன. இது மழைநீர் சேமிப்பின் வகையாக அமைந்து, வளாகத்தில் நீர்ப்பற்றாக்குறையை நீக்கலாம்' என்றார்.

காலந்தவறாமை, உண்மையைக்கடைபிடித்தல், தம்மைச் சுற்றியிருக்கும் வளாகம் அல்லது இருப்பிடம் தூய்மையாக இருத்தல் போன்றவற்றுள் இவர் சமரசம் செய்து கொண்டது இல்லை.

ஒருவருக்கு உள்ள தகுதிக்கேற்ப, அவர்களுக்கு கல்லூரி இடச்சேர்க்கை மற்றும் பதவி/ பதவி உயர்வு போன்ற நலன்கள் வழங்குவதில் தவறுவதில்லை. சிபாரிசுகளைக் கிஞ்சித்தும் செவிமடுப்பதில்லை. தன் தகுதியை உயர்ந்ததாக்கக் கருதி ஒவ்வொருவரும் அயராது உழைக்க வேண்டும் என்பது தான் அவரது கொள்கை.

கல்லூரி மற்றும் பல்கலைக்கழகத்துறைகளில் மாணவர்களும் ஆசிரியர்களும் தெரிவித்துவரும் சிக்கல்களை அவ்வப்போது களையுமாறு துறைத்தலைவர்களிடமும் கல்லூரி முதல்வர்களிடமும் தெரிவித்துவிடுவார்.

மேலாண்மையும் உண்மையும் மிக்க அவர் கண்ணியக் குறையேதுமின்றி ஆட்சிக்குழு, கல்விப் பேரவை மற்றும் ஆட்சிப் பேரவையை நடத்திச் சென்றதோடு உறுப்பினர்களிடையே பணிகளைப் பங்கிட்டுத் தருவதில் ஒரு நெறியைக் கொண்டார். என்ன செய்தியோ விவாதமோ குறிப்பிட்ட நேரத்தில் சுருக்கமாக, ஆனால் தெளிவாகப் பேசி முடிக்க வேண்டும் என்பார். குறிப்பிட்டவர்களே பேச முடியும் என்ற நிலையை மாற்றி அனைவரும் பேச வாய்ப்பினை நல்குவார். போலி மற்றும் வறட்டுக் கௌரவமின்றி உள்ளத்தை உள்ளபடி உண்மையைத் துணிச்சலுடன் தெரிவிப்பதில் எவ்விதத் தயக்கமின்றிப் பொறுமையாக விளக்கிச் சொல்வதில் திறமையானவர்.

பல்கலைக்கழகத்தில் முக்கியமான பணி ஆய்வு என்பதாகும். பல்வேறு நிதி வழங்கும் நிறுவனங்களிலிருந்து நிதி பெற்று, பல துறைகள் ஆய்வுகள் செய்து வருகின்றன. இவ்வாறு ஆய்வு செய்வதைத் தொடர்ந்து, பல்கலைக்கழகம் மூலமாக சிறு நிதி உதவியால் பல்துறையைச் சேர்ந்த விரிவுரையாளர்கள் மற்றும் ஆய்வு மாணவர்கள் பல்வேறு ஆராய்ச்சித் திட்டங்களைச் செயல்படுத்த முடியும் என்ற நம்பிக்கையில் பல்கலைக்கழக வரவு-செலவுத் திட்டத்தில் அதற்கென நிதி ஒதுக்கீடு செய்து ஆய்வுகள் மேம்படச் செய்தார். அதுபோலவே ஆய்வுக்கான நிதி கேட்டுப் பல நிறுவனங்களுக்கு தத்தம் துறையைச் சார்ந்த ஆய்வுப்பணிக்கான வரைவுகளை ஆசிரியர்கள் அனுப்ப வகை செய்தார்.

தனியாகத் தமிழ்த்துறை இருப்பினும் "School of Tamilology" எனும் ஒரு புதிய துறையைத் தொடங்கினார். ஓய்வு பெற்ற தமிழ் ஆசிரியர்களுக்குத் தொகுப்பூதியம் வழங்கி அவரவர் தகுதிக்கேற்பச் சிறப்பான தலைப்புகளில் ஆய்வு நடத்த வழி செய்தார்.

## ஐந்தமிழ் விழா

பல்கலைக்கழகப் பணிக்காக வெளியூர் செல்கையில் தான் செய்யும் செலவுகளை மிகச் சொற்பமாகவே வைத்துக்கொள்வார். செலவைக்காட்டிலும் பல்கலைக்கழத்திலிருந்து பயணப்படி அதிகமாக இருந்தாலும் தன் செலவுக்குக் கொடுத்தால் சரியென்பார். பலமுறை அப்படித்தான் நிகழ்ந்துள்ளது. தான் செய்த செலவு மற்றும் கார் வாடகை, மற்றும் விடுதி வாடகை பற்றிய குறிப்புகளை வழங்கிவிடுவார்.

ஒருமுறை சென்னையில் நடைபெற வேண்டிய கூட்டத்திற்கு நானும் உடன் சென்றிருந்தேன். அங்குள்ள விடுதிக்காப்பகம் பகல் 12 மணிக்கு Check Out போலும். காலையில் அங்கே தங்கினால் இரண்டு நாள் வாடகை கொடுக்க நேரிடும் என, பகல் 12 மணி வரை விடுதி வராண்டாவில் கைப்பை மற்றும் உடைமைகளை வைத்து பத்திரிகையைப் படித்துக் காத்திருந்தார். பல்கலைக்கழகம் ஏற்றுக்கொள்வதாயினும் செலவு அதிகமாகக் கூடாது எனச் சொல்லிவிட்டார். கூட்டம் பிற்பகலில் வைத்துக்கொள்ளலாம் என்றும் சொல்லி அவ்வாறே நடத்தினார்.

அலுவலர்களுக்கென மேசை, நாற்காலி, மரச் சாமான்கள், இரும்புச் சாமான்கள் போன்றவைகளை வாங்குவதில் மிக உன்னிப்பாக இருப்பார். விலை ஒத்துவருமா, பொருட்கள் நீடித்து உழைக்குமா என்பதைக் கருதிப் பார்ப்பார். விலை நிர்ணயிப்பதில் மிக விரைவில் சமரசம் செய்து கொள்ளமாட்டார்.

"எல்லா ஒளியும் ஒளியல்ல சான்றோர்க்கு
உண்மை ஒளியே ஒளி."

என்று அவர் எழுதிய குறளே அவரது குணாதிசயத்திற்கு எடுத்துக்காட்டு. கோப்புகளில் உத்தரவு இடுவதிலும் ஒரு பாங்கு வைத்திருந்தார். ஒரே மாதியான கோரிக்கை வெவ்வேறு கோப்புகளில் அவரது உத்தரவு வேண்டுவதாக இருப்பின் ஒரே உத்தரவுதான் இடுவார். சில அதிகாரிகள் நினைவில்லாமல் ஒரு கோப்பில் சரியெனவும் மற்றொரு கோப்பில் ஒப்புதல் இல்லையெனவும் கையெழுத்திடுவார். ஆனால் இவரது ஒப்புதல்கள் நீதிமன்ற ஆணை போன்றிருக்கும். அவற்றை வேறு சிந்தனையுடன் மாற்றவோ மறுதலிக்கவோ முடியாது. எஞ்ஞான்றும்அப்படியே பிறருக்கு உதவுவதாகவும் அமையும்.

பதவியேற்ற ஒரு சில வாரங்களில் சில கோப்புகளில் அவரது உத்திரவிற்கான பதிலே மறுப்போ தெரிவிக்கும் வகையில் அவரது கையொப்பம் இல்லாமல் அப்படியே திரும்பவரும். அவற்றைப் பின்னர் அவரது பார்வைக்குக் கொண்டு சென்று கேட்டால், அவர் புன்முறுவலிட்டு 'என் கையொப்பம் இருக்கவேண்டிய இடத்தில் ஒரு பெரிய புள்ளி வைத்திருப்பேன், பார்த்தீர்களா?' என வினவுவார். அவ்வாறு புள்ளி வைத்த கோப்புகள் அலுவலகத்தின் புரிதல் அல்லது விளக்கம் தேவையென்பதுதான் அந்த புள்ளியில் நோக்கம் என்பார். அது வழக்கத்திற்கு வந்தபின் தினமும் அவ்வாறான கோப்புகளை எனது அல்லது பிற அலுவலர் அல்லது அதிகாரிகளின் விளக்கத்திற்குப் பின்னர் அவர் உத்தரவு இடுவார்.

அவர் ஏற்கெனவே ஒரு கல்லூரி முதல்வராகப் பணி செய்திருந்தமையால் கல்லூரி/



மற்றும் பல்கலைக்கழக நிர்வாகம் பற்றியும் தேர்வு நடைமுறைகளையும் அறிந்திருந்தமையால் அலுவர்களிடம் கேள்விகள் தொடுத்து, சரியான தீர்ப்பு வழங்குவதற்கான நெறியை வளர்த்தார் எனலாம்.

அவரது அலுவலகத்தில் தன் கடமையைத் தவிர, வீண் பேச்சோ, அரட்டையையோ பார்க்கமுடியாது. நெட்டி முறித்தலோ கொட்டாவி விடுவதோ இன்றி எப்போதும் சுறுசுறுப்பாகவே தன் பணிகளைச் செய்துகொண்டிருப்பார். அவரது தமிழ், ஆங்கில எழுத்து அச்சுக்கோத்தாற்போல மணிமணியாக இருப்பதுடன் தமிழ்ச்சொற்கள் ஒன்றோடொன்று பின்னிப்பிணைந்து சேர்ந்தே இருக்கும். எழுத்து இலக்கணம் அதில் காண முடியும். அடித்தல் திருத்தல் இல்லாது அவரது வாக்கியங்கள் இருக்கும். அரசுக்கு எழுத வேண்டிய சில கடிதங்களை அவரே தமிழில் மிக அழகாக எழுதிக் கொடுப்பார். ஏன்? பல்கலைக்கழத்தில் வகுப்புச் சேர்க்கை தேர்வு போன்ற சிலபல விண்ணப்பப் படிவங்களும் அவரது எழுத்துக்கள் திருத்தங்கள் அடங்கியதாகவே இருக்கும். அவர் காலத்து அலுவலகத் தமிழ் மிகச் சிறப்பாக அமையக் காணலாம்.

அலுவலக நேரம் முடியும் தறுவாயில் அவர் இன்னமும் அலுவலகத்தில் இருக்க நேர்ந்தால், தன் உதவியாளர்கள், மற்றும் கடைநிலைப் பணியாளர்கள், ஏன், கார் டிரைவர் உட்பட அனைவரையும் விடைபெற்றுச் செல்ல உத்தரவிடுவார். "கார் எப்போதும் இருக்குமா? கார் இல்லாது நடந்தே இல்லம் செல்வேன்" என்பார். அவ்வளவு எளிமை.

இராமாயணம், மகாபாரதம், சிலப்பதிகாரம், அகநானூறு, புறநானூறு மற்றும் திருக்குறள் ஆகிய நூல்களிலிருந்து சிந்தனையைத் தூண்டும் பல செய்திகளைச் சொல்லி அவைகளிலிருந்து கேட்பவர் அறிந்துகொள்ளப் பல நகைச்சுவை கலந்த சிறு கதைகளையும் கூறுவதுண்டு.

இவர் தம் பதவியிலிருந்து விடுவிக்கப்பட்டது ஒரு விந்தையான அனுபவம். இவரது பணிக் காலம் 1982 ஆகஸ்டுத் திங்கள் முடிவுறுவதாக இருந்தது. 30.6.1982- ஆம் நாள் சென்னை (Directerate of Technical Education) தொழில் நுட்பக் கல்லூரி இயக்குநரகத்தில் பல்கலைக் கழக ஆட்சிக்குழு நடைபெற்றது. பின்னர் தமிழக ஆளுநர் அலுவலகத்திற்குச் சென்று ஆளுநரின் செயலரைப் பார்த்தபோதுதான், துணைவேந்தர் அவர்கள் அன்றே பணியிலிருந்து விடுவிக்கப்படுகிறார் எனும் அதிர்ச்சிச் செய்தி நமக்குத் தெரிந்தது. அதாவது பல்கலைக்கழகக் கல்வியாண்டு சூலைத் திங்கள் முதல் தொடங்கவிருப்பதால் புதிய வரவு-செலவுத் திட்டங்கள், புதிய நியமனங்கள் போன்ற முக்கிய முடிவுகள் தனக்குப் பின்வரும் புதிய துணைவேந்தர்தான் செய்யவேண்டும்; தாமே ஆகஸ்டுத் திங்களுக்குள் செய்வது உகந்ததல்ல எனும் நல்லெண்ணம் அவரை ராஜினாமா செய்யத் தூண்டியுள்ளது என்பது தெரியவந்தது. பதவிக்காலம் முடிய மூன்று திங்களேயிருந்த நிலையில் மாநில ஆளுநர், அதாவது பல்கலைக்கழகத்தின் வேந்தர் அவர்களுக்கு சூன் திங்கள் இறுதியில் தன்னை விடுவிக்குமாறு மே திங்களில் தன்னிச்சையாக யாரிடமும் கலந்து ஆலோசிக்காமலும் தெரிவிக்காமலும் கடிதம் ஒன்றை எழுதியுள்ளார்.

தமிழ்த் துணைவேந்தராகப் பணியாற்றிய டாக்டர் வ.சுப. மா அவர்களோடு பணிபுரிந்த அந்த மூன்றாண்டுகள் ஒரு தந்தையுடன் பணியாற்றிய சிறந்த அனுபவமாக எனக்கு அமைந்தது என மகிழ்கிறேன்.

***முடிவுரை***

*பண்பிற் சிறந்தவராகவும் சிறந்த தமிழ்ப் பற்றாளராகவும் நேர்மையாளராகவும் விளங்கிய மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார், என்றும் நம் உள்ளத்தில் நிலைநிற்பார் என்பது உறுதி.*

## பெரிய அறிஞர்

பேராசிரியர் ***சாலமன் பாப்பையா***

அவர் ஒரு பெரிய பேச்சாளர் அல்லர். அறிஞர். எங்களைப்போல, மாணாக்கர்களுக்கான அறிஞர். அப்போது நிறையப் பேச்சாளர்களைப் பார்த்திருக் கிறோம். இவர், ஒரு வகுப்பறையில் எப்படிப் பாடம் நடத்துவாரோ அப்படி நடத்தக்கூடிய ஆற்றல் உடைய அறிஞர். சொல் தேர்ந்த வலவன். அவருடைய சொற்களும், சொல்லுகிற முறையும் வியப்பாகவே இருக்கும்; அப்படி அதனை நாங்கள் கேட்டோம்.

திருவள்ளுவர் இந்தக் காலத்திற்கு எப்படிப் பொருத்தமாக இருக்கிறார் என்று அவர் காட்டிய முறை இருக்கிறது பாருங்க, அந்த (வள்ளுவம்) நூல்ல இந்தக் காலத்து மாணாக்கர்களுக்கு ஏற்றாற்போலச் சொல்லியிருக்கின்ற முறை இருக்கே, அது வியக்கத்தக்க முறை. திருக்குறளை இப்படியெல்லாம் பார்க்க முடியும். அப்படின்னு முதன்முதல்ல எங்களுடைய மனத்திலே ஒரு அழுத்தமான பதிவை ஏற்படுத்தியது அவருடைய நூல்தான்.

அமெரிக்கன் கல்லூரியில் நான் இளங்கலை வகுப்புப் படித்துக்கொண்டிருக்கிறேன். அப்போது அவரை அழைத்துக்கொண்டு வரவேண்டும் என்று எங்களுடைய கூட்டத்தில் நாங்கள் முடிவு பண்ணினோம். ஏனென்றால், அவருடைய புத்தகத்தைப் படித்துப் பார்த்த பிற்பாடு, தமிழில் இவ்வளவு ஈடுபாடு உள்ள ஒரு பெரியவரை, நம்முடைய கல்லூரிக்கு அழைத்து வரவேண்டும்; மேடையில் அவருடைய பேச்சைக் கேட்கவேண்டும் என்று நாங்கள் ஆசைப்பட்டோம். அப்போது வருகிற பேச்சாளருக்குப் போக்குவரத்துக்கென்று பணம் கொடுத்து அனுப்புவோம். அதை ஒரு உறையிலே போட்டு, கையெழுத்தும் வாங்கி விட்டோம்; கொடுத்து அனுப்பிவிட்டோம்.

அவர் போய்ப் பார்த்துவிட்டு, அதில் தனக்கு எவ்வளவு செலவானதோ, அதை மட்டும் எடுத்துக்கொண்டு மீதிப்பணத்தை எங்களுடைய செயலாளருக்கு அனுப்பி வைத்து விட்டார். இந்த மாதிரியான ஆட்களையெல்லாம் என்னுடைய வாழ்க்கையிலே நான் பார்த்ததில்லை. இதுதான் என்னுடைய செலவுக்கு உரியது. இதற்குமேல் தேவையில்லை. நான் தமிழ் பேசவந்தேனே தவிர, நான் வாங்கவரவில்லை என்று சொல்லி, அன்றைக்கு எங்களைப் போன்ற மாணாக்கர்களுக்குப் பாடங்கற்றுக் கொடுக்கிற – அதாவது மேடை–யிலே மட்டுமில்லை. வகுப்பறைகளிலும் மட்டுமில்லை, வேறுவகைகளிலேயும் கூடப் பாடம் கற்றுக் கொடுக்கிற ஒரு பெரிய அறிஞர்.

ஆவணப்படத்திலிருந்து...



# வாய்மையின் சிகரம் வ.சுப.மாணிக்கனார்

தமிழ்ப்பிரியன்

"தமிழுக்கு அமுதென்று பேர் - அந்தத்
தமிழ் இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்"

என்னும் பாவேந்தர் பாரதிதாசனாரின் பொன்வரிகளுக்கு ஏற்ப, செம்மொழியாம் தமிழைத் தங்களின் உயிருக்கு நிகராகக் கருதி, தமிழ் வளர்த்த பேரறிஞர்கள் பலர்; அவர்களில் பேராசிரியர் வ.சுப.மாணிக்கனாரும் ஒருவர்.

வ.சுப.மாணிக்கனார் இருபதாம் நூற்றாண்டின் ஈடு இணையற்ற தமிழறிஞராகத் திகழ்ந்தவர்; எளிய குடும்பத்தில் பிறந்து பின்னாளில் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக உயர்ந்தவர்; வாய்மை பேசுவதையே தம் வாழ்வின் குறிக்கோளாய்க் கொண்டு உயர்ந்தவர் இவர்.

## பிறப்பு

அண்ணாமலை என இயற்பெயர் கொண்ட மூதறிஞர் வ.சுப.மாணிக்கனார் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள மேலைச்சிவபுரி என்னும் ஊரில், சுப்பையாச் செட்டியாருக்கும் தெய்வானை ஆச்சியாருக்கும் அருந்தமிழ்ப் புதல்வராய்த் தோன்றினார்.

மாணிக்கனாரின் இளம்பருவத்திலேயே அவர்தம் ஆருயிர் அன்னையும், அருமைத் தந்தையும் இயற்கை எய்தினர். அவர்தம் பாட்டனாரும், பாட்டியார் அழகம்மை ஆச்சியாரும் மாணிக்கனாரையும், அவருடைய உடன்பிறப்புகள் நால்வரையும் தாயில்லாக் குறை தெரியாமல் வளர்த்துவந்தனர்.

## தொடக்கக் கல்வி

மாணிக்கனார் தம் தொடக்கக் கல்வியைத் தம் சொந்த ஊரான மேலைச்சிவபுரியிலேயே திரு. நடேச அய்யரிடம் கற்றார். ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நல்வழி, நன்னெறி, வாக்குண்டாம் (மூதுரை) போன்ற நீதிநூல்களைக் கசடறக் கற்றார்.

## வாய்மையின் சிகரம்

மாணிக்கச்செம்மல் தம் பதினோராம் வயதில் பர்மா சென்று தலைநகராம் இரங்கூனில் தனவணிகர் குலமுறைப்படி ஒரு வட்டிக்கடையில் சிறுகணக்கராகப் பணியேற்றார்.

ஒருநாள் கடை முதலாளி கடைக்குள் இருந்துகொண்டே தம்மைக் காண வருவோரிடம் இல்லை என்று சொல்லும்படி மாணிக்கனாரிடம் சொன்னார்.

அப்பிஞ்சு வயதிலேயே எந்தச் சூழ்நிலையிலும் பொய் கூறக்கூடாது என்று தம் மனதில் உறுதி மேற் கொண்டவராய்த் தன் முதலாளி சொல்லியபடி நடக்கவில்லை. எனவே, அவர் பார்த்து வந்த வட்டிக்கடை வேலை பறி போயிற்று. உண்மை வழியில் நடப்பவர்க்குத் துன்பங்கள் வருவது இயல்பன்றோ? இந்நிகழ்ச்சியே வ.சுப. மாணிக்கனாரின் வாழ்வில் ஒரு திருப்பத்தை உண்டாக்கியது. எவ்வளவு துன்பங்கள் வந்தாலும் பொய் சொல்லக்கூடாது என்ற மனவுறுதியை மாணிக்கனார்க்கு இந்த இரங்கூன் பயணம் கற்றுத் தந்தது.

## தொடக்கப் பணி

வ.சுப. மாணிக்கனார் தம் சொந்த ஊருக்குத் திரும்பி அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து நான்காண்டுகள் பயின்று புலவர் பட்டம் பெற்றார். பின்பு அங்கேயே 1940-ஆம் ஆண்டு தமிழ்த்துறையில் ஆய்வு மாணவராய்ச் சேர்ந்தார்.

பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் பெரும்புலவர். தமிழிலும் வடமொழியிலும் ஆழமான புலமையுடையவர். எத்தனையோ மாணாக்கர்களைப் பேராசிரியர்களாக உருவாக்கியவர். அவர்தாம் வ.சுப.மாணிக்கனாருக்கு ஆசிரியராய் இருந்தவர். அவர் ஒருநாள் மாணிக்கனாரை அண்ணாமலைச் செட்டியாரிடம் அழைத்துச் சென்று பரிந்துரை செய்ததன் பயனாய் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் மாணிக்கனாருக்கு விரிவுரையாளர் பணி கிடைத்தது. அங்கு ஏழாண்டுகள் (1941-ஆம் ஆண்டு முதல் 1948-ஆம் ஆண்டு வரை) பணி புரிந்தார்.

இந்தியா சுதந்திரம் பெற்ற திருநாளான 1947-ஆம் ஆண்டு வள்ளல் அழகப்பச் செட்டியார் காரைக்குடியில் முதலாவதாகக் கலைக்கல்லூரி நிறுவினார். வ.சுப. மாணிக்கனார் 1948-ஆம் ஆண்டில் அழகப்பா கலைக்கல்லூரியில் விரிவுரையாளராகச் சேர்ந்தார். அப்பொழுது காரைக்குடி அழகப்பா கல்லூரியில் தமிழ்த்துறைத்தலைவராய்ப் பணியாற்றியவர் பேராசிரியர் ஆ.முத்துசிவனார் ஆவார். ‘அசோக வனம்’, ‘அசலும் நகலும்’ போன்ற இனிய நூல்களைப் படைத்தவர் இவர். இப்பெருந்தகை எதிர்பாராதவகையில் மாரடைப்பால் காலமானார். 1954-ஆம் ஆண்டு வ.சுப. மாணிக்கனார் அங்கு பேராசிரியர் நிலைக்கு உயர்த்தப்பட்டார்.

## ஒப்பற்ற துணைவேந்தர்

வ.சுப.மாணிக்கனார் கடுமையான உழைப்பாளர். தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மூன்று மொழிகளிலும் ஆழங்கண்டவர். அவருடைய கடின உழைப்பின் பயனாக 1979-ஆம் ஆண்டு மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் ஐந்தாவது துணைவேந்தரானார். துணை வேந்தர் பதவி என்பது சாதாரணப் பதவி அல்ல. ஆளுநருக்கு இணையான பதவி அது. தமிழுக்கு ஒருவர் ஆற்றியுள்ள பெரும் தொண்டுகளைப் பொறுத்தே ஒரு பேராசிரியருக்கு அப்பணி அளிக்கப்படும். அத்தகைய உயர்பதவியில் அமர்ந்து மாணிக்கனார் ஆற்றிய பணிகள் கணக்கிலடங்காதனவாகும்.



## தமிழ்ப்பணிகள்

வ.சுப.மாணிக்கனார் தமிழின்மீது தணியாத பற்றுக்கொண்டவர். மொத்தம் 32 நூல்களை அவர் படைத்துள்ளார். அவற்றுள் 28 தமிழ் நூல்கள், 4 ஆங்கில நூல்கள் ஆகும். அவர் எழுதிய ஒவ்வொரு நூலும் 1000 நூல்களுக்குச் சமம். ஆமாம், அத்தகைய கருத்துப் பெட்டகங்கள் அவை. 'மனைவியின் உரிமை' என்னும் நாடக நூல்தான் மாணிக்கனார் இயற்றிய முதல் நூல் ஆகும். இந்நூல் 1947-ஆம் ஆண்டு வெளிவந்தது. 'தமிழ்க்காதல்' அல்லது 'தமிழில் அகத்திணை விளக்கம்' என்பது இவருடைய முனைவர் பட்ட ஆய்வேடாகும்.

சங்க இலக்கியங்களைத் தெளிவாகப் புரிந்துகொள்ள விரும்பும் ஆர்வமுள்ளோர் இவருடைய 'தமிழ்க்காதல்' என்னும் நூலை முதலில் கற்பது நலம். அந்நூல் சங்க இலக்கியங்கள் என்னும் வீட்டில் நுழைவதற்கு வாயில் போல் உதவுவதாகும்.

வ.சுப. மாணிக்கனாருக்குத் திருக்குறள், திருவாசகம், தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் இந்த நான்கின்மீதும் அளவு கடந்த பற்று உண்டு. திருக்குறள் என்னும் பாற்கடலைக் கடைந்து இவர் எடுத்த அமுதம்தான் 'வள்ளுவம்' என்னும் நூல். இந்நூல் இவருடைய சிந்தனைகளைச் சீரியதாய்க் காட்டுகிறது. கருத்தாலும் நடையாலும் இந்நூல் தனித்துப் போற்றத்தக்கது.இதனை இரண்டாவது திருக்குறளாகவும், மாணிக்கனாரை இரண்டாவது திருவள்ளுவ ராகவும் வணங்கி வழிபடலாம். இது மிகைப்படுத்தப்பட்ட கூற்று அல்ல. உண்மையே.

இவர் தொல்காப்பியம் என்னும் கடலில் மூழ்கியதால் நமக்குக் கிடைத்த முத்தான நூல் 'தொல்காப்பியக் கடல்' என்னும் அரிய நூலாகும். அந்நூலை மெதுவாகவும், ஆழமாகவும் கற்பவர்கள் தொல்காப்பியத்தில் தலைசிறந்து விளங்குவார்கள் என்பது நிதர்சனமான உண்மை. தொல்காப்பியச் சாயல் படியாத எந்த இலக்கிய நூலும் இல்லை என்பதை மாணிக்கனார் அந்நூலில் விளக்கியுள்ளார்.

"திருக்குறள் தமிழ் மக்களுக்கு உயிர் நூலாவது போல
தொல்காப்பியம் தமிழுக்கு உயிர் நூலாகும்"

என்பது மாணிக்கனார் கருத்தாகும்.

வ.சுப. மாணிக்கனாரிடம் உள்ள மிகப்பெரிய வன்மை என்னவெனின் எதையும் ஆராய்ச்சிக் கண்ணோட்டத்துடன் காண்பது. ஆராய்ச்சிவன்மை இவர் தாமே முயன்று பெற்றதாகும். இவருடைய நுண்ணிய ஆராய்ச்சி வன்மையை இவருடைய படைப்புகளில் பரக்கக் காணலாம்.

கம்பராமாயணம் மொத்தம் 10,648 பாடல்களைக் கொண்டது. அத்தனை செய்யுட்களையும் படித்து நம் மனத்தில் இருத்திக்கொள்வது கடினமான செயலாகும். கம்பராமாயணத்தை எளிமையாக உணர விரும்புவோர் இவர் இயற்றிய 'கம்பர்' என்னும் நூலைக் கற்கலாம். இந்நூல் கம்பராமாயணப் பிழிவு ஆகும்.

வ.சுப. மாணிக்கனார் ‘தமிழ்’ என்று தொடங்கி ‘தமிழ்’ என்று முடிப்பதாகக் கருதி, திருக்குறள் எழுத விரும்பினார். மொத்தம் 1000 குறட்பாக்கள் எழுதலாம் என எண்ணியிருந்தார். தமிழருடைய தவக்குறைவின் காரணமாக அத்திருப்பணி முழுமையடையும் முன்பே மறைந்து விட்டார். தற்பொழுது 506 குறட்பாக்கள் மட்டுமே கிடைக்கின்றன. மிக இனிய நூல் இது.

வ.சுப. மாணிக்கனார் தில்லை நடராசர் கோயிலில் தமிழில் வழிபாடு நடைபெறுவதற்காகப் போராடி வெற்றி பெற்றார். காமராசர் பல்கலைக்கழகத்தில் பதிப்புத்துறை, மொழியியல் துறை, தமிழியற்புலம், மேலாண்மைக் கல்வி போன்ற துறைகளை உருவாக்கித் தமிழுக்குத் தொண்டுபுரிந்துள்ளார்.

## பெற்ற சிறப்புகள்

வ.சுப. மாணிக்கனார் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராய்ப் பணியாற்றிய காலம் பொற்காலமாகும். எண்ணற்ற நூல்களைப் பதிப்பித்தார். இவருடைய தமிழ்ப்பணிகளைப் பாராட்டி அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தன் பொன்விழாவின்போது 1979-ஆம் ஆண்டில் முதுமுனைவர் (டி.லிட்) பட்டம் வழங்கிச் சிறப்பித்தது.

மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை, ‘செம்மல்’ என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது. குன்றக்குடி ஆதீனம் ‘முதுபெரும்புலவர்’ என்னும் பட்டம் நல்கிப் பெருமைப்படுத்தியது. ஈப்போ பாவாணர் தமிழ்ச்சங்கம், ‘பெருந்தமிழ்க் காவலர்’ என்னும் பட்டமளித்துப் பாராட்டியது. செம்மலின் மறைவிற்குப்பின் 1990-ஆம் ஆண்டில் தமிழக அரசு ‘வள்ளுவர் விருது’ வழங்கிப் போற்றியது.

## மாணிக்கச் செம்மலின் மாணவர்கள்

ஒரு நல்ல ஆசிரியர் என்பவர் வாய்மை, நேர்மை, தூய்மை, எளிமை போன்ற பண்புகளில் சிறந்து விளங்க வேண்டும். அவ்வாறு ஓர் ஆசிரியர் வாழ்ந்தால்தான் அவரிடம் கல்வி கற்கும் மாணவர்களும் தலைசிறந்து விளங்குவார்கள். இது எக்காலத்தும் பொய்க்காத உண்மையாகும். வ.சுப. மாணிக்கனார் ஒரு நல்லாசிரியருக்கு இருக்க வேண்டிய நற்பண்புகளை ஒருங்கே பெற்றவர். வாய்மை என்னும் தூய்மையை வாழ்வின் அணிகலனாகக் கொண்டவர்; நேர்மையாக வாழ்ந்தவர்; கறைபடாத கைகளுக்கு சொந்தக்காரர்; உடைகளிலும் எளிமையைக் கடைப்பிடித்தவர்; இவர் இவ்வாறு வாழ்ந்ததால்தான் இவருடைய மாணவர்களும் தலைசிறந்து விளங்கினர்.

முன்னாள் கல்வியமைச்சர் திரு. க.அன்பழகன் அவர்கள், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முதல் துணைவேந்தராய்ப் பணியாற்றிய முதுமுனைவர் வி.அய்.சுப்பிரமணியம் அவர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சிறப்பு நிலைப்பேராசிரியராய்ப் பணியாற்றிய முனைவர். இரா.சாரங்கபாணி அவர்கள், கிருட்டிணகிரி கலைக்கல்லூரியில் பேராசிரியராய்ப் பணியாற்றிய முனைவர். மு.வை. அரவிந்தன் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராய்ப் பணியாற்றிய முனைவர். பழ.முத்துவீரப்பன் அவர்கள் போன்றோர் வ.சுப. மாணிக்கனாரின் மாணவர்களே ஆவர்.




## மாணிக்கச் செம்மலின் நற்பண்புகள்

வ.சுப.மாணிக்கனார் வாய்மையை உயிராய் மதிப்பவர். காலந்தவறாத கண்ணியர். எப்பொழுதும் எளிமையாகவே உடையணிவார். தனக்கு எது கிடைத்தாலும் தம்மருகில் இருப்பவருக்குப் பிரித்துக் கொடுத்து விடுவார். திருக்குறள், தொல்காப்பியம், திருவாசகம், சங்க இலக்கியங்கள் - இந்நூல்களிடத்தில் இவருக்குப் பெரு மதிப்பு உண்டு. இவர் நெடுந்தூரம் பயணம் மேற்கொண்டால் இவருடைய கைப்பெட்டியில் திருக்குறளும் திருவாசகமும் கண்டிப்பாக இருக்கும். புகைப்படம் எடுத்துக் கொள்வதில் விருப்பம் இல்லாதவர். இவர் மறைந்த பின்பு இவர்தான் வ.சுப. மாணிக்கனார் எனத் தொலைக்காட்சியில் காண்பிக்க ஒரு புகைப்படமும் கிடைக்கவில்லை. தனக்குக்கீழ் பணியாற்றுபவர்கள் நேர்மையானவர்களாக இருக்க வேண்டும் என எதிர்பார்ப்பார்; தமிழாசிரியர்கள்மீது தணியாத மதிப்புக் கொண்டவர்; தமிழாசிரியர்களை யாராவது குறை சொன்னால் கோபத்துடன் கண்டிப்பார். புறம் பேசாதவர்.

அனைத்திற்கும் மேலாக நன்றியுணர்வு இவர் கூடவே பிறந்தது எனலாம். தமது பேராசிரியராகிய பண்டித மணி மு. கதிரேசன் செட்டியாரிடம் பெருமதிப்பு வைத்திருந்தார். தான் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராய்ப் பதவியேற்றபோது பண்டிதமணியாரின் நூற்றாண்டு விழாவைக் கோலாகலமாகக் கொண்டாடினார். இயல்பாகவே சிக்கனமாக வாழ்ந்தவர்.

தம்மை அழகப்பா பல்கலைக்கழகத்தில் பேராசிரியராய் நியமித்த வள்ளல் அழகப்பரை மறக்காமல் ‘கொடை விளக்கு’ என்னும் கவிதை நூலை இயற்றி அந்நூலில் வள்ளல் அழகப்பரைப் புகழ்ந்து தம் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொண்டார். மொத்தத்தில் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்த தூயவர் மாணிக்கனார் ஆவார்.

## மாணிக்கச் செம்மலின் மணிமொழிகள்

1. புகழ் பெறுவதில் விருப்பம் இருப்பது தவறில்லை; எனினும், அதற்குரிய செயல் விருப்பம் வேண்டும்.
2. தளர்ச்சி வருதல் இயல்பே; அதனை நிமிர்த்திக் கொள்ளுதல் அறிவுடைமை.
3. நன்றியுணர்வு மனிதப் பண்புகளுள் தலையாயது. மனத்தைப் பண்படுத்துவது.
4. பெருமை பொறுமையால் வலிமை பெறும்; பொறுமை, தெளிந்து துணியும் செயலால் வலிமை பெறும்.
5. சிலவற்றைப் பொருட்படுத்தாமல், அலட்டிக் கொள்ளாமல் இயல்பாக விட்டுவிடுவது வாழ்வு முறையுள் ஒன்று.
6. விளங்காமற் பேசுவர் சிலர்; திமிரினால் பேசுவர் சிலர்; இவ்வாறு பாடறிந்து செயல்பட வேண்டும்.
7. தன்னைச் சூழ்ச்சியாகப் பிறர் பயன்படுத்திக்கொள்ள இடங் கொடுக்கக் கூடாது.

8. நாள்தோறும் நெஞ்சினையும் தூய்மையால் (வாய்மையால்) குளியல் செய்க.

9. தக்கோரால் மதிப்புப் பெறுவதே சால்பு.

**மாணிக்கனாரின் மறைவு**

*இருபதாம் நூற்றாண்டின் புலமைச் செல்வராகவும், இணையற்ற திறனாய்வாளராகவும் விளங்கியவர் வ.சுப. மாணிக்கனார். தமிழில் அவர் கண்படாத இலக்கியமோ, இலக்கண நூலோ இல்லை எனலாம். முனைவர். ஆறு அழகப்பனார் தமிழ்த்துறைத் தலைவராய் இருந்தபோது 'இலக்கணக் கருவூலம்' என்னும் பெயரில் அரிய இலக்கண நூல்களை மூன்று தொகுதிகளாக வெளியிட்டார். அந்நூலுக்கு வ.சுப. மாணிக்கனார் முதன்மையுரை எழுதினார். அவ்வுரை வ.சுப. மாணிக்கனாரின் இலக்கணப்புலமையை ஆடியில் தெரியும் பிம்பம்போலத் தெளிவுபடுத்துகிறது.*

*குறைவில்லா நலன்களைப் பெற்று, நிறைவாக வாழ்ந்த மாணிக்கனார் புதுச்சேரிப் பல்கலைக் கழகப் பணியின்பொருட்டுச் சென்றிருந்தபோது அங்கேயே 24-04-1989ஆம் ஆண்டில் மாரடைப்பால் மறைந்தார்.*

*மாணிக்கனாரின் மறைவு குறித்து முன்னாள் தமிழக முதல்வர் மாண்பு மிகு. கலைஞர் கருணாநிதி அவர்கள் தம் இரங்கலைப் பின்வருமாறு தெரிவித்துள்ளார்.*

"வற்றாத தமிழ்க்கடல் வ.சுப. மாணிக்கம் அவர்களின் திடீர் மறைவுச் செய்தி கேட்டுத் திகைத்துப்போனேன். கடந்த இரண்டு கிழமைகளுக்கு முன்தான் என்னை வந்து சந்தித்து நீண்ட நேரம் உரையாடிவிட்டுச் சென்றார். ஆனால், அவருக்கு இப்படியொரு செய்தி என்கிறபோது தாங்கிக் கொள்ள இயலவில்லை. எத்தனையோ விழாக்களில் நானும் அவரும் கலந்து கொண்ட பசுமையான நினைவுகள் நெஞ்சில் அலை மோதுகின்றன. எப்போதும் 'தமிழ் தமிழ் தமிழ்' என்றே ஒலித்துக்கொண்டிருந்த அந்த இனிய இதயம் இந்தத் தமிழகத்துக்கு வழங்கியுள்ள இன உணர்வினை எப்படித்தான் மறக்க முடியும்!

ஏடுகள் பல அவர் புகழ்பாடும் - தமிழுக்கும் தமிழர்க்கும் அவர் ஆற்றிய தொண்டு நின்று நிலைபெற்று, இளைய தலைமுறைக்கு ஒளிக்கதிராக என்றென்றும் விளங்கும்!"

*"வாழ்க பெரும்புலவர் மாணிக்கனார் அவர்களின் மங்காப் புகழ்!"*



**மாணிக்கக் குறள்**

**போராட்டம் இன்றிபொருவில் தமிழுக்குத்
தேரோட்டம் இல்லை தெளிவு.**



# குணக்குன்று மாணிக்கனார்

பேராசிரியர் முனைவர் **வெ.சு. அழகப்பன்**
முன்னை முதல்வர், கணேசர் செந்தமிழ்க் கல்லூரி,
மேலைச்சிவபுரி

குணமெனும் குன்றேறிப் புகழ் மேவியோர் மிகச் சிலர். அவருள்ளும் தலை நின்றோர் வ.சுப.மாணிக்கனார். ஒவ்வொருவருக்கும் நான்கு கடமைகள் உண்டு. (அ) குடும்பக் கடமை, (ஆ) ஊர்க் கடமை (இ) சமுதாயக் கடமை, (ஈ) தெய்வக்கடமை. இவற்றில் எது குன்றினும் ஒரு சுவர் வீழ்ந்த வீடுதான். ஆனால், மாணிக்கனார் நிறைவீடாக விளங்கினார். இவர் வாழ்ந்தது 72 ஆண்டுகள். ஆனால், 700 ஆண்டுப் பணிகளைச் செய்திருக்கிறார். அவ்வளவு முயற்சி, சுறுசுறுப்பு.

### குடும்பக்கடமை

தம் புதல்வர் மூவர்க்கும் உயர்கல்வி பயில்வித்தார். மகன், மகள்களைச் சமனாக நடத்தினார். இவ்வாறு குடும்பக் கடனை நிறைவாக ஆற்றினார்.

### ஊர்க்கடமை

முதுபெரும்புலவர் மாணிக்கனார் பிறந்த ஊர் மேலைச்சிவபுரி. அங்கேதான் தொடக்கக்கல்வி கற்றார். அவ்வூரைச் சார்ந்த கணேசர் செந்தமிழ்க்கல்லூரி காலமெல்லாம் தளராமல் நடக்க விழைந்தார். சபைத்துணைத்தலைவர் சிதம்பரம் செட்டியாருடன் மலேயா, சிங்கப்பூர் சென்று பொருள்திரட்டினார். பலர் செம்மல் மாணிக்கனார் செயல் சிறப்பைக் கருதியே கொடை கொடுத்தனர். இன்று அக்கல்லூரி கலைக்கல்லூரியாக வளரக் காரணம், செம்மல் அவர்களின் செயல்திறனே.

பேராசிரியர் மாணிக்கனார் காரைக்குடியில் பணிபுரிந்தபோது, இராம. வீர. ராம. பெரியகருப்பன் அவர்கள் தமிழ்க்கல்லூரி நிறுவ ஊக்குவித்தார். தமிழாசிரியர்களுக்கு மாலை நேரத்தில் இவரே குறள் வகுப்பு எடுத்தார். தமிழ் வகுப்புகளை எப்படி எடுக்கவேண்டும்? கவிதை நாடகம் எப்படி எழுதவேண்டும்? கவிதைகளை எப்படி உச்சரித்துப் பாடம் சொல்லவேண்டும் என்பதை நடத்திக் காட்டினார். நான் ஆசிரியனாக ஆனபிறகு, இவரிடம் நேரடி மாணவனாகிப் பாடம் கேட்டேன். அதனால் என் மாணவர்களிடையே எனக்குப் பேரும் புகழும் நன்றியும் கூடின.

காரைக்குடியில் தமிழ்ச்சங்கம் ஒன்று நிறுவினார். விசயதேனுவிலாசு ஞானசேகரன் செயலர். இச்சங்கம் வழி, ஒரு முக்கியப் பணி இயற்றினார். பள்ளி மாணவர்கள் மனத்தே தமிழ் அறவுணர்வு வளர ஆத்திசூடி முதலான ஏழு அற நூல்களைத் திரட்டி ஒரு நூலாக ஏழிளந்தமிழ் என அச்சிட்டுத் தாமே எளிய உரையும் எழுதி விலையில்லாமல் மாணவர்களுக்கு வழங்கிப் போட்டி நடத்தினார்.

*மாணிக்கனார் நன்றிபாராட்டும் முகமாக, அழகப்பரின் பிறந்த நாள் விழாவில், பணி விலகிய பின்பும் தவறாது கலந்துகொள்வார். அவருக்கு, 'கொடை விளக்கு' என்ற கவிதை நூலைப் படைத்தளித்தார். இந்நூல் நடைப்பயிற்சியிலேயே கவனம் செய்த கவிதைநூலாகும்.*

## சமுதாயக் கடமை

*சென்னைப் பல்கலை.யில் எம்.காம் வகுப்பிற்கு அன்று தமிழ் ஒரு பாடமாக இருந்தது. இப்பாடத்தை நீக்கத் தீர்மானம் வந்தது. அப்போது சென்னைப் பல்கலைக்கழகத்தில், டாக்டர் மு.வ.அவர்களும் நானும் ஆளவை (செனட்) உறுப்பினராக இருந்தோம். மாணிக்கனார் நாங்கள் இருவரும் இத்தீர்மானத்தைக் கண்டித்து எதிர்க்க வேண்டும் என்று அறிவுறுத்தினார். கூட்டத்தில் இருவரும் எதிர்ப்புத் தெரிவித்தோம். அதனால் அத்தீர்மானம் தள்ளிவைக்கப்பெற்றது. அப்போதிருந்த துணைவேந்தர் நெ.து.சுந்தரவடிவேலு எங்களிடம் கோபம் கொண்டார். ஆனால், மாணிக்கனார் மகிழ்வு கொண்டார். தமிழும் தமிழாசிரியர் வாழ்வும் சிதையக் கூடாதெனச் சிந்தை செய்தார். பேராசிரியர் பொதுநலம் பேணுபவர். மதுரைப் பல்கலை.யில், பணியாளர்களுக்குக் குடியிருப்பு வீடுகள் கட்டினார். காரைக்குடி அழகப்பா கல்லூரியில் நூற்றுக்கணக்கான தென்னை மரங்களை வளர்த்து விடுதி வருவாயைப் பெருக்கினார். தன் மாணவன் உயரவேண்டும் என்பதில் பெரிதும் ஆர்வம் கொண்டிருந்தார். என் முனைவர் பட்ட ஆய்வுக்கு அவர்தான் ஆய்வு நெறியாளர். நான் உழைக்காமல் போக்குக் காட்டி வந்தேன். கண்டித்தார். ஒரு நாள் என் வீடு வந்து என் மனைவியிடம், "அழகப்பன் ஒருநாளைக்கு முப்பது பக்கமேனும் கட்டுரை எழுதி என்னிடம் காட்டியபின், காபி பலகாரம் கொடு" என்று கடிந்து கூறியிருக்கிறார். மாணவர் நலனில் அவ்வளவு அன்பு, அக்கறை. பின்னர் வேகமாக முடித்துக்கொடுத்தேன். யார் பரிந்துரையையும் இவர் ஏலார். யாரிடமும் பரிந்துரைக்கவும் மாட்டார். ஆயினும், தகுதி வாய்ந்தவர்கட்குத் தொடர்புடையார் கேட்காமலேயே காதும் காதும் வைத்தாற்போல், நல்லது செய்வார். தொடர்புடையாருக்கு அவர் தெரிவிக்கவும் மாட்டார்.*

*பேராசிரியரின் மிகப்பெரிய தொண்டு, தாய் மொழிக்கல்விக்காக உழைத்தது. தமிழாசிரியர்களைத் திரட்டி, தில்லை, நெல்லை, மதுரை, சென்னை, ஈரோடு முதலான ஊர்களில் தாமே தலைமையேற்றுத் தெருவில் நடந்துசென்று கூட்டம் நடத்தினார். அரசுக்கு விண்ணப்பித்தார். எண்ணம் கனிந்துவந்த வேளையில் அரசு மாறிவிட்டது.*

## தெய்வக்கடமை

*செம்மல் அவர்களின் தெய்வம் தமிழ்தான். தில்லை நடராசரின் அம்பல மேடையில் தமிழ் முழங்க வெள்ளைவாரணர் துணையுடன் தமிழ் ஆசிரியர்களைக் கூட்டிப் போரிட்டார்; வென்றார். திருவாசகம் பொன்னம்பலத்தே பொலிவாக ஒலித்தது.*

*பேராசிரியர் குணமென்னும் குன்றேறிய குணவாளராய் விளங்கினார். எனவே, உலகத்தார் உள்ளத்திலெல்லாம் இன்று ஒளிர்கிறார். நாங்கள் தமிழால் வாழ்ந்தோம். ஆனால், இவரால் தமிழ் வளர்ந்தது. புலமையாலும், வாய்மையாலும், தூய்மையாலும் வானுறையும் தெய்வத்துள் தெய்வமாக மிளிர்கிறார். இவர் வழியில் நடப்பதே, நாம் இவருக்குச் செலுத்தும் நன்றியாகும்.*



# தமிழறிந்த கணக்காயர் வ.சுப.மா.

முனைவர் நெல்லை **ந.சொக்கலிங்கம்**
மதுரை

## முன்னுரை

"கெடல் எங்கே தமிழின் நலம் அங்கெல்லாம் தலையிட்டுக்
கிளர்ச்சி செய்க!"

*என்ற பாவேந்தரின் முழக்கத்திற்கு ஏற்ப வாழ்ந்த தறுகண்மையாளர் என் ஆசிரியர் வ.சுப. மா. அவர்,*

"பேரெதிர்ப்பால் உண்மைதான் இன்மை யாமோ?
பிறர்சூழ்ச்சி செந்தமிழை அழிப்ப துண்டோ" *(புரட்சிக்கவி)*

*என்று வாழ்நாட் குறிக்கோளாய் வள்ளுவச் செம்மலாக வாழ்ந்த பெருந்தகையர். அவரைத் திருநெல்வேலிப் புகைவண்டி நிலையத்தில் கண்டு பேசியது முதல் அன்னாரிடம் அருந்தமிழ் கற்றது வரை என் எண்ணத்தில் பதிந்த எண்ணங்களைப் பகிர்ந்து கொள்வதில் பெரும் மகிழ்ச்சியடைகின்றேன். என் நினைவலைகளின் பதிவுகளை முறைப்படுத்தி உரைக்க முனைகின்றேன்.*

## சந்திப்பில் சிந்திக்கச் சொன்ன செய்தி

*சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1961-ஆம் ஆண்டில் திருநெல்வேலிச் சந்திப்பில் உள்ள தருமபுர ஆதீனத் திருமடத்தில் புலவர் விழாவை ஆண்டுதோறும் நடத்துவது போல் சிற்றிலக்கிய மாநாட்டை நடத்திற்று. அதற்குத் தலைமை ஏற்றவர் மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார் ஆவார். நிகழ்ச்சி முடிந்து மறுநாள் நெல்லைப் புகைவண்டி நிலையத்தில் பேரா. மாணிக்கனாரைக் கண்டேன்; அன்னாரிடம் முதுகலை படிக்கக் காரைக்குடி வர எண்ணம் என்றேன். அப்போது நான் ம.தி.தா.இந்துக் கல்லூரியில் இளங்கலை சிறப்புத் தமிழ் பயின்று வந்தேன். என் எண்ண ஓட்டத்தைச் செவிமடுத்த செம்மல் மாணிக்கனார் முதலில் 'ஆத்திசூடி' போன்ற அறநூல்களை ஆழமாகப் பயின்று வருமாறு அறிவுரை வழங்கினார். ஆமாம் இதுவே நெல்லைச் சந்திப்பில் நிகழ்ந்த அவர் சிந்திக்கச் சொன்ன செய்தி. அவரிடம் கற்க வேண்டும் என்ற எண்ணம் 1966 ஆம் ஆண்டுதான் நிறைவேறிற்று.*

*அழகப்பர் கலைக்கல்லூரியில் முதுகலை மாணவர் சேர்க்கையின்போது பேரா. தெ.பொ.மீ., பேரா. வ.சுப.மா போன்றோர் நேர்காணல் நிகழ்த்தினர். பிற்பகலில் வெளியிடப்பெற்ற பட்டியலில் என் பெயர் இடம் பெறவில்லை. அதிர்ச்சியுற்ற நான்*

அறிஞர் வ.சுப.மா.விடம் கூறினேன். அவர் பட்டியலில் என் பெயரும் வருமாறு முயன்று பெற்றுத் தந்தமையால் நான் முதுகலை - தமிழ் அவரிடம் கற்க முடிந்தது. தம் மாணவர் மீது காட்டிய பரிவு இதனால் நன்கு புலப்படும்.

**வ.சுப.மா.வின் வகுப்பும் வண்மையும்**

முதலாண்டில் முதுகலை வகுப்பில் முதற்கண் பேரா. வ.சுப. எழுத்துப் பயிற்சியை வழங்குவார். கழக வெளியீடுகளாகிய சொற்பொழிவு நூல்களை ஒவ்வொரு மாணவர்களுக்கும் கொடுத்து நன்கு அந்நூலைப் படித்துவிட்டு அதன் சுருக்கத்தை ஒரு ஏட்டில் எழுதி வருமாறு கூறுவார். அவ்வேட்டை மதிப்பிட்டும் குறைகளைச் சுட்டிக்காட்டியும் இறுதியில் "மா" என்று ஒப்பமிட்டுத் தருவார். இதுவே அவர் தரும் எழுத்துப் பயிற்சி. எனக்குத் தரப்பட்டது "தமிழக வரலாறு அறுவர் சொற்பொழிவு" என்ற நூலாகும்.

முதலாண்டில் இலக்கியத் திறனாய்வுத்தாள் வகுப்பு நடத்தினார். இலக்கியக் கூறுகள் பற்றிப் பேரா. கற்பித்தபோது, "எண்ணுவதை எண்ணுகின்றவாறே படிப்பவரும் உணரும்படி செய்தலே அப்பாட்டின் பயன் எய்தியதாகும்." "மனைவியொடு மக்களும் நிரம்பினர்" என்ற பிசிராந்தையார் பாடலடியைக் கூறி, இதிலே 'ஒடு' என்ற சொல் சிறப்பாக அமைந்துள்ளது எனச் சான்று கூறி விளக்கினார். மேலும் அவர்,

"தன் கருத்தைச் சொல்ல மிகுந்த கற்பனையைச் சொல்ல வேண்டும் என்பதில்லை. கருதியவாறே உணர வைக்க ஒரு சொல் போதுமானது. மேனாட்டார் கூறும் நான்கு முறைகள் பாட்டில் இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம். இந்நான்கு கூறுகளும் இல்லாமல் அமைந்த இருபாடல்கள் (Emotional and Intellectual elements) கற்பனை உவமை முதலியன இல்லாமல் இந்தப் புலவன் தன் கருத்தைக் கூறிவிட்டானா என்ற அளவிற்கு நாம் பார்க்க வேண்டும்.

*(எ.டு.)* "யாண்டு பலவாக நரையில வாகுதல்...."

"அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில்...."

இன்னும் அவர் தந்த சான்றுகள்:

"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே
அதைத் தொழுது படித்திடடி பாப்பா"

"வாழும் குமரிமுனை"

தொழுது வாழும் என்ற சொற்கள் புலவனின் கருத்தை நுட்பமாக வெளிப்படுத்துகின்றன."

இப்படி என் பேரா. வ.சுப.மா. வாரத்தில் இரண்டு நாள் திறனாய்வு வகுப்பு நடத்தினார். இரண்டாம் ஆண்டில் வாரத்தில் மூன்று நாள் மொழியியல் பாடம் கற்பித்தார். அதிர்ந்து பேசாமல் அமர்ந்தே வகுப்பு நடத்துவார். விரைந்து பேசாமல் குறிப்பெடுக்கும் வேகத்தில் தான் பாடம் நடத்துவார். சில நேரங்களில் கரும்பலகையைப் பயன்படுத்துவதுண்டு. இப்படி இரு ஆண்டுகளிலும் மூதறிஞர் கற்பித்த பாடங்களின் குறிப்புகளை இன்றும் கூடப்



பாதுகாத்து வருகின்றேன். எனக்கு வகுப்பு நடத்திய எல்லா ஆசிரியர்களின் உரைகளையும் குறிப்பெடுத்து வந்துள்ளேன் நான். மேலே காண்பது இருநாள் வகுப்பில் மூதறிஞர் விரித்த உரைக்குறிப்பாகும்.

நாங்கள் இரண்டாம் ஆண்டு முதுகலை பயிலும்போது விடுதிமாணவர் வேலைநிறுத்தம். பேராசிரியர் தம் வீட்டின் முன் ஒரு நாள் முழுக்க நின்றார். மாணவர்கள் வேலைநிறுத்தம் காரணமாக முதல்வர் பொறுப்பை வேண்டாமென விடுத்தார். இரண்டாம் ஆண்டு மாணவர்களாகிய நாங்கள் அறுவரும் முதல்வரைக் காணச் சென்றோம். மீண்டும் முதல்வராக வருமாறு மன்றாடி வேண்டினோம். அவரோ, "பெரிதே உலகம் பேணுநர் பலரே!" என்று சங்கத் தொடரையே மறுமொழியாகக் கூறினார். பின்னர் தமிழ்ச் சான்றோர்தம் வேண்டுகோளை ஏற்று மீண்டும் முதல்வரானார்.

முதுகலை பயில்கின்ற மாணவர்களில் இருவர் வாரத்தில் ஒருநாள், கட்டுரை வாசித்து அளிக்கவேண்டும். எழுத்துத்திறனையும் பேசுந்திறனையும் வளர்க்கும் நோக்கில் புதன்வட்டம் போல் நடைபெறும். நான் முதலாண்டு பயிலும்போது இரண்டாவது ஆண்டு பயிலும் மாணவநண்பர் கட்டுரை படிக்கும் போது தம்முடைய கைக்குட்டையால் அடிக்கடி முகத்தைத் துடைத்துக்கொண்டிருந்தார். அப்போது தலைமை தாங்கிய பேராசிரியர். வ.சுப.மா, "ஏம்ப்பா மழைபெஞ்சா கார்ல்ல ஒரு விசையடிக்குமே, அதுபோல முகத்திலே நீ அடிச்சிக்கிட்டிருந்தே!" என்று மெல்லிய நகைச்சுவையுணர்வுடன் அறிவுறுத்தினார்.

## பேராசிரியரின் துணிவு

1967 - ஆம் ஆண்டு அறிஞர் அண்ணா தலைமையில் ஆட்சிமாற்றம்; கல்வி அமைச்சராக இருந்தவர் நாவலர் நெடுஞ்செழியன்; அழகப்பா தொழில்நுட்பக் கல்லூரியில் பேசிய நாவலர், "பத்துப் புறநானூற்றுப்பாடலையும், பத்துக் குறுந்தொகைப்பாடலையும் படித்து விடுவதால் என்ன பயன்?" என்று பேசிவிட்டார். இதனைக் கேட்டுக் கொண்டிருந்த பேரா.வ.சுப.மா பதினைந்து பக்க அளவில் உருளச்சுச் செய்த சுற்றறிக்கை ஒன்றை ஆயத்தம் செய்தார். "தமிழறி நாவல, நும் வாயா இப்படிப் பேசுவது?" எனத் தலைப்பிட்டு அறிக்கையை உருட்டச்சுச் செய்து பலருக்கும் அனுப்பிவைத்த துணிவு இவருக்கன்றி வேறு யாருக்கு வரும்?

1967ஆம் ஆண்டில் அழகப்பர் தமிழ்மன்றச் சுழற்கோப்பை, நெல்லைத் தனித்தமிழ் இலக்கியக் கழகச் சுழற்கோப்பை என்பன நான் கலந்துகொண்ட கட்டுரைப் போட்டிக்குக் கிடைத்தன. முதல்வர் வ.சுப.மா அப்போது வணிகவியல் துறைத்தலைவர் திரு. வாசுதேவ ஐயரிடம், 'நம்ம சொக்கலிங்கம் நம் கல்லூரியில் இன்னும் படித்துக்கொண்டிருந்தால் ஆண்டுதோறும் கல்லூரிக்குச் சுழற்கோப்பை கிடைக்குமல்லவா?' என்று சொன்னது இன்றும் என் செவிகளில் ஒலித்துக்கொண்டே இருக்கின்றது.

1968இல் பல்கலைக்கழகத் தேர்வு எழுதும்போது தொலைபேசித் துறையில் ஊதியமில்லா விடுப்பு மூன்றுதிங்கள் எடுத்துப் படித்துவந்தேன். அப்போது கல்லூரியிலிருந்து பணவுதவி செய்ய மூதறிஞர் ஏற்பாடு செய்தமையினை நினைந்து நினைந்து போற்றுகிறேன். என் வகுப்புத்தோழர் பேரா. வை. சாத்தையாமீது அளவிறந்த அன்பு செலுத்தியவர். அவருடைய

இளமுனைவர் (எம்.ஃபில்.,) ஆய்வுத்தலைப்புக் கூட வ.சுப.மா அவர்கள் வழங்கியதே ஆகும். அது 'தமிழ் இலக்கியத்தில் அம்பலும் அலரும்' என்பதாகும்.

தமிழ்ப் பல்கலைக்கழகம் நிறுவத் தஞ்சையில் இடம் தேர்வு செய்யும் குழுவில் வ. அய். சுப்பிரமணியமும் பேரா.வ.சுப.மா.வும் இருந்தனர். 'தமிழுக்கு ஓராயிரமாவது வேண்டும்' என்று நிலம் பெற்றுத்தந்த பேருள்ளம் பேராசிரியரின் உள்ளம். இடத்தைத் தேர்வு செய்துவிட்டு இருவரும் ம.கா. பல்கலைக்கழக முதன்மை விருந்தில்லத்தில் வந்து தங்கியிருந்தனர். இதனை அறிந்த முனைவர் துரை.சீனிச்சாமியும் நானும் எங்கள் பேராசிரியப்பெருந்தகை தமிழ்ச்செம்மல் வ.சுப. மாணிக்கனாரைப் பார்க்கப் போனோம். அப்போது நல்ல உயரமான சீனிச்சாமியையும் அவரைவிடக் குறைந்த உயரம் உடைய என்னையும் பார்த்தவுடன் பேராசிரியருக்கு,

"குறுமையும் நெடுமையும் அளவிற் கோடலின்
தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத் தியல" (தொல். எழுத் - 50)

என்ற தொல்காப்பிய நூற்பா நினைவுக்கு வர அந்நூற்பாவையே சொல்லி நலம் விசாரித்தார்.

மூதறிஞர் துணைவேந்தராக இருந்தபோது அஞ்சல் வழியில் முதுகலை தமிழ் பயிலும் மாணவர்க்குப் பரிவுகாட்ட வேண்டி ஒரு புதிய மதிப்பெண் வழங்கும் திட்டத்தைத் தெரிவித்தார். அப்போது முதுகலைத் தமிழ்ப் பாடத்திற்குத் தலைமைத் தேர்வாளராக (Chairman) ஆக இருந்த முனைவர் இராம. சண்முகத்திடம் இப்பொறுப்பை ஒப்படைத்தார். முதல், இரண்டாம் ஆண்டுகளுக்குரிய 12 தாள்களில் எந்த ஒரு சலுகையும் பெறாமல் இரண்டாம் ஆண்டில் ஏதேனும் ஒரு தாளில் 35 மதிப்பெண் பெற்று முதுகலைப் பட்டம் பெறாமல் ஒரு மாணவன் இருப்பான் என்றால் அவனுக்கு 15 மதிப்பெண் கருணை அடிப்படையில் வழங்குமாறு சொன்னார்.

கிட்டத்தட்ட 700 மாணவர்களில் 16 மாணவர்களே எஞ்சி இருந்தனர். அப்படி மாணவர்களின்பால் பரிவு காட்டினார் வ.சுப. மாணிக்கனார்.

பல்கலைக்கழகத்தில் மு.வ. அரங்கில் நடைபெற்ற மைய மதிப்பீட்டிற்குத் தலைமைத் தேர்வாளராகவும் இருந்து எங்களை ஊக்கப்படுத்தியுள்ளார். எங்கள் இலக்கியப்பேரவைக்கு அழைத்தபோது மனம் உவந்து நாங்கள் கொடுத்த சிறுதொகையையும் பெற்றுக்கொண்டு நாகமலைப் புதுக்கோட்டைக்கு வந்து சொற்பொழிவு நிகழ்த்திய எளிவந்த தன்மை எங்களை வியக்கச் செய்தது; மெய்சிலிர்க்கச் செய்தது!

அம்மட்டோ! பேரா. இரா. மோகனும் நானும் இணைந்து எழுதிய 'உரைமரபுகள்' நூலுக்குத் தக்க மதிப்புரை நல்கிச் சிறப்பித்து எங்களை வாழ்த்தினார். மாணிக்கனாரின் கையெழுத்து வடிவிலேயே அவர் தந்த மதிப்புரையைப் பதிவு செய்து மகிழ்ந்தோம்.

வள்ளுவ நெறியில் வாழ்ந்து காட்டிய தமிழ் நெறியாளர் என் போன்றோர்க்குக் குருவாய் வாய்த்தமைக்கு நான் செய்த பேறு காரணம்.



# கோபுரத்தில் ஏற்றி வைத்த கோமகன்!

முனைவர் **கி.செம்பியன்**
முன்னைத் தமிழ்த்துறைத்தலைவர், ஏ.வி.சி. கல்லூரி,
மன்னன்பந்தல், மயிலாடுதுறை.

*ஆண்டுகள் 1970-1972; அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகவும் கலைப்புலத் தலைவராகவும் பணிபுரிந்தார் அந்த மாமனிதர் மாணிக்கனார். எங்கள் வகுப்பில் 25 மாணவர்கள் எம்.ஏ. தமிழ் இலக்கியம் பயின்றுவந்தோம். எங்களுக்குப் பாடம் தொல்காப்பியம் சேனாவரையம். ஐயாவிடம் இலக்கணம் பயின்றதால், அடியேன் க் ச் த் ப் --மிகுதலும் மிகாமையும், தொகைகள், ஒருமை பன்மை ஆகிய இலக்கண நூல்களை உருவாக்க முடிந்தது என்றால், அவர்கள்தம் இலக்கணப் புலமையையும் கற்பிக்கும் திறனையும் நீங்கள் உணரலாம்! மிக மிகச் சாதாரணக் குடும்பத்தில், உள் கிராமத்தில் பிறந்து சாதாரணப் பள்ளிக்கூடங்களில் பயின்று வளர்ந்த நான், ஐயாவிடம் இரண்டு ஆண்டுகள் தமிழ் பயின்றதாலேயே இந்த அளவு தமிழ் அறிவைப் பெற முடிந்தது என்றால், அதுதான் ஐயாவின் திறமை. சான்றைத் தேடி எங்கும் அலையவேண்டா என்பதற்காகவே என்னையே சான்றாக்கினேன். என்னைப்போல் ஆயிரம் மாணவர்கள்!*

*ஐயாவின் ஒழுக்கநெறிகளை வாழ்நாளெல்லாம் கடைப்பிடித்து நற்பெயர் ஈட்டி, ஓர் எடுத்துக்காட்டான பேராசிரியன் என்று பெயர் பெற்றேன் என்பது உண்மையானால், அப்புகழ் முழுவதும் ஐயா மாணிக்கனாரையே சேரும்.*

*ஐயா தமிழ் இலக்கியம் கற்பித்தவர் மட்டுமல்லர்; தமிழாகவே வாழ்ந்தவர். எப்படி? தமிழ் என்றால், 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' ; தமிழ் என்றால், 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' ; தமிழ் என்றால் 'சாதி இரண்டொழிய வேறில்லை' ; தமிழ் என்றால் 'சாதிகள் இல்லையடி பாப்பா'; இவை மெய்யென்றால், அந்த மெய்யின் இயக்கம்தாம் மாணிக்கனார். எப்படி? சான்றுடன் நிறுவுவதற்கு எங்கும் போகவேண்டா! மாணவர்கள் 25 பேரில் 20 பேர் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றார்கள்! அவர்களுள் நால்வரை, அதே அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துத் தமிழ்த்துறையில் பணியமர்த்தினார்கள், ஒரு சல்லிக்காசு செலவில்லாமல்! அச்செயல்தான் யாதும் ஊரே யாவரும் கேளிரா என்று உங்களுக்கு வினவத் தோன்றலாம்! அந்த நால்வருள் ஒருவர் ஆதிதிராவிடர், ஒருவர் வன்னியர், ஒருவர் செட்டியார், ஒருவர் பிராமணர்! அவர் தமிழைப் புரிந்துகொண்ட, உணர்ந்துகொண்ட அறிவார்ந்த தமிழர் என்பதற்கு இச்செயல் போதாதா?*

*1981ஆம் ஆண்டு 'பட்டுக்கோட்டையின் பாட்டுத்திறம் - ஒப்பாய்வு' என்றொரு நூலை எழுதினேன்; அதன்கண் 'என் எளிய படையல்' என்னும் பகுதியில் பின்வருமாறு பதித்து வைத்தேன்:*

"எனக்குப் பேராசிரியராய்த் தோன்றித் தமிழறிவு தந்ததுடன் வேற்றுச்சாதி என்று பாராமல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பணிபுரிய வாய்ப்பளித்த மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்கட்கு"

*அவர் வள்ளுவம் படைத்த பேராசான் என்பதை உலகறியும். அத்தகு மேதை ஒருமுறை வகுப்பில் குறிப்பிட்டதைப் பதிவு செய்ய விரும்புகின்றேன். "எண்ணிய எண்ணியாங்கு எய்துப என்று வள்ளுவர் குறிப்பிட்டார்; சரிதான், எந்தப் பிறவியில் என்று குறிப்பிடவில்லையே!" - வகுப்பில் தொடர் சிரிப்பலை. கருத்தில் எத்தனை நுணுக்கம்!*

*மற்றொன்றை எடுத்துச்சொல்ல அவாவுகின்றேன்: "கட்டிச்சோற்று மூட்டை கையில் இருக்கிறவரை கனம்தான்; அதனை உண்டுவிட்டால் அதுவே நமக்குப் பலம் அன்றோ!" இது புதிய கருத்து விருந்தன்றோ?*

*குடிசையில் கிடந்த என்னைக் கோபுரத்தில் ஏற்றி வைத்த கோமகன்! யாருடைய பரிந்துரையும் இல்லாத, சாதாரணத்திலும் சாதாரணமான எனக்குக் கண்டார் வியக்கும் தோற்றத்தாலும், உலகோர் போற்றும் புகழாலும் பெருமையில் ஓங்கி உயர்ந்திருந்த அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நான் கேட்டுக்கொள்ளாமல், பணி வழங்கினாரே, அந்தப் பெருந்தகையாளரின் பெருஞ்செயலை, நினைந்து நினைந்து நினைந்து, வியந்து வியந்து வியந்து வாழ்ந்துவருவதுதான் என் வாழ்நாள் கடமையாக உள்ளது; தமிழ்த்தாய் எனக்குக் காட்டிய தனிப்பெரும் தமிழ்மகன்! எனது எளிமை கண்டு இரங்கிய, நான் கண்ட பாரதியே, நான் கண்ட பாரியே, உள்ளுந்தோறும் உள்ளுந்தோறும் உயர்ந்து நிற்கிறீர் மாணிக்க வள்ளலே! உமது புகழ் உலகெலாம் பரவுக!*



## மாணிக்க மொழிகள்

***பிறப்பே மனிதனுக்குப் பெரும்பதவி. ஏனைய பதவியெல்லாம் உட்சிறு பதவிகள் என்று கணக்கிடும் போக்கு எனக்கு உண்டு.***

–மதுரையில் பேசியபோது (1986)

***வாழ்க்கை வரலாறுகளைப் படிப்பதுபோல் பேருரம் தரும் ஆற்றல் வேறு எந்த நூற்கும் இல்லை.***

–விவேகானந்த மையப் பொழிவு– 1986

**தமிழ் நினைவும் தமிழ் வலுவும் தமிழ் வளமும் இல்லாத தமிழகப் பல்கலைக்கழகங்கள் மாற்றுக் குறைந்தனவே.**

– அழகப்பா – பொழிவு 1986.



# மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் சூரியோதயம் தோற்றுவித்த மாணிக்கனார்

பேராசிரியர் முனைவர் **செ.ஈ.சூரியமூர்த்தி** M.Sc, M.S., Ph.D. (USA)
எரியந்துறை, ம.காமராசர் பல்கலைக்கழகம், மதுரை

ஆங்கிலேயர்கள் ஆட்சிக்குப்பின் நம் பாரத நாட்டின் கல்விமுறை மூன்று பெரும் பகுதிகளாகப் பிரிந்து அமைந்தது. அவைகளாவன; 1) பள்ளிக் கல்விமுறை 2) கல்லூரிக் கல்விமுறை 3) பல்கலைக்கழகக் கல்விமுறை என்பன. வாழ்வியலுக்கு வேண்டிய அடிப்படையான அறிவியல் இலக்கியப் போதனைகளைப் பள்ளிக்கல்வி ஆரம்பித்து வைக்கின்றது. உலகத்தோடு ஒன்றிவாழக் கற்றுக் கொடுக்கின்றது. அதற்கு மேலும் அறிவு வேட்கை உடையோர் தாம் விரும்பும் துறைகளை ஆழமாகக் கல்லூரிக் கல்வியில் பெறுகிறார்கள், "நுண்மாண் நுழைபுலம் மிக்கோர்" ஆய்வுகள் பல செய்து புதுமைகளைக் காணவேண்டும் என்ற நோக்கோடு பல்கலைக்கழகங்களை நாடுகின்றார்கள். இங்கு கலைத்துறைகள், அறிவியற்றுறைகள் என ஆய்வுத்துறைகள் பெருகியும் வளர்ந்தும் கொண்டிருக்கும்.

மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தில். தமிழ் அறிஞர்கள் மீனாட்சிசுந்தரனார், வரதராசனார் முதலியோர் துணைவேந்தர்களாக இருந்து அருந்தொண்டு ஆற்றினார்கள். அப்பாரம்பரியத்திலே 1979ஆம்ஆண்டு ஆகஸ்டு மாதம் தமிழறிஞர் முனைவர். வ.சுப. மாணிக்கனார் அவர்கள் இப்பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகப் பதவி ஏற்றார்கள். அப்போது உலகப் புகழ்பெற்ற உயிரியல் அறிஞர் முனைவர். கிருஷ்ணசாமி அவர்கள் சிறப்பு அலுவலராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார்கள்.

அப்போது உலக பெட்ரோலிய எண்ணெய்ச் சந்தையில் கடுமையான விலை உயர்வு களும், தட்டுப்பாடுகளும் ஏற்பட்டன. உலக எண்ணெய்ச் சந்தையைக் கட்டுப்படுத்திய அராபிய நாடுகள் விலைகளை மிகவும் உயர்த்தின. இந்தியாவில் பெட்ரோலிய எண்ணெய்ப் 'பஞ்சம்' தோன்றியது. பொருளாதாரம் வீழத் தொடங்கியது. இந்தியப் பொருளாதாரத்தை மீட்க, பல்கலைக் கழகங்களால் மட்டுமே முடியும் என்பது தெளிவாகியது.

இந்நிலையில் இந்தியப் பல்கலைக் கழக அறிவியலாளர்கள் மூன்று முக்கிய ஆய்வு முடிவுகளை வெளியிட்டனர். அவைகளாவன;

1. உலக (பெட்ரோலிய) எண்ணெய் வளங்கள் இன்னும் 50 ஆண்டுகளில் முழுவதுமாகத் தீர்ந்துவிடும்.
2. பெட்ரோலியப் பொருட்களின் பயன்பாட்டினால் அதிக கரியமில வாயு உற்பத்தியாகி அவைகள் வளிமண்டலத்தை அசுத்தமாக்கியும், அதிக வெப்ப ஏற்றத்தையும் உண்டாக்குகிறது. அதனால் மனிதஇனமே அழியவும் வாய்ப்பு உள்ளது.

3. குறைவுபடாத, சுத்தமான மாற்று எரிபொருட்களும் உள்ளன. அவைகளை, பயன்படுத்த புதிய ஆய்வுகள் தேவை.

*மாற்று எரிபொருட்களாவன:*

1. சூரியஒளி
2. உயிர்க்கூளம்
3. கடலின் வெப்பம், அலைகள்
4. காற்று (வீசும்)
5. பூமியின் உள் வெப்பம் (சூடு)
6. நீர் வீழ்ச்சிகள்

*இவை இலவசமாக, பூமியின் மேற்பரப்பில் பரந்து கிடைக்கின்றன. இவைகளைப் பயன்படுத்தும் முறைகளை ஆய்வுகள் மூலமாகவே பெறமுடியும். அவ்வாய்வுகள் நடைபெற உகந்த இடம் பல்கலைக்கழக ஆய்வுக்கூடங்களே.*

*இவற்றையெல்லாம் உணர்ந்துகொண்ட துணைவேந்தர் மாணிக்கனார் அவர்கள், மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தை இவ்வாராய்ச்சி ஓட்டத்தில் ஈடுபடுத்த விரைந்து முனைந்தார்.*

இதனை இதனால் இவன்முடிக்கும் என்று ஆய்ந்து
அதனை அவன்கண் விடல் - திருக்குறள் *517*

*என்ற வள்ளுவத்திற்கேற்ப, அதற்குத் தகுந்த வல்லுநர்களையும் தேர்ந்தெடுத்தார். பல்கலைக் கழக மானியக் குழுவுடன் நெருங்கிய தொடர்புடைய பேராசிரியர், கிருஷ்ணசாமியிடம் புதுத்துறை ஒன்றைத் தொடங்கும் பொறுப்பை ஒப்படைத்தார். அவரும் உடனே புதுப்பிக்கப் படக்கூடிய ஆற்றல் துறை என்ற புது ஆய்வுத்துறையை நிறுவ ஏற்பாடுகள் செய்தார். மத்திய அரசின் புதுப்பிக்கப்படும் ஆற்றல் அமைச்சகமும், பல்கலைக்கழக மானியக் குழுவும்* (UGC) *வேண்டிய பொருளுதவி செய்தன. துணைவேந்தர் அவர்கள் ஆட்சிக்குழுவின் முழு ஒப்புதலோடு முதன்முறையாக ஒரு பல்கலைக்கழகத்தில், 'ஆற்றல், சூழல், இயற்கை வளம்' என்ற பள்ளித்துறை* (School of Energy, Environment and Natural Resources - SEEN) *ஆரம்பிக்கப்பட்டது. இதற்குத் தலையாய காரணம் துணைவேந்தர் வ.சுப.மாணிக்கனாரின் முன்னோக்குப் பார்வையும் உழைப்பும் தலைமையும் ஆகும்.*

*பல்கலைக்கழக மானியக்குழுவின் பொருள் வருமுன்பே துறைக்கான கட்டிடம் தயாராகி வந்தது. இயற்பியல் துறையில் பணிசெய்துகொண்டிருந்த என்னைப் புதுத்துறையின் பொறுப்பை ஏற்க வைத்தார். இரவு பகல் பாராது நாங்கள் உழைத்தோம். எங்களுக்குத் தோள் கொடுத்து நின்றார் துணைவேந்தர் மாணிக்கனார் அவர்கள். தென்னிந்தியாவில் சூரிய ஆற்றலுக்கான ஒரு ஆய்வுத்துறை இங்குதான் முதலில் தோன்றியது.*

*ஆற்றல், சூழல், இயற்கை வளத்துறையில் முதுகலைப்* (M.Sc.) *படிப்பும், எம்.பில்* (M.Phil) *படிப்பும் முறையாகத் தொடங்கப்பட்டன. பின், முனைவர் படிப்பும் தொடர்ந்தது. பல, பொறியியல்* (BE) *மாணவர்கள் கூட முதுகலைப் படிப்பில் சேர்ந்து பயன்பெற்றார்கள்.*



இங்கு பல சூரிய வெப்பக் கருவிகள் வடிவமைக்கப்பட்டுப் பரிசோதிக்கப்பட்டன. அவைகளில் சூரிய அடுப்பும், சூரிய வெந்நீர்க்கலனும் முக்கியமானவை. மேலும் இவற்றைத் தர நிர்ணயம் செய்யும் தகுதிகளும் உருவாக்கப்பட்டன. அதற்கு வேண்டிய கருவிகளும் உருவாக்கப்பட்டன. இச்சமயம் நாட்டில் பல வியாபார அமைப்புகள் இவைகளை உற்பத்தி செய்யவும் ஆரம்பித்தன. அவைகள் இத்துறையிடம் தொழில்நுட்ப ஆலோசனைகள் பெற்றன. இந்தியத் தர நிர்ணய அமைப்பும் (Indian Standard Institute - ISI) பல்கலை ஆற்றல் துறையைத் தர நிர்ணயம் செய்யும் பொறுப்பிற்கு அனுமதி கொடுத்தது. இது ஆற்றல் துறைக்குக் கிடைத்த உயர்ந்த அங்கீகாரமாகும். தர நிர்ணயம் செய்ய அதற்குரிய பணமும் கட்ட வேண்டும். இதனால் துறைக்கு வருவாய் கிடைத்தது. சில மாணவர்களுக்கு மாத ஊதியமும் கிடைத்தது. பல்கலை வரலாற்றிலேயே இது ஒரு புதிய திருப்புமுனையாகும்.

பயிற்சி பெற்ற மாணவர்களுக்கு சூரிய வெப்ப சாதனங்களை உற்பத்தி செய்யத் தொழிலகங்களிலும் வேலைகள் கிடைத்தன. பல மாணவர்கள் சிறந்த சூரிய சாதனங்களை உற்பத்தி செய்யும் தொழில் முனைவோர்கள் ஆயினர். இன்று வரை அந்த வளர்ச்சி தொடர்கின்றது.

ஆற்றல் துறை வளாகத்தில் இன்றும் தொடர்ந்து ஆய்வுகள் நடைபெற்று வருகின்றன. பல தேசியப் பன்னாட்டு ஆய்வு மாநாடுகள் பல்கலை வளாகத்தில் நடைபெற்றுள்ளன. ஏராளமான மாணவர்கள் முனைவர் பட்டங்கள் பெற்று மேலும் ஆய்வுகள் நடத்தி வருகின்றனர்.

நல்ல முன்னோக்குடன், துணைவேந்தர் மாணிக்கனார் தொடங்கி வைத்த ஆற்றல்துறை சீரும் சிறப்புமாக வளர்ந்து சமுதாய சேவைசெய்து வருகின்றது. எதிர்காலம் பிரகாசமாக உள்ளது. அவரால் உதித்த சூரிய ஆற்றல் துறைக்கு அந்திமமே கிடையாது!

"நாடென்ப நாடா வளத்தன" என்ற குறள் உண்மையை உணர்த்தும் துறையாகும் இது. சூரிய ஆற்றலும் ஒரு நாடாவளமே!



## மாணிக்கச் சிந்தனைகள்

**பரிசு பெறும் ஆசையோ, பெரும் பரிசுத் தொகையைப் பெறும் ஆசையோ, புகழாசையோ என்னைக் கவர்ந்ததில்லை. அத்தகைய ஒரு நோக்கம் கொண்டால், எண்ணங்களும் முயற்சியும் ஆக்கங்களும் கற்பனைகளும் படைப்புக்களும் என் வாழ்வில் கூடுதலாகும் என்ற முயற்சியூக்கமே என் நோக்காகும். என் திறன்களை மேன்மேலும் உயர்த்திக் கொள்வதே என் குறிக்கோள்.**



# உலகளந்த பெருமாள்

முனைவர் **வே.மாணிக்கம்**
பாளையங்கோட்டை

*வ.சுப. மாணிக்கனார் அவர்கள் தொல்காப்பியத்தின்மீது கொண்டிருந்த ஈடுபாட்டைத் தன் மகனுக்குத் தொல்காப்பியன் என்று பெயர் சூட்டியதிலிருந்தே உணரலாம். தொல்காப்பியக்கடலில் நீந்தி தொல்காப்பியத் திறன், தொல்காப்பியப் புதுமை, தொல்காப்பியம் தமிழுக்கு முதல் நூல், தொல்காப்பியர் ஒரு மொழி அறிஞர் என்பன போன்ற கட்டுரைகள் பலவற்றால் தொல்காப்பியரின் அறிவு நுட்பத்தையும் தனிச் சிறப்பையும் வ.சுப. அவர்கள் மக்கள் மன்றத்தில் கொண்டு சேர்த்தார். தொல்காப்பியம் மொழிமரபையும், தமிழர் பண்பாட்டையும் உணர்த்தி, சங்க காலம் முதல் இலக்கியம் படைப்போர்க்கு மொழிக் கட்டமைப்பை அறிவிக்கும் வழிகாட்டியாய் விளங்குவதை மாணிக்கவுரையில் ஐயா வகுத்துரைத்தார்கள். வ.சுப. அவர்கள் தொல்காப்பியரை 'உலகளந்த பெருமான்' என்ற பொருளாழம் மிகுந்த தொடரால் குறிப்பிடுவார். ஆனால், இன்று இலக்கணத்தைக் கற்கவும் கேட்கவும் போற்றிப் புகழவும் தமிழ் மக்களிடம் ஆர்வமில்லை. "இலக்கணம் என்றாலே பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் முதல் வயது வந்தவர்கள் வரையில் பயப்படுவதற்குக் காரணமாகி விட்டது. இது இந்த நாட்டின் துரதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும்" என்று கி.வா.ஜ. வருந்துகின்றார். மூதறிஞர் செம்மல் வ.சுப. அவர்கள் தன் உள்ளத்தில் உயர்ந்த இடத்தைக் கொடுத்திருந்த தொல்காப்பியத்தின் சிறப்பைத் தொடர்ந்து எடுத்துச் செல்வதே அவருடைய மாணாக்கர் அவர்க்குச் செய்யும் நன்றிக் கடனாக விளங்கும். இந்த நோக்கில் தொல்காப்பிய இலக்கணம் குறித்துப் பரப்பப்படும் தவறான கருத்துக்களை மறுத்து உண்மையை மாணவர்க்கு உணர்த்தும் வகையில் இக்கட்டுரை அமைகின்றது.*

*திரு. அவினாசிலிங்கம் அவர்கள், 1942இல் கல்வி அமைச்சராக இருந்தபோது உயர்நிலைப்பள்ளி மாணவர்க்குத் தமிழ் இலக்கணத்தில் சில பகுதிகளைத் தேர்ந்தெடுத்துப் பாடமாக வைத்தார். இதனைத் திருவாளர் கல்கி, தனது 'திருமகளும் கலைமகளும்' என்ற கட்டுரையில், '1942 ஆம் ஆண்டு அரசியலார் தேசத்தில் எத்தனையோ கொடுமைகளை இழைத்தனர் என்பதை எல்லாரும் அறிவார்கள். அவற்றுளெல்லாம் பெருங்கொடுமை ஹைஸ்கூல் மாணவர்களின் பாடத்தில் தமிழ் இலக்கணத்தைப் புதிதாகச் சேர்த்ததுதான் என்று நாம் கருதுகிறோம். (ப.21) இலக்கணத்தை விட்டுத் தொலைப்பதினாலேயே மூளை குழம்பாமல் தப்பிப் பிழைக்கின்றனர் (ப.19). சித்திரவதை செய்வதற்கென்றே ஏற்பட்ட பயங்கரக் கருவிகளில் இலக்கணம் என்பது ஒன்று(ப.16). கருணையால் பாஷைப் பயிற்சியில் இலக்கணம் முக்கியமில்லை என்று ஏற்படுத்தியிருந்தார்கள். யார் செய்த பாவமோ, என்னமோ, எந்த ராட்சஸ மூளையில் மறுபடியும் தோன்றியதோ, இலக்கண அரக்கன்*



மறுபடியும் பாடத்தில் புகுந்துவிட்டான். இவர்கள் இகத்திலும் பரத்திலும் என்னகதி அடையப் போகிறார்களோ?(ப.17). இலக்கணம் கற்றுக்கொண்டு இந்த விதிகளின்படி பேசவோ எழுதவோ ஆரம்பித்தால் பேசவும் எழுதவும் வராது.(ப.22). தமிழை எவ்வளவு பிழைகளுடன் வேண்டுமானாலும் எழுதட்டும்; இந்தப் பயங்கர சித்திரவதை வேண்டாம் என்று கூறுகின்றார்."(ப.22)'

கல்கியின் இக்கருத்துக்களில் உண்மை உள்ளதா என்பதை நாம் தனித்தனியாக ஆராயலாம். 'இலக்கணம் கற்றுக்கொண்டு இந்த விதிகளின்படி பேசவோ ஆரம்பித்தால் பேசவும் வராது, எழுதவும் வராது என்று கல்கி கூறியிருப்பது முற்றிலும் தவறான செய்தி. தொல்காப்பியர் தமிழ் மொழி வழங்கும் நிலத்தின் எல்லையையும் இயல்பையும் நன்கு ஆராய்ந்து, மக்கள் வழக்காகிய பேச்சு வழக்கையும், எழுத்து வழக்காகிய செய்யுள் வழக்கையும் நுட்பமாகக் கண்டுணர்ந்து, இவற்றிற்கே இலக்கணம் வகுத்துள்ளார். தொல்காப்பியர் கூறும் இலக்கண விதிப்படியே மக்கள் பேசியும் எழுதியும் வருகின்றனர். மக்களின் பேச்சு வழக்கை உற்றுக் கவனித்தால் இதனை உணரலாம்.

சொற்களில் மகர ஒற்றை(ம்) ஈறாகக் கொண்ட சொற்கள் தொடரில் வரும்போது, அவை அத்துச் சாரியை பெறும் என்கின்றார் தொல்காப்பியர், இதனை 'மஃகான் புள்ளி முன் அத்தே சாரியை' என்று தொல்காப்பிய நூற்பா குறிப்பிடுகின்றது. தொல்காப்பியரின் இந்த இலக்கணப்படியே நாம் எழுதியும் பேசியும் வருகின்றோம். ஒரு குடும்பத்தில் ஐந்து வயதுச் சிறுவன் முதல் முதியவர் வரை இந்த விதியின் படியே பேசுவதை அவர்களது உரையாடலை உற்றுக் கவனித்தால் உணரலாம்.

'கன்னம் - கன்னத்தை', 'படம் - படத்தை', 'நகம் - நகத்தை', 'சவம் - சவத்தை', 'பணம் - பணத்தை', 'குணம் - குணத்தை', 'அகம் - அகத்துக்கு', 'முகம் - முகத்துக்கு' என 'ம்' என முடியும் சொற்களைத் தொல்காப்பியர் இலக்கண விதிப்படி 'அத்துச் சாரியை' யுடன் தான் மக்கள் வழக்கில் பேசுகின்றனர். இதுபோன்று எழுத்திலும் 'மனத்துக்கண் மாசிலனாதல்' என்றே எழுதப் பெற்றுள்ளது.

தூரத்தில் தெரியும் உருவம் உயர்திணை என்பது மட்டும் தெரிகிறது. அவ்வுருவம் ஆணா, பெண்ணா என்று தெரியாத நிலையில் 'அங்கே நிற்பவர் யார்?' எனப் பன்மையில் சுட்ட வேண்டும் என்பது தொல்காப்பியர் விதி. இதன்படியே பிறக்கும் குழந்தை ஆணா, பெண்ணா என்று தெரியாத நிலையில் 'நாம் இருவர் நமக்கு ஒருவர்' எனக் குடும்பக்கட்டுப்பாட்டு விளம்பரத்தில் பன்மையில் அமைந்துள்ளதை வ.சுப. அவர்கள் எடுத்துக்காட்டுவார்.

'மரப்பெயர்க் கிளவிக்கு அம்மே சாரியை' (எழுத்து 415) என்ற இலக்கண விதியின்படியே 'உசிலம்பட்டி, பனம்பழம், மாம்பழம், வேப்பம்பழம்' என எழுதியும் பேசியும் வருகின்றோம். 'நாட்டை, வீட்டை, திருவடி, மாவிலை, பனையோலை' என மக்கள் வழக்கிலும், இலக்கிய வழக்கிலும் வழங்கும் சொற்கள் அனைத்தும் இலக்கண வரம்பிற்கு உள்பட்டு எளிமையாக வழங்குகின்றன. உண்மை இவ்வாறு இருக்க, 'இலக்கண அரக்கன், சித்திரவதை செய்வதற்கென்றே ஏற்பட்ட பயங்கரக் கருவி, இலக்கண விதிகளின்படி பேசவோ எழுதவோ ஆரம்பித்தால், பேசவும் வராது, எழுதவும் வராது' என்று கல்கி எழுதியிருப்பது உண்மைக்கு

மாறான தவறான கருத்து என்பதை மேற்கூறிய சான்றுகளால் அறியலாம்.

திருவாளர் கல்கி அவர்களின் இரண்டாம் குற்றச்சாட்டு 'தமிழ் இலக்கணம் மூளையைக் குழப்பிவிடும், சித்திரவதை செய்வதற்கென்றே ஏற்பட்ட பயங்கரக் கருவி' என்பதாகும். இது முற்றிலும் கற்பனையான உண்மைக்குப் புறம்பான குற்றச்சாட்டாகும். பிறமொழி இலக்கணங்களோடு தமிழ் மொழி இலக்கணத்தை ஒப்பிட்டுப் பார்த்தால், மூளையைக் குழப்பும் இலக்கணம் எது என்று தெளிவு பெறலாம்.

தமிழ்மொழியின் நீர்மைக்கும் எளிமைக்கும் உயர்வுக்கும் இன்னுமொரு சான்றைக் கூறலாம். தொல்காப்பியர் எழுத்துக்களை வரையறை செய்தது போல் அவற்றின் ஒலி வடிவத்தையும் பிறப்பியலில் வரையறை செய்துள்ளார். ஒரு சொல்லில் உள்ள எழுத்துக்களைக் கூட்டி வாசித்தாலே சொல்லிற்குரிய ஓசை தோன்றிவிடும். தமிழில் ஓர் எழுத்து தனித்தோ, சொல்லிலோ, எந்த இடத்தில் நின்றாலும் அதன் ஒலி மாறாது. இதனைத் தொல்காப்பியர்,

'மொழிப்படுத்து இசைப்பினும் தெரிந்து வேறு இசைப்பினும்
எழுத்தியல் திரியா என்மனார் புலவர்'

என்று குறிப்பிடுகின்றார் (எழுத்து- 53). 'வ' என்ற எழுத்து தனித்து நின்றாலும் வந்தான், அவன் எனச் சொற்களில் வந்தாலும் அது தன் ஓசையில் மாறாது. இது தமிழ் மொழியின் உயர்ந்த ஒலிக்கட்டமைப்பாகும். எனவேதான் பாரதி, 'சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே, யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவது எங்கும் காணோம்' என்று பாடினார். 'இது உண்மை, வெறும் புகழ்ச்சி இல்லை' என்று ஒப்புதல் வாக்குமூலம் கொடுத்தார்.

ஆனால், ஆங்கிலத்தில் எழுத்துக்கும் ஒலிக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அம்மொழியில் ஓர் உயிரெழுத்து பல இடங்களில் பல ஒலியாக ஒலிக்கும். ch என்ற எழுத்து Chemistry என்ற சொல்லில் 'க்' ஓசையையும், Choose என்ற சொல்லில் 'ச்' ஓசையாகவும் ஒலிக்கும். எனவேதான் தமிழில் எழுத்துக் கூட்டி வாசிப்பதைப் போல், ஆங்கிலச் சொற்களை வாசிக்க முடியாது.

வடமொழியின் துணையின்றித் தமிழ் தனித்து இயங்கவல்லது என்பதை வ.சுப. அவர்கள் தொல்காப்பியத்தின் வழி விளக்கி, பல புதிய சொற்களைத் தம்முடைய உரைநடையில் ஆக்கி வழங்கினார். தமிழ் இலக்கண மரபை எடுத்துக்காட்டி, மொழி மரபைக் காக்கும் பணியை ஐயா அவர்கள் ஆற்றி வந்தார். இன்று இதழ்கள், தொலைக்காட்சிகள் ஆகியவற்றின் மொழிப் பயன்பாடு கவலையளிக்கிறது. ஒற்றெழுத்து மிகாமல் எழுதினால் என்ன தவறு? என்று படித்தவர்கள் கேட்கும் நிலை உள்ளது. இன்றைய சூழ்நிலையில் தொல்காப்பிய மொழிக் கட்டமைப்பை எளிமையான முறையில் கற்பிக்க வேண்டிய தேவை நம்முன் உள்ளது. நாம் செய்யும் இந்தப் பணியே மூதறிஞர் செம்மல் வ.சுப. மாணிக்கனார் அவர்கட்குச் செய்யும் புகழஞ்சலியாக இருக்கும்.



# அரும்பேராசான் வ.சுப. மாணிக்கனார்!

முனைவர் **வ.குருநாதன்,**
முன்னைத் தமிழ் இலக்கியத் துறைத்தலைவர்,
தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

*1975 முதுகலைத் தமிழ் வகுப்பில் சேரவேண்டி, சென்னைப் பல்கலைக்கழகம் சார்ந்த இரு கல்லூரிகளுக்கும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற்கும் விண்ணப்பித்திருந்தேன். கல்லூரிகள் இரண்டிலுமிருந்து சேர்க்கைக் கடிதம் வந்த நிலையில், நான் மிகவும் விரும்பிய அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலிருந்து அழைப்பு வரவில்லை. தெரிந்து வரலாமென்று நேரில் சென்று, தமிழ்த்துறைத் தலைவரைக் கண்டு வணங்கி, 'ஐயா, நான் எம்.ஏ. வகுப்பில் சேர விண்ணப்பித்திருக்கிறேன்' என்று சொல்லி முடிப்பதற்குள், 'எம்.ஓ.எல், வகுப்பில் சேருகிறாயா?' என்று விடை வினா வந்தது. அதுவரை நான் அறிந்திராத ஒரு படிப்பில் சேரச் சொன்னதால், 'ஐயா, நான் எம்.ஏ...' என்று இழுப்பதற்குள், 'பன்னிப்பன்னிப் பேசக்கூடாது; எம்.ஓ.எல். சேருகிறாயா?' என்ற அதே வினா! ஒருநொடி நான் வாயடைத்த நிலையில் உடன்பட்டுத் தலையசைத்தேன் போலும். 'கடிதம் வரும்; உடனே வந்து சேர்' என்று ஆணை பிறந்தது. வெளியில் வந்து தான் வினவித்தெரிந்துகொண்டேன், எம்.ஓ.எல். என்பது 'மாஸ்டர் ஆஃப் ஓரியண்டல் லேர்னிங்ஸ்' (கீழைக்கல்வி வல்லுநர் - தமிழ்) என்றும், அதைப்படிக்கச் சொன்னவர்தாம் பேராசிரியர் வ.சுப. மாணிக்கனார் என்றும்!*

*அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அந்தக்காலத் தமிழ் எம்.ஏ. -யை விடவும் அகலமும் ஆழமும் கொண்ட தமிழறிவுப் பாடத்திட்டத்துடன் பயிற்றுவிக்கப்பட்ட எம்.ஓ.எல். தமிழ்ப்படிப்பைப் பற்றி மாணவர்கள் பலரும் அறியாமையாலும் அறிந்து மிரண்டதாலும் அவ்வகுப்பில் மாணவர் சேர்க்கை அருகியிருந்தது. ஆயினும், பேராசிரியர் அப்படிப்பை வளர்க்கும் கொள்கைப் பிடிப்போடு, எம்.ஏ. வகுப்பிற்கு விண்ணப்பிக்கும் மாணவர்களை மடைமாற்றம் செய்து எம்.ஓ.எல். வகுப்பில் சேர்த்துப் பயிற்றுவித்தார். அந்த ஆண்டில் முதல் மாணவனாகச் சேர்ந்த என்னைத் தொடர்ந்து 10 மாணவர்களும், 5 மாணவிகளுமாக 16 பேரைச் சேர்த்து வெற்றி கண்டார் வ.சுப. அடுத்த ஆண்டும் தொடர்ந்த எம்.ஓ.எல்., 1977 - இல் பேராசிரியரின் ஓய்வுக்குப்பின் தொடர இயலாமல் துவண்டது.*

*இன்றுபோல் கருத்தரங்குகள் மிகவும் நடைபெறாத அக்காலங்களில், 'தொல்காப் பியக் கருத்தரங்கு' என்பதுபோல் ஒவ்வொரு பொதுத்தலைப்பில் துறையாசிரியர்கள் அனைவரும் தனித்தனி ஆய்வுக்கட்டுரைகள் படிக்க வேண்டும் என்ற கட்டாயத்துடன், ஆண்டிற்கு இருமுறையாக ஏழாண்டுகளில் 14 கருத்தரங்குகளை மும்மூன்று நாள்களில் கோலாகலத் திருவிழாக்களைப்போல் நடத்திய சாதனை குறிப்பிடத்தக்கது.*

*1976 - 1977 கல்வியாண்டில் பேராசிரியர் வ.சுப.வின் தலைமைப் பெருமிதம் வெளிப்படுமாறு நிகழ்ந்ததோர் நிகழ்வு இங்கே நினைவுகூரத்தக்கது. நடுவண் அரசில் முன்னாள் அமைச்சராயிருந்த ஆற்றலும் செல்வாக்கும் மிக்க ஒருவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராய் வந்திருந்தார். ஒருநாள் முன்னறிவுப்பு ஏதுமின்றித் தமிழ்த்துறையைப் பார்வையிட வந்திருந்த துணைவேந்தர், அங்கே மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர், பெரும்புலவர் செ. வேங்கடராமச் செட்டியார் போன்ற முதுபெரும் பேராசிரியர்கள் அமர்ந்திருந்த ஆய்விருக்கைப் பகுதிக்குள் சென்று, பாரம்பரியத் தோற்றத்திலிருந்த அச்சான்றோர்களை மதிக்காமல், 'நீங்கள் யார்? இங்கே என்ன செய்கிறீர்கள்? என்று வினவவே, தம்மை அறிமுகப்படுத்திக்கொண்டு 'நான் கம்பராமாயண ஆய்வு செய்கிறேன்' என்று கூறிய அறிஞரிடம், 'மிகவும் அவசியந்தான்' என்று இகழ்ச்சியாகக் கூறிப் போய், அடுத்த அறையில் பண்டிதமணியின் மகனார் கதி. தியாகராசன் பாடம் நடத்திக்கொண்டிருந்த எம்.ஓ.எல். முதலாமாண்டு வகுப்பினுள் நுழைந்தவர், தரையில் கிடந்ததோர் காகிதக் கிழிசலைக் கண்டு கொதிப்படைந்து, அதனை எடுக்குமாறு ஆசிரியரையே ஏவினார்.*

*அவர் திகைத்து நின்றநிலையில் மாணவர்கள் பொங்கியது கண்ட துணைவேந்தர் அங்கிருந்து போய்விட்டார். உடனே, மாணவர்கள் அனைவரும் வகுப்பை விட்டு வெளியே வந்து துணைவேந்தருக்கு எதிராக முழக்கமிடவே, அவர்களை உடனடியாக அமைதிப்படுத்திய பேராசிரியர் வ.சுப. தாமே விரைந்துபோய்த் துணைவேந்தரைச் சந்தித்து, நுண்மாண் நுழைபுலத்தோடு நயந்து உரையாடி, அவரே வருத்தம் தெரிவிக்குமளவு அவர்தம் மிகைச்செயல்களை உணர்த்திவிட்டு மீண்டார். அன்றைய நிகழ்வில் அரும்பேராசான் வ.சுப. மலையமானின் மக்களை யானைக்கால்களால் இடறத் துணிந்த புறநானூற்றுக் கிள்ளிவளவனின் மிகைச்செயலை மாற்றிய கோவூர்கிழாராகவே எங்களுக்குத் தோன்றினார்.*

*காரைக்குடியில் தமிழ்ச்சங்கம் ஒன்றைநிறுவித் தாம் அதன் தலைவராயிருந்து அருந்தமிழ்த் தொண்டுகள் பல ஆற்றியுள்ளார் வ.சுப. அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பணி ஒய்வுக்குப்பின் மதுரை- காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகப் பொறுப்பேற்றுப் புரிந்த சாதனைகள் பலவற்றுள், அப்பல்கலைக்கழகத்தோடு இணைந்திருந்த வெவ்வேறு ஊர்களைச் சேர்ந்த ஐந்து கல்லூரிகளின் தமிழ்த்துறைகளை உயராய்வு மையங்களாகத் தர மேம்பாடு செய்தது இங்கே நினைவுகூரத்தக்கது. அம்முறையில் காரைக்குடி அழகப்பா கல்லூரியின் தமிழ்த்துறை முதலில் உயராய்வு மையமானதன் தொடர்ச்சியாகவே அது பல்கலைக்கழமாய் வளர்ச்சியுற்றது. தாம் ஏற்கெனவே பேராசிரியராகவும், துறைத்தலைவராகவும், முதல்வராகவும் பணியாற்றிய அழகப்பா கல்வி நிறுவனத்தின் வளர்ச்சிக்கும் அவ்வகையில் சிறந்த வழிவகுத்தார் வ.சுப.*

*வ.சுப. தமிழகம் உள்ளிட்ட இந்தியத் திருநாட்டிற்கும் உலகத் தமிழர்களுக்கும் கொடுத்துள்ள தமிழ்க்கொடைகள் உச்சிமேற்கொண்டு மெச்சத்தக்கவை. ஆய்வு*




நூல்களாகவும் அருந்தமிழ்ப்படைப்பிலக்கியங்களாகவும் நேர்முக அரங்குகளிலும் கற்பனை அரங்குகளிலும் ஆற்றிய சொற்பொழிவு நூல்களாகவும் கடித இலக்கியமாகவும் அவரளித்துள்ள நூற்கொடைகள் ஆழ்ந்தகன்ற கருத்துக் கருவூலங்களாய் அமைந்துள்ளன.

ஆய்வு நூல்களுள் தலைமை சான்ற தமிழ்க் காதல், தொல்காப்பிய இலக்கணங்களோடு சங்க இலக்கியங்களில் பாடப்பெற்ற அகத்திணைகளின் தனித்தன்மைகளை ஆய்ந்து விளக்கும் அருமையுடையது. அந்நூல் வெளிவந்த நாள்முதல் அதன் ஆய்வுக் கருத்துகளை மேற்கொள்ளாமல் ஓர் அகத்திணை ஆய்வும் சிறப்புற அமைந்ததில்லை. அவ்வகையில் இன்றியமையாத அகத்திணை ஆய்வாகத் தமிழ்க்காதலை வடித்துள்ளார் வ.சுப.

அண்ணாமலைப் பல்கலைக்கழக அறக்கட்டளை அரங்கில் காப்பியப் பார்வை, காப்பியக்களங்கள், காப்பிய நேர்மை என்னும் மூவகை நோக்கில் கம்பராமாயணத்தின் அமைப்பும் கம்பரின் சிறப்பும் குறித்து வ.சுப. நுட்பமுடன் நிகழ்த்திய மூன்று சொற்பொழிவுகளின் நூல்வடிவே ‘கம்பர்’ என்பதாம். உலகப்பொதுமறை திருக்குறளின் கருத்துகளைப் பன்னிரு தலைப்புக்களில் பகுத்துக்கொண்டு கற்பனை அரங்குகளில் நிகழ்த்திய சொற்பொழிவு நூலாகக் குறிக்கோள் நடையுடன் ‘வள்ளுவம்’ என்ற நூலையும் வழங்கியுள்ளார்.

‘தொல்காப்பியக்கடல்’, ‘சங்கநெறி’, ‘திருக்குறட்சுடர்’, ‘காப்பியப்பார்வை’, ‘இலக்கியச்சாறு’ ஆகிய ஐந்து தொகுப்புகளில் அவ்வப்பொருண்மை பற்றி மொத்தம் 111 ஆய்வுக்கட்டுரைகளை அளித்துள்ள பேராசிரியரின் ஆய்வுநுட்பங்கள் அறிந்து போற்றத் தக்கவை.

‘மனைவியின் உரிமை’, ‘நெல்லிக்கனி’, ‘உப்பங்கழி’, ‘ஒருநொடியில்’ எனும் நாடக நூல்கள் நான்கினைப் படைத்துள்ள பேராசிரியர், அவற்றின் வாயிலாய் இலக்கிய மரபிலும் சமூக - குடும்ப நிலைகளிலும் கடைப்பிடிக்க வேண்டிய கருத்து விளக்கங்களைக் கவினுறக் காட்டியுள்ளார்.

இளமை முதலே தோய்ந்த சொல்நயம், பொருள் நயங்களோடு தாம் பாடிய பாடல்கள்; கவிதைகளை, ‘மாமலர்கள்’ என்ற தொகுப்பு நூலாக வெளியிட்டுள்ளார் வ.சுப. வள்ளல் அழகப்பரைப் பற்றி அவர் பாடிய 171 வெண்பாக்களின் தொகுப்பு கொடைவிளக்கு என்ற நூலாக ஒளிர்கின்றது. அண்ணாமலை அரசர், முத்தையவேள், அழகப்பர் ஆகியோர் பற்றி, அவரவர் கல்வி நிறுவனங்களில் பாடப்பட்டு வருகின்ற வாழ்த்துப்பாடல்கள் எல்லாம் வ.சுப.வின் வார்ப்புக்களேயாம்.

இவ்வாறு ஆய்வாளராக, ஆசிரியராக, நாடகப் படைப்பாளராக, கவிஞராக, இன்னும் பன்முகப்பட்ட ஆளுமைத்திறன்களோடு ஆற்றல் வாய்ந்த நெஞ்சுரம் மிக்க நிர்வாகியாகவும் திகழ்ந்தவர் அரும்பேராசான் வ.சுப.மாணிக்கனார்.

நன்றி: தினமணி



# வ.சுப.மாணிக்கனார் போற்றிய வண்டமிழ் புகழ்!

பேராசிரியர் சிவகாமியின் செல்வன் **தி. பாலசுப்பிரமணியன்**
பதிப்பாசிரியர், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககம், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் சென்னை.

*வாழ்தல் வேண்டிப் பொய்கூறாப் பெருமகனார் வ.சுப.மாணிக்கம் ஐயா அவர்கள் 1971 இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியமர்த்தப் பெற்ற காலம்.*

*தமிழ் இலக்கிய வரலாறு பாடவேளை. ஐயா அவர்கள் மிக இயல்பாக எங்கள் வகுப்பிற்கு வந்தார். ஒரு மாணவரைப் பார்த்துக் கையில் வைத்திருப்பது என்ன நூல்? என்றார். தமிழ் இலக்கிய வரலாறு ஐயா என்றார் அவர். உடனே ஐயா அவர்கள் புறப்பொருள் பற்றிய நூல்கள் தலைப்பில் உள்ளதை வாசிக்குமாறு கூறினார். மாணவரும் மிக்க மகிழ்வுடன் ஆர்வம் குன்றாது எழுந்து பக்கம் 58 என்று உரத்த குரலில் கூறி படிக்க முற்பட்டார். ஐயா வ.சுப. மா. அவர்கள் அந்த மாணவரைப் பார்த்து, "தம்பி. புத்தகத்தைக் கொஞ்சம் உயர்த்திப் பிடித்துப் படியுங்கள்" என்றார். புத்தகம் உயர்ந்தது; உடனே, ஐயா "தம்பி சற்று சாய்த்துப் பிடி"என்றார். நூலும் சாய்ந்தது. உடனே ஐயா தம்பி முகம் மறைக்கப்படுகிறது; விரல்களைக் கீழே நகர்த்திப் பிடியுங்கள்" என்றார். பின்னர் விரல் நகர்ந்ததும், "சற்று என் பக்கம் தெரியுமாறு பிடியுங்கள்" என்றார். வகுப்பு முழுவதும் குழம்பியது. அனைவரும் வாசிக்கும் மாணவரை நோக்கினர்; அடுத்து ஐயாவை நோக்கினர். மாறி மாறி இருவரையும் பார்த்தனர். வாசித்த மாணவருக்கோ ஒன்றும் புரியவில்லை. ஐயா, "தம்பி உங்கள் விரல்கள் அட்டையில் உள்ள பெண்ணின் விழியை மறைக்கின்றன. ஒருவிரல் மூக்கை மூடிக் கொண்டிருக்கிறது. இதழ்களில் விரல்படுகிறது. இது நன்றாக இல்லையே" என்றார். "உங்கள் நூலின் மேல் நீங்கள் போட்டுள்ள அட்டையில் உள்ள அழகினை நாங்களும் காணும் வகையில் விரல்களால் மறைக்காமல் பிடித்துக் கொண்டு படியுங்கள்" என்றார். அப்பொழுதுதான் அனைவருக்கும் உண்மை புரிந்தது.*

*அந்த மாணவர் தம்முடைய புத்தகத்திற்குப் போட்ட அட்டைத்தாளை அன்றைய திரைப்படச் செய்தி இதழான 'பொம்மையில்' இருந்து தேர்ந்தெடுத்திருந்தார். அத்தாளில் ஒரு திருமணமான பிரபல நடிகையின் படம் ஈர்ப்புடன் இருந்தது. வகுப்பு சிரிக்கவும் சிந்திக்கவும் செய்ய, அந்த மாணவர் வெட்கப்பட்டு அந்த அட்டையைப் பிரித்து எறிந்துவிட்டார். ஐயா அவர்கள் அம்மாணவரை அமரச்சொல்லி விட்டுப் பேசத் தொடங்கினார்கள்.*

'நாடாக ஒன்றோ; காடாக ஒன்றோ;
அவலாக ஒன்றோ; மிசையாக ஒன்றோ;
எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே!



என்ற புறநானூற்றின் வரிகளைச் சொல்லி விளக்க ஆரம்பித்தார்கள். இப்பாடலில் நானிலம் குறிப்பிடப்பட்டுள்ளது. நாடு என்பது மருத நிலத்தையும், காடு என்ற சொல் முல்லை நிலத்தையும், அவல் எனும் சொல் பள்ளம் ஆதலினால் அது நெய்தல் நிலத்தையும், மிசை என்ற சொல் உச்சி என்ற பொருளில் குறிஞ்சி நிலத்தையும் குறிக்கிறது. இவ்வாறு உலகம் நான்காகப் பிரிக்கப்படுதலால் இதனை நானிலம் என்பர். தமிழகத்தில் பாலைநிலம் இல்லை. கோடையைப் பாலையாகப் பேசுவர். நிலமே! நீ ஒன்றோ நாடாக இரு; ஒன்றோ காடாக இரு; ஒன்றோ பள்ளமாக இரு; ஒன்றோ மேடாக இரு. அத்தகைய இயற்கை நிலைகளைப் பற்றியெல்லாம் உனக்குப் பெருமையோ சிறுமையோ வந்துவிடப் போவதில்லை. ஆனால் உன்னிடத்தில் வாழுகின்ற ஆண்மக்கள் எல்லோரும் தத்தம் பொறுப்பையுணர்ந்து எவ்வகையில் நல்லவர்களாக இருக்கின்றார்களோ அவ்வகையில் நீயும் பெருமையாக நல்ல நிலம் நல்லநாடு என்றெல்லாம் போற்றப்படுவாய்.

ஒரு நாட்டின் பெருமை அந்த நாட்டைப் பொறுத்தோ அங்கு விளையும் பொருள்களைப் பொறுத்தோ, அங்கு கிடைக்கும் கனிகள் மற்றும் கனிமப் பொருள்களைப் பொறுத்தோ, அங்குள்ள தொழில் அமைப்புகளைப் பொறுத்தோ அமைவதில்லை. அங்குவாழும் மக்களின் குறிப்பாக ஆண்மக்களின், இன்னும் குறிப்பாக அங்குள்ள இளைஞர்களின் நடவடிக்கை களைப் பொறுத்தே அமைகிறது. ஒரு நாட்டை ஒளிமிக்கதாகவும்,இனத்தை, மொழியைச் சிறப்புடையதாகவும் ஆக்கவேண்டுமெனில் அந்நாட்டுமக்கள், குறிப்பாக இளைஞர்கள் ஆற்றல் வீணடிக்கப்படக்கூடாது. அவ்வாறு வீணடிக்கப்பட்டால் அந்தநாடு காலப்போக்கில் தன் சிறப்பை இழந்துவிடும்; சீர்குலைந்து விடும். பெருமை மங்கி அடிமை நாடாக அல்லது இழிந்த நாடாகித் தன் இன அடையாளத்தை அறவே இழந்துவிடும். இளமை அறிவோடு இணக்கமாக இருக்க வேண்டும். பிணக்கு கொளின் பெருந்தீங்கும் சீரழிவும் நிகழும் என்று அறிவுறுத்தி, பரத்தமை, பிறன்மனை விழைதல், சூது, மது, பொய்கூறல் இவற்றால் ஏற்படும் இன்னல்களையும் அழிவையும் விளக்கினார் பேராசிரியர்.

பெற்ற தாய், உடன்பிறந்த சகோதரி, வாழ்க்கைத் துணைவி ஆகியோர் நம்மைப்போல் உணர்வுள்ள பெண்பாலரே, அவர்களைக் காப்பதுதான், அவர்களை மரியாதையுடன் கௌரவமாகப் போற்றுவது தான் நமக்குச் சிறப்பு. ஒழுக்கமே உயர்வினைத்தரும், வாய்மை நம்மை நல்வாழ்வு வாழவைக்கும்; உழைப்பும் நேர்மையும் நம்மை வரலாற்றில் இடம்பெற வைக்கும் என்று அரியபல நல்லுரைகளை உணர்வுபூர்வமாக விளக்கியது இன்றும் பசுமையாக எம் நெஞ்சில் உள்ளது.

மேலும் தாம் முதன்மையாகக் கருதி பின்பற்றும் இரண்டைச் சொல்லி அவற்றைப் பின்பற்றினால் வாழ்வில் சிக்கலே இருக்காது. இன்பமும் அமைதியுமே கிட்டும். ஒன்று திருக்குறள்; அது ஒரு மருந்துக்கடை, அவரவர் நோய்க்கான உரிய மருந்துகளைஅக்கடையில் வாங்கிக்கொள்ளுதல் போல, நம்வாழ்விற்கான வாழ்நிலைக்கேற்ப உரிய அறங்களைத் திருக்குறளில் பெற்றுக் கொள்ளலாம். அது ஓர் அறவழி. இன்னொன்று பொய்யா வாய்மை. “நான் எனது இளமையில் பர்மாவில் பணியாற்றிய பொழுது, எனது முதலாளி சொல்லச் சொன்ன பொய்யைச் சொல்ல மறுத்தேன்; வேலை இழந்தேன்; ஆனால் என்

பொய்யா வாய்மை எனக்கு வழிகாட்டி வாழ்வாங்கு வாழவைத்தது, என் வாழ்நாளில் நான் பொய் பேசேன்" என்றார். அன்று உணர்ந்தோம் வ.சுப.மா. ஐயா அவர்கள் எத்தகைய பேராண்மை மிக்கவர் என்பதை. நான் மதுரை சென்ற பொழுதெல்லாம் காலேஜ் ஹவுஸில் மாலையில் சந்திப்பதுண்டு. அவரது மாறா அன்பையும், மாசிலாப் பண்பையும், மங்காத நினைவாற்றலையும் எண்ணி எண்ணி வியந்ததுண்டு.

தில்லையம்பலவர் திருமுன் திருமுறை ஓதிட முன்னாளில், அவர்கள் எடுத்த முயற்சிகளை எண்ணிடும்பொழுது சைவத்தமிழ்பால் அவருக்கிருந்த விண்ணளவு காதலை எண்ணி மலைத்ததுண்டு. என்னைத் தகவமைத்துக்கொள்ள ஐயா அவர்களின் அருங்குணங்கள் பெரிதும் உதவின. கருப்பு நிறத்தை மதித்து, கற்புத்திறத்தைப் போற்றி, குறள் கருத்துச் செறிவைப் பரப்பியதில் அவருக்கு நிகர் அவரே.

"குலன்அருள் தெய்வம் கொள்கை மேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை
நிலம்மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகியல் அறிவோடு உயர்குணம் இனையவும்
அமைபவன் நூலுரை ஆசிரி யன்னே"

என்ற பவணந்தி முனிவரின் இலக்கணத்திற்கு இலக்கணமானவர் எமது ஆசான் வ.சுப. மாணிக்கனார் அவர்கள். உண்மையில் மாந்தருள் அவர் ஓர் ஒப்பற்ற மாசிலா மாணிக்கமே!

வாழி வ.சுப. மாணிக்கனார் போற்றிய வண்டமிழ்ப்புகழ்
வாழிய வ.சுப. மாணிக்கனார் புகழ்
வாழிய வ.சுப. மாணிக்கனார் குடியினர்.
வாழிய வ.சுப. மாணிக்கனார் நினைவு போற்றும் நெஞ்சம்.



## மாணிக்கக் குறள்

***மாணாக வாழ்தல் மனிதம்; தமிழுக்குப்***
***பூணாக வாழ்தல் பொருள்***

***மூடருள் மூடன் எனப்படுவான் தாய்மொழி***
***வாடக் களிக்கும் மகன்***

***பொன்னிற் சிறந்த பொதுவுடைமை யாதெனின்***
***தன்னிற் சிறந்த தமிழ்***



# மா.வும் பொதுநலனும்

திரு. **க.வீரவேலு**
பதிப்பாசிரியர், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககம், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் சென்னை.

வ.சுப.மா. ஐயா அவர்கள் வாழ்ந்த காலத்தில் வாழ்கிறேன் என்பதில் பெருமை கொள்கிறேன். ஐயா அவர்களின் நூற்றாண்டு விழா நடைபெறும் இந்நாளில் துணைவேந்தராக அவர்கள் விளங்கியபோது, நான் அவருடன் உரையாடியதைப் பகிர்ந்து கொள்கிறேன்.

ஐயா அவர்கள் மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தராகப் பணியாற்றிய பொழுது நான் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் மாணவனாகப் பயின்று வந்தேன். பல்கலைக்கழக மாணவர் விடுதியின் பொறுப்பாளராக இருந்தமையால் விடுதியின் செயற் பாடுகள் குறித்து விடுதிக் காப்பாளரிடம் முறையிட்டுத் தீர்வு காணப்படும். தீர்வு எட்ட முடியாத நிலைகள் ஏற்படுமாயின் ஐயா அவர்களைச் சந்திக்க வேண்டிய நிலை பல நேரங்களில் ஏற்பட்டதுண்டு.

முதல் நாள் சந்திப்பின்போது அவரது தோற்றப் பொலிவும், மொழி உச்சரிப்பும், எளிமையான நடையும் மெய் சிலிர்க்கவைத்தது. ஐயா அவர்களின் வினாவிற்குப் பல நேரங்களில் இயல்பாகப் பதில் சொன்னேன். ஐயா அவர்கள் என்னுடைய பொதுநலப் போக்கில் வியந்து என்னுடைய கோரிக்கைகளைப் பரிசீலிப்பதாகக் கூறியதுடன் தன்னுடைய உதவியாளரை அழைத்து, ‘இந்தத் தம்பி என்னைக் காண வந்தால் உடனடியாக உள்ளே அனுப்பு. சுயநலத்திற்காக வரவில்லை. பொதுநலத்திற்காக வருகிறார்’ என்று கூறியது இன்றும் என் மனத்தில் நீங்காமல் இருக்கிறது.

எனக்கு அகவை 65 ஆகிறது. இந்த அகவையில் ஐயா அவர்களின் நினைவலையை என் மனம் சுமப்பது இறைவன் எனக்களித்த பெறும்பேறாகக் கருதுகிறேன்.

ஐந்தாம் உலகத் தமிழ்மாநாடு நடைபெற்ற காலத்தில் மாணவர்களின் விடுதிகளுக்கெல்லாம் பாரதியார், பாரதிதாசன், திருவள்ளுவர், கபிலர் எனத் தமிழ்ப் புலவர்களின் பெயர் வைத்துப் பெருமை சேர்த்தவர்.

வாழ்க ஐயா அவர்களின் புகழ்!



# சிவபுரி தந்த செம்மல்!

முனைவர் **ந. இராமாயி**
முன்னன முதல்வர், கணேசர் செந்தமிழ்க் கல்லூரி,
மேலைச்சிவபுரி.

## நின்ற சொல்லர் நீடுதோன்றினியர்

*'மா' அவர்களை நினைத்துப்பார்க்கின்றேன்: "நின்ற சொல்லர் நீடுதோன்றினியர்," என்ற சங்கத்தொடர் என் நினைவில் வருகின்றது. மா. மனிதர் - மனிதருள் மாணிக்கம் - உள்ளத்தாலும் உடலாலும் தூய்மை உடையவர்கள்; சொன்ன சொல் பிறழாதவர்கள்; செயற்கரிய செய்பவர்கள்; நீடு நினைத்து நினைத்துப் பார்க்க இனியவர்கள்; நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத் தாயிற்சிறந்த தயை மிக்கவர்கள்; ஏழ்மையில் நின்றவர்களை ஏணிப்படியில் ஏற்றி ஏற்றம் தந்தவர்கள்; தாம் செய்த உதவிகளைப் பிறர் அறியப் பறைசாற்றாதவர்கள்; அவர்களது சொற்கள் நினைந்து நினைந்து ஆய்ந்து ஆய்ந்து ஆழம் காணக்கூடியன. அவர்களது செயல்கள் வாழ்நாள் முழுவதும் நினைத்து நினைத்து பார்த்துப் பாராட்டற்குரியன; எந்த ஒன்றையும் தீர ஆலோசித்துச் சரியான நேரத்தில் மிகச்சரியாக முடிவெடுக்கும் நெஞ்சுறுதி படைத்தவர்கள்;, வள்ளுவமாய் வாழ்ந்தவர்கள்; அவர்களது படைப்புக்கள் ஒவ்வொன்றும் பலமுறை பயின்று ஆழ்ந்து அறியும் நுணுக்கம் உடையன ஆகும்.*

## காட்சிக்கு எளியர்

*பணியேற்க வேண்டிய சூழலில் மா - அவர்களைப் பார்க்கக் காரைக்குடி சென்றேன். அப்போது கதிரகம் இல்லத்தில் திருமதி ஏகம்மை ஆச்சி அவர்கள் எங்களை அன்புடன் வரவேற்றார்கள். தனி அறையில் - தரையில் பாய் விரித்து எழுது பலகை எழுது கோலுடன் - நூல்களோடு உறவாடிக்கொண்டு மா அவர்கள் மிக எளிமையாகக் காட்சித்தந்தார்கள் மனதில் உறுதி - ஒளி படைத்த கண்கள் - விசாலமான பார்வை - அறிவார்ந்த அகன்ற நெற்றி - எளிமையில் தூய்மை - அச்சத்தையும் நடுக்கத்தையும் தரும் அறிவுச்செறிவு. ஒளிவீசும் தோற்றம், இவை அனைத்தும் இன்றும் என் கண்முன் நிற்கின்றது. ஒரு வித பயம் உள்ளூர அச்சுறுத்துகின்றது.*

'நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது' (குறள் 124)

*தகுதி அடிப்படையில் பணியில் அமர்த்தி, கல்லூரியை வளர்ச்சிப்பாதையில்*



கொண்டு செல்லவேண்டும் என்னும் குறிக்கோளை முன்வைத்து பெண்ணாகிய என்னை மேலைச்சிவபுரிக் கணேசர் செந்தமிழ்க்கல்லூரியில் - விரிவுரையாளராய்ப் பணியமர்த்திப் பேருதவி செய்தார்கள். அவர்களின் தொலைபேசிச் சொற்கள் செயலாக்கம் பெற்றன. மேலும் 'மா' அவர்கள் என்னைப் பார்த்து, 'தகுதியை இன்னும் உயர்த்திக்கொள்' என்றும், 'தம் ஆசான் பண்டிதமணியாரின் நூல்களை முனைவர் பட்டத்திற்கு உரித்தாக்கிக்கொள்' என்றும் கருத்துரைத்தார்கள். நானும் பண்டிதமணியாரின் நூல்களையே முனைவர் பட்டத்திற்கு உரித்தாக்கி முனைவர் பட்டமும் பெற்றேன். யான் கணேசர் செந்தமிழ்க்கல்லூரியில் மாணாக்கியாய், ஆசிரியராய், முதல்வராய் வளர்வதற்கு வித்திட்டவர்கள், செம்மல் அவர்கள்.

### மண்தேய்த்த புகழாளர்:

செந்தமிழ் மண்ணாம் சிவபுரியில் பிறந்த மா அவர்கள் மண்தேய்த்த புகழாளர் ஆவார்கள். பிறந்த ஊர்ப்பற்று அவர்களின் உள்ளத்தில் வேரூன்றி நின்றது. அவர்கள் எழுதி வைத்துள்ள விருப்பமுறி அவர்கள் உள்ளத்தை விளக்கமாக்குகின்றது. தனது சொத்தில் ஆறில் ஒரு கூறினை பிறந்த மண்ணுக்கும், மண்ணில் தோன்றிய உயிர்களுக்கும் அர்ப்பணித்துப் பிறந்த மண்ணை நேசித்தமை போற்றுதலுக்கு உரியதாகும். திரைகடல் ஓடித் திரவியம் தேடிய செட்டிநாட்டுப் பகுதியில் பெரிய செல்வந்தர்களே அல்லாமல் எல்லோரும் அறம் செய்யலாம், மனம் இருந்தால் போதும் என்று மற்றவர்களுக்கு வழிகாட்டி அறவாழ்க்கை வாழ்ந்து தன் வாழ்நாளில் உண்மையாய் உழைத்து நல்வழியில் தேடிய செல்வத்தைச் சேர்த்து எளிமையாய்வாழ்ந்து பிறந்த மண்ணுக்கும் மக்களுக்கும் பயன்படும்படியாக அறக்கட்டளைக்கு வழிகோலியமை அவர்களின் மண்தேய்த்த புகழினை நிலை நாட்டு கின்றது. உணவாக, உடையாக, உயிர்வாழ்க்கைக்கு உரிய மருந்தாக, கல்வியில் முதன்மை பெற்றாருக்கு ஊக்கத்தொகையாக, அன்பளிப்பாக, மழலைச் செல்வங்களுக்குரிய விளையாட்டு மகிழ்வுப்பொருளாகப் பயன்படத்தக்க வகையில், அறக்கட்டளைக்கு வித்திட்டு அதனைச் செயல்படுத்தத் தம் மக்களை நியமித்தமை போற்றுதலுக்குரியதாகும்.

'தந்தைசொல் மிக்க மந்திரம் இல்லை' என்பதை, 'மா' அவர்களின் மக்கள் ஆண்டுதோறும் செயற்படுத்தி நடைமுறைப்படுத்தி வருதல் "தந்தையை ஒப்பர் மக்கள்" என்பதைக் காட்டுகின்றது. மேலைச்சிவபுரி மண்ணின் புகழினைத் தேய்த்த மாமனிதர், மிக எளிமையாக வாழ்ந்த பல்கலைக்கழகத் துணைவேந்தர். 'மா' அவர்களின் வாழ்க்கை யாவரும் பின்பற்றற்குரியதாகும்.

செப்பம் உடையவன் ஆக்கஞ் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து". *(திருக் 112)*

என்ற வள்ளுவத்திற்கு ஒப்பாக அவர்களது செல்வம் பயன் உடையதாயிற்று. 'மா' அவர்களின் வாழ்க்கையைப் போற்றி அவர்களின் திருவடிகளை வணங்கி நிறைவு செய்கின்றேன். அவர்களுக்கு என்றும் நன்றியுடையேன்.



# மாணிக்க நினைவுகள்

திருமதி. **அருந்ததி முருகப்பன்**
முன்னைப் பேராசிரியை, இராணி மேரிக் கல்லூரி, சென்னை

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே

- திருமந்திரம்

## கல்லூரி முதல்வர் வ.சுப. மாணிக்கனார்

*1969 ஆம் ஆண்டு டாக்டர் வ.சுப. மாணிக்கனார் காரைக்குடி அழகப்பர் கலைக் கல்லூரியில், கல்லூரி முதல்வராகப் பணியாற்றிக் கொண்டிருந்தபொழுது நான் தமிழ் முதுகலைப் படிப்புக்கு விண்ணப்பித்திருந்தேன். சேர்க்கை கிடைத்ததும் நானும் என் தந்தையும் முதல்வரைப் பார்த்து நன்றி சொல்வதற்காகக் கல்லூரி சென்று முதல்வர் அறைவாயிலில் அனுமதி பெற்று, அறைக்குள் சென்று வணக்கம் கூறினோம். கோப்புக்களைப் பார்த்துக் கொண்டிருந்தவர் நிமிர்ந்தார். நான் 'என் பெயர் அருந்ததி, தமிழ் முதுகலை வகுப்பில் சேர வந்திருக்கிறேன். கல்லூரியில் படிப்பதற்கு இடம் அளித்ததற்கு மிக்க நன்றி ஐயா' என்று சொன்னவுடனேயே 'இளம் அறிவியல் படித்திருக்கிறாயல்லவா, இளங்கலை தமிழ் படித்த மாணவர் நிறையப் பேர் சேர்ந்திருக்கிறார்கள். நன்றாகப் படிக்க வேண்டும். வாழ்த்துக்கள்' என்று சீரிய முகத்துடன் கண்டிப்பான குரலில் சொல்லிவிட்டு மீண்டும் கோப்புகளைப் பார்க்கத் தொடங்கினார். அறைக்குள் சென்ற மறு நிமிடமே வெளியில் வந்துவிட்டோம்.*

*இவ்வளவு கண்டிப்புடன் சிறு புன்சிரிப்புக்கூட இல்லாமல் பேசும் தமிழாசிரியரை நான் படித்த கீழச்சிவற்பட்டி மீனாட்சி சுந்தரேசுவரர் உயர்நிலைப்பள்ளியிலோ, இளமறிவியல் படித்த பள்ளத்தூர் சீதாலட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரியிலோ பார்க்காததினால் ஒரு தமிழாசிரியர் இவ்வளவு இறுக்கமாக இருக்க முடியுமா? என்ற எண்ணமும் சிறிது அச்சமும் கூட ஏற்பட்டது. இங்கு துறையாசிரியர்களும் இப்படித்தான் இறுக்கமாக இருப்பார்களோ? என்ற கவலை வேறு வந்துவிட்டது.*

*வகுப்புகள் தொடங்கியதும் துறையாசிரியர்கள் என் அச்சத்தையும் கவலையையும் முற்றிலும் நீக்கிவிட்டனர். டாக்டர் வ.சுப.மா. திருவாசகத்தில் திருச்சதகம் எடுத்தார். பண்டிதமணி கதிரேசனாரின் உரையே பாடமாக இருந்தது. முதல்வர் பணிகளுக்கிடையேயும் தவறாமல் வகுப்புக்கு வந்துவிடுவார். வகுப்பில் முகத்தை எப்போதும் போல இறுக்கமாக*



வைத்துக்கொண்டும் ஒவ்வொரு மாணவரின் கண்களையும் ஊடுருவிப் பார்த்துக்கொண்டும் நடுநடுவே மிக நகைச்சுவையாகவும் வகுப்பு எடுப்பார். நான் மட்டுமல்லாமல் வகுப்பில் படித்த 14 மாணவர்களும் அவர் சொல்லும் நுண்ணிய நகைச்சுவையைப் பெரிதும் ரசித்தாலும்கூட அளவோடுதான் சிரிப்போம். அவரைத் துறையாசிரியராக மட்டும் பார்க்காமல் முழுநேரமும் முதல்வர் என்றே பார்த்தமைதான் எங்கள் அடக்கமான அளவுச் சிரிப்புக்குக் காரணம் போலும். அவர் திருவாசகத்தை ஊன் கலந்து உயிர் கலந்து செழுங்கனித் தீஞ்சுவை கலந்து உவட்டாமல் புகட்டி எங்கள் உள்ளங்களில் திகட்டாத ஆசிரியராகத் திகழ்ந்தார்.

பொதுவாகவே, எங்கள் துறையாசிரியர்கள் அனைவருமே பெரும்புலமையுடனும் ஆய்வு நோக்குடனும் கவித்துவத்துடனும் நகைச்சுவையோடும் பாடம் கற்பித்து எங்களை நல்ல இரசிகராக்கியிருக்கிறார்கள். அதனால்தான் போலும் பின்னாளில் நாங்களும் மாணவர் விரும்பும் நல்லாசிரியர்களாகப் பணியாற்றினோம் என எண்ணுகிறேன்.

1970 ஆம் ஆண்டு சூலை மாதம் வ.சுப.மா. அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராகப் பொறுப்பேற்றுச் சிதம்பரம் செல்லத் தயாரானார். நாங்கள் பதினான்கு பேரும் அவருக்கு வாழ்த்துத் தெரிவிப்பதற்கும் வழியனுப்புவதற்குமாக முதல்வர் அறைக்கு வெளியில் அனுமதி வேண்டி நின்றோம்.

அனுமதி பெற்று உள்ளே சென்ற நாங்கள், "வணக்கம். ஐயா, தாங்கள் எங்களுக்குத் திருவாசகம் எடுத்தீர்கள். அந்த நேரம் நண்பகல் 12-1 மணியாக இருந்தபோதிலும் பசி வயிற்றைக் கிள்ளிய போதிலும் மிகுந்த விருப்பத்தோடும் பயபக்தியோடும் பாடம் கேட்டுப் பயனுற்றோம். எங்களுடைய வாழ்க்கையில் என்றும் நினைக்கத் தக்க நாட்களாகவே அவை அமையும். என்றுமே மறக்க இயலாத மனிதராகிய தாங்கள் எங்களை விட்டுவிட்டு, வேறிடம் செல்வது இழப்பாகத் தோன்றுகிறது" என்றோம். எல்லோர் சொன்னதையும் பொறுமையாகக் கேட்டார். பிறகு வழக்கம்போல எங்கள் ஒவ்வொருவரையும் உற்றுப்பார்த்துக்கொண்டே, "நான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற்குத்தானே போகிறேன்! அது நீங்களும் வரக்கூடிய - வரமுடிந்த இடம்தானே! எல்லோரும் ஆராய்ச்சிப்படிப்புக்கு அங்கே வாங்க" என்று சிரித்துக்கொண்டே கூறினார். நாங்கள் வியப்பில் மூழ்கி விடை பெற்றோம். எதிர்பாராமல் ஒருவர் முதன்முறையாக, முகம் நிறையச் சிரித்தார். வியப்பு வராதா என்ன?

இந்த நிகழ்வுக்குப் பின் எங்களுக்குள் அவரைப் பற்றிய பேச்சு வந்தால் அவர் இயற் பெயரைச் சொல்லாமல் நாங்கள் அவருக்கு வைத்த புனைபெயரான 'சீரியஸ் பியூட்டி' என்றே குறிப்பிட்டு மகிழ்வோம். டாக்டர் சாரங்கபாணி ஐயாவின் தலைமையில் கனிந்த அன்பிலும் இரண்டாம் ஆண்டு தொடர்ந்தது. அந்த ஆண்டு நடந்த கல்லூரிக் கட்டுரைப் போட்டியில் 'குறிஞ்சிக் கபிலன்' என்ற தலைப்பில் கட்டுரை எழுதி முதற்பரிசு பெற்றேன். வ.சுப.மா.வின் 'இரட்டைக் காப்பியமும்', சாரங்கபாணி ஐயாவின் 'வள்ளுவம் உரைவேற்றுமையும்' பரிசாகக் கிடைத்தன. இந்நிகழ்வு என்னுள் எழுத்தார்வத்தையும் தன்னம்பிக்கையும் தூண்டியது எனலாம்.

## பதிப்பகச் செம்மல் வ.சுப.மா

வ.சுப.மா. அவர்கள் காரைக்குடியில் வைத்திருந்த பேகன் பதிப்பகம் வாயிலாக, ‘பெண்களுக்கு’ என்ற வரிசையில், ‘சீதை’, ‘கண்ணகி’ என்ற புத்தகங்களை வெளியிட்டார். 1971 இல் நான் எம்.ஏ. முடித்துவிட்டு வேலை தேடிக்கொண்டிருந்தேன். வேலை கிடைப்பதற்கு வேளை வரவில்லை. ஆனால் ‘கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிளந்து கொட்டும்’ என்பது போல், பேகன் பதிப்பகம் மணிமேகலை என்ற நூல் எழுதும் நல்வாய்ப்பினை நல்கியது. வ.சுப.மா. வாய்ப்புத் தந்த அதே வேளையில் சென்னை மாநிலக் கல்லூரியில் பணியாற்றும் வாய்ப்பைக் கல்லூரிக் கல்வி இயக்ககம் தந்தது.

மணிமேகலை நூலை யாருக்காக, எத்தகைய நடையில் எத்தனை பக்கங்களில் எழுத வேண்டும் என்று பதிப்பகம் அனுப்பிய விளக்கக் குறிப்புக் கடிதத்தோடு நான் சென்னை மாநிலக் கல்லூரியில் 1972 ஜனவரி பதின்மூன்றாம் நாள் டாக்டர் மெ.சுந்தரம் துறைப்பேராசிரியராக இருந்த பொழுது பணியில் சேர்ந்தேன். வ.சுப.மா. சென்னை மாநிலக் கல்லூரிக்கு டாக்டர் மெ.சு.வைப் பார்க்க வருகையில், துறையாசிரியர்கள் அறைக்கும் வருவார். என்னிடம் மறக்காமல் ‘மணிமேகலை எந்நிலையில் உள்ளார்? எழுதத் தொடங்கி விட்டாயா?’ என்பார். சீத்தலைச் சாத்தனின் அறிவுரைகளையும் வழங்குவார். நான் மாநிலக் கல்லூரி மகளிர் விடுதியில் தங்கிப் பணியாற்றிக் கொண்டிருந்தமையால் நிறைய நேரம் கிடைத்தது. கல்லூரி நூலகத்திலிருந்து மணிமேகலைக் காப்பியத்தையும் காப்பியம் தொடர்பான பிற நூல்களையும் எடுத்துப் படித்து 1972 மார்ச் மாதத் தொடக்கத்தில், எழுதப்போகும் நூலுக்கான பகுப்புகளின் தலைப்புகளையும், முதலிரண்டு தலைப்புகளில் கட்டுரைகளையும் எழுதிப் பதிப்பகத்திற்கு அனுப்பி வைத்தேன்.

மாத இறுதியில் திருத்திய கட்டுரைகளை ‘இவ்வளவு விரிவான கால ஆராய்ச்சியெல்லாம் தேவையில்லை. இல்லத்திலிருக்கும் பெண்களும் படித்துப் பயனுறுமாறு எளிமையாக எழுதவும்’ என்ற மடலோடு அனுப்பியிருந்தார்.

கோடை விடுமுறை முடிந்து சூன் மாதத்தில் கல்லூரி திறக்கப்பட்டது. நான் நூலின் எஞ்சிய பகுப்புகளையும் எழுதத் தொடங்கினேன்.

1972 டிசம்பரில் அனைத்துக் கட்டுரைகளும் எழுதி முடிக்கப்பட்டு அவரிடம் சேர்க்கப்பட்டன. 1973 இல், அனைத்துக் கட்டுரைகளையும் சரிபார்த்து, வேண்டும் திருத்தங்களையும் தாமே செய்து, மாநிலக் கல்லூரியில் டாக்டர். மெ. சுந்தரத்தைப் பார்க்க வந்தபோது என்னிடம் தந்துவிட்டு, ‘கோடை விடுமுறை முடிந்து வரும்போது அச்சிடத் தயாராகக் கொண்டுவர வேண்டும். என்ன சரியா?’ என்று கட்டளையிட்டுச் சென்று விட்டார். பிறகென்ன! அவருடைய செயல்திறன் என்னையும் தொற்றிக்கொள்ள, அந்த விடுமுறையில் என் மகனை வயிற்றில் சுமந்து கொண்டே முழுநூலையும் எழுதி முடித்தேன். 1973 சூலை முதல் வாரத்தில் நூலின் உண்மைப்படியை அனுப்பி வைத்தேன்.

சூலை 4ஆம் நாள் என் மகன் பிறந்தான். அதே ஆண்டு ஆகஸ்ட்டில் பேகன் பதிப்பகத்திலிருந்து மணிமேகலை வெளிவந்து விட்டாள். பத்துப் புத்தகங்களையும் நூறு



ரூபாய் அடங்கிய உறையையும் பதிப்பகம் எனக்கு அனுப்பியிருந்தது. என் எழுத்துக்களை அச்சில் கண்ட போழ்து கரைகாணா ஆனந்தம் உண்டாயிற்று. என் மகனுக்குப் பத்து உடன் பிறப்புகள் தோன்றியதைப் போல இனம் புரியாத ஒருவகைப் பெருமிதம் கூட உண்டாயிற்று.

1979 ஆம் ஆண்டு இராணி மேரிக் கல்லூரியில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது, துறை நூலகத்திற்கு நூல்கள் வாங்க பாரிநிலையம் சென்றிருந்தேன். அலமாரியிலிருந்த 20 மணிமேகலை நூற்களையும் வாங்கி, கல்லூரி நூலகத்திற்கு ஒன்றும் உடனாசிரிய நண்பர்களுக்கும் கொடுத்தேன். அப்பொழுது, துறையில் 30 பேராசிரியப் பெருமக்கள் இருந்தாலும் நூலாசிரியராக நான் மட்டுமே இருந்தேன் என்பது பெருமையுடன் குறிப்பிடத்தக்கதாகும். 1980இல் நான் என் கணவருடன் துபாய் சென்று விட்டேன். 1986 இல் அங்குள்ள எமிரேட் தமிழ்ச்சங்கச் செயலாளராக இருந்த போழ்தும் பாரிநிலையத்திலிருந்து மணிமேகலை புத்தகங்கள் வாங்கித் துபாய் தமிழன்பர்களுக்கும் பரிசளித்தேன்.

**மாமனிதர் வ.சுப.மா.**

1979 ஆம் வருடம் வ.சுப.மா. காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தராக இருந்த பொழுது ஒருமுறை சென்னைப் பல்கலைக் கழகக் கருத்தரங்குக்குச் சொற்பொழிவாற்ற வந்திருந்தார். மாலை மூன்று மணிக்குக் கூட்டம். நான் அப்பொழுது இராணி மேரிக் கல்லூரியில் பணிபுரிந்து கொண்டிருந்தேன். கல்லூரி நேரம் முடிந்ததும், வீட்டிற்குச் சென்று என் மகன் விஜய்ஆனந்தை (6 வயது) அவரிடம் காட்டி ஆசி பெற வேண்டும் என்பதற்காக உடன் அழைத்துக்கொண்டு கருத்தரங்குக்குச் சென்றேன். சென்னையின் பல்வேறு கல்லூரிகளிலிருந்து பேராசிரியர்கள் பலர் வந்து அரங்கம் முழுவதும் நிறைந்திருந்தார்கள். நாங்கள் அரங்கினுள் நுழைந்தபோது நிகழ்ச்சி தொடங்கி 2 மணித்துளிகள் ஆகியிருந்தன. அரங்கம் நிறைந்திருந்ததால் அமர்வதற்கு முன்வரிசையில் ஒரிரு இருக்கைகள் தவிர வேறு வரிசைகளில் இடம் இல்லை. சரி கூட்டம் முடியும் வரை வெளியில் சென்று காத்திருக்கலாம் என்று எண்ணித் திரும்பும்போது மேடையிலிருந்த வ.சுப.மா. 'அருந்ததி, முன்னால் இடம் இருக்கிறது. இங்கே வந்து உட்கார்' என்றாரே பார்க்கலாம்; திகைத்துவிட்டேன். எல்லோரும் என்னைத் திரும்பிப் பார்க்க நானும் விஜயும் முன்னால் சென்று, சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தருக்குப் பக்கத்திலிருந்த இருக்கையில் அமர்ந்தோம். ஆறுவருடங்களுக்குப் பிறகு என்னை அடையாளம் கண்டு என் பெயரையும் நினைவில் வைத்திருந்த ஆசிரியரின் அன்பும் நினைவாற்றலும் போற்றத்தக்கதல்லவா?

கூட்டம் நடந்த ஒன்றரை மணி நேரமும் 6 வயதுப் பையனான விஜய் ஒரு தொந்தரவும் செய்யாமல் கற்றறிந்த வல்லுநர்களின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தது அனைவரையும் வியப்படைய வைத்தது.

நிகழ்ச்சி முடிந்து பலரும் புடைசூழ வெளியில் வந்து மகிழ்வுந்தில் ஏறப் போகும்போது எங்களைப் பார்த்து 'உன் நல்ல மகனுக்கு என்ன பெயர் வைத்திருக்கிறாய்?' என்று கேட்டார். 'விஜய் ஆனந்த்' என்று பதிலளித்தேன். 'ஏன் ஒரு தமிழ்ப் பெயர் வைத்திருக்கலாமே' என்றார். 'கபிலன் என்று பெயர் வைக்கவே நான் விரும்பினேன். என் கணவர் தான் இந்தப்

*பெயர் வைத்தார்' என்றேன். 'அப்பபடியா? நீ சொல்றதக் கேக்கிற மாதிரி உன் கணவரை மாத்தலையா? ம்.. அப்ப நீ படிப்பில் மட்டும்தான் புத்திசாலியா?' என்று சிரித்துக்கொண்டே கேட்டுவிட்டு மகிழ்வுந்திலேறிச் சென்று விட்டார். பின்னாட்களில் பல நேரங்களில் அவர் கேட்ட கேள்வியும் என் இயலாமையும் அடிக்கடி நினைவுக்கு வரும்.*

*இன்று அவர் இருந்திருந்தால் என் மகன்வழிப் பேத்திக்கு 'நிலா' என்றும் மகள் வழிப் பேத்திக்கு 'ஆதிரை' என்றும் பெயர் வைத்திருக்கிறேன் என்று கூறினால், 'அப்படியா? வாழ்க்கையிலும் நீ இம்மியளவு புத்திசாலிதான்' என்று பாராட்டியிருப்பார் என்றே எண்ணுகிறேன்.*

*மாணிக்கப் பெயர் கொண்டு, மணியொளியாய் வழிகாட்டி மாணவரின் மனங்களிலே என்றும் மலர்ந்திருக்கும் நறுமலரே தங்கள் மலரடிகளுக்கு இவ்வுணர்வுப் பூக்களை உள்ளம் நிறைந்த நன்றியுடன் உரிதாக்குகிறேன்.*

போற்றி என்பார் அமரர் புனிதனடி
போற்றி என்பார் அசுரர் புனிதனடி
போற்றி என்பார் மனிதர் புனிதனடி
போற்றிஎன் அன்புள் பொலிய வைத்தேனே!

*- திருமந்திரம்*

## வாழ்க்கைக்கு வழிகாட்டி வ.சுப.மாணிக்கனார்

திருமதி ***உமையாள் முத்து***

தமிழ்ச்சான்றோன் வ.சுப.ஐயா அவர்களின் மாணாக்கர் என் தந்தை. 97 வயதாகும் அவர்கள் வ.சுப. கல்லூரி முடிந்தபிறகும்கூட விடுதி அறைகளில் வந்து மாணாக்கர்களைச் சந்தித்து அவர்களின் ஐயங்களைக் களைவார்கள் என்று சொன்னபொழுது அவர்கள் கண்கள் கலங்கின. வாய்மையும் தூய்மையும் வாழ்வின் நெறியாகக் கொண்டு வாழ்ந்து மறைந்தவர்கள் வாழ்பவர்கள் மிகச்சிலரே. ஐயா வ.சுப. அவர்கள் வாய்மையே தனது உயிரென நினைத்து வாழ்ந்து பொய்சொல்லா மாணிக்கம் என்று புகழப்பட்டார்கள். திருக்குறள், திருவாசகம், தொல்காப்பியம், காந்தியம் என்ற சிந்தனைகளுடனே இறுதிவரை வாழ்ந்தார்கள். வாழ்க்கையில் அறவழியில் பொருளீட்டுதல், சிக்கனமாக இருத்தல், ஒழுக்கமான வாழ்க்கை மூலம் உடல் நலம் பேணல், தமிழ் உணர்வுடன் வாழ்தல் போன்றவற்றை இளைஞர்களிடையே கொண்டுவரப் பெரும்பாடுபட்டவர்கள். தன் உள்ளத்தில் வீற்றிருந்த தன் ஆசிரியர் பண்டிதமணியாரின் பெயரையே தன் இல்லத்திற்கும் (கதிரகம் என்று) வைத்தவர்கள் ஐயா. பாரதியின் பாடல்களில் ஓசை நயம் குறித்து ஐயா அவர்கள் தன் தொல்காப்பியப் புதுமை நூலில் தொகுத்தளித்த பகுதிகள் என்றும் என் நினைவில் நிற்பவை. 'நல்லாவின் பால் முழுதும் கன்றுக்கில்லை' என்ற பாடலில், 'எல்லாமே பிறர்க்குழைக்கக் காண்கின்றேன்; என் வாழ்வும் அவ்வாறே அமையவேண்டும்' என்று அவர்கள் பாடியதுபோல், வாழ்வாங்கு வாழ்ந்த பெரியவர் ஐயா அவர்கள். சிந்தையால், செயலால், பண்பால், கல்வியால், உழைப்பால் உயர்ந்த உத்தமர் ஐயா அவர்களின் வாழ்க்கை வருங்காலச் சந்ததியினருக்கு வழிகாட்டும்.



# செம்மல் வ.சுப.மாணிக்கனார் அறக்கட்டளை

முனைவர் **திருமா. பூங்குன்றன்**
முன்னைப் பேராசிரியர், க.செ.க.கல்லூரி, மேலைச்சிவபுரி

'அறம் செய விரும்பு' என்பது ஔவை மொழி. 'அறத்தான் வருவதே இன்பம்' என்றார் பொய்யாப்புலவர். அறத்தையே வாழ்வின் ஆதாரமாகக் கொண்டவர் மாணிக்கச்செம்மல். அவர் செருக்கே இல்லாச் சீர்மையாளர். பெருமிதம் குன்றாப் பேரறிவாளர். தொல்காப்பியத்தென்றல். வள்ளுவம் தந்த மாமணி. திருவாசகத் தெள்ளமுது. ஆள்வோருக்கும் அறிவுரை கூறும் ஆசான். பொய்சொல்லா மாணிக்கம். பயனில சொல்லாப் பாவலன்.

உடல் நலத்தையும் குணநலத்தையும் பிறர்நலத்தையும் காப்பவனே உயிர்நலம் காப்பவன். உயிர் தனக்குவமையில்லாத வித்துச் செல்வம். அவ்வுயிர் காக்கும் முனைப்பே செம்மலின் உயிர் மூச்சு. அவரின் படைப்பாக்கங்கள் உயிர்களின் வளர்ச்சிப் படிநிலைகள். உயிர்காக்கும் முனைப்பே செம்மல் வ.சுப. மாணிக்கனாரின் அறக்கட்டளை. அது செம்மலின் குடும்பத்தாரால் நடத்தப்பெறும் அறம்சார் அமைப்பு.

வாழ்கின்ற ஒவ்வொரு நொடியிலும் தன் இருப்பை வெளிக்காட்ட முனையாமலும் தன்முனைப்பில் ஈடுபடாமலும் வாழும் மனிதருக்கு மரணமும் மகத்தானது. அந்நெறியில் வாழ்ந்தவர் செம்மல் வ.சுப. மா.

பூக்கள் தாம் சாறுறிஞ்சிய பூமியின்மீது விழுந்து பூமிக்கு அர்ச்சனை செய்கின்றன. தமக்கு மகரந்தம் தந்தமைக்காகத் தேனீக்கள் பூக்களைச் சூல்கொள்ளச் செய்கின்றன. மேலைச்சிவபுரி வாழ்விடமாக அமைந்ததால் அங்கு உயிர்கள் நலமுடன் வாழத் தன் சொத்து, சேமிப்பு அனைத்தையும் அறுபங்காக்கி ஒருபங்கை அவ்வூருக்குத் தானமாக்கி அதனை உயிலாக்கித் தந்தவர் செம்மல்.

பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு நொடியையும் அறிவுசார் விழிப்புணர்வுடன் வாழ்ந்த செம்மலவர்கள் பணியை வழிபாடாகக் கண்டவர். புத்தகங்களைக் கோயிலாக எண்ணியவர்.

வீடு என்பது வாழ்க்கையின் வழிமுறைகளை மெருகேற்றும் இடமாகும். புனிதத்தலம் என்பது நல்ல அதிர்வுகளை அடிப்படையாகக் கொண்டது. மேலைச்சிவபுரி செம்மல் வ.சுப. மாணிக்கனாரின் வாசத்தலமாக இருந்ததால் அவரின் குடும்பத்தாருக்கும் அறிஞர்களுக்கும் அது புனிதத் தலமாகிறது.

அன்பு, உறவுகளை உண்டாக்கும் உந்துதலில் உதயமாவது. கருணை, முன்பின் அறியாத உயிர்கள்மீது பரவி நிற்பது. உயிருள்ள உயிரற்ற அனைத்தின்மீதும் ஏற்படும் உன்னத உணர்வே கருணை. இக்கருணை வாடுகின்ற பயிரைக் கண்டபோதெல்லாம் வாடிய வள்ளலாரிடத்துக் காணமுடிந்தது. முல்லைக்கொடிக்குத் தேரீந்து காலால் நடந்து சென்ற பாரியிடமும் இருந்தது. பறம்புமலைச் சாரலில் அமைந்துள்ள மேலைச்சிவபுரியில் வாழ்ந்த வ.சுப. மாணிக்கனாரிடம் அது உறைந்திருந்தது. ஆதலால்தான் தன் ஊரிலுள்ள வருந்திய மக்களுக்கும் மாக்களுக்கும் இறப்பின் பின்னரும் உதவும் மனம் அவரிடம் கால் கொண்டிருந்தது.

வாழும் வாழ்க்கை தான் செய்து முடிக்கும் செயலில் இருக்கிறது. தமிழை உயிராகப் போற்றிய செம்மல் வ.சுப. மாணிக்கம் தன் நெஞ்சுக்கு நீதியாகத் தொல்காப்பியத்தையும் சங்க இலக்கியத்தையும் திருக்குறளையும் சிலப்பதிகாரத்தையும் கம்பராமாயணத்தையும் திருவாசகத்தையும் கொண்டவர். தொல்காப்பியப் புதுமையாளராக சங்க இலக்கியப் பாசறையாக ஆய்வுலகின் விடிவெள்ளியாக உலாவந்த மாணிக்கனார் 1989 ஆம் ஆண்டு விண்ணுலக வாழ்வை நோக்கிப் பயணித்தார்.

மண்ணுலகில் அவர் விடுத்துச் சென்ற பணிகளைத் தொடர்ந்தனர் குடும்பத்தார். அவரின் எண்ணத்தை நிறைவேற்ற ஒருகொடியின் ஆறுமலர்களும் இணைந்தன. அவ்வெண்ணம் செவ்வனே நிறைவேறக் கலங்கரை விளக்காக அமைந்தார் திருமதி ஏகம்மை மாணிக்கம் ஆச்சி அவர்கள். மேலைச்சிவபுரியில் கணவர் பெயரில் தொடங்கிய அறக்கட்டளையைச் செவ்வனே செய்தார் அவர். கொழுநன் கொடைப்பணிக்கு ஊற்றாக, செம்மலின் தேசிய உடைமையாக்கப்பட்ட நூல்களுக்கு அரசு தந்த தொகையிலும் அறக்கட்டளைக்குக் கொடுத்து மகிழ்ந்தார்.

மதுரை, காரைக்குடி, திருச்சி, சிதம்பரம், சென்னை, பெங்களூரு, அமெரிக்கா என விரிந்த பரப்பிலிருந்து அறக்கட்டளைக்காக மனைவி, மகன்கள், மகள்கள், மருமகள்கள், மருமகன்கள், பேரன் பேத்திகள் என அனைவரும் அணிதிரளும் காட்சி ஒவ்வொரு மனிதரும் போற்றி ஏற்றுச் செயல்பட வேண்டிய செந்நெறி. அறக்கட்டளையில் ஆண்டுதோறும் அளிக்கப்பெறும் செவிவிருந்தும், சுவைவிருந்தும், உணர்வுவிருந்தும் ஒவ்வொருவரையும் கவரும்.

1992 ஆம் ஆண்டு கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள் தலைமையில் அறக்கட்டளைத் தொடங்கப் பெற்று முதல் ஆண்டு அறக்கட்டளை கணேசர் கலை அறிவியல் கல்லூரியில் நடைபெற்றது. அன்று வயோதிகர்களுக்கும் கர்ப்பிணிப் பெண்களுக்கும் உடையும் மருத்துவமனைக்கு மருந்தும் உபகரணங்களும், மேலைச்சிவபுரி பள்ளியில் 10, 12ஆம் வகுப்புகளிலும் மேலைச்சிவபுரி கலை அறிவியல் கல்லூரியிலும் பயின்று முதலிடம் பெற்ற மாணவர்களுக்கு ரொக்கப்பரிசுகளும், மழலையர் பள்ளிக் குழந்தைகளுக்கு விளையாட்டுப் பொருட்களும் வழங்கப்பட்டதுடன் அனைவருக்கும் அறுசுவை விருந்தும் பரிமாறப்பட்டன. ஆண்டுதோறும் இந்நிகழ்வுகள் தொடருகின்றன. அறக்கட்டளை நிகழ்விற்குச் செம்மலின்



சீர்மை போற்றிகளில் ஒருவரே சிறப்பு விருந்தினராவார். அவர் வ.சுப.மாணிக்கனாரின் பெருமைகளும் செயல்களும் தொடர்புகளும் பற்றிப் பேசும்போதெல்லாம் ஒவ்வொருவரின் உணர்வலைகளும் கடல் திவலைகள்போல் கண்ணீர்த் திவலைகளாக உருண்டோடும்.

27 ஆண்டுகளாய்த் தொடரும் அறக்கட்டளை நிகழ்வுகள் வ.சுப. மாணிக்கனாரின் பழைய பூர்வீக வீட்டில் பெருமிதமாய் இயங்கி வருகின்றது. செம்மலின் அறக்கட்டளை உதவித்தொகை பெற்ற கருவுற்ற பெண்ணொருத்தி, தனக்குப் பிறந்த ஆண் குழந்தைக்கு மாணிக்கம் எனப் பெயர் சூட்டி மகிழ்ந்தது அறக்கட்டளை ஆக்கத்தைப் பறைசாற்றுகின்றது.

அறக்கட்டளை அறிஞர்களாக முனைவர் இரா.சாரங்கபாணி, முனைவர் ச. மெய்யப்பன், முனைவர் அ. விசுவநாதன், முனைவர் கதி. தியாகராசன், முனைவர் அ. அறிவுநம்பி, முனைவர் வ.குருநாதன், முனைவர் மன்சூர், முனைவர் திருமா.பூங்குன்றன், முனைவர் க. கனகராசு, முனைவர் ந. முருகேசபாண்டியன், முனைவர் ந. இராமாயி, முனைவர் வி. பழனியப்பன், மருத்துவர் சேதுராமன், முனைவர் பழ.முத்துவீரப்பன் ஆகியோர் உரைநிகழ்த்தியுள்ளனர். ஒவ்வொரு ஆண்டும் மாணிக்கனார் அவர்களின் ஒவ்வொரு கோணமும் அலசப்பெறுவது அனைவரையும் மெய் சிலிர்க்க வைக்கும் நிகழ்வாகும்.

அறக்கட்டளை நிகழ்வுகளைச் செம்மலின் குடும்பத்தாருடன் முனைவர் பூங்குன்றன், வேல்மாணிக்கம் போன்றோர் இணைந்து நடத்துவது குறிப்பிடத்தக்கது. இவ்வாண்டு செம்மல் வ.சுப.மாணிக்கனாரின் நூற்றாண்டு விழாச் சீரும் சிறப்புமாக நடைபெறுவது வரலாறு மட்டுமன்று; வாழ்ந்துகொண்டிருப்போர் அனைவருக்கும் வழிகாட்டியாகவும் அமையும் என்பது திண்ணம். வாழ்க செம்மல் வ.சுப. மாணிக்கனாரின் புகழ்!



# பெருமகன் வ.சுப.மா.

டாக்டர் **சே.குமரப்பன்**
முதல்வர், நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்

வ.சுப.மா. அவர்கள் அந்நிய நாட்டில் நகரத்தார் வணிகரிடம் பணிபுரிந்த பொழுது விசாரணைக்கு வந்தவரிடம் முதலாளி பதிலாகப் பொய் ஒன்றைக் கூறுமாறு சொல்லியதை மறுத்து அப்பணியே வேண்டாமென்று பணியை விட்டு ஊர் திரும்பினார். இதனால் அவர் 'பொய் சொல்லா மாணிக்கம்' என அழைக்கப் பெற்றார். வ.சுப. மா வின் சகோதரர்கள் திருப்பதி செட்டியார் மற்றும் சொக்கலிங்கம் செட்டியார் ஆகியோரோடு இராம இலக்குவ சகோதரர்கள்போல் சகோதரத்தைப் போற்றியவர். மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியவர், வ.சுப. மா. ஒழுக்கம் அவசியம் எனப் போற்றிய பெருமகனார். மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராக இருந்தபொழுது காரைக்குடியில் உள்ள அவரது இல்லத்திற்கு வரும்போது பல்கலைக்கழக மகிழுந்தில் வராமல் போக்குவரத்துக் கழகப்பேருந்துகளில் தன் பணத்தில் பயணம் செய்த நேர்மையானவர்; எளியவர்.



# செம்மல் வ.சுப.மா!

முனைவர் **தெ.திருஞானமூர்த்தி**
இணைப்பேராசிரியர்,
கணேசர் கலை அறிவியல் கல்லூரி, மேலைச்சிவபுரி.

செம்மல் வ.சுப.மா அவர்களை 1984 இல் அண்ணாமலைப் பல்கலை.யில் சந்திக்கும் வாய்ப்புப் பெற்றேன். அங்கு அவர் தமிழ்க் கல்வி குறித்தும் பேசினார். அன்று தொடங்கிய வியப்பு இன்றும் என்னுள் வியப்பாகவே நிற்கிறது. அவரைப்போல் கற்க வேண்டும் என்ற எண்ணம் இன்றும் அப்படியே தொடர்கிறது. "உங்கள் தடம் தமிழ்த்தடம் ஆகிவிட்டபடியால் தமிழை நீங்கள் நன்கு கற்க வேண்டும்" என்ற மாணிக்கத் தொடர் இன்றும் என்னை இயக்கிக் கொண்டிருக்கின்றது.

வ.சுப.மா. இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற மாமனிதர். இலக்கிய இலக்கணங்களில் தனக்கு நிகரற்ற புலமையாளர். உழைப்பாலும் ஒழுக்கத்தாலும் நாம் வணங்கும் தெய்வம். தமிழ் கற்கும் எந்த மாணவனும் இவரைக் கற்றாலே புலமை பெற முடியும்; இல்லையேல் அந்தப் புலமை, குருடன் பார்த்த யானை; வேட்கைக்கு உதவாக் கானல் நீர்; மெய்மை யறியாப் பொய்மான்.

ஆசிரியப்பணியை அறப்பணியாக வாழ்வுத்தவமாகக் கொண்டவர். நூற்றாண்டு கடந்தும் இவர்தம் இலக்கிய இலக்கண ஆய்வுகள் இலக்கியப்படைப்பே போல் இன்றும் புதுமையாகக் காட்சிதருகின்றன. தொல்காப்பியத்தையும் சங்க இலக்கியங்களையும் இவர் தடத்தின் வழியே நோக்கினால் எளிதில் விளங்கிக் கொள்ளலாம்; இல்லையேல் குறிச்சி புக்க மான் போல இடர் உறுதல் உறுதி. எளிமையான குடும்பத்தில் பிறந்து கற்ற கல்வியால், ஒழுக்கத்தால், அறிவால் அஞ்சத்தக்க சான்றோனாக உயர்ந்தவர். அறிவுடையோன் ஆறு அரசுஞ் செல்லும் என்பதற்கு நிகழ்காலச் சான்றாய் விளங்கியவர்.

பிறந்த ஊரில் கணேசர் செந்தமிழ்க் கல்லூரிக்கு உரமாய் நின்றார். தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு விசாலமான அடிப்படையை உருவாக்கித் தந்தார். மதுரைப் பல்கலைக்கழகத்தை வாழவைத்த சிறந்த கல்வியாளராக விளங்கிய மாணிக்கனார் நிருவாகத்தில் நெறிப்பிசகா நேர்மையாளராக விளங்கினார். தமிழ்வழிக் கல்வி இயக்கத்தால், தமிழ் வழிபாட்டால் மிகச்சிறந்த முன்மாதிரியான சமூக மனிதராகவும் திகழ்ந்தார். வ.சுப.மா. போன்ற தமிழறிஞர் அவருக்கு முன்னும் பின்னும் இல்லையென்றே கூறவேண்டும். இம்மாமனிதரே எனக்கு இங்குப் பணியாற்றும் வாய்ப்பைத்தந்தார். அந்த நன்றியுணர்வே இன்றும் வேள்வியாய் என் ஆசிரியப் பணி தொடர்கிறது.

உலகம் என்பது பல்குடும்பத்தொகுதி. தனிக்குடும்பம் உலகத்தின் ஒரு கூறு. தன்குடி காப்பவனும் ஓரளவால் உலகம் காப்பவனாக ஒப்பவேண்டும் என்ற வாழ்வியல் நோக்கே வ.சுப.மா உலகுக்கு வழங்கும் வாழ்க்கை நெறியாகும். தனிக்குடும்பம் உலகத்தின் ஒரு கூறு என்பதால் அதனைப் போற்ற வேண்டும். ஆனால் அது பகுதி என உணர்ந்து உலகம் என்ற முழுமையையும் போற்றும்போது தான் வாழ்வு நிறைவானதாக மலர்கிறது. அந்நிறைவை நோக்கி வெற்றிப் பயணம் மேற்கொண்டவர்தான் செம்மல் வ.சுப.மா.



# அறவோர் யார்?

திரு. **இராம. விசுவநாதன்**,
கங்கை காவேரி வாணிகத் தொடர்பு, மதுரை

பிள்ளையாரிடம் பிள்ளைகளைக் கேட்கச் சொல்கிறார்: "சங்கத் தமிழ் மூன்றுந்தா" என்று நல்வழி முதல் பாடலில் நம் தமிழ்மகள் - கவியரசி ஔவையார்.

இளையோர் ஏழிளந்தமிழ் கற்று (ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, நறுந்தொகை, நன்னெறி உலகநீதி)) வாழ்வாங்கு வாழ வேண்டும் என்பது வ.சுப. மாணிக்கனாரின் கொள்கைகளில் ஒன்று.

நூற்றாண்டு விழாக் கொண்டாடுகிறோம். அவர்தம் இயல்பான வாழ்க்கையைக் கண்டோம்; நற்சொற்களைக் கேட்டோம். தாய்மொழி வழிக் கல்வியே வாழ்க்கைக்கு மேன்மை தரும் என்று அவர்தம் தலையாய கொள்கையை முழுமை பெறச் செய்யத் தமிழர்கள் இணக்கமுடன் செயலாற்றி, வெற்றி பெறுவார்களாக.

எழுத்தறிவித்த ஆசிரியர்களை மதித்தார். தம்மிடம் பயின்ற மாணவர்களைப் பாராட்டி ஊக்குவித்தார். பேராசிரியர் க. அன்பழகன், நாவலர் இரா. நெடுஞ்செழியன், மகாகவி அர. சிங்காரவடிவேலன், சொல்லோவியர் சொ.சொ.மீ.சுந்தரம், திரு. சுப்பையா, நீதியரசர் மெ.சொக்கலிங்கம், கற்பக விநாயகம் இவ்வாறு பல்லாயிரவர் அவர்தம் மாணவர்களே. பெயர்களின் தலைப்பெழுத்து தமிழ் எழுத்தாக இருக்க வேண்டும் என்பதை நடைமுறைப்படுத்துவார். அழகப்பா கல்லூரியில் படிக்கும் காலத்தே "டி" பாண்டியனை "தா" பாண்டியன் ஆக்கினார்.

குறள்வேந்தர் மீ. கந்தசாமிப் புலவரும், தமிழ்ச்செம்மல் வ.சுப. மாணிக்கமும் மேலைச்சிவபுரி திண்ணைப்பள்ளிக்கூடத்தில் ஒன்றாகப் படித்தவர்கள், ஏழிளந்தமிழ் எழுத்துப் போட்டியும், இளைஞர் இலக்கிய விழாவும், மதுரை, வடக்குரத வீதி, மதுரைத் திருவள்ளுவர் கழகத்தில் 27 ஆண்டுகள் அடியேனின் அறக்கொடை ஏற்பாட்டில் செவ்வனே நிகழ்ந்துள்ளன. ஒவ்வோராண்டும் ஒன்று முதல் ஏழாம் வகுப்பு வரை 700 முதல் 1000 மாணவர்கள் வரை கலந்து கொண்டுள்ளனர்.

உண்மையை உண்மையாகவே கடைப்பிடித்தால் பிற அறங்கள் செய்யவும் வேண்டுமோ?



**மாணிக்கச் சிந்தனைகள்**

**மக்கட்கு அறஞ்செய்வதைக் காட்டிலும்**
**மன்னுயிர்கட்கு அறநலம் செய்வது**
**என் பெருநோக்கம்**



# பேராசிரியர் வ.சுப.மா. அவர்களும் தில்லை கோவிந்தராஜப் பெருமாளும்

பேராசிரியர் **ஏ.வி.ரங்காச்சாரி**
முன்னைத் துறைத்தலைவர், பொருளாதாரத்துறை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

*தமிழையே தெய்வமாகக் கருதிச் சேவை சாதித்துக் கொண்டிருந்த பெருமகன், அறிஞர் வ.சுப.மாணிக்கனார் ஆவார்.*

*தமிழ்த்தாத்தா உ.வே.சா., விபுலானந்த அடிகள், ரா.ராகவையங்கார், ந.மு.வேங்கடசாமி நாட்டார், பண்டிதமணி, கா.சு.பிள்ளை எனத் தமிழ்த்துறையை அலங்கரித்த பெருமக்கள் வரிசையில் குறிப்பிடத்தகுந்த பணி செய்தவர் சான்றோர் வ.சுப.மா. அவர்கள் தமிழ்த்துறைத் தலைவராக இருந்தபோது நான் பொருளாதாரத்துறையில் பேராசிரியராகப் பணி செய்து கொண்டிருந்தேன். பல்கலைக்கழக நிர்வாகமும் மாணவர்களும் அவர்கள்மீது வைத்திருந்த அளவு கடந்த மதிப்பை நன்கு அறிந்தவன் யான்.*

*அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையும், பொருளாதாரத் துறையும் ஒரே கட்டடத்தில் அமைந்துள்ளன. துறைத்தலைவராக இருந்து அவர்கள் நடத்திய தமிழ் மாநாடுகள், கருத்தரங்குகள், அறக்கட்டளைப் பொழிவுகள் எல்லாம் அந்நாளில் பெரும் வைபவங்கள் போல நடந்தன. பல்வேறு பல்கலைக்கழகங்கள் நிறுவனங்களில் அவர்தம் நூற்றாண்டுவிழாக் கொண்டாட்டங்கள் தமிழ்விழாவாக நடைபெற்று, தற்போது அவர் பிறந்த ஊரான மேலைச்சிவபுரியில் திருவுருவச் சிலை திறப்பு விழாவோடு நூற்றாண்டுவிழா சீரும் சிறப்புமாக நடைபெற இருப்பதறிந்து பெரிதும் மகிழ்கிறேன்.*

*இது நிகழ்வைத் தமிழ்மக்கள் தமிழுக்குச் செய்யும் மரியாதை என்றே கருதுகிறேன். இந்த மங்கல வேளையில், பெருமாளோடு தொடர்புடைய அவர்கள் தமிழ்ப்பற்றைக் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும் என்று கருதுகிறேன்.*

*வைணவத்தில் தெய்வப் பாடல்களை அருளிச் செய்தவர்கள் ஆழ்வார்கள். அவர்களில் கடைசியான ஆழ்வார் திருமங்கை ஆழ்வார் ஆவர். இவ்வாழ்வார் தாம் பாடிய ஆறு பிரபந்தங்களோடு நம்மாழ்வார் பாடிய 1102 பாடல்களையும் கொண்ட திருவாய்மொழியையும் மனப்பாடமாகக் கொண்டவர். அதன் காரணமாக இவர் வாழ்ந்த 8ஆம் நூற்றாண்டில் திருவரங்கம் திருக்கோயிலில் வைகுண்ட ஏகாதசி முதல் பத்து நாட்களுக்குத் தினம் 100 பாசுரங்களாகத் தானே அரங்கநாதர் முன்பு பண் இசையுடன் பாடி, இசை, நாடக முறையைத் தொடங்கி நடத்திவந்தார்.*

*ஆழ்வார்கள் காலம் முடிவுற்றவுடன் 9ஆம் நூற்றாண்டில் அவதரித்த முதல் வைணவ ஆசாரியார் ஸ்ரீமந் நாதமுனிகள் மூலம் நாலாயிரம் பாடல்களும் தொகுத்து அடைவு செய்யப்பட்டு வெளியிடப்பட்டது. அப்போது நாதமுனிகள் வைணவத்திருக் கோயில்களின்*



வழிபாட்டு முறைகளில் ஆழ்வார் பாடல்களை, காலை, மாலை மற்றும் விழாக்களில் பாடியே வழிபாடு நிறைவு செய்யும்படி வழிவகுத்தார்.

அதன்படியே சிதம்பரம் தில்லை கோவிந்தராஜப்பெருமாள் திருக்கோயிலில் கால சந்தி பூஜையில் பெரியாழ்வார் பாடிய திருப்பல்லாண்டு, ஆண்டாள் பாடிய திருப்பாவை ஆகிய இரண்டு பிரபந்தங்களும் இறைவன் முன்பு கருவறையின் அருகில் பாடப்பட்டே காலை வழிபாடு நிறைவு பெறும். மாலையில் திருவிளக்கு ஏற்றி, மாலைகள் சாத்தியவுடன் அந்திக்காப்பாக, 40 பாசுரங்களைப் பாடிய பிறகே மாலை பூஜை நிறைவு பெறும்.

மரியாதைக்குரிய பேராசிரியர் வ.சுப.மாணிக்கனார் அவர்கள் கோயிலுக்கு வரும் நாட்களில், பெருமாள் கோயிலில் நின்று சிறிது நேரம் இப்பாடல்களை இறைவன் முன்பு ஓதப்படுவதைக் கேட்டு மகிழ்ந்து, உள்ளப்பூரிப்புடன் என்னிடம், “பெருமாளுக்கு ஆழ்வார் பாடலைக் கேட்டு மகிழாவிட்டால் தூக்கம் வராதுபோலும்” என்று சொல்லி, தமிழ் வழிபாட்டை மிகவும் பாராட்டிப் பேசியது என் காதில் இன்னும் ஒலித்துக்கொண்டே உள்ளது. அதனைத் தினமும் நினைத்து அகமகிழ்வேன்.



## மாணிக்கச் சிந்தனைகள்

**வாய்மையில் அழுத்தம், முற்றிய புலனடக்கம், இறையொருமைப்பாடு, நோய்க்கிடங் கொடாமை, காலவொழுங்கு, விரைந்த ஆக்கச் செயல், குழந்தைச் சுறுசுறுப்பு, இளமை வேகம், தொண்டின் பெருக்கம், சோர்வு படாக்கிளர்ச்சி, தூண்டும் எழுச்சி, விரிந்த வாய்ப்புக்கள், காம வெகுளி மயக்கமின்மை, புதுமை வேட்டல், சொல் லொழுங்கு, மாற்றம் போற்றல், செயல்மிகுதி, நடைமுறைச் செம்மை, எதிர்கால வொழுங்கு, நிதிநாட்டம், அறிவுத் தேட்டம், பன்மொழிக் கிளர்ச்சி, உயிர் நோக்கம், உலகநோக்கம், இப் பிறப்பைப் பெருந்தொண்டாக்கல், நன்னம்பிக்கை, இவற்றையெல்லாம் நினைவுகொள்வேன்!**



# எளிமையின் சிகரம் பேராசிரியர் வ.சுப.மா.

திரு. எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம்

பேராசிரியர் மூதறிஞர் வ.சுப. மாணிக்கம் ஐயா அவர்களின் நூற்றாண்டு விழா நடைபெறுவது தமிழுக்கு நாம் செய்யும் வணக்கம் போன்றது. ஐயா அவர்கள் எனக்கு நெருக்கமானவர். அவர்கள் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகவும், மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தராகவும் பணியாற்றிய காலத்தில், தோளோடு தோள் நின்றவர்கள். மேன்மை தாங்கிய திருமுறை ஆராய்ச்சிக்கலைஞர் க. வெள்ளைவாரணனார் ஆவார். இருவரின் நூற்றாண்டுவிழாவும் ஒன்றன்பின் ஒன்றாக நடைபெறுவது மிகவும் பொருத்தமுடையதாக உள்ளது.

1987 ஆம் ஆண்டு சிதம்பரம் ஸ்ரீ நடராஜர் ஆலயக் குடமுழுக்கின்போது, அனைத்துத் தமிழறிஞர்களும், மடாதிபதிகளும் ஒத்த கருத்துடன் செயல்பட்டார்கள். அதற்கு ஐயா வ.சுப.மா அவர்களும், க.வெ. அவர்களும் ஆணிவேராகச் செயல்பட்டார்கள். அதனால் பொது தீட்சிதர்கள் ஒப்புதலுடன் நடராஜர் சபை முன்பாக இன்றளவும் தில்லைவாழ் அந்தணர்கள் உட்பட திருமுறை விண்ணப்பம் நடராஜர் சபையில் ஓதப்பட்டு வருவது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

அதுசமயம் அப்போதிருந்த குன்றக்குடி ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ அருணாசல தேசிக பரமாச்சார்ய சுவாமிகள் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்) அவர்களைத் தமிழ்நாடு சுற்றுலா மாளிகையில் சந்தித்தோம். அப்போது, 'மாவன்னா' அவர்கள், 'எப்பொழுது செல்லச் சொல்கிறார்களோ அதுவரையில் அவர்கள் விட்ட பணிகளை முடித்துவிட்டுத்தான் செல்வேன்' என்று குன்றக்குடி ஆதீனம் குன்றக்குடி சன்னிதானம் அவர்கள் சொன்னார்கள். அவர்கள், ஐயா வ.சுப.மா. அவர்கள் மீது வைத்திருந்த பெருமதிப்பு எங்களுக்குப் புரிந்தது. அந்த திருமுறைப்பணியில் ஐயா அவர்கள் என்னையும் ஈடுபடுத்தினார்கள். பேராசிரியர் வ.சுப.மா. அவர்களும், க.வெ. அவர்களும் இட்ட கட்டளைகளைச் சிரமேற்கொண்டு செய்தது எனக்கு மகிழ்ச்சியைத் தந்தது. எங்களின் வேண்டுகோளை ஏற்று ஸ்ரீ ராமகிருஷ்ண வித்தியாசாலா பள்ளிக்கு ஐயா அவர்கள் வருகைதந்து சொற்பொழிவாற்றியது நன்றியுடன் நினைவுகூரத்தக்கதாகும்.

ஐயா வ.சுப.மா. அவர்களின் 'தாயுமானவர் சினம்' என்ற ஆராய்ச்சிக் கட்டுரை சிறப்பானது ஆகும். காரைக்குடியில் அவர்கள் இல்லத்திற்குச் சென்று வணங்கி வந்தோம். ஐயா. வ.சுப.மா. அவர்கள் மகாத்மா காந்திஜியின் கொள்கைகளில் மிகுந்த பிடிப்பு உடையவர்கள். நேர்மையின் வடிவம் வ.சுப.மா. ஐயா. அவர்களை வணங்கி இக்கட்டுரையை நிறைவு செய்கிறேன். நூற்றாண்டு விழா கொண்டாடும் ஐயா அவர்களின் குடும்பத்தார்க்கு எனது வணக்கம்.



# மூதறிஞர் மாணிக்கச் செம்மலும் பேரறிஞர் இரா. சாரங்கபாணியாரும்

திரு. **த. சுவாமிநாதன்**

முன்னை வேதியியல்பேராசிரியர், பெரியார் ஈ.வெ.ரா. கல்லூரி திருச்சி

மூதறிஞர் மாணிக்கச் செம்மலை, சாரங்கபாணியார் தம் ஆசிரியராகவும், வாழ்க்கை வழிகாட்டியாகவும் கொண்டிருந்தார். முப்பது ஆண்டுகளில் செம்மலைப் பார்த்துப் பேசாத நாள்கள் எல்லாம் பிறவா நாள்கள் என்று நினைத்த பேரன்பினர் அவர்.

பேரறிஞர் இரா.சா. அவர்கள், மூதறிஞர் வ.சுப.மா.வுடனான தம் உறவை 'மாணிக்கச் செம்மல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் எனக்கு ஆசிரியராக இருந்தகாலை அரும்பிய அன்பும் ஈடுபாடும் பின்னர் அழகப்பா கல்லூரியில் இருபதாண்டுகளுக்கு மேல் உடனாசிரியராகப் பல நிலைகளில் உரையாளராக, விரிவுரையாளராக, பேராசிரியராகப் பணிபுரிந்தபோது, போதாகி மலர்ந்தன' என்பார். காரைக்குடி அழகப்பா கல்லூரியில் விரிவுரையாளராக இருந்தபோது இரா.சா. அவர்களுக்கு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் இணைப்பேராசிரியர் எனும்உயர் பதவி கிடைத்தது. ஆனால், செம்மலை நாளும் பார்க்க, அளவளாவ இயலாநிலை ஏற்படுமே என்பதனால் அந்த உயர் பதவியை ஏற்றாரில்லை. இரா. சா. அவர்கள் செம்மல் வ.சுப.மா.பால் கொண்ட ஈடுபாடு இதனால் நன்கு அறியப்படும். 'மாணிக்கனார் சங்கப்புலவர் அனைய சான்றோர். பொய்யா நாவில் மாணிக்கனார் என்றும் வாய்மொழி மாணிக்கனார் என்றும் நாம் வாழ்த்தலாம்; போற்றலாம்; புகழலாம். இது மிகைக் கூற்று அன்று; பொய்யுரை அன்று; மெய்யும் அகமும், புறமும் தூய்மை காத்துச் சொல்லிலும் செயலிலும் தூய்மை பேணி நல்வாழ்வு வாழ்ந்தவர் மூதறிஞர்' என்பார் பதிப்புச்செம்மல் திரு.ச.மெய்யப்பன். செம்மல் வ.சுப.மா. அவர்களின் வாழ்க்கை நெறி குறள்நெறியே. பேரறிஞர் இரா.சா. அவர்கள் செம்மல் வ.சுப.மா.வின் அடிச்சுவட்டில் ஒன்றிப் பயணித்தவர் எனலாம். இந்த ஒன்றிய பயணத்தின்போது செம்மலின் அறநெறி வாழ்வில் நடைபெற்ற சில நிகழ்வுகள் அறம் உணர்த்துவன; சில நல்வழிப்படுத்துவன; மற்றும் சில சுவைக்கத்தக்கன. அவ்வாறான நிகழ்வுகள் சிலவற்றைப் பேரறிஞர் இரா.சா. அவர்கள் என்னிடம் கூறியுள்ளார்.

அரசு கல்லூரிகளில் பேராசிரியராக, முதல்வராகப் பணியாற்றி 1993ஆம் ஆண்டு திருச்சி பெரியார் ஈ.வெ.ரா. கல்லூரியிலிருந்து பணி நிறைவு பெற்று, பின் ஏழு ஆண்டுகள் திருச்சியிலுள்ள ஒரு கல்விக்குழுமத்தின் நிருவாக அலுவலராகப் பணியாற்றி, 2000 ஆம் ஆண்டில் அப்பணியும் துறந்து, சிதம்பரம் மாரியப்பா நகரில் என் நன்மக்களுடன் உறையலானேன். மாலை நடைப்பயிற்சியின்போது, எனது கெழுதகை நண்பர், செ.வை.

*சண்முகனார் என்னை, பேரறிஞர் இரா. சாரங்கபாணியாருக்கு அறிமுகம் செய்வித்தார். இவ்வறிமுகத்தை வாழ்க்கையில் யான் பெற்ற பேறு என்பேன். அறிமுகமான மறுநாள் இரா.சா. அவர்களைத் 'தாங்கள் ஏதேனும் நூல் எழுதி வருகிறீர்களா?' என நான் வினவ கைநடுக்கம் என்னைக் கையிருந்தும் முடவனாக்கிற்று; 'எவரேனும் எனக்குக் கை கொடுப்பராயின் நான் துணிவேன்' என்றார். மறுநாள் காலை 10 மணி அளவில் அய்யாவின் குறளில்லம் சென்று எழுத்துப்பணி ஏற்றேன். காலை மூன்று மணி, மாலை 3.00 மணி என, அவர் நூலுக்கான செய்தியினைக் கூற, நான் அயராது எழுதி, ஆறே மாதங்களில் மெய்யப்பன் பதிப்பக வெளியீடாக 'சங்கத்தமிழ் வளம்' வெளியாயிற்று. இந்த எழுத்துப் பணியின் போது எனக்குத்தமிழ் இலக்கியங்கள் அறிமுகமாயின. சங்க இலக்கியத்தின்பால் ஈடுபாடு மிகுந்தது. 'சங்ககாலத் தொழில்நுட்பம்' எனும் நூல் எழுதி தமிழ்நாடு அரசின் பரிசும் பெற்றேன். பேரறிஞர் இரா.சா. எனது ஆசான் ஆனார். பணி தொடங்கிய மூன்றாம் நாள் ஆசான் என்னிடம் அவர் எழுதி, தமிழ்நாடு அரசின் பரிசுபெற்ற 'மாணிக்கச் செம்மல்' என்ற நூலைக் கொடுத்து, 'படியுங்கள்' என்றார், இரண்டே அமர்வில் படித்து முடித்தேன். பாட்டுடைத் தலைவனின் அறநெறி வாழ்க்கை, தெளிவான இலக்கியச்சிந்தனை, அறநோக்கு ஆசிரியராக, முதல்வராக, துணைவேந்தராக, ஆன்மீகச்சிந்தனையாளராக, பல்துறையிலும் செம்மை உடையவராக இருந்தமையை ஆசான் தனது தெளிந்த நீரோடை போன்ற அழகிய உரைநடையில் விவரித்த நூலாக இருந்தமையின் இரண்டே அமர்வில் படித்து முடித்தமையை ஆசானிடம் நான் கூற, அது முதலே ஆசான் செம்மல் வ.சுப. மா. அவர்களின் அற வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்வுகள் சங்க இலக்கியப்பாடலில் ஒத்திருக்கும்போதெல்லாம் கூறத் தொடங்கினார்.*

*சங்க இலக்கிய மேற்கோள்கள் என்ற நூலுக்குப் புறநானூறு தொடங்கி சிறந்த அடிகளைத் தேடும் பணியில் நாங்கள் இருந்தபோது,*

வாழ்தல் வேண்டிப்
பொய் கூறேன் மெய் கூறுவல் *(புறம். 139: 5,9)*

*இவ்வடிகளின் பொருள், 'இவ்வுலகில் உயிர்வாழ விரும்பி யான் பொய் கூறமாட்டேன்; உண்மையே கூறுவேன்' என்பதாம். 'மருதன் இளநாகனார் நாஞ்சில் வள்ளுவனைப் பாடிய பாடலில் உள்ள மேற்காணும் அடிகளைக் குறித்துக்கொள்க' என்றார். பின்னர் சிறிது இடைவெளி; ஒரு பெருமூச்சு, இவை எல்லாம் அவர் பழைய நினைவுகளை நிகழ்காலத்துக்குக் கொண்டு வரும் உத்திகள்.*

*செம்மல் அவர்களின் பதினோராம் அகவையில் தனவணிகமரபுக்கேற்ப இரங்கூன் சென்று ஒரு வட்டிக்கடையில் பணி அமர்ந்தார். சில ஆண்டுகள் கழித்து ஒருநாள் கடையின் உரிமையாளர் செம்மலிடம் தான் கடையின் உட்புறம் இருந்து கொண்டே தம்மைத் தேடி வருவோரிடம் தாம் இல்லையென மொழியப் பணித்தார். சிறிய பெருந்தகையோ பொய்யுரைக்க மாட்டேன் என்று கூறி அதில் உறுதியாயுமிருந்தார். இவ்வுறுதி, செம்மலின் பணியைப் பறித்தது. செம்மலின் வறுமையில் செம்மையைக் கூறுங்கால் அய்யாவின் கண்கள் பனித்தன. துன்பச் செய்தியாயினும் இன்பச் செய்தியாயினும், செய்தி அவரது*



உணர்வுகளைத்தொடுமாயின் அவது கண்கள் பனிக்கும். சிறிதுநேரம் கழித்து, செம்மலின் இவ்வாய்மை அறம், அவர் வாழ்க்கையில் ஒரு திருப்புமுனை, சிறிய வட்டிக்கடை, பின் பெரிய வட்டிக்கடை, மற்றும் மற்ற வணிகம் என்றில்லாமல் தமிழுக்குத் தவப்புதல்வனாகி, தமிழ் ஆசிரியராகி, பேராசிரியராகி, கல்லூரி முதல்வராகி, துணைவேந்தராகி, பல நூறு மாணவர்கள் தரமான மாந்தர்களாகவும் தமிழறிஞர்களாகவும் மாற வழி வகுத்ததல்லவா வட்டிக்கடைப் பணி பறிப்பு எனும் அந்நிகழ்வு. ஆகவே அந்நிகழ்வு ஒரு திருப்புமுனையே என்றார்.

புறநானூறு பாடல்களில் சிறந்த மேற்கோள்கள் தேடலில் நாங்கள் ஈடுபட்டிருந்த காலை, 'மோசிகீரனார் பாடலை நான் படித்தேன். இப்பாடலில் 5 முதல் 14 அடிகள் வரை பதிவு செய்துகொள்ளுக' என்று பணித்தார்.

தகடூர் எறிந்த சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறையின் வீர முரசம் நீராட்டிக் கொண்டு வர எடுத்துச் சென்றபோது அரசனைக் காணவந்த புலவர் மோசிகீரனார் வழிநடை களைப்புத் தீர முரசுக் கட்டில் என்று அறியாமல் அதில் படுத்து உறங்கிவிட்டார். மன்னன் சேரல் இரும்பொறை முரசுக்கட்டிலின் பெருமைக்குச் சிறுமை செய்தவரை வெட்ட ஓங்கிய நிலையில், படுத்திருப்பது புலவர் மோசிகீரனார் என்பதறிந்தான். வாளை கச்சையில் செருகிவிட்டு கவரி கொண்டு வரச்செய்து வீசி புலவர் இனிது உறங்க வழி செய்தான். உறங்கி விழித்த மோசிகீரனார் அவன் செயல் கண்டு உணர்ச்சி வயப்பட்டுப் பாடிய பாடலே மேற்குறித்த பாடல். பாடலின் பொருள் கூறியபின் சுவரில் மாட்டப்பட்டிருந்த மூதறிஞர் படத்தைப் பார்த்தார். அன்று ஏதோ மங்கல நாள்போலும், படத்திற்கு மலர்மாலை அணிவிக்கப்பட்டிருந்தது. படத்தைக் கண்ணுற்ற ஆசானின் கண்கள் பனித்தன. உதடுகள் துடித்தன. சொற்கள் வெளிவர மறுத்தன. தேம்பினார். நான் ஊமனானேன். சில மணித்துளிகள் கழிந்தன. பேசத்தொடங்கினார். மதுரை காமராசர் பல்கலைக்கழகம் செம்மல் வ.சுப.மாவைத் துணைவேந்தராகப் பெற்றிருந்த பொற்காலம். என் ஆசான் அவர்கள் பல்கலைக்கழகத்தின் தமிழ் முதுகலைத் தேர்வாளர் குழுவின் தலைவர். குழுக்கூட்டத்தின் காலை அமர்வு 12.30 மணி அளவில் முடிந்து மதிய உணவுக்கான இடைவேளை. துணைவேந்தரைப் பார்க்கச் சென்றார் அய்யா. பணியாளர் வழி அறிமுகச்சீட்டு அனுப்பினார். அவருக்கு முன் ஆங்கே அமர்ந்திருந்தோருக்கு ஒருவர் பின் ஒருவராக அழைப்பு வந்தது. தனக்கு முன்னுரிமை வழங்கப்படும் என்று நினைத்திருந்தவருக்கு ஏமாற்றம். இவருக்கான முறை வந்தபோதும் அழைப்பு வரவில்லை. இவருக்குப் பின் வந்தோர் ஒருவர் பின் ஒருவராக அழைக்கப்பட்டனர். மணி 12.50 அய்யாவின் மதிய உணவு நேரம் 12.30-1.00 கால எல்லை தாண்டும் நேரம். 'தனக்கு முன்னுரிமை தரவில்லையே' என்ற ஏக்கமும் பசியும் ஒன்றிற்குள் ஒன்று ஒதுங்கின. ஆற்றாமையும் காலம் பார்த்து ஒற்றாடியது. இருக்கையில் சாய்ந்தபடி 'பேழ்கணித்தார்' (உறக்கமும்-நனவும் ஒன்றிணைந்த நிலை) 'மறைக்காட்டில், தான் பத்துப் பாடல்கள் பாடிய பின்னர் திறந்த கதவம், ஞானசம்பந்தர் பாடிய முதற்பாட்டிற்கே திறந்து மூடும் நிலை ஏற்பட்டதே! ஒருகால் கதவம் மூடிய நிலையில் இருக்க வேண்டுமென்பதுதான் இறைவன் திருவருளோ? நான் அவனது விருப்பமறியாமல் கதவம் திறக்கப் பதிகம் பாடிவிட்டேனோ?' என்ற உணர்வு ஓங்க - 'அப்பரடிகள் பேழ்கணித்தார்' என்பார் சேக்கிழார் பெருமான். மணி

*1.00. பல்கலைக்கழகச் சங்கு, காலம் தாழ்த்தாமல் ஒலித்தது. சங்கொலி ஐயனை விழித்தெழச் செய்தது. மோசிகீரனார் துயிலெழுந்தார். பெருஞ்சேரல் இரும்பொறை கவரி வீசி நிற்கக் கண்டார்.*

*அப்பரடிகள் தொடு உணர்வால் விழித்தெழுந்தார்; வாய்மூர் அடிகள், பின் தொடர்வாயாக! என அழைக்கக் கண்டார்.*

ஐயா விழித்தெழுந்தார். துணைவேந்தர் புன்முறுவலுடன் தம்முடன் நிற்கக் கண்டார்; துணைவேந்தர் பேசத் தொடங்கினார்: "சாரங்கபாணி! பசி மயக்கமா? மற்றையோர் காத்திருக்க உங்களை அழைத்திருந்தால் உங்களுடன் அளவளாவும் காலம் சுருங்கும். மேலும் உங்களுடன் மதிய உணவைச் சேர்ந்துண்ணும் அவாக் கொண்டேன்; விருந்தினரை நேரில் வந்து அழைக்கும் விருப்பினனும் ஆனேன்" என்று கூறி நண்பரின் கையைப் பிடித்து அழைத்துச் சென்று 1.55 வரை உண்பதற்கிடையே குடும்பத்தார், கல்லூரி, தேர்வாளர் குழு, நிலைப்பாடு பற்றியெல்லாம் பேசிப் பேசி மகிழ்ந்தனராம் இருவரும்.

இந்நிகழ்வைக் கூறி முடித்த ஐயா, செம்மலின் திருவுருவப் படத்தைப் பார்த்தவாறே அமர்ந்திருக்க நான் என் ஆசானின் திருவுருவத்தைப் பார்த்தவாறே அமர்ந்திருந்தேன். அவர் நினைவில் வந்து போன பழைய நினைவுகள் நானறியேன். எனது நினைவில் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நட்பின் திறத்திற்கு இலக்கணமாய் இருந்து இன்றும் பேசப்படும் கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையும் தோன்றினர்.

பிசிரோன் என்ப என் உயிரோம் புநனே
செல்வக் காலை நிற்பினும்
அல்லற் காலை நில்லலன் மன்னே *(புறம். 215: 7,9)*

என்னும் புறப்பாடலடிகள் அவ்விருவரின் நட்பின் திறத்தை, ஈராயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரும் உணர்த்தி நிற்கின்றன. அது போன்றே மூதறிஞர் செம்மல் வ.சுப.மா., பேரறிஞர் ஐயா சாரங்கபாணியார் ஆகியோரின் நட்பின் திறம் தமிழ் நிலைத்திருக்கும் காலம் வரை பேசப்படும் என்பது உறுதி.



## மாணிக்கச் சிந்தனைகள்

**அறிவியல் முதலாக எல்லாந் தமிழ்;**
**தனியார் கல்லூரி முதலாக எங்குந் தமிழ்.**

**என்ற இரண்டு அடிப்படைகளிற்றான் தமிழையும் தமிழ்ச் சமுதாயத்தையும் முறையாக வளர்த்துக் கொண்டு செல்ல முடியும்; வெற்றி காணமுடியும்.**



# வள்ளல் வ.சுப.மா.

திரு. **சோம.லெ.சோமசுந்தரம்**
நெற்குப்பை

*“ஈட்டுங் காலத்தே வழங்கும் உணர்வும் இன்றியமையாதது. சொல்லுதவி, உழைப்புதவிகள் செய்தாலுங்கூட ஓரளவாவது பொருளுதவி செய்தலும் வாழ்க்கையின் ஒரு பெருநெறியாகும். அப்போதுதான் நமக்கு வாழ்வு தரும் உலகத்திற்கு நாம் வாழ்வு சேர்ப்பதாகும்.” (வ.சுப. மாணிக்கம், தற்சிந்தனைகள், ப.57)*

*சிலப்பதிகாரத்தின் பெயர்க்காரணத்தையும், கம்பராமாயணத்தையும் மட்டுமன்றி, எவற்றையும் மாறுபட்ட புதிய கோணத்தில் பார்த்த பெருமகனார் வ.சுப.மா.அவர்கள். இப்பண்பினைத் தன் ஆசான் பண்டிதமணி கதிரேசன் செட்டியாரிடம் கற்றுக்கொண்டதாகப் பெருமையோடு நினைவுகூர்ந்துள்ளார். தமிழ் உலகம் வ.சுப.மா அவர்களை ஆசிரியராக, ஆய்வாளராக, அறிஞராக, வாய்மையாளராக, துணைவேந்தராகப் பார்க்கும் போது, வ.சுப. மா. அவர்களின் வழியில், மாறுபட்ட புதிய கோணத்தில், அப்பெருமகனாரை நான் வள்ளல் வ.சுப. வாகப் பார்க்கின்றேன்!*

*விருப்பமுறி (உயில்) மூலமாகத் தம் சொத்தில் ஆறில் ஒரு பங்கினை வைப்புநிதியாகத் தாம் பிறந்த மேலைச்சிவபுரியில் கல்வி, மருத்துவம், குழந்தைகள் மற்றும் அஃறிணை உயிர்களின் நலத்திற்கும் ஈந்த கொடைத்தன்மையும், தம் நூல்கள் அனைத்தையும் அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு வழங்கிய பண்பும், வ.சுப.மா. அவர்களை வள்ளலாகப் பார்க்க என்னைத் தூண்டின.*

*பொதுவாக இவ்வுலகம் செல்வத்தை மற்றவர்களுக்கு வழங்கும் செல்வந்தர்களையே வள்ளலாகப் பார்க்கிறது. முல்லைக்குத் தேர் கொடுத்த வள்ளல் பாரி பிறந்த மண்ணின் மைந்தன் வ.சுப.மா., ஈகையை, “பணம்” என்ற குறுகிய வட்டத்திற்கு அப்பால் பார்க்கின்றார்:*

> “எப்பருவத்தினரும் எந்நிலையினரும் செய்யக்கூடிய பொது நலங்கள் ஏராளமாக உள்ளன. இவற்றைச் செய்வதற்குப் பணம் தேவையில்லை. மனமே தேவை. அழைப்புத் தேவையில்லை. மனமே தேவைகூடத் தேவையில்லை; அன்புகூடத் தேவை.”
>
> *(திருக்குறட்சுடர், ப.28)*

*இவ்வாறு, தன்னார்வமாக, அன்போடு, எவ்வயதினரும் பொதுநலங்களில் ஈடுபடுவதே ஈகை என்ற ஆழந்த கருத்தைத் தன் உயரிய செந்தமிழ் நடையின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார் சிந்தனை வள்ளல் வ.சுப.மா.*

“எந்நிலையிலும் ஒல்லும் வகை நல்லறத்துக்கு நன்கொடை பிற்காலத்து வழங்கவேண்டும் என்று எண்ணுகின்றார். அக்கொடை எல்லாவுயிர்க்கும் பயன்படும் பொது அறமாக இருக்க வேண்டும். மக்கட்கு அறஞ்செய்வதைக் காட்டிலும் மன்னுயிர்கட்கு அறநலம் செய்வது என் பெருநோக்கம்‘

*(தற்சிந்தனைகள், ப.40)*

*என்ற கொள்கை வழிப்படி வாழ்ந்த வள்ளல் வ.சுப. மா. அவர்களைப் பற்றிய வரலாற்று நூலில் ‘உற்றுழி உதவிடு உள்ளம்‘ எனப் புகழாரம் சூட்டுகிறார் பேராசிரியர் இரா. மோகன்.*

*‘‘எது மனிதத் தொழில்? ஈதல், எது மனித வாழ்வு? கொடுத்து வாழ்தல். எது மனிதனுக்கு முடிவான பயன்? கொடைப்புகழ் என திருக்குறளில் ஈகையை மிகவும் எளிதாக வினா, விடை மூலம் விளக்குகிறார் உரைநடை வள்ளல் வ.சுப.*

*எண்ணத்தாலும், செயலாலும் வள்ளலாய் வாழ்த்த வ.சுப. தம் மறைவுக்குப்பின் ‘இயற்கைத்தொண்டு’ என்ற தம் கவிதையின் மூலம் எப்பருவத்தினரும், எந்நிலையிலும் வள்ளல் ஆகலாம், ஆகவேண்டும் என்ற கனவினை நனவாக்கி வருகின்றார். அக்கவிதை பின்வருமாறு.*

நல்லாவின் பால்முழுதும் கன்றுக்கில்லை:
 நறும்பூவின் மணமுழுதும் சோலைக்கில்லை:
நெல்லாகும் கதிர்முழுதும் நிலத்துக் கில்லை:
 நிறைகின்ற நீர்முழுதும் குளத்துக் கில்லை:
பல்லாரும் கனிமுழுதும் மரத்துக் கில்லை
 பண்ணரம்பின் இசைமுழுதும் யாழுக்கில்லை
எல்லாமே பிறர்க்குழைக்கக் காணுகின்றேன்
 என்வாழ்வும் பிறர்க்குழைக்க வேண்டும் வேண்டும்

*வள்ளல் வ.சுப. மாணிக்கனார் வாழ்க! வ.சுப. புகழ் வளர்க! வ.சுப.வின் அறநெறி வளர்க!*



**மாணிக்கச் சிந்தனைகள்**

**தமிழின் உயர்வுக்குத் தமிழர் அடிப்படை. ‘வெள்ளத்தனைய மலர் நீட்டம்’ (595) என்பது போலத் தமிழன் வளர்ச்சியளவே தமிழ் வளர்ச்சி.**



# வ.சுப.மாணிக்கனாரின் நிர்வாகத் திறமை

திரு **சுப்பிரமணியன் முனுசாமி**
தலைமைத் தொழில்நுட்ப அலுவலர், மனிதசேவைத்துறை, மேரிலேண்ட்

முதறிஞர் எனவும் செம்மல் எனவும் அழைக்கப்பெறும் அறிஞர் வ.சுப.மாணிக்கனார் அவர்களின் நூற்றாண்டினையொட்டி, அன்னார் வாய்மை, எளிமை, தொண்டு, ஒழுக்கம், நம்பிக்கை என்னும் பண்புகளுடன் போராட்டங்களை வெற்றிகொண்டு வாழ்ந்து காட்டிய வரலாற்றை, இக்காலச்சமுதாயத்திற்குக் கொண்டு செல்வது நம் அனைவரது கடமை ஆகும்.

“தனித்தமிழ் இயக்கத்துக்கு வித்திட்டவர் மறைமலை அடிகள்; அதை வளர்த்தவர் தேவநேயப்பாவாணர்; அது மேன்மேலும் வளர்ந்து தழைத்தோங்கச் செய்தவர் டாக்டர் வ.சுப. மாணிக்கனார்” என்பது அக்காலத்தமிழறிஞர்களின் கூற்று. தமிழுக்கு அவர் செய்த அத்தகைய அரிய தொண்டினையும், அன்னாரின் நிர்வாகத்திறமையினையும் உலகிற்குப் பறை சாற்றுவதும் அவரது நூற்றாண்டினைக் கொண்டாடும் இத்தருணத்தில் நம் கடமையாகும்.

அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு

என்பது வள்ளுவன் கூற்று. அன்பு, அறிவு, செயலாற்றும் திறமை, பேராசைப்படாத குணம் ஆகிய நான்கு பண்புகளையும் நிலையாகப் பெற்றிருப்பவரைத் தேர்வுசெய்து அத்தகையோருக்கு நிர்வாகப் பதவி செய்வதே சாலச்சிறந்தது என்பது இதன் பொருள். ஆக நிர்வாகத்திறமை என்பது செயலாற்றும் திறமை மட்டுல்லாமல், அன்பு, அறிவு, அவா இல்லாமை ஆகிய நற்குணங்களும் அத்துடன் இணைந்துசெல்வது என்பது அறியப்படுகிறது. மாணிக்கனாரிடம் இக்குணங்கள் செறிந்து இருந்தன என்பது அவருடைய வாழ்க்கை வரலாற்றினை உற்றுநோக்கினாலே புலப்படும்.

வ. சுப. மாணிக்கனார் வள்ளுவத்தின்மீது பேரன்புகொண்டு அதன்வழி நடந்தவர். அதன் சிறப்பை விளக்கும் வகையில் வள்ளுவம், திருக்குறட்சுடர், உரைநடைத்திருக்குறள் போன்ற நூல்களையும், மாணிக்கக்குறள் என்ற கவிதை நூலையும் எழுதியிருக்கிறார்.

அவரது நிர்வாகத்திறமைக்குச் சான்றாக அவரதுசெயற்பாடுகளும், பணிகளும் திருவள்ளுவர் நிர்வாகத்திறமை பற்றிஅளித்த குறள்கள் வழிப்படி அமைந்திருந்தன என்பதை இக்கட்டுரையில் காணலாம்.

நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும்.

*நன்மை எது தீமை எது என ஆராய்ந்து அறிந்த, நற்செயலில் மட்டுமே நாட்டங் கொண்டவர்கள் எப்பணியினை ஆற்றிடவும் தகுதி பெற்றவராவார்கள். இக்குறள்நெறிப்படி மாணிக்கனார்தம் இளவயதிலேயே நடந்தது காணலாம்.*

*குடும்பச் சூழ்நிலை காரணமாக, பிற தனவணிகர்போலவே மாணிக்கனாரும் பர்மாவுக்குச் செல்லநேர்ந்தது. இரங்கூனில் உறவினர் ஒருவர்கடையில் வணிகம் பயின்றார். ஏழு ஆண்டுகள் பணியாற்றினார். ஒருமுறை முதலாளி மாணிக்கனாரிடம், வாடிக்கையாளர் கேட்டால் 'தாம் இல்லை' என்று பொய்கூறுமாறு வற்புறுத்தவே, மாணிக்கனார் பொய்கூற விரும்பாததால் வேலையிலிருந்து நீக்கப்பட்டார். **1935**ஆம்ஆண்டு, பதினெட்டாம் வயதில் தமிழகம் திரும்பினார்.*

*வ.சுப.மாணிக்கனார் தாம் பயின்ற அண்ணாமலைப்பல்கலைக்கழகத்திலேயே **1941** ஆம் ஆண்டு விரிவுரையாளராகப் பணியேற்றார். ஏழாண்டுகள் (**1941-48**) அப்பணி அங்கு அமைந்தது. **1948** இல் காரைக்குடி அழகப்பர் கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியர் பணியில் இணைந்தார். பின் **1954**-ல் அக்கல்லூரியில் பேராசிரியராகத் தொடர்ந்து, **1964**-இல் அக்கல்லூரியின் முதல்வராக உயர்ந்தார். **1970** வரைஅக்கல்லூரியில் முதல்வராகப் பணிபுரியும் பேறும்பெற்றார். இதன் இன்றியமையாத காரணம், அவரது கடும் உழைப்பும், நிர்வாகத் திறமையுமே. அண்ணாமலைப்பல்கலைக்கழகம் மீண்டும் பணியாற்ற அழைப்பு விடுத்தது. அதன்காரணமாக **1970-1977** வரை தமிழ்த்துறைத்தலைவராகவும், இந்தியமொழிப் புல முதன்மையராகவும் பணிபுரிந்தார்.*

*மாணவர்களின் மனதை அறிந்து அதற்கேற்றவாறு பாடம் நடத்தும்பாங்கு, எளிமை, தூய்மை, நேர்மை போன்றவற்றை மாணவர்ளும் சக ஆசிரியர்களும் பெரிதும் மதித்தனர். சங்க இலக்கியங்களில் ஆழ்ந்த பயிற்சி, பல உரைநூல்களைக் கற்ற தெளிவு, ஆழ்ந்த புலமை, ஆராய்ச்சி அறிவு ஆகியவற்றால் அவரது வகுப்பு, மாணவர்களால் புறக்கணிக்க முடியாததாக இருந்தது. கம்பன், வள்ளுவன் பற்றியும் சிற்றிலக்கியங்கள் பற்றியும் இவர் ஆற்றிய சொற்பொழிவுகள், பல மாணவர்களுக்கு அவற்றை விரிவாக ஆய்வதற்கான ஆவலைத் தூண்டியது. கம்பராமாயணச் செம்பதிப்புப் பணியைச் சிறப்பாக நிறைவுசெய்தார். அப்பல்கலைக்கழகத்தின் புகழை நாடறியச்செய்தது, அவரது நிர்வாகத் திறமைக்குச் சான்றாகும்.*

*அதன்பின், வ.சுப. மாணிக்கனார் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பதவிக்கு உயர்ந்தார். அப்பொறுப்பில் அவரது நிர்வாகத்திறமை வெகுவாக வெளிப்பட்டது.*

*பிரச்சினைகளைத் தீர்ப்பதென்பதற்கும் பிரச்சினைகளைநிர்வாகம்செய்வதென்பதற்கும் வேறுபாடு உண்டு. பிரச்சினைகளைத் தீர்ப்பதில்தான் மாணிக்கனார் அவர்களுக்குக் குவியம் அதிகம். சரிவரத் திட்டமிடல், அதைச் செயல்படுத்துதல், அயராது அதைத் தொடர்ந்து கண்காணித்தல், திறம்பட முடிப்பது ஆகிய நிர்வாகத்திறமையின் இன்றியமையாத குணங்களை அவர் கொண்டிருந்ததன் காரணமாகவே, அவரால் எந்த ஒரு பணியையும் சரியாக முடிக்க முடிந்தது.*



*மனித வளத்தினைச் சரிவரப்பயன்படுத்தி, திட்டங்களை முடிப்பது, திட்டங்களுக்குத் தேவையான நிதியினைப்பெற்றுத் தருவது, அப்படிப்பெற்ற நிதியினைச் சரிவரக் கையாண்டு பணிகளை முடிப்பது போன்ற நிர்வாகத் திறமைசார்ந்த குணங்கள் மாணிக்கனாரிடம் இயல்பாகக் காணப்பட்டன. அவரது நிர்வாகத்திறமையினால், மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பதவிப் பொறுப்பேற்று பல்வேறு சாதனைகளைச் செய்தார். அவற்றுள் குறிப்பிடத்தக்கது ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டின்போது பல்கலைக் கழகத்தின் சார்பில் பல அரிய கண்காட்சிகளை அமைத்ததும், பல நூல்களை வெளியிட்டுச் சிறப்பித்ததும் ஆகும். பல்வேறு துறைகளை உருவாக்கினார்.பல்கலைக்கழக நடைமுறைகள் அனைத்தும் தமிழிலேயே இருக்கவேண்டும் என ஆணை பிறப்பித்தமை, போன்றவை குறிப்பிடத்தக்கன. அத்துடன், தம் ஆசிரியர் பெயரில் பண்டிதமணி அரங்கு நிறுவியமை, ஆசிரியர்கள் பணியாளர்கள் ஆகியோர் வீடு கட்டிக் கொள்ளக் கடனுதவி வழங்கியமை ஆகியவையும், பல்கலைக்கழகத்தின் நிதிநிலைமையைச் சீர்செய்து, இரண்டு கோடிக்கு மேல் சேமித்துக் காட்டியதும் பாராட்டப்பெற்றன.*

*சிறந்த தமிழ் அறிஞர்களைச் சிறப்புநிலைப் பேராசிரியராக அமர்த்தித் தமிழ்ஆய்வுக்கு வழிசெய்தது,*

இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்

*என்ற வள்ளுவனின் நிர்வாகத்திறமை பற்றிய கூற்றுப்படி அல்லவா?*

“ஆட்சித்திறன்என்பது, தாம்சார்ந்த நிறுவனத்தை ஓர்அங்குலமேனும் உயர்த்துவது.வ.சுப. மா. துணைவேந்தராகப் பொறுப்பேற்றிருந்த காலம் கோபுரத்திற்குக் கலசம் வைத்தது போன்ற சிறப்புடைய காலமாகும்“

*என்கிறார் டாக்டர் தமிழண்ணல்.*

*நிர்வாகத்திறமையின் இன்றியமையாத பண்பான, தலைமைப்பண்புக்கு எடுத்துக்காட்டாக, வ. சுப. மாணிக்கனார் பின்வரும் தலைமைப்பதவிகளை வகித்தார்:*

*காரைக்குடித் தமிழ்ச்சங்கம் காரைக்குடித் தமிழ் உயர்ஆராய்ச்சிமையம் தமிழ்ப்பல்கலைக் கழக வல்லுநர்குழு புதுச்சேரி பல்கலைக்கழகத் தமிழ்த்துறை வல்லுநர்குழு, தமிழகப்புலவர்குழு, அனைத்திந்தியப் பல்கலைக்கழக ஆசிரியர் மன்றம் மேலைச்சிவபுரி சன்மார்க்கசபைக் கல்லூரிக்குழு, பண்டிதமணி மு.கதிரேசனாரின் நூற்றாண்டு விழாக்குழு, மேலும் தமிழ்நாடு தெய்வீகப்பேரவை அறிவுரைஞராகவும், தமிழ்வழிக்கல்வி இயக்க நிறுவனராகவும், தில்லைத் திருக்கோவில் பொன்னம்பலத்தின்கண் திருமுறைகள் ஓதி வழிபடும் வாய்ப்பை ஏற்படுத்திய வராகவும் திகழ்ந்தார். மேலைச்சிவபுரியில் தமிழ்வழி சிறு, குறுமழலையர் பள்ளியையும் நிறுவினார்.*

*தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் வல்லுநர்குழுவின் தலைவராக இருந்து அதன் செயல்முறைகளை வகுத்துக்கொடுத்தது அவரது நிர்வாகத்திறமைக்கு மகுடம் வைத்தது போன்றதாகும். **1926**-ஆம் ஆண்டு ஆந்திரப் பல்கலைக்கழகம் தோன்றியதிலிருந்தே*

தமிழுக்கென ஒரு பல்கலைக்கழகம் இல்லையே என்ற வருத்தம் தமிழர்களுக்கிருந்துவந்தது. 1981-ஆம் ஆண்டு அப்போது தமிழக முதல்வராக இருந்த எம்.ஜி.இராமச்சந்திரன் தமிழ்ப் பல்கலைக்கழகம் நிறுவ எட்டு அறிஞர்கள் கொண்ட குழுவை நியமித்தார். அக்குழுவுக்குத் தலைமை தாங்க முதல்வர் அழைத்தது, அப்போது மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக இருந்த வ. சுப.மாணிக்கனாரையே ஆகும். அவரது சீரிய நிர்வாகத் திறமையினால் தமிழ்ப்பல்கலைக்கழகம் உருவானது வரலாறு.

நேர்மை, எளிமை இவற்றுக்கு இலக்கணமாக வாழ்ந்து, எந்த நிலையிலும் அறத்திற்குப் புறம்பாகச் செயல்படாத மாசில் மனங்கொண்ட நெறியாளர், வ. சுப. மாணிக்கனார் நிர்வாகத் திறமையிலும் மேன்மை கொண்டு விளங்கியது வியப்பல்லவே!



# மேலைச்சிவபுரியின் கல்வி வளர்ச்சிக்கு ஐயாவின் பங்களிப்பு

புலவர் **மு. திருநாவுக்கரசு**
தமிழாசிரியர், மேலைச்சிவபுரி.

ஐயா அவர்கள், காமராசர் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தராக இருந்த காலத்தில் நான் முதுகலை பயிலும் வாய்ப்புப் பெற்றேன்.

ஐயா அவர்களின் பெருமுயற்சியால்தான் மேலைச்சிவபுரியில் மருத்துவமனை வந்தது.

அதன்பின் தமிழ்வழி மழலையர் பள்ளி முதல் ஆய்வறிஞர் மற்றும் Ph.D. வரை தமிழில் பயிலும் வாய்ப்பு இங்கு உள்ளது. ஆனால் இவ்வூரில் 11 ஆம் வகுப்பும், 12 ஆம் வகுப்பும் இல்லை.

எனவே அவ்வகுப்புகளையும் இவ்வூருக்குக் கொண்டுவர வேண்டும் என்று கருதினார்கள்.

அதன்படி அவ்வகுப்புகளைக் கொண்டு வருவதற்கு ஏற்கெனவே உயர்நிலைப் பள்ளியாக உள்ள அரசுப் பள்ளியை மேல்நிலைப் பள்ளியாக உயர்த்துவது என்றும் அதற்குப் பொதுமக்கள் நிதியாக திரு. முருகுமணிச் செட்டியார் அவர்களிடம் பெற்றும் கொண்டு வந்தார்கள்.

அப்பள்ளியில் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றிய என்னிடம், "மேனிலைப்பள்ளியாக உயர்த்துவதற்கான கருத்துக்களைத் தயார் செய்" என்றார்கள். அதன்பின், "சட்டமன்ற உறுப்பினரைப் பார்" என்றார்கள்.

அதன்படி செயல்பட்டேன்.

ஐயா அவர்களின் முயற்சியின்படியும் அவர்களின் வழிகாட்டலின்படியும், 1989இல் இப்பள்ளி மேல்நிலைப்பள்ளியாக உயர்த்தப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.



# மாணிக்கச் செம்மலும் மழலையர் பள்ளியும்

திருமதி **லெட்சுமி சண்முகம்**
(முன்னாள் ஆசிரியை)
கணேசர் செந்தமிழ் மழலையர் பள்ளி, மேலைச்சிவபுரி.

*பொய் சொல்லா மெய்யர் - முனைவர் - தமிழ்ப்பெருங்கடல் - மதுரை காமராசர் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் - ஐயா திரு. வ.சுப. மாணிக்கனார் அவர்கள் பிறந்த ஊர் மேலைச்சிவபுரி, கடை ஏழு வள்ளல்களில் ஒருவரான பாரி வாழ்ந்த நாட்டினர்! அவர்களுக்கும் பாரி என்ற மகன் உண்டு. கணியன் பூங்குன்றன் நினைவும் உண்டு. கணியன் பிறந்த ஊரும் மேலைச்சிவபுரி அருகில்தான் உள்ளது. தொல்காப்பியரும் அவர் நினைவிலே உள்ளார். ஒரு மகனுக்கும் அப்பெயரை வைத்துள்ளார். பொதிகைத்தென்றல் - மாண்புறு மாதரி - பொன்னெனப் பொற்றொடி என்ற மகள்களும் உள்ளனர்! இல்லறத்தின் எல்லா மாண்புகளும் பெற்ற அவர்தம் இல்லத்தரசி - ஈகை அரசி ஏகம்மை ஆச்சி! இவர்கள் அனைவரும் என்றென்றும் என் நினைவில் உள்ள பெருந்தகையினர்!*

*பல்கலை வல்லவரான ஐயா அவர்கள், தாம் பிறந்த ஊர் சிறக்க - ஊர் மக்கள் கல்வி அறிவு பெற - எல்லாரும் எல்லாம் பெறக் கல்வி அறிவு தேவை என்பதை உணர்ந்து, மழலையர் பள்ளி முதல் முனைவர் பட்டம் ஈறாகத் தம் ஊரிலேயே மாணக்கர்கள் பெறுவதற்கு சன்மார்க்க சபை மூலம் அதை நிறைவு செய்தார்கள்! சன்மார்க்க சபை நூற்றாண்டு கண்டு தமிழ்ப்புலமை கற்றுக் கொடுத்தாலும் மேலும் சிறப்புற்று கலை - அறிவியல் கல்விக் கூடமாகவும் வளர்ச்சி பெற்றுள்ளது. 1981 இல் ஐயா அவர்கள் தமிழ்வழி மழலையர் கல்வியும் தொடங்க அவாக் கொண்டார்கள். அவர்களின் அவா, 1981 ஜூலைத் திங்களில் நிறைவேறியது.*

*மழலையர் கல்வி என்பது, மாண்டிச்சேரி - கிண்டர் கார்டன் - நர்சரி என்ற மூன்று முறைகளில் மேலை நாடுகளில் கற்றுக் கொடுக்கப்படுகிறது. சிறார்களுக்கு விளையாட்டுமூலம் கல்வி என்பதே இதன் கருப்பொருள். அதுபோன்ற பயிற்சி முறைகள் நம் நாட்டில் அதிகம் இல்லை. ஐயா அவர்கள் இதில் ஏதாவது ஒன்றிலேனும் பயிற்சியும் ஆசிரியர் அனுபவமும் பெற்ற ஓர் ஆசிரியரைத் தேடினார்கள். அவ்வாறான ஓர் ஆசிரியை, ஆ.தெக்கூர் - கருமுத்து திரு. தியாகராசர் செட்டியார் மழலையர் பள்ளியில் இருப்பதைத் தம் நண்பர்கள் மூலம் அறிந்து, என்னைத் தேர்வு செய்தார்கள். நான் 1981 ஜூன் திங்கள் 30 ஆம் நாள் வரை அப்பள்ளியில் பணி முடித்து, செயலர் ஒப்புதலுடன் பள்ளியில் இருந்து விலகி, 1981 ஜூலை முதல் நாள் முதல் சன்மார்க்க சபையின் கணேசர் செந்தமிழ் மழலையர் பள்ளியில் பணியில் அமர்ந்தேன்.*

*ஐயா அவர்களின் அவாவே தமிழ்வழிக் கல்விதான்! அதுவும் மழலையர் பள்ளியில் இருந்தே தொடங்க வேண்டும் - என்பதுதான்! அதன்படி பள்ளி சீரும் சிறப்புமாகத் தொடங்கப்பட்டது! பள்ளி தொடக்கத்தில் இருபது மாணவ மாணாக்கியர்கள் சேர்ந்தார்கள். ஒரு மாதத்திற்குள் நாற்பது மாணவ மாணாக்கியர்கள் பள்ளியில் குவிந்து கழிபேருவகை அடைந்தார்கள்! ஐயா*

அவர்கள் மேலைச்சிவபுரிக்கு வரும்பொழுதெல்லாம் மழலையர் பள்ளிக்கும் வந்து, சிறிது நேரம் இருந்து மழலையர்கள் மனமகிழ்வுடன் சுதந்திரமாக கலைநயத்துடன் பாடுவதைக்கேட்டும், ஒற்றுமையுடன் விளையாடுவதைப் பார்த்தும் இன்புற்றிருக்கிறார்கள்! ஒரு சமயம் 'L.K.G., U.K.G., என்று இருப்பதை 'சிறு மழலையர்', 'பெரு மழலையர்' என்று பெயர் மாற்றம் செய்யலாமே!' என்றார்கள். ஐயா அவர்களின் தமிழ் அவாவினை அறிந்து நானும் அதை உடனே மாற்றினேன்! ஐயா அவர்களின் அவாவிற்கேற்ப, கணேசர் செந்தமிழ் மழலையர் பள்ளி, கட்டணமில்லாக் கல்விக்கூடமாகும்! நன்கொடை இல்லா நற்கூடமாகும்!

சன்மார்க்க சபைத் தலைவர்களும் இப்பள்ளிக்கு எல்லா உதவிகளையும் தக்க சமயத்தில் செய்து கொடுத்தார்கள். மழலையர் பள்ளி என்றால் விளையாட்டுமூலம் கல்வி கற்றுத் தருவது என்பது மட்டும்அல்லாமல் அவர்களைப் புத்தகச் சுமையைத் தூக்க விடுவதும், அவர்களின் பிஞ்சு விரல்கள் நோக எழுத விடுவதும், வீட்டுப் பாடங்கள் எழுத வைப்பதும் அல்ல என்பதை எல்லாப் பெற்றோர்களும் புரிந்து கொள்ளுதல் நலம் பயக்கும்! கணேசர் செந்தமிழ் மழலையர் பள்ளி ஒன்றே இன்றளவும் அரசு அங்கீகாரம் பெற்ற தமிழ்வழிக் கல்விக்கூடமாகவும், அரசின் முழு ஊதிய - பணப் பயனும் பெற்ற பள்ளியுமாகும் என்று நம்புகிறேன்! இது ஐயா அவர்களின் சீரிய முயற்சியால் கிடைத்த, நினைவில் நிறுத்தக்கூடிய ஓர் உன்னதச் சிறப்புமாகும்! இப்பள்ளியில் படித்த பலர் சிறந்த மருத்துவர்களாகவும், பொறியாளர்களாகவும், தமிழ் அறிஞர்களாகவும் இருப்பது ஐயா அவர்களின் தொண்டிற்குக் கிடைத்த வெற்றியேயாகும்!

ஆண்டுதோறும் ஐயா அவர்களின் அறக்கட்டளை மூலம் ஏழை எளிய மக்களுக்குத் துணிமணிகள் கொடுப்பதும் - உணவு கொடுப்பதும் - அரசு மருத்துவமனை மூலம் ஏழை மக்களுக்கு மருந்து - மாத்திரைகளுக்காகச் சில ஆயிரங்கள் செலவு செய்வதும், பள்ளி - கல்லூரி மாணவ மாணாக்கியர்களுக்குக் கல்வி ஊக்கத்திற்காகப் பரிசுப் பொருட்கள் கொடுப்பதும், மழலையர் பள்ளிச் சிறார்களுக்கு விளையாட்டுப்பொருட்கள் மற்றும் தேவையான பொருட்கள் வாங்குவதற்குச் சில ஆயிரங்கள் செலவிடுவதும் நல்ல அறிவு விதை ஊன்றுவதற்கு ஒப்பானதாகும்!

"ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்
பேரறிவாளன் திரு"

என்ற பொய்யாமொழிப்புலவரின் மெய்யான குறள் போல, ஐயா அவர்களின் 'புகழும் - நேர்மையும்' வையகம் உள்ளவரை நிலைபெற்று வாழும்!



## மாணிக்கச் சிந்தனைகள்

**"எப்பருவத்தினரும் எந்நிலையினரும் செய்யக்கூடிய பொது நலங்கள் ஏராளமாக உள்ளன. இவற்றைச் செய்வதற்குப் பணம் தேவையில்லை. மனமே தேவை. அழைப்புத் தேவையில்லை. மனமே தேவைகூடத் தேவையில்லை; அன்புகூடத் தேவை."**



# தமிழருள் மாணிக்கம்

கிருங்கை சேதுபதி

"தமிழா படிக்கப்போகிறாய்?" என்று தற்கொலைக்கு முயன்றவனைத் தடுத்துக் கேட்பதுபோல, அவர்கள் கேட்டார்கள்.

அவர்கள் என் உறவினர்கள்; எனக்கு முன்னர் தமிழ் பயின்றவர்கள்; தமிழால் வேலை பெற முடியாமல் தடுமாறியும் தடம் மாறியும் போனவர்கள்; முன்னெச்சரிக்கையாகவும் எதிர்மறையான முன்மாதிரியாகவும் இருந்து 'தடுத்தாட்கொள்வதற்காக' வந்தவர்கள்.

'வேலை கிடைக்காது;' 'வாழ்வில் நிலைபெற முடியாது;' 'திருமணம் நடக்காது;' 'சமூகத்தில் என்ன, படித்தவர்களுக்கு மத்தியில் கூட ஒரு மதிப்பிருக்காது' என அவர்கள் பற்பல காரணங்களை அடுக்கினார்கள்.

அவர்கள் சொன்னது பொய்யில்லை என்பது எனக்கு நன்றாகத் தெரியும்; அதுவே மெய்யெனக் கொள்ளவும் நான் தயாரில்லை.

ஏதோ ஒரு சூழலில், 'பிறந்த ஊருக்கு அண்மையில் இருக்கிற தமிழ்க்கல்லூரியில் இல்லப் பணிகளைப் பார்த்துக்கொண்டே போய்வரலாம்' என்று எண்ணியிருந்த என்னிடம் இவர்கள் சொன்ன காரணங்களே, 'தமிழ் பயில வேண்டும்' என்கிற உறுதிப்பாட்டை ஏற்படுத்தின. 'தடுத்தாட்கொள்வதாக'ப் புறப்பட்டு வந்தவர்களே, என்னைத் தமிழ் பயில 'ஆற்றுப்படுத்திய' புண்ணியத்தையும் கட்டிக்கொண்டு புறப்பட்டார்கள்.

அவர்கள் போன வேகத்தைப் பார்த்தால், 'இனி இவனைக் காப்பாற்றவே முடியாது' என்று நிரந்தர நோயாளி ஒருவனைக் கைவிட்டுப் புறப்பட்ட மருத்துவர்களின் நிலைப்பாடு.

இவர்களைவிடவும் என் வகுப்பிற்குப் பாடம் நடத்தவந்த சிலர், அன்போடும் அக்கறையோடும் கேட்ட கேள்விகள் இன்னும் அபத்தமானவை. ஆனால், சொன்ன பதிலின் உறுதி இன்னும் வைரம் பாய்ந்த வரிகளாய் என்னுள் நிற்கின்றன.

"நான் வேலை தேடிப் பயில வரவில்லை; தமிழ் பயிலவேண்டும் என்று விரும்பித்தான் வந்தேன்!"

செட்டிநாட்டில் தமிழ்க்கோயிலாகவே விளங்கும் மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க்கல்லூரியின் முதலாண்டு முழுக்க, வெள்ளை வேட்டி, வெள்ளைச் சட்டைதான் என் சீருடை. இது நானே அணியத் தேர்ந்தெடுத்துக் கொண்ட சீருடை. அப்போது, ஆங்கிலமோ, பிறமொழியோ இல்லாத முழுத்தமிழே எனது பயில்மொழியாகவும் பாடமொழியாகவும் இருந்தது. தமிழ்ப்பண்டிட், வித்துவான், புலவர் என்கிற பெயர்களைக் கடந்து பி.லிட் (B.Litt) என்னும் பட்ட (Degree) வகுப்பாக, பருவமல்லா முறையில், (Non Semester) அந்தப் பட்டப்படிப்பு இருந்தது எனக்கு வசதியாக இருந்தது.

அங்கு எல்லா ஆசிரியர்களும் 'ஐயா'க்கள். ஆசிரியைகள் 'அம்மா'க்கள்! கணேசர் கொலுவீற்றிருக்கும் அத்திருக்கோயிலின் முழக்கத் தொடர், 'சைவமும் தமிழும் தழைத்தினிதோங்குக!'

எத்தனையோ நுண்ணனுபவங்களை எனக்குள் ஏற்படுத்திய அந்தக் கல்விக்கூடத்தில் பாடம் நடத்த வந்த பேராசிரியர்களைவிடவும், பொழிவு நிகழ்த்த வந்த பெருமக்களே நிறையக் கற்றுக் கொடுத்திருக்கிறார்கள். அவர்களுள் ஒருவர், என் முதலாண்டு வகுப்பிற்கு வந்தவர்.

எளிய நிலையில், வெள்ளை வேட்டி, சட்டை, துண்டு சகிதமாய், உள்ளூர் முகச்சாயலோடு ஒருவர் வந்தார். அவர் குறித்துக் கல்லூரி முதல்வர் சொன்ன வாசகங்களை விடவும், அப்பெரியவர் சொல்லிய வாசகங்கள்தாம் என் மனதுக்குள் இன்றும் மணிவாசகமாகப் பொலிந்து சிறக்கின்றன.

"ஒலிப்பிழை, மொழிப்பிழை இல்லாமல் தமிழ் கற்க வேண்டும்!"

இன்றும்கூட, அப்படியே பாவனையோடு ஒப்புவித்துக்காட்டக்கூடியவண்ணம் என்னுள் அந்தக் குரலும் முகமும் நிலைபெற்றுவிட்டன.

உபதேசம் என்பது இதுதான். வழங்கியவர் குறித்துப் பின்னர்தான் எனக்குத் தெரியும்.

அடுத்து, அவர் மதுரை வானொலியின் வாயிலாக எனக்குத் தமிழ் புகட்டியிருக்கிறார். இன்றும் என்னுள் நிலைகொண்ட அவர்தம் இலக்கியப் பேருரை, "காப்பியக் கனவுகள்."

சிலம்பு தொடங்கி, கம்பராமாயணம் எனக் காப்பியங்களில் வரும் கனவுகளை விரித்து எளிய செறிவான நடையில் அவர் சொல்லிச்சென்ற இலக்கியக் காட்சிகள், இரவு **9.16**க்குமேல் மதுரை வானொலி வாயிலாக வலம் வந்து என்னை வசீகரித்தன.

கல்லூரிக் காலத்திற்கு முன்பே, எனது கதைகளும், கவிதைகளும், நாடகங்களும் முறையே இதழ்கள், வானொலி நிலையங்கள் வாயிலாக வெளிவந்திருக்கின்றன. என்றாலும், கட்டுரைகள் எழுதியது இல்லை.

முதன்முதலாக, இந்த வானொலி உரை கேட்ட வேகத்தில், 'தமிழ் இலக்கியத்தில் நிலவு' என்கிற பொருண்மையில் ஐம்பதுக்கும் மேற்பட்ட பக்கங்களுக்கு ஓர் உரையை அன்று இரவே எழுதினேன். எழுதியதோடு சரி. அவ்வளவுதான்.

ஆமாம், நான் தமிழ் பயில அல்லவா, அந்தக் கல்லூரிக்குப் போனேன்!

தொடர்ந்து 'தொல்காப்பியர் நூலகத்தில்' அவர் எழுதிய நூல்களை எடுத்துப் பயிலப் பயில, சங்கப் புலவர் ஒருவர் சமகாலத்தில் பிறந்து, உரைநடைத் தமிழுக்கு உயிர் கொடுத்ததுபோலிருந்தது.

பெரும்பாலான ஆய்வுநூல்கள் ஆங்கிலமொழிபெயர்ப்புச் சாயலை அப்படியே தாங்கியிருக்கக் கண்ட எனக்கு, அத்தன்மையின் செறிவுக்குச் சிறிதும் குறையாமல், தமிழின் உயிர்ப்போடும் உறைப்போடும் எழுந்த இந்தப் பேரறிஞரின் எழுத்து, தாய்ப்பாலாய்த் தெரிந்தது.



மறைமலையடிகள் ஏற்படுத்துகிற மலைப்பையும், திரு.வி.க. சொடுக்குகிற இலாகவத்தையும் தாண்டி, சூத்திரம்போலத் தொடர்களை நுணுக்கமாய் அமைத்து, இயல்புநவிற்சியாய் எடுத்துச் சொல்லும் பாங்கில் இவர் தமிழ் என்னை ஈர்த்தது. 'தமிழ்' என்றவுடனேயே ஆர்ப்பாட்டம் செய்கிற அக்கால உரைநடை எழுத்துக்களின்பால் தோன்றிய வெறுப்புணர்வுக்கு இவர் எழுத்து ஒரு மாற்றுமருந்தாக எனக்குத் தெரிந்தது. தூய மாட விளக்கொளிபோல் ஒளிரும் நடையில் பரவும் வாய்மையில் வாசிப்பு மனம் தூய்மையாகிற அனுபவத்தையும் அது ஈந்தது.

ஈன்று புறந்தந்த தாயின் மனநிறைவு அவருக்குள் ஏற்பட்ட பின்னரே, அவர் தனது எந்தவொரு நூலையும் அச்சிடத் தந்திருக்க வேண்டும் என்று தோன்றியது.

தெரிந்துகொள்ளத்தான் இவற்றை எடுத்துப் பயின்றேனே ஒழிய, இதுபோல் எழுத வேண்டும் என்கிற எண்ணம் ஒன்றும் எனக்குள் இருந்ததில்லை. அப்போது, என்னைவிடவும் என் வகுப்புத்தோழன் மு.ப. 'தமிழ்க்காதல்' குறித்துச் சொன்ன விதம் அந்த நூலைப் பயின்ற சுகத்தினும் இனிமை தருவதாய் இருந்தது.

இப்படிப் பயிலவும் பேசவும் பயனளிக்கும் விதத்தில், கல்லூரிக்காலத்து இளம்பருவத் திலேயே ஈர்த்து வசப்படுத்தும் எழுத்து ஒருவருக்கு வாய்த்திருக்கிறது என்றால், அது பயிற்சியில் வந்ததன்று; தவத்தின் விளைவு என்பதும் தெரிந்தது.

இந்த வாசிப்பும் நேசிப்பும் தான் பின்னர் எனது 'திருக்குறளில் தொல்காப்பிய மெய்ப் பாடுகள்', 'கம்பன் காக்கும் உலகு' ஆகிய நூல்களுக்கு உந்தாற்றலாய் விளங்கின என்பதை இதை எழுதும் இப்போது உணர்கிறேன்.

எழுதப்பட்ட ஒரு நூல், எழுதப்போகும் எண்ணற்ற நூல்களுக்குத் தூண்டுகோலாகவும் துணையாகவும் இருக்கிறது என்றால், அது நிலைபேறுடையது என்றுதானே பொருள். இப்படிப் பல நூல்கள் எழுதிய பைந்தமிழறிஞர் வ.சுப.மா.வின் வாழ்வு, தவவாழ்வாய் மலர்ந்த தமிழ் வாழ்வு. அதுவே நிலைபேறுடைய பெருவாழ்வு. அது ஆயிரமாயிரமாண்டுக்கும் நின்று வழிகாட்டும்; ஒளிகூட்டும்! மாணிக்கம் எப்போதும் மாண்புடையதாயிருப்பது இயற்கையின் நியதிதானே!

'செம்மல்' என்னும் செழும்பொருள் தாங்கிய பட்டத்திற்கு முற்றிலும் பொருத்தமாகிய மேலைச்சிவபுரி வ.சுப.மா, என்னும் மனிதர், மகத்தானவர். மனிதருள் மாணிக்கம் நேருபெருமான் என்றால், தமிழருள் மாணிக்கம் வ.சுப.மா.

இவர் குறித்து நான் எழுதிய கவிதையை அவர் முன்னிலையில் பாடக் காலம் வாய்ப்பளிக்கவில்லை. காரணம், அவர் மறைந்த ஞான்று, மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க்கல்லூரி நன்னெறிக்கழகம் நடத்திய 'அஞ்சலி' நிகழ்வில், முதுகலை பயில்வோர் சார்பாக, நா. முத்தழகம்மையும், இளங்கலை பயில்வோர் சார்பில் யானும் கவி பாடினோம். என்னுடையவை, எண்சீர் விருத்தப்பாடல்கள்.

அந்தக் கவிதையும், அதற்கு முன்னர் எழுதிய கட்டுரையைப்போலவே எங்கோ இருக்கிறது.

மறைந்தும் நிறைந்து இருக்கிற வ.சுப.மா. அவர்களைப் போலவே!

## நூற்றாண்டு விழா நிகழ்த்திய நிறுவனங்கள்

| | | |
|---|---|---|
| 1. | அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி | 18.4.2016 |
| 2. | புதுவைப் பல்கலைக்கழகம், புதுச்சேரி | 9.5.2016 |
| 3. | பாவாணர் இயக்கம், திருச்சிராப்பள்ளி | 15.5.2016 |
| 4. | மாமதுரை சங்கம், மதுரை | 15.8.2016 |
| 5. | விடுதலை வாசகர் வட்டம், காரைக்குடி | 21.8.2016 |
| 6. | சென்னைப் பல்கலைக்கழகம் & தமிழகப் புலவர்க்குழு, திருச்சி இணைந்து | 1.9.2016 |
| 7. | திருவள்ளுவர் கழகம், மதுரை | 18.9.2016 |
| 8. | தியாகராசர் கல்லூரி, மதுரை | 14.10.2016 |
| 9. | அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம் | 20.10.2016 |
| 10. | பாரதியார் பல்கலைக்கழகம், கோவை | 21.10.2016 |
| 11. | உலகத் திருக்குறள் தகவல் மையம், பாளையங்கோட்டை | 22.10.2016 |
| 12. | சாகித்திய அகாதெமி & தமிழியல் துறை, பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி | 8.11.2016 |
| 13. | முற்போக்கு எழுத்தாளர் கலைஞர்கள் சங்கம், தேவகோட்டை | 3.12.2016 |
| 14. | உலகத் திருக்குறள்பேரவை, மதுரை | 18.12.2016 |
| 15. | இராசவேலர் செண்பகத் தமிழ் அரங்கு, திருவரங்கம் | 24.12.2016 |
| 16. | சன்மார்க்க சபை, மேலைச்சிவபுரி | 7.1.2017 |
| 17. | கம்பன் கழகம், காரைக்குடி | 7.1.2017 |
| 18. | தமிழ் உயராய்வு மையம் கணேசர் கலை அறிவியல் கல்லூரி, மேலைச்சிவபுரி | 18.1.2017 |
| 19. | உலகத் தொல்காப்பிய மன்றம், புதுச்சேரி | 11.2.2017 |
| 20. | இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி | 23.2.2017 |
| 21. | "காந்தி கிராமம் கிராமியப் பல்கலைக்கழகம், காந்திகிராமம் | 5.4.2017 |
| 22. | பைந்தமிழ் இயக்கம், திருச்சிராப்பள்ளி | 27.4.2017 |
| 23. | கண்ணதாசன் நற்பணி மன்றம், மதுரை | |

## அமெரிக்காவில் நடத்தப்பெற்ற நூற்றாண்டு விழாக்கள்

| | | |
|---|---|---|
| 1. | தமிழ்நாடு அறக்கட்டளை, வாசிங்டன் டி.சி. | 28.5.2016 |
| 2. | வடஅமெரிக்கத் தமிழ்ச்சங்கப் பேரவை, நியூ செர்சி | 2.7.2016 |
| 3. | உலகத்தமிழ் அறக்கட்டளை, மேரிலாண்ட் | 19.11.2016 |
| 4. | பிலிடெல்பியா - டெலவர் நகரத்தார் சங்கம், டெலவர் | 7.1.2017 |
| 5. | டெலவர் பெருநிலத் தமிழ்ச் சங்கம், பிலடெல்பியா | 29.4.2017 |
| 6. | சிகாகோ தமிழ்ச் சங்கம், சிகாகோ | 21.5.2017 |

# ஆயுள் முழுவதும் நிலைத்த விருப்பினர் வ.சுப.மா

முதுமுனைவர் **வ.அய்.சுப்பிரமணியன்,**
முன்னாள் துணைவேந்தர், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.



ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளாகத் தமிழ்ப் படிப்பு வட்டத்தில் முதல்நிலைக் கருத்தாளராக மாணிக்கனார் இருந்தார். இவர் ஆய்வுப்பயிற்சி தன் முயற்சியால் பெற்றது. தமிழ் ஆசிரியர்கள் பின்னிற்பதை விரும்பாதவர். எதிலும் முன்னிற்க வேண்டும் என்று விரும்பினார். தானே எடுத்துக்காட்டாக இருக்கவும் முயன்றார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1943 முதல் மூன்றாண்டு தமிழ்ச்சிறப்பு வகுப்பில் நான் படித்தபோது அவர்களை அறிய நேர்ந்தது. அறிவியலும் தர்க்கமும் இடைநிலை வகுப்பில் பயின்று தேச எழுச்சியால் தமிழ் படிக்க மூன்று நான்கு பேர் நாஞ்சில் நாட்டுப்பகுதியிலிருந்து அண்ணாமலைக்குச் சென்றோம். இடம் கிடைக்குமா என்று அஞ்சிய நாங்கள் தமிழ்ச்சிறப்பு வகுப்பில் மிகக்குறைவாகவே, விண்ணப்பம் பெற்றிருந்ததால் தடையேதும் இன்றிச் சேர்ந்தோம்.

ஆசிரியர்களும் மாணாக்கர்களும் நெருங்கிப் பழகவும் விரும்பவும் வெறுக்கவும் வாய்ப்புப் பல கிடைத்தது. ஒருசிலர் வ.சுப.வை மிகவும் விரும்பினர். அதில் நானும் ஒருவன். அந்த விருப்பம் ஆயுள் முழுவதும் நிலைத்தது!

வ.சுப.வின் ஆழ்ந்த பயிற்சியும் நேர்மையும் பற்றற்ற நிலையும் மாணவர்களால் பாராட்டப் பட்டன.

தமிழ் இலக்கிய இலக்கண விளக்கத்தில் தனித்துவம் ஒன்றை நிலைநாட்டியவர் வ.சுப.

# தமிழ் மாணிக்கம்

கவிஞர் **சிற்பி பாலசுப்பிரமணியம்**
முன்னைத் தமிழ்த்துறைத் தலைவர்,
பாரதியார் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர்.



தமிழர் நெஞ்சில், நினைவில், நெடு வரலாற்றில் நின்றொளிரும் முத்திரையாய்த் தம் பெயர்களைப் பதித்துப் போன சான்றோர் மணிகளில் தனியொரு புகழ்மணி பேராசிரியர் வ.சு.ப.மாணிக்கம்.

காலத்தால் பெய்த மழையும், செய்த கொடையும் நிகர்ந்தவர் அவர்.

தமிழ் கண்ட பழஞ்சுவடிகள் காக்க தாமோதரனாரும் உ.வே.சாவும் தோன்றியது போன்றே தமிழ் இனம் கண்ட விழுமியங்களைக் காக்க ஒரு படைவரிசை தேவைப்பட்டது. மறைமலை அடிகள், திரு.வி.க., சோமசுந்தர பாரதி, விபுலானந்தர், தெ.பொ.மீ., மு.வ என விரியும் அத்தமிழ் வரிசையில் சிறப்பிடம் பெற்றவர் வ.சுப மாணிக்கம்.

இன்னும் ஒரு படி மேலே சென்று கூறுவதாயின், பாவேந்தர் மொழிவது போன்று, 'தமிழே ஞாலத்தின் தாய்மொழி பண்டு' என்றும், 'தனிமைச் சுவையுள்ள சொல்லை-எங்கள் தமிழினும் வேறெங்கும் யாம் கண்டதில்லை' என்றும் தெளிவாக நம்பிச் செயல்படும் இயல்பினராக மாணிக்கச் செம்மல் திகழ்ந்தார்.

தமிழ் மொழியினைக் குறித்து இயம்பவொண்ணாப் பெருமிதம் உடையவராக இருந்த போதிலும் காலத்துக்கேற்ற புதுமைகள் நம் மொழியில் நிகழ வேண்டும் என்ற அக்கறையும் அவர்பால் நிரம்பியிருந்தது.

> "உலக மொழிகளுள் என்று பிறந்தவள் என்று அறிய கில்லாத தொன்மையானதும், இந்திய மொழிகளுள் உலகமொழி என்ற செல்வாக்கினதும் நம் தமிழ், பாரதியார் பாடியபடி, ஒரு காலத்தில் ஆரியத்துக்கு நிகராக வளர்ந்திருந்ததும், இப்போது ஆங்கிலத்துக்கு நிகராக நம்மால் வளர்க்க வேண்டியதும் நம் தமிழ்" *(இலக்கியச்சாறு-ப.2)*

என்னும் அவர் சொற்கள் இதனை உணர்த்தும்.

தமிழுக்கு ஆக்கங்கள் தேடவும், அதற்கு இடையூறுகள் நேர்ந்தால் தடைகளைத் தகர்த்தெறியவும் அவர் மணித்தமிழ் நெஞ்சம் துணிவுடன் ஆற்றிய பணிகளைத் துலக்கிக் காட்டுவதே இக்கட்டுரையின் குறிக்கோள்.

## தமிழை அழிப்பவர் தமிழரே!

தமிழர்கள் ஒரு பெரும்பண்பாட்டின் பிள்ளைகளாக இருந்த போதிலும் அதன் தன் மதிப்பை அறியாதவர்களாகப் போய்விட்டனர் என்ற கவலை வ.சுப.மா உள்ளத்தைப்

*பெரிதும் வருத்தியிருந்தது.தமிழ் நூல்கள் பல அழிந்து போனதற்கு அது முக்கியமான காரணம் என்று கருதினார்.தமிழ் மக்களுக்கு இது குறித்து எச்சரிக்கவும் அவர் தவறவில்லை.*

"நீரும் நெருப்பும் தமிழின் சுவையை நுகர விரும்பின என்று சிலர் நயனுறப் பேசுவர். வாழ்வுப் போரிடைப் புகுந்து வெல்லமாட்டாத் தகுதியில் நூல்கள் அழிவதியற்கை என்று இற்றைத் திறனிகள் விளக்குவர்.இவையெல்லாம் நம் மொழி நூற்செல்வங்கள் காலந்தோறும் அழிவுண்டமைக்குக் காரணங்கள் ஆகா.தமிழர் தம் மொழித் தாயை என்றும் எப்படியும் பேண முனையாப் பெரும் பேதைமையே தமிழ் நூல்களின் மறைவுக்கு அறிவுடைக் காரணமாகும். இதனை நாம் உணரவும் உணர்த்தவும் வேண்டும்."

*தமிழ் மக்களின் மனநிலையைக் கடிதற்கு எத்துணை கடுமையான சொற்களைப் பயன்படுத்தவும் அவர் தயங்கியதில்லை.நூல்களின் அழிவைக் குழந்தைகளின் மரணத்துக்கு இணையாகக் கருதினார். இதற்குக் காரணமான தமிழ் மக்களைச் சினந்து கடிந்தார்.*

"தமிழகத்தில் பெறுமவற்றுள் இவைபோல் யாம் அறிவதில்லை என்று பெற்ற நூற் குழந்தைகளை உவந்து புறந்தராது. இவை என்ன பேறு என்று பின்னோர்கள் பேதைப்படுவரேல், அக்குழந்தைகள் தாமே கதறி அழுது கண்ணீர் வடித்துத் துடித்து மடியும் இக்குழவிக் கொலை அரசியற் கொடுங்கோன்மையினும் ஆழ்ந்தகன்ற இனக் கொடுங்கோன்மையாகும். ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகப் பெருகித் தடித்துவரும் மொழி பேணாப் பேதைமையை. அழிவுக் கூர்ங்கருவிகள் பெருகியுள்ள இக்காலத்துக் கட்டாயம் அழித்தாக வேண்டும்." *(இலக்கியச்சாறு, ப.105-106)*

*என்பது அவர் வாக்குமூலம்.இதனைச் செயல்படுத்துதற்கு 'வீட்டகம் தோறும் தமிழ் ஏட்டகம் இருத்தல் வேண்டும்' என அவர் விழைந்தார்.ஒவ்வொரு இல்லத்திலும் அடுக்களை போலத் தமிழ் நூல் நிலையம் அமைதல் வேண்டுமென அறிவுறுத்தினார். திருமணச் சடங்குகளுள் தமிழ் நூல் நிலையம் இல்லத்தில் உருவாக்குதலும் ஒரு நோக்கமாதல் வேண்டும் என்பது அவர் வகுத்த நெறியாக இருந்தது.*

## மொழி குறித்த தெளிவு

*தமிழ்மொழியின் நலம் பேணுவதில் திட்ப நுட்பமான சிந்தனைகள் அவருக்கு இருந்தன. தூய தமிழில் எழுதுவதும் பேசுவதும் தமிழ்க் காப்பின் இன்றியமையாக் கவசங்கள் என்று அவர் கருதினார். தென்னகம் முழுவதுமாய்ப் பேசப்பட்டு வந்த தமிழ் மொழி இன்றைய அளவில் சுருங்கிப் போனதற்கு மொழிக் கலப்புக் காரணம் என்பது அவர் திண்ணிய கருத்து. தெலுங்கு, மலையாளம், கன்னடமாகத் தமிழ் திரிவுற்றுப் பிரிவுற்றமைக்குக் கையிகந்த கலப்பே காரணமாயிற்று என எடுத்துரைக்கின்றார்.*

''மீட்சி உளதோ மொழிக் கலப்பால் வேங்கடத்தின்
ஆட்சி இழப்பை அறி''

''அறிவாய் கலந்த அயலொலியால் சேரல்
தனியாய்ப் பிரிந்த தவறு''



"தவற்றுக் கலப்பால் தமிழ்நிலம் விட்டோம்
கவற்றுப் படையெடுத்தோ காட்டு"

"காட்டும் பயனென் கலப்பொலி நீங்காதேல்
மீட்டும் நிலக்குறை வெட்டு"

"வெட்டி நிலங்கரைய வேண்டேல் மொழித்தூய்மை
கட்டித் தலைக்காக்கை கற்பு"

என வரும் மாணிக்கக் குறள்கள் இக்கருத்தை அடிக்கோடிட்டு உரைக்கின்றன.

இந்தக் கண்ணோட்டத்தையே படைப்பிலக்கியம் செய்யும் எழுத்தாளர் பெருமக்களும் கொள்ள வேண்டும் என்று வ.சுப.மா. வலியுறுத்தினார். 'இன்பத் தமிழ் குன்றுமேல் தமிழ் நாடெங்கும் இருளாம்' என்று அவர் எண்ணினார். தமிழ் எழுத்தாளர்களுக்கு ஒரு பெரும் பொறுப்பு உண்டென்றும், பிற மொழிக் கலப்பற்ற நடையில் புதினங்களையும் கதைகளையும் எழுதுவது அவர்கள் கடமை என்றும் எடுத்துரைத்தார்.

"ஆங்கிலத்தில் தமிழ் கலந்துள்ளதா? தமிழில் ஆங்கிலம் கலந்துள்ளதா? எந்த மொழி என்று நகையாடத் தோன்றுகிறது"

என்று தொடங்கி எழுத்தாளருக்கு அறிவு புகட்டினார்....

ஆராய்ச்சித் துறைகளான தமிழ்த்துறைகளிலிருந்து உணர்வும் உயிர்ப்பும் மிக்க புதிய படைப்புகள் வெளிவர வேண்டுமென விழைந்தவர்.மாணிக்கனார்.'காந்திக்கவிதை' என்னும் தமிழ்க்கடல் ராய.சொ.நூல் வெளியீட்டு விழாவில் உரை நிகழ்த்தும்போது வ.சுப. மா. கூறினார்:

"பழைய நூல்களை ஆராய்ந்து அமைவதே ஆராய்ச்சித் துறையின் நோக்கம் என்று கருதிக் கொண்டிருக்கிறோம்.இக்கருத்து ஓரளவே பொருந்தும். பல்கலைக்கழகங்களில் புது நூற் படைப்புக்குத் தனித்துறை இன்றில்லை. இல்லாதவரை உள்ள ஆராய்ச்சித் துறையே படைப்பியலையும் மேற்கொள்ள வேண்டும். முன்னோர் படைத்தளித்த பனுவல்களை ஆராயும் நாம் பின்னோர் ஆராயும் வண்ணம் சிலவேனும் புதியன ஆக்கிப் படைக்க வேண்டாமா? கதிரறுப்பவர்க்கு வித்திடலும் கடன். படைப்பு என்பது மூலநூல். ஆராய்ச்சி என்பது வழி நூல்."

இக்கருத்தினை அவர் போகிற போக்கில் சொல்லிவிட்டுச் சென்றார் என்று கூற முடியாது. சொல்லுக்கும் செயலுக்கும் இடையே சுவர் எழுப்பிக் கொள்ளாத வாழ்க்கை மூதறிஞருடையது. எனவே, தாமே ஒரு படைப்புக் கலைஞராகவும், ஆராய்ச்சி அறிஞராகவும், இலக்கியத் தகைஞராகவும் திகழ்ந்து வழிகாட்டிச் சென்றிருக்கின்றார்.

## காப்பிய ஒத்திகை

வளமான காப்பியம் வடிக்கவல்ல அத்தமிழ்ப் பெருந்தகை புள்ளிகள் மட்டும் வைத்துக் கோலம் வனையாது போய்விட்டார். அவர் வைத்த புள்ளி தமிழ்ப்புள்ளியாக ஒளி வீசும் காட்சியைக் கொடை விளக்கு நூலில் காணமுடிகிறது.

கை வீசி நடக்கும் குழந்தையின் அழகோடு வெண்பா அவரிடம் குழைந்து குழைந்து வருகிறது. தம் தலைமையனாரைக் குறித்து அவர் பாடிய வெண்பாவில், 'பொங்கல் மனைபோல் பொலிவுடையன்; சங்கத் தமிழனைய தூயன்' என்னும் வரிகள் உவமைப் பூக்களின் ஒளியசைவாக மயக்குகின்றன.

புகழேந்தியும், இராகவையங்காரும் வெண்பாக்களில் காவியம் புனைந்த பெரியவர்கள். அவர்கள் நெறியில் அழகப்பரைக் குறித்து.அவர் மறைவை ஆற்றாத தமிழ் நெஞ்சம் சிந்திய கண்ணீர்த் துளிகளாகக் கொடைவிளக்கு என்ற நூலைப் படைத்தளித்துள்ளார். அவர்களுக்கு நிகழ்வுகள் நிறைந்த கதை இருந்தது. ஆனால் செம்மலின் சிறு காவியமோ பொங்கியெழுந்த உணர்வு வெள்ளமாய்ப் பொழியப்பட்டது. 171 வெண்பாக்களுக்குள் முடிந்து போன அந்நூல் ஒரு கையறு நிலைக் காவியமாகக் காட்சி தருகிறது.

அழகப்பர் மறைவால் ஏற்பட்ட துயரத்தைச் சொல்லி அவர் கொடைச் சிறப்பை எடுத்துரைக்கின்றார். பாரி, மாரி, பேகன், குமணன் அனைவர் கொடையையும் வென்ற அழகனைக் குறித்து நெஞ்சு நெக்குருகப் பேசுகின்றார். மின்சார வேதியியல் கழகம் தோன்ற பிரதமர் நேருவைச் சந்தித்த நிகழ்வைக் கூறுகின்றார்:

''பாரும்உறங்கும் படுயாமம் தில்லியில்
நேருவைக் கண்டு நிதியளித்தான்-யாரும்
மடித்துத் தொகுக்கின்ற மண்ணில் ஏனோ
துடித்துக் கொடுத்தான் தொகை''

என்பது பாடல். அத்தனை கொடையையும் அழுத்தமாகச் சொல்லும் அரச வெண்பாவை அறியாதார் யார்?

''கோடி கொடுத்த கொடைஞன் குடியிருந்த
வீடும் கொடுத்த விழுச் செல்வன்-தேடியும்
அள்ளிக் கொடுத்த அழகன் அறிவூட்டும்
வெள்ளி விளக்கே விளக்கு''

அழகப்பர் கனவுகளை விரிவாக எடுத்துரைத்து, காந்தியடிகளும் அவர் நலமடையப் பிரார்த்தனை புரிந்ததை விளக்கி முடிக்கும்போது அழாத நெஞ்சும் அழுதுவிடும் உருக்கம் விளைகிறது. ஒருவகையில், வ.சுப.மா. எழுதாமல் போன காப்பியத்துக்கு ஒத்திகையாக அமைகிறது கொடைவிளக்கு.

### மாணிக்கக் குறள்

தாயெழில் தமிழின் மீது கொண்ட அளவிடமுடியாத பாசத்தின் அடையாளமாகத் திகழ்கிறது மாணிக்கக் குறள். அறிஞர் பெருமக்கள் பலர் மாணிக்கனாரின் நாடித் துடிப்பான குறள்களைக் குறித்து ஆய்வு செய்து கருத்துரை நல்கியுள்ளனர். குறியிலக்கில் தைக்கும் அம்புகள் இக்குறள்கள்.

''எமக்கென்ப தென்னோ எனைமொழி யாளர்
தமக்கும் பழந்தாய் தமிழ்''

என்று பேசும் பெருமிதம்.



''சாயும் நிலை வேண்டா சாய்க்க வருவாரைப்
பாயும் நிலை வேண்டும் பார்த்து''

என்று கூறும் படைத்திறம்.

“மூடருள் மூடன் எனப்படுவான் தாய்மொழி
வாடக் களிக்கும் மகன்''

என்று குத்திக் கிழிக்கும் கூர்மை,

''உயர்த்துவோம் நந்தமிழை ஊர்ப்பள்ளி தோறும்
துரத்துவோம் அல்மொழியைத் தூர்த்து''

என்று தெருட்டும் தெம்பு, என மாணிக்கக் குறள்கள் உணர்ச்சிப் பிழம்பாய்ச் சுடர் விடுகின்றன.

ஆராய்ச்சி மட்டும் போதாது. ஆற்றல்மிகு படைப்பிலக்கியமும் தமிழறிஞரிடமிருந்து பிறக்க வேண்டும் என்று சொல்லியதோடு செயலிலும் முயன்றவர் வ.சுப.மா.

## இயக்கம் கண்ட ஏந்தல்

இளம் பருவத்தில் தமிழ் வளர்ச்சிக்குக் காரைக்குடியில் தமிழ்ச் சங்கம் கண்ட மாணிக்கனார் முதுமைப் பருவத்தில் தமிழ் வளர்ச்சிக்கான கிளர்ச்சிகளை மேற்கொண்டார். வ.அய்.சுப்பிரமணியனார் குறிப்பிடுவதைப் போல நாற்பதாண்டுக் காலம் தமிழ்ப் படிப்பு வட்டத்தில் முதல் நிலைக் கருத்தாளராக விளங்கினார். தமிழாசிரியர் முன்னேற்றத்துக்காக இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் வாயிலாக உழைத்தார்.

தமிழ் வழிக் கல்வி நாளுக்கு நாள் கனவாகித் தகர்ந்து போன சூழலில் தமிழ் வழிக் கல்வி இயக்கத்தைக் கட்டமைத்தார். மாவட்டங்கள்தோறும் ஊர்வலங்கள் நடத்த முற்பட்டார்.

''போராட்டம் இன்றிப் பொருவில் தமிழுக்குத்
தேரோட்டம் இல்லை தெளி''

என்பது அவர் முழக்கமாயிற்று.

''அன்னைத் தமிழே வேலைபெறு
ஆங்கிலமே வெளியேறு''

என்று முழக்கத்தை முன்வைத்தார். தமிழ் பயிற்று மொழியாவதுடன் வேலை வாய்ப்பு முதன்மையையும் பெறவேண்டும் எனத் திட்டமாக அறைகூவினார்.

'அன்னை கொதிக்கிறாள்' என்ற தலைப்பில் வ.சுப.மா. தீட்டிய கவிதை ஒன்றில் தமிழ் அன்னை, 'தமிழகம் விட்டுப் போய் வருகிறேன்' என்று பேசுவதாகக் கற்பித்தார்.

''அழச்செய்யும் பாடல்-அழுது பாடிய பாடல்'' என இரா.இளங்குமரன் இப்பாடலைக் குறிப்பிடுவார்.

''நீலிக் கண்விடும் போலித் தமிழீர்
உண்மைத் தமிழ்மை உங்கட் கில்லை

உமரைத் தமிழர் என் றுன்னவும் இல்லை
மூன்று வயதில் முழுத்தமிழ்க் குழவிகள்
அ ஆ என்பதை அறியா வகையில்
ஆங்கிலம் ஒன்றே ஆவலொடு கற்கும்
பாங்கில் உணர்ச்சியைப் பரப்புகின்றன
பள்ளிச் சிறாஅர் படிப்பிது வாயின்
கொள்ளி தமிழ்க்கெனக் கூறவும் வேண்டுமோ?''

எனப் பதற்றமுற்ற தமிழ்த்தாயின் மனநிலையை எடுத்துக் கூறி மனம் நொந்து முடிக்கின்றார்.

''போய் வரு வேனா? போய் வரு வேனா?
தாய்மொழி விற்றுப் பிறமொழி நம்பும்
பேய்வழி மக்களைப் பெற்ற தற்காக
ஊழி முதலா உறைவிடம் விட்டு
வாழிய என்று வயிறோ எரியப்
போய் வருகின்றேன்; போய் வரு வேனா?''

எனத் தமிழ் அன்னை தமிழரைக் கேட்டாள்.

இந்த மணிமுழக்கம் அரசின் உறக்கம் கலைத்து ஒரு தமிழ் விடியலுக்கான சூழல் உருவாகின்ற வேளையில் அத்தமிழ் நெஞ்சம் இன்று இல்லை. எனினும் தமிழ் வழிக்கல்வி என்ற குறிக்கோள் நிறைவேறுமாயின் அது அப்பெருமகனாரின் ஆன்ம வெற்றியாகவே திகழும்.

## 2

எழுத்தெண்ணிக் கற்ற அழுத்தமான புலமைக்கு உறைவிடம் வ.சுப. மாணிக்கனார். பாரத் தொல்காப்பியம் முதல் பாரதியார் பாடல் வரை நுட்பமாய்க் கற்றவர்.

எனினும் அவர் உள்ளங்கவர்ந்த திரு நூல்கள் எனத் தொல்காப்பியம், திருக்குறள், திருவாசகம், கம்பராமாயணம் ஆகிய நான்கு நூல்களையும் சங்க இலக்கியங்களையும் தனித்துக் கூற வேண்டும்.

### தொல்காப்பியம்

'தொல்காப்பியக் கடல்' என்று அந்நூலையும், 'தமிழ் அளந்த பெருமாள்', 'தமிழ் முதல்வர்' என்று தொல்காப்பியரையும் மெய்சிலிர்க்கப் பேசுவது பேராசிரியரின் திறம்.

''தமிழ் யாக்கை பெற்ற எவருக்கும் தமிழ்த்தாய்க்கு முதல் நூலான தொல்காப்பியக் கல்வி பொதுவாக வேண்டும்.''

என்பது அவர்தம் தீராத வேட்கை.

தொல்காப்பியம் இக்காலத்தில் புரியாத புதிராய் இருக்கும் என்று கூறுபவர்களுக்குப் பேராசிரியர் அழகாகப் பதிலிறுக்கின்றார்.



''தமிழ் ஆட்சி மொழியில்லை. தமிழ் கல்வி மொழியாக இல்லை. நாம் முறையாகத் தமிழ் படிக்கவில்லை. இங்ஙனம் நம் தமிழ்நாடும் நம்மனோர் தமிழறிவும் இருக்கும்போது தெளிந்த தொல்காப்பியம் நமக்கு எப்படி விளங்கும்?'' *(தொல்காப்பியக் கடல்)*

*தமிழ் மொழியை வரம்பறுத்துச் சொல்லும் ஆற்றல் தொல் காப்பியருக்கு இருந்தது என்பதற்கு வ.சுப.பற்பல சான்றுகள் காட்டுகின்றார். எழுத்து முறைமையை.*

''அகர முதல் னகர இறுவாய் முப்பஃதென்ப''

*என்று கண்டறிந்து சொல்லும் மாட்சிமையைக் கூறுகின்றார்.*

*வகர மெய் ஈறு கொண்ட சொற்கள் நான்கு மட்டுமே-என்று திட்டவட்டமாகத் தொல்காப்பியர் கூறுவதைச் சுட்டிக்காட்டி அவரைத் 'தமிழ் அளந்த பெருமாள்' என்று பாராட்டுகின்றார்.*

*எத்துணை கூர்மையாகத் தொல்காப்பியம் இயங்குகிறது என்பதைப் பேராசிரியர் நுட்பமாகச் சுட்டிக் காட்டுகின்றார். 'அது' என்ற வேற்றுமை உருபு, உயர்திணைத் தொகைச் சொல்லில் வரும்போது 'அது' கெட்டு, 'கு' என்ற உருபு இடம் பெறும் என்பது தொல்காப்பியர் கூற்று.*

''அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
அதுவென் உருபுகெடக் குகரம் வருமே''

*எடுத்துக்காட்டாக, எனது மனைவி என்று கூறலாகாது. எனக்கு மனைவி என்றே கூறுதல் வேண்டும்-தொல்காப்பியர் கருத்துப்படி*

''உயர்திணைக்கு உயர்திணை உறவே அன்றி
உடைமை ஆகாது''

*என்ற மாணிக்கனாரின் விளக்கம் நெஞ்சில் தேன் மாரி பொழிகிறது.*

''நயம் பிலிற்றும் இலக்கியங்கட்கெல்லாம் நயம்
ஊட்டிய தேனிறால் தொல்காப்பியம்''

*என்று அவர் மொழிவதன் ஆழத்தை இத்தகு விளக்கங்களால் உணர்கிறோம்.*

*தொல்காப்பிய உரையாசிரியர்களை மூல ஆசிரியனுக்கு இணை என்றே போற்றுவார் பேராசிரியர். மேலும் தொல்காப்பியத்தைக் காத்த பெருமக்கள் என்ற நன்றியுணர்ச்சியும் அவருக்கு உண்டு. 'ஏனெனில் தொல்காப்பியம் ஆழ வேரூன்றி அகலப் பரவ அவர்கள் காரணம்' என்பது அவர் கருத்து.*

*உரையாசிரியர்களிலும் நச்சினார்க்கினியரிடம் மதிப்பு மிகுதியும் கொண்டவர் பேராசிரியர். 'பல்லும் நாவும் போல' இலக்கணத்துக்கும் இலக்கியத்துக்கும் உரை கண்டவர் என்பது அவர் போற்றுதலுக்குக் காரணம். ஆனால் நூலாசிரியன் திருவுள்ளத்தை உணராது எழுதப்படும் உரை 'புரிநூலைப் பிரி நூலாக்கி விடும்' என்பதையும் அவர் தெளிந்தவர்.*

தமக்கு மிக மிகப் பிடித்த உரையாசிரியர் நச்சினார்க்கினியர் என்றாலும் அவருடைய மரபு தவறிய உரைகளைப் பேராசிரியர் மன்னித்ததே இல்லை.

"கரணத்தின் அமைந்து முடிந்த காலை
நெஞ்சு தளை அவிழ்ந்த புணர்ச்சி"

என்ற நூற்பாவுக்கு உரை வகுத்த நச்சினார்க்கினியர் தலைவி முதலில் திங்களுக்கு. பின்னர் கந்தருவருக்கும், பின்னர் அங்கிக்கும் மணம் செய்யப்படுவதாக வட நூன் மரபுரை எழுதும் செயல் கண்டு சீறுகின்றார் வ.சுப. அதனை 'ஒழுக்கமில் உரை' என்றும் 'அல் தமிழ் நெறி' என்றும், 'என் கோல் நடுங்கினும் எடுத்துக் காட்டினால் தானே தெரியும்' என்றும் மொழியும் ஆளுமை பெருமிதம் தருகின்றது.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தை, 'ஆசிரியப்பாவான் இயன்ற திருக்குறள், வரலாற்றுப் பெயரில்லாப் புறநானூறு, கதைமாந்தர் இல்லாத சிலம்பு' என்றெல்லாம் சிறப்புறுத்தும் பேராசிரியரின் தொல்காப்பிய நெஞ்சம் வணக்கத்துக்குரியது.

**சங்க இலக்கியம்**

'தமிழ் இனத்தின் அறிவுச் சிக்கனம்- அகத்திணை' என்பது பேராசிரியரின் தெளிந்த முடிவு. அதன் காரணமாகவே குறிஞ்சிப்பாட்டு 'ஆரிய அரசனுக்குத் 'தமிழ்' அறிவுறுத்த எழுந்தது என்னும் கூற்று உருவாயிற்று' என்று 'தமிழ்க் காதல்' நூலில் குறிக்கின்றார்.

சங்கப்பாடல்களில் குறுந்தொகை 4 முதல் 8 அடிகள் கொண்ட பாக்களாலும், நற்றிணை 9 முதல் 12 அடிப்பாக்களாலும், அகநானூறு 13 முதல் 31 அடிப் பாக்களாலும் அமைந்திருப்பதற்குத் தெளிவாக யாரும் காரணம் கூறவில்லை. ஆனால் நம் பேராசிரியர் அடி வரையறை பொருள் மாட்சியால் அமைந்தது என்று கருத்துரைத்துள்ளார்.

"முவ்வகைப் பொருளாட்சியே முவ்வகை அடிக் கணக்கிற்கு
ஏதுவாயிற்று என்பது என் துணிவு"

என்கிறார் வ.சு.ப.

"குறுந்தொகையின் அடியளவு உரிப்பொருள் மாட்சியாலும், நற்றிணையின் அடியளவு முதல், கரு, உரிப்பொருள்களின் சம நிலையாலும், அகநானூற்றின் அடியளவு உரிப்பொருளை விட முதல், கருப்பொருள்களின் விரிவாலும் ஏற்பட்டது" என்கிறார். இது நம் சிந்தனைக்குரியது.

பண்டையோர் கருத்துக்கு முரண்பட்டு நெடுநல்வாடை அகப்பாட்டே என்று நிறுவும் அழகு பேராசிரியரின் ஆய்வுக் கூர்மையின் அடையாளம்.'யாயும் ஞாயும் யாராகியரோ?' என்னும் அகப்பாடலைப் பொதுவாகப் புதிய காதலரின் சந்திப்பில் நிகழ்ந்த கூற்றாக இதுகாறும் கருதி வந்திருக்கிறோம். ஆனால் பேராசிரியரோ, 'செம்புலப்பெயல் நீரார் பாடல், முறையான திருமணத்தின்பின் எழுந்த புணர்ச்சி மகிழ்' பாடல் என்று தெரிவித்து நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றார்.



புதுப்பொருள் காணும் வித்தகம் மாணிக்கனாரின் தனிப் பெரும் புலமைக்குச் சான்று.

''மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே''

என்ற புறப்பாட்டில் நிலையற்ற உலகம் என்றே 'மன்னாஉலகத்'துக்குப் பொருள் கூறப்பட்டு வந்துள்ளது. ஆனால் 'பொருள் நிலைக்காத உலகம்' என்று வ.சுப. நுண்பொருள் கண்டுரைக்கின்றார். இது போன்றே,

''பொய்யும் வழுவும் புகுந்த பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப''

என்ற தொல்காப்பிய நூற்பாவுக்குப் பொதுப்பொருள் கூறாது சிறப்புப்பொருள் கண்டுரைத்துள்ளார்.

"பொய் என்பது மணமானவளா, இல்லையா என்று தெரியா ஏமாறு நிலை" என்றும், "வழு என்பது மணமாகாதவள் என்று மணமானவளைப் பிறழ உணர்ந்து அவளிடம் பேசும் களியாட்டுரை" என்றும் குறிப்பிடுகின்றார்.

"ஏமாறு நிலை தவிர்க்கவே மணமான பெண்ணுக்குத் தாலியும் மிஞ்சியும் அணிதல் கரணக்குறி ஆயிற்று" எனக் கருதுகின்றார். "கன்னிப் பெண் மணமாகும்போது சிலம்புகளைக் கழற்றி விடுவர்" என்றும், "மணமானவளே கூந்தலில் மலர் சூடுதல் மரபு" என்றும் குறிப்பிடு கின்றார்.

''இவள் மனைவியானாள் என்ற அற நிலையைச் சிலம்பு கழித்த அடியாலும், மலர் வேய்ந்த முடியாலும் அறிந்து கொள்ளலாம்''

என்பது பேராசிரியரின் கூற்று.

''நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ''

என்ற ஔவையார் பாடலில் நானிலம்-கூறப்படுகின்றதெனக் கூறி வியப்பூட்டுகின்றார். நாடு-மருதம், காடு-முல்லை, அவல் (பள்ளம்) நெய்தல், மிசை-குறிஞ்சி என்று பொருள் கூறும் நேர்த்தி நிகழ்த்துதற்கரிய சிறப்புடையது.

'முந்நீர்' என்றால் இதுகாறும், ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் என்றோ, முன்+நீர் என்று பிரித்து மிகப் பழைய கடல் என்றோ பொருள் கூறுதல் உண்டு. படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில் புரியும் நீர் என்றும் கூறுதல் உண்டு. ஆனால் பேராசிரியரோ, மூன்று பக்கமும் சூழ்ந்த நீர் என்று கடலுக்குப் பொருள் காணுதல் அறிவுக்கு விருந்தாகும்.

## திருக்குறள்

'வள்ளுவம்,' 'திருக்குறட் சுடர்' முதலாகத் தனி நூல்களையும், கட்டுரைகளாகவும் வ.சுப. மாணிக்கனார் திருக்குறளின் மாண்புகளில் திளைத்த அனுபவங்கள் பல.

''தமிழும், தமிழ் வேந்தும், தமிழகமும் ஞாயிற்றன்ன ஆற்றல் தோற்றித் திங்கள் அன்ன புகழொளி பாரித்து உயர்ந்த எண்ணங்கள் செயல்பட்ட ஞான்று பிறப்பு எடுத்தது திருக்குறள்''

என்று பெருமை பிறங்கப் பேசுவார் பேராசிரியர்.

வள்ளுவர் நெஞ்சம் செயல் நெஞ்சம் என்பது அவர் கணிப்பு. மக்கள் வேற்றுமைக்குப் பொதுமை கூறாது, தனி நெஞ்சத் தூய்மை கூறுவது குறள் என்று பேராசிரியர் கூறுகின்றார். 'மனத்துக் கண் மாசிலன் ஆத'லும், 'எனைத்தானும் நல்லவை கேட்'டலும் இதை உணர்த்தும் என்பார்.

பொருள் பற்றி நிறையச் சிந்தனை செய்தவர் வள்ளுவர். பொருள் ஒருவன் பண்பு நிலையை நிர்ணயிக்கும் என்பதால் 'பழி மலைந்து எய்திய ஆக்கம்' இழிவானது என்றும், 'வெஃகாமை' அதனாலேயே உணர்த்தப்படுகிறது என்றும், நல் வழியில் ஈட்டிய பொருள் அறன் ஈனும், அருள் ஈனும், என்றும் எடுத்துக் காட்டுகின்றார் பேராசிரியர்.

அறிவின் சேமநிதியம் திருக்குறள் என்று காட்டுவதற்காக, அறிவறிந்த மக்கட் பேறு என்று வள்ளுவர் இனம் பிரிப்பதை எடுத்துக் காட்டுகின்றார்.'அறிவுடையார் எல்லாம் உடையார்' என்றுரைக்கும் வள்ளுவத்தின் சார்பை விளக்குகின்றார்.

''அடிமைத்தொடி உடைத்த... இந்திய விடுதலைச் சிறுமி கற்கத்தகும் முதற் பாடநூல் யாது,? உரிமை இன்துயில் கொள்ளும் திறக்குறள் காண்''

என்பது பேராசிரியரின் தெள்ளிய கருத்து.

'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்று அடித்துச் சொல்லும் வள்ளுவர் உள்ளத்தை விளக்கும் பேராசிரியர் குடும்ப வாழ்க்கையை ஒரு கவிதையாகவே வடித்து விடுகின்றார்.

"குடும்பம் என்பது ஆண் பெண்ணாகிய குடியானவர் மக்கட் பயிர் விதைத்து வளர்க்கும் மனவயல். குழந்தை மழலை ஒலிக்கும் இன்பக்காடு. சமூகம் கொந்தளித்து மோதும் துன்பக் குன்று. செயலெல்லாம் நினைவெல்லாம் ஓடிவிழும் பற்றுக்கடல். அன்பு நீரற்ற காலை சினப்பாலை"

என விரியும் பேராசிரியர் ஐவகை நிலமாகவும் குடும்பத்தைப் பார்க்கின்றார்.

வள்ளுவ அரசு, வள்ளுவர் நடை, வள்ளுவரின் கூர்மைக் குறள்கள் என்றெல்லாம் ஆய்ந்தும் தோய்ந்தும் ஈடுபடும் பேராசிரியர்.

''வள்ளலிடம் சென்றான் வறியனாய்த் திரும்பான்
வள்ளுவரைக் கற்றான் வாழாதிரான்''

என்று நம்பிக்கை நூலாகத் திருக்குறளைக் காண்கிறார்.

திருக்குறளின் உரைகளை விட மூலக் குறள்களைத் தேடிக் கற்குமாறு பணிக்கின்றார்.

''மூலக் குறள்களை நேரே தீண்டுவார்களாக -
நீரை உறிஞ்சி வழிக் குடிப்பதைக் காட்டிலும்



வாய் வைத்துக் குடிப்பதனால் வருஞ்சுவை
பெருஞ்சுவை அல்லவா?''

**கம்பராமாயணம்**

*காப்பியங்களில் முழுமையாக ஈடுபட்ட பேராசிரியரின் இலக்கிய நெஞ்சம் சிலம்பு, மணிமேகலை, பெரியபுராணம், கம்பராமாயணம், சீறாப்புராணம் எனக் காப்பியக் காவனங்களில் 'கொங்கு தேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பியாய்' வலம் வந்தது.*

*எனினும் கம்பனிடம் அவருக்கு ஒரு தனி ஈடுபாடு இருந்தது. கம்பன் திருநூலை, தமிழ்மரபு தழுவிய காப்பியமாக அவர் கண்டு மகிழ்ந்தார்.*

*'முத்தமிழ்த்துறையின் முறைபோகிய வித்தகர்' என்றும், 'வண்டு தமிழ்ப் பாட்டிசைக் கும் தாமரையே' என்றும், 'காவிரிநாடன்ன கழனி நாடு' என்றும், 'சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி' என்றும் வாய்ப்புவரும்போதெல்லாம் பேசிய தமிழ்க் கம்பனை அவர்நெஞ்சம் நேசித்தது.*

*வடசொற்களைத் தமிழுக்கேற்ப அவன் திருத்தி உரைத்த பாங்கு வீடணன், இரணியன், புகை நிறக்கண்ணன், வச்சிரத் தெயிற்றவன் (விபீஷணன், ஹிரண்யன், தூமராட்சன், வஜ்ர தந்தன் ஆகியோரை) எனத் தமிழ்ப்படுத்திய மொழிப்பார்வையை, பேராசிரியர் மிகவும் வியந்தார்.*

*'கம்பனையோ அல்லது பிற காப்பியக் கவிஞரையோ மதிப்பிடும்போது புற அளவு கோல்கள் பொருந்தமாட்டா' என்று வ.சுப. அழுத்தமாகக் குறிப்பிட்டுள்ளார்.*

''ஒரு காப்பியத்தைப் படித்து ஆராய முற்படும்போது அதற்குத் திறன்கோள் அதனினின்றே வடிக்க வேண்டும்... பெரும்புலவன் செய்யும் படைப்புக்கு அவன் கொள்வதே விதி''

*என்னும் அவர் கூற்றில் பேருண்மை பொதிந்திருக்கின்றது. இந்தக் காப்பியப் பார்வையில் அவர் தெரிவித்துள்ள இன்னொரு கருத்து.*

''திறனாய்வு என்பது ஒப்பாய்வன்று, உள்ளாய்வு
புறனாய்வு அன்று; அகனாய்வு''

*இக்கூற்றில் உண்மையும் உண்டு; விவாதத்துக்குரிய அறைகூவலும் உண்டு.*

*கம்பராமாயண ஆய்வில் அருமைப் பேராசிரியர் பலவற்றைத் தொட்டுச் சென்றிருக்கின் றார். முழுமைப்பார்வை காப்பிய ஆய்வாளனுக்கு இன்றியமையாதது என்பது அவற்றுள் தலைமை சான்றது.*

''முதன்மையும், முழுமையும் காண வேண்டின், கம்பரது சிந்தனையின் முழுவுருவம் காண வேண்டின், ஞாலத்தையே அடக்கிக் காப்பியம் செய்த அவரது புலமையின் திசையைக் காண வேண்டின், இராமாயணத்தின் பல பாடல்களில், பல படலங்களில், பல காண்டங்களில் குருதியோட்டம் போலச் சிந்தனை ஓட்டம் வேண்டும். எவ்வளவுக்குப் பாடல்களை இணைந்து இரண்டறக் கலந்து உடம்பின் நரம்பு போல் பிணைத்துப் பார்க்கின்றோமோ அவ்வளவுக்குக்

காப்பியமாகப் பார்க்கின்றவர்கள் ஆவோம்''

இந்தப்பார்வை பேராசிரியர்பால் செறிந்திருந்த காரணத்தால்தான் காப்பிய நேர்மையைக் கம்பனிடம் அவரால் காண முடிந்தது. கம்பனிடம் ஓங்கியிருந்த மன்பதை நோக்கத்தை அவரால் நெருங்க முடிந்தது.

## இலக்கிய நிறைஞன்

பேராசிரியர் வ.சுப.மாணிக்கம் தமிழின் பழமையில் காலூன்றி உறுதியாய் நின்ற புதுமைப் பார்வையர்.

தமிழ் வேர் கொண்ட புதுமைச்சொற்களை உருவாக்கி அளித்த அசுர முதலி.

எடுத்துக்காட்டு. நிலையியம் (Permanacy)/மொழிஞர் (மொழி அறிஞர்)/வாதீடு (வாதிடல்)/புத்தமிழ் (புதிய தமிழ்)/இலக்கணன் (இலக்கணம் வல்லவன்)/இளைஞியர் (இளைஞருக்குப் பெண்பால்)/வறளி(வறியவன்)

தமிழ் நடையில் புதிய பரிமாணங்களை உருவாக்கி வழி துலக்கியவர். வாக்கியங்களை வளமனைகளைப் போல் கட்டி எழுப்பியவர்.

''ஒழுக்கம் இல்லா உலகியம் அழிவைத் தரும்
ஒழுக்கம் இல்லா உயிரியம் வஞ்சகம் எனப்படும்.''

''திருக்குறள் மக்கட்கு உயிர் நூலாவது போலத்
தொல்காப்பியம் தமிழுக்கு உயிர் நூலாகும்''

''இடைக்காலம் என்பது உரைக்காலம் அன்று;
தொன்னூல்களை உரையென்னும் கயிற்றால் பிணித்த
உயிர்க்காலம்.''

உயிர் என்ற சொல் பொருட்செறிவு ததும்ப உருவாக்கப்பட்ட வாக்கியங்கள் களம் நோக்கி அணிவகுத்த படைவீரர்கள் போல் நிற்பதைக் காணலாம்.

தமிழ் மரபும், தமிழ் இனமும் ஒரு சோதனைக்களத்தில் நிற்கும் இந்தக்காலத்தில் பேராசிரியர் வ.சுப. மாணிக்கம் வழிகாட்டும் இலக்கிய நிறைஞராக நெடிதுயர்ந்து நிற்கின்றார்.

–கவிஞர் சிற்பியின் கட்டுரைக்களஞ்சியம் தொகுதியிலிருந்து



## மாணிக்கச் சிந்தனைகள்

***தமிழர்க்குள் மதங்கள் வேறே தவிர, இனவியல் ஒன்றே! இது எனது அழுத்தமான கொள்கையும் இலக்கியப் பார்வையும் ஆகும். தெய்வங்களைச் சமமாக மதிப்பது போலத் தேசிய மொழிகளையும் சமமாக மதிக்க வேண்டும்.***

# மதிப்புறுமுனைவர் வ.சுப.மாணிக்கனார் தொல்காப்பியக்கடலில், புதுமை கண்ட புதுமை



பேராசிரியர் முனைவர் **இ.கி.இராமசாமி**
முன்னைத்தலைவர், தமிழ் உயராய்வு மையம், யாதவர் கல்லூரி, மதுரை

## அறிமுகம்

*3000 ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய தொல்காப்பியம் அகம், புறம் பேசும் தமிழ்க்காப்பு நூலாகும். அந்தக் காலக்கட்டத்தில் தோன்றிய வடநூல்கள் இகம், பரம் பற்றிய தேடலில் இறங்கியவை ஆகும். சமற்கிருதப் பேராசிரியரான ஜார்ஜ் எல்.ஹார்ட் தற்பொழுது தமிழ் அகத்திணைத் தோற்ற வரலாற்றை ஆராய்ந்து வருகின்றார். அந்த மேனாட்டு அறிஞரின் முயற்சிக்கு வ.சுப. அவர்களின் அகத்திணை ஆராய்ச்சி வித்தாக விளங்குகின்றது. வ.சுப.வின் நூற்றாண்டையொட்டிய இந்தக் கருத்தரங்கில் அவரே தமது ஆராய்ச்சியில் புதுவரிசையில் முதலாவதாக வைத்துக் காட்டிய 'தொல்காப்பியக் கடல்' திறனாய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டு அரங்கேற்றப்படுகின்றது.*

## தொல்காப்பியக்கடல்

*உலகில் மூன்று பங்கு கடல்: ஒரு பங்கு நிலம். தமிழ் நூல்களில் தொல்காப்பியம் கடல். ஏனையவை நிலம். 'தொல்காப்பியக்கடல்' என்ற உருவகத் தொடரை முதன்முதலாகக் கையாண்டவர் யார்? என்ற வினாவுக்கு விடை காண்கிறார் வ.சுப. கி.பி.12 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரும் 'நேமிநாதம்' என்ற இலக்கணத்தை இயற்றியவருமான குணவீர பண்டிதர்தான், தொல்காப்பியக்கடல் மீது பலமுறை ஓடித்திரும்பும் படகு என்று தம் நூலான நேமிநாதத்தை அடக்கமுடன் குறிப்பிட்டார்.*

"தொல்காப்பியக்கடல் சொல்தீபச் சுற்று அளக்கப்
பல்கால் கொண்டோடும் படகு"

*என்பது நேமிநாதப் பாயிரம். தொல்காப்பியத்தைப் பாராட்டும் இந்த வெண்பாவின் சிறப்பினை வ.சுப.விளக்கிக் காட்டுகிறார்.*

> "பெருங்கடலில் ஒரு படகுதானா ஓடும்? திருக்குறள் வங்கம், சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி, பெருங்கதை, பெரியபுராணம், இராமாயணம் முதலான கலங்கள், வீரசோழியம், வெண்பாமாலை, நன்னூல், தொன்னூல் முதலான நாவாய்கள், சிற்றிலக்கியத் தோணிகள், வள்ளலார் பாரதியார் பாரதிதாசன் கண்ணதாசன் ஓடங்கள் எல்லாம் தொல்காப்பியக்கடலில் மிதந்து கரை கடந்தவை யல்லவா?" *(வ.சுப. தொல்காப்பியக் கடல்- முன்னுரை, பக்.9-10)*

*என்பது அவருடைய விளக்கம். தமிழ் இலக்கிய வரலாற்று வளர்ச்சிநிலைகளையே இங்கே*

*உள்வாங்கி வடித்துக் காட்டிவிடுகின்றார். 'வங்கம், கலங்கள், நாவாய்கள், தோணிகள், ஓடங்களைக் கொண்டு கடலை அளப்பது போலத் தமிழ் இலக்கியங்களைக் கொண்டு உரையாசிரியர்களைக் கொண்டும் தொல்காப்பியத்தை அளக்க முயற்சி செய்யலாம்' என்கின்றார்.*

*இன்னும் கப்பல், பாய்மரம், அம்பி, தெப்பம், மிதவை போன்ற நீர்வழி ஊர்திகளையும் சொல்லாமல் விட அவருக்கு மனம் வந்திருக்காது. எனவே, விளக்கத்தைச் சுருக்கிக் கொண்டார். தொல்காப்பியத்தை முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளாய் பின்னைப் புதுமைக்கும் பெயர்த்தும் அப்பெற்றியதாய்ப் பார்த்தார். தொல்காப்பிய நூற்பாக்கள் மட்டுமின்றி அவற்றுக்குச் சொல்லப்பட்ட உரைகளையும் கடலாகவே மதித்தார்.*

## வழிபடு, பழிதீர்செல்வம்

"வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து" *(தொல். 1367)*

*என்ற நூற்பாவுக்கு 'வழிபடு தெய்வம் உன்னைப் பாதுகாக்கட்டும்; குற்றம் தீர்ந்த செல்வத்தோடு வழிவழியாகச் சிறந்து வாழ்க!' என்று பொருள் எழுதி மதிப்பெண் பெறுவது மாணவர் வழக்கம்; மதிப்பெண் போடுவது ஆசிரியர் வழக்கம். ஆனால் இப்படித் துணைநூல் (Notes) போல வ.சுப. விளக்கம் சொல்லவில்லை. அவருடைய விளக்கம் பன்மடங்கு கூர்மையானது. நூற்பாவின் அடிகள்,*

"நாம் விரும்பிய தெய்வத்தை வழிபடும் உரிமையையும், இறைவன் காப்பான், நன்றாக வளமாக இம்மையில் வாழலாம் என்ற நம்பிக்கையையும் தருகின்றன. தெய்வத்துக்கு 'வழிபடு' என்ற அடையும் செல்வத்திற்குப் 'பழிதீர்' என்ற அடையும் வெல்லுஞ் சொல்லாக அமைந்துள்ளன" *(தொல்காப்பியக்கடல், ப.1)*

*என்று குறிப்பிடுகின்றார். 'வழிபடு,' 'பழிதீர்' என்பதை வெல்லுஞ்சொல் என்று சொன்ன வ.சுப.வின் சொல்வெட்டு மாணிக்கம் போன்றது. இல்லை, அது மாணிக்கத் தமிழ்!*

## திருக்குறள் வங்கம்

*திருக்குறள் என்ற வங்கத்திற்குக் (கப்பல்) கருத்துக் கருவூலத்தை எடுத்துக்கொடுத்ததாம் தொல்காப்பியம்:*

*(அ)* நாட்டம் இரண்டும் அறிவுடம்படுத்தற்குக்
கூட்டி யுரைக்கும் குறிப்புரை யாகும் *(1042)*

*என்ற களவியல் நூற்பா,*

"கண்ணொடு கண்ணினை நோக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல"(1100)

*என்ற குறளுக்கு அடியெடுத்துக் கொடுத்ததாம்.*



*(ஆ) தொல்காப்பியர்*

"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தல்" *(1006)*

*என்று நடுகல் வழிபாட்டு முறையினைக் காட்டியவாறு இளங்கோவடிகள், வஞ்சிக்காண்டத்தில் காட்சிக்காதை, கால்கோட்காதை, நீர்ப்படைக்காதை, நடுகற்காதை, வாழ்த்துக்காதை என்று வழிமொழிந்து சென்றாராம். "வடுநீங்கு சிறப்பின் முதலன" (1033) என்று தொல்காப்பியர் சொல்லியதை இளங்கோவடிகள் 'வடுநீங்கு சிறப்பின் மனையகம்' என்றாராம்.*

*(இ) தொல்காப்பியர் "அன்புதலைப் பிரிந்த கிளவி" (1125). "அருள் முந்துறுத்த அன்பு பொதிகிளவி" (1107) என்றார். ஆர்வநெஞ்சம் என்றார். மேலும் முதிர்ச்சியே அருள் என்றார். தொல்காப்பியர் பதித்த தடத்தில் அன்பின் ஆழத்தையும் அருளின் ஆற்றலையும் கம்பர் அனுமன் பாத்திரத்தின்மூலம் வெளிப்படுத்துகின்றார். கிட்கிந்தையில் தூரத்தே நின்று இராமனைக் கண்ட அனுமன் மெய்சிலிர்த்து நின்றான். அவனுடைய மனநிலையைக் கம்பர்,*

"துன்பினைத் துடைத்து மாயத் தொல்வினை தன்னை நீக்கித்
தென்புலத் தன்றிமீளா நெறியுய்க்குந் தேவ ரோதாம்
என்பெனக்கு உருகு கின்றது இவர்கின்றது அளவில்காதல்
அன்பினுக்கு அவதிஇல்லை அடைவென்கொல் அறிதல் தேற்றேன்"

*எனப் பாடுகின்றார். 'இராமன் நம் துன்பத்தைத் துடைப்பான்; வினைப்பயனை நீக்குவான்; துறக்கத்திற்கு அனுப்பிவைப்பான்; எனக்கு எலும்பு உருகுகின்றது; உள்ளம் அவனை விரும்புகின்றது; அளவிலா அன்பு பிறக்கின்றது; அவனை அடைவது எப்படி' என்று பக்தி மேலீட்டால் மயங்கி நின்றான் அனுமன், இந்த இராமாயணக் காட்சி, தொல்காப்பியர் குறிப்பிட்ட அருள் முந்துறுத்த அன்புபொதி கிளவியின் நீட்சியாக ஒளிர்கின்றது' என்பது வ.சுப. கருத்து.*

## பாசறைத் தலைவன் குறிக்கோள்

"எண்ணரும் பாசறைப் பெண்ணொடு புணரார்" *(1180)*

*என்ற நூற்பாவுக்கு 'மாற்றாரை வெல்லும்' குறிக்கோள் கொண்ட தலைவன் படை முகாமிலிருந்துகொண்டு தலைமகளை நினைக்கமாட்டான் என்பது பொருள். அது ஆடவரின் குறிக்கோளை வெளிப்படுத்தும் நூற்பா என்று விளக்கம் எழுதுகின்றார். இன்று பெண்ணியவாதிகள் எண்ணுவதுபோல அது ஆணாதிக்கச் சிந்தனை அல்ல. 'போருக்குப் போகும்போது மனைவியை உடனழைத்துப் போகும் வழக்கம் இல்லை' என்று எழுதிய முந்தைய உரைகாரர்களுக்கு இது ஒருவகையில் மறுப்பும் ஆகும்.*

## தொல்காப்பியப் புதுமை- உயர்திணை, அஃறிணை பொருட்பிரிவு

*மக்களை உயர்திணை என்றும், மக்கள் அல்லாதவற்றை அஃறிணை என்றும் பொதுவாக விளக்கம் கூறுவர். ஆனால் வ.சுப. அக்கருத்தில் உடன்பாடு கொள்ளவில்லை.*

*அவர் ஒழுக்கம் உடையவர்களை மக்கள் என்றும் உயர்திணையென்றும் கொள்ளவேண்டும் என்கிறார். ஒழுக்கமில்லாதவர்கள் மக்களாக மதிக்கப்படார்; அவர்கள் அஃறிணையுள் அடங்குவர் என்ற புதுக்கருத்தை மொழிகிறார். தமது புதுக்கருத்துக்கு அரணாக 'உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்றால்,' 'மரம்போல்வர் மக்கட்பண்பு இல்லாதவர்' என வரும் திருக்குறளடிகளை நிறுத்துகின்றார்.*

## உடைமையா? முறைமையா?

*எனதுமாடு, எனதுவீடு என்பதுபோல எனது மக்கள், எனது மனைவி, எனது கணவன், எனது தந்தை என்று வழங்குகின்றோம். அப்படி வழங்குதல் இலக்கணப்பிழை ஆகும். 'அது' என்பது அஃறிணைக்கு உரிய உருபு. உடைமைப் பொருள் தருவது. எனது மாடு என்றால் மாடு என் உடைமை என்பது பொருள். இது அஃறிணைக்கு மட்டுந்தான் பொருந்தும்; உடைமை அடிமை ஆகிவிடும். மாட்டை அடித்து வசக்கித் தொழுவில் கட்ட முடியும்.*

*ஆனால் எனது தந்தை என்று சொல்லித் தந்தையை உடைமை ஆக்க முடியாது. மனைவி, மக்கள், கணவன், தந்தை என்பனவெல்லாம் முறைமைப் பெயர்கள்* (Relationship) *அவை உடைமைப்* (Ownership) *பெயர்கள் அல்லவே அல்ல.*

*முறைமைப் பெயர்களில் உயர்திணைக்கு உயர்திணையே வரவேண்டும். மனைவி உரிமையுடைய முறைப்பெயர். அவள் போகப் பொருள் அல்லள்; சொத்தும் அல்லள். பெண்ணினத்தைத் தமிழர் எவ்வாறு மதித்தனர் என்பதைக் குறிக்கும் முறைப்பெயர். தமிழர் பண்பாட்டின்படி தொல்காப்பியர்,*

"அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
அதுவென் உருபுகெடக் குகரம் வருமே" (577)

*என்றார். எனவே எனக்கு மனைவி, எனக்கு மகன், எனக்கு மகள் என்றுதான் திருமண அழைப்பிதழ்களில் அச்சிடவேண்டும் என்று கேட்டுக்கொள்கின்றார் வ.சுப. (தொல்காப்பியப்புதுமை, ப.52). தொல்காப்பியர் சுட்டிய இலக்கண மரபைப் பயன்பாட்டுநோக்கில் இப்படி வலியுறுத்திச் சொல்லிய பெருமை வ.சுப. போன்ற பேரறிஞர்களுக்கு மட்டுமே உண்டு.*

## சொல்லியமுறை

*'சொல்லியமுறை' என்ற தொடருக்கு இதுகாறும் உரைகாரர்கள் திணைவரிசை என்றும், குறியீடு என்றும் இருவேறு கருத்துக்கள் எழுதிவந்திருப்பதை வ.சுப. ஏற்றுக்கொள்ளவில்லை. அந்த விளக்கங்களை விலக்கவேண்டும் என்கின்றார் (தொல்காப்பியக் கடல், பக். 173-191).*

*அதாவது:*

1. *முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நிலவரிசைமுறை.*
2. *முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற குறியீடு பெறுதல்.*

இந்த இரண்டு விளக்கங்களும்,



"முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"

*என வரும் நூற்பாப்பகுதிக்குச் சொல்லப்பட்டவை (**950**). இந்நூற்பா காடு, மலை, வயல், கடல் என நிலவகையை மாத்திரம் கூறவில்லை. இருத்தல், புணர்தல், ஊடல், இரங்கல் என்ற குறியீடுகளை உணர்த்துகின்றது என்ற கருத்தோடு ஒரோவழி உடன்பாட்டாலும் வ.சுப. முழுமையாக அக்கருத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. நிலமுதற்பொருளைச் சொன்ன வரிசைப்படி குறியீட்டுப் பொருளைத் தொல்காப்பியர் சொல்லிச் செல்லவில்லை. அவர்,*

"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை
நேருங் காலை திணைக்குரிய பொருளே"

*என்றார். இதனுள் குறிஞ்சித்திணை முதலாவதாகவும் (**959**), பாலைத்திணை இரண்டாவதாகவும், முல்லைத்திணை மூன்றாவதாகவும், நெய்தல்திணை நான்காவதாகவும், மருதத்திணை ஐந்தாவதாகவுமாக வைப்புமுறை பெற்றுள்ளன. இவ்வாறு கொள்ளப்படும் இருவேறு கருத்துக்களையும் சீர்தூக்கிப்பார்த்து முல்லை முதலான குறியீடுகள் ஒருதலையாகக் கடைப்பிடிக்கத் தக்கவை என்று வ.சுப. கருதினாலும் (மேலது.ப.188) (முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற குறியீட்டு வைப்புமுறை) அதில் அவருக்கு முழுமையான உடன்பாடு இல்லை. எனவே இந்த ஆராய்ச்சியின் அடிப்படையில் மற்றுமொரு மேலாய்வுக்களத்திற்கு ஆற்றுப்படுத்துகின்றார்.*

## உரையாசிரியர் கண்ட நிரல் நயங்கள்

*ஒரு கருத்தையோ, சொல்லையோ தொல்காப்பியர் முதலில் ஏன் சொன்னார்? அவர் கையாண்ட சொல்வரிகையின் சிறப்பு என்ன? என்பதை விளக்குவது உரையாசிரியர் கண்ட நிரல் நயங்கள் எனப்படுகின்றது.*

"கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே" *(தொல்.7)*

*என்ற நூற்பாவில் கண்ணிமைத்தலும், விரலை நொடித்தலும் ஒரு மாத்திரைக்கு அளவாகச் சொல்லப்படுகின்றன. கண்ணிமைத்தலை ஏன் முதலில் கூறினார்? இமைத்தல் எப்போதும் எல்லா உயிர்க்கும் இயல்பாக நிகழ்வது. அதனால் அதனை முதலில் கூறினார். அது இயற்கை அளவு. விரல் நொடிதல் எப்போதாவது நிகழும். செயற்கையானது. அது செயற்கை அளவு. அனால் நொடி, இரண்டாவதாகக் கூறப்பட்டது என இளம்பூரணர் உரைகொண்டு நயங் காட்டுவார் வ.சுப.*

*கற்பியலில் கூற்றுக்குரியாரை வரிசையாக வைத்து எண்ணுவார் தொல்காப்பியர். அது, "பாணன் கூத்தன் விறலி பரத்தை" (**1466**) என்ற வரிசையில் காணப்படுகிறது. இந்த வரிசை ஏன்? 'வரிசை யறிதலோ அரிது' என்றார் கபிலர். வரிசையறிவு இன்றியமையாதது. ஊர்ப்புறங்களில் கோயில்மரியாதையை வரிசையறிந்து செய்வர். இசைக்குரிய பாணனை*

*முதற்கண் வைத்து, இசைவழிபட்ட நாடகம் ஆடும் கூத்தனை இரண்டாவது வைத்து, விறல்பட ஆடும் பெண்ணான விறலியை மூன்றாவது வைத்து, பரத்தையை இறுதியாக வைத்தார் எனப் பேராசிரியர் உரைவழி நயங்காட்டுவார் வ.சுப.*

### மறுதலித்து நிறுவுதல்

*பலவிடங்களில் முன்னோர் உரைகளை மறுதலித்துத் தங்கருத்தை நிறுவும் புலமையும் வ.சுப.விடம் உள்ளது. சோற்றுப் பதம்போல இங்கு ஒரு கருத்தைக் கூறலாம்.*

### *சிறந்தது பயிற்றல் எது?*

*தொல்காப்பியக் கற்பியலில் சிறந்தது பயிற்றல் என்ற நறுந்தொடர் இடம்பெறுகிறது.*

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே" *(1138)*

*இந்த நூற்பாவில் வரும் சிறந்தது பயிற்றல் என்பதற்கு 'அறத்தின் மேல் மனநிகழ்ச்சி' என்று சுருங்கப் பொருள் சொன்னார் இளம்பூரணர். 'மெய்யுணர்ந்து வீடுபேறடைதல்' என்று பொருள் கொண்டார் நச்சினார்க்கினியர். மேலும் அவர் நூற்பாவைக் கண்டவாறு சிதைத்து, முறைவழுவிப் பொருளும் தவறாக மொழிந்தார் என்பது வ.சுப.வின் குற்றச்சாட்டு. எனவே சரியான பொருள்காண முனைகின்றார்.*

"சிறந்தது என்பது ஒருமையாதலின் அறம் ஒன்றையே குறிக்கும். தலைவனும் தலைவியும் உடனிருந்து செய்யக்கூடிய ஓரறம் விருந்தோம்புவதேயாம். 'விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை' என்ற சிலப்பதிகாரத்தாலும், 'விருந்து கண்டபோது என்னுறுமோ?' என்ற இராமாயணத்தாலும் பெண் தனிமையும் ஆண் தனிமையும் விருந்தாற்ற இயலா என்பது பெறப்படும். ஆதலின், 'கிழவனும் கிழத்தியும் சிறந்தது பயிற்றல்' என்ற சூழ்நிலையால் சிறந்தது என்ற சொல் குறிப்பது விருந்தோம்பல் என்ற அறமே, பயிற்றல் - பலகால் செய்தல், இடைவிடாது செய்தல்" *(தொல்காப்பியக்கடல், ப.210) என்ற தம் பொருள்முடிவு கூறுகின்றார்.*

### முடிவுரை

*தொல்காப்பியத்தின் பழமை, பரப்பு, புதுமை, பெருமை, இனிமை, ஆழமுடைமை, எதிர்கால நோக்கு, கொள்கை ஆகியவற்றை வ.சுப. பார்வையில் கண்டோம். இமயத்தின் உச்சியில் ஏறிக் கொடியை நாட்டியது போலத் தொல்காப்பியக் கடலில் எதிர்நீச்சலடித்த வ.சுப. அவர்களின் ஆராய்ச்சி வளத்தை மதிப்பிட்டோம். அந்த வகையில் தொல்காப்பிய அறிவை, வளர்க்க இத்திறனுரை பயன்படும்.*

# முதறிஞர் வ.சுப.மாணிக்கனாரின் பாட்டுத்திறன்

முனைவர் **ம.பெ.சீனிவாசன்**
சிவகங்கை



## தனிஏர் உழவர்

இருபதாம் நூற்றாண்டில் தமிழுக்குத் தகும் உயர்வளித்த பெரும் புலமையாளர்கள் பலர். அவருள் முன்வரிசையருள் ஒருவராய் முன்மொழியத் தக்கவர் நம் மாணிக்கனார். தன்னொப்பாரில்லாத் தனித்தமிழறிஞர் அவர். அவரின் புலமைக்கூறுகள் பலவும் வியந்தோதத் தக்கவை; ஆழ்ந்து அகன்ற தனி ஆய்வுக்குரியவை.

பழந்தமிழுக்கு முடிமணியாகத் திகழும் தொல்காப்பியத்திற் புதுமை கண்டவர் அவர். புதுமைக்கவி பாரதியிடத்தும் பழமையின் மரபுவேர்களைக் கண்டு காட்டிய சிறப்பும் அவருக்குண்டு.

பாட்டு, தொகை முதலான சங்க நூல்களின் மீதான அவரின் பார்வை மற்றவர்களிடமிருந்து வேறுபட்டது; தனி வீறு மிக்கது. உழுத சாலில் உழாமல் தனி ஏர் நடத்திய எழுத்து - ஏர் உழவர் அவர். சிலம்பு - மேகலை ஆகிய 'இரட்டைக்காப்பிய'ங்களை அவர் அணுகிய விதமும் புதுமையானதே. 'எந்தச் சிலம்பு?' என்னும் கேள்வியின் மூலம் சிலம்பு பற்றிய முந்தைய ஆய்வுகளை அசைத்துப் பார்த்தவர் மாணிக்கனார்.

'கம்பர்' என்னும் சிறு பனுவலில் - கவிச்சக்கரவர்த்தியின் காப்பியக் கடலை, ஒரு கைப்பிடிக்குள் அடக்கிக்காட்டிய 'குறுமுனி' அவர். அந்த வித்தகத்தை - விந்தையை என்ன சொல்ல!

'பாலிருக்கும் பழமிருக்கும் பசியிருக்காது' என்ற திரையிசைப் பாடலைப் 'பசியட நிற்றல்' என்னும் தொல்காப்பிய நூற்பாவோடு (1215) பொருத்திக்காட்டிய புதுமைப் புலவர்.

காலந்தோறும் தோன்றிய தமிழ் இலக்கண இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள், புராணங்கள், தனிப்பாடல்கள் என நம் காலத்துக் கலைஞரின் குறளோவியம் உட்பட அவரின் 'விமர்சன வெளிச்சம்' பாயாத நூல் ஒன்றும் இல்லை.

திருக்குறளில் ஆழங்காற்பட்டவர்; "அது கருத்து வகையால் உலகமக்கட்கெல்லாம் உரியது; எனினும் மொழிகாரணமாய் நமக்கு உறவுடையது" (வள்ளுவம் ப.263) என்று உரிமை பாராட்டியவர். திருமுறைகளில் - குறிப்பாகத் திருவாசகத்தில் அவருக்கிருந்த பெரு விருப்பம் அளப்பரியது. ஆழ்வார்களின் ஈரத்தமிழையும் அவர் நன்கு அறிவார். அவர் படைத்த தனிநூல்களும் கட்டுரைகளும் இதற்குச் சான்று. இவையேயன்றி நூலாசிரியர் பிறர்க்கு வழங்கிய அணிந்துரை மற்றும் மதிப்புரைகளிலும் அவரின் புலமைத்தெறிப்புக்களைக்

*காணலாம். அவை காரிருளில் நடப்பவனுக்குச் சட்டெனத் தோன்றி மறையும் மின்னலின் வெட்டைப்போல வழி காட்டுபவை.*

## ஒரு சோற்றுப்பதமாக ஓர் எடுத்துக்காட்டு

*கம்பராமாயணம் - அண்ணாமலைப் பதிப்புக்கு (யுத்தகாண்டம் ஆறாம் பாகம், 1970) அவர் வழங்கிய 'நன்றியுரை' யில் (ப.VIII) கம்பன் கையாண்ட, 'திருத்தும்' என்னும் சொல்லுக்குத் திருமங்கையாரின் 'திருத்தாய் செம்போத்தே' என்னும் பாசுரம் கொண்டு விளக்கம் தந்திருப்பதும் அதனடியாகச் சிறந்த பாடம் இன்னது என அறுதியிட்டிருப்பதும் அவரின் திறமான புலமைக்குச் சான்றாவன.*

*இப்படிப் பழமை ஊற்றமும் புதுமை நாட்டமும் கொண்டிருந்த மாணிக்கனார், பாட்டுத்திறன் படைத்தவராகவும் விளங்கினார். ஒருமுறை நாடறிந்த பெருங்கவிஞர் சிற்பி அவர்களிடம் கவிஞர் பாலா அருகிருக்க, அத்திறன் குறித்து நான் சொன்னதை இங்குக் குறிப்பது தவறாகாது.*

*'வ.சுப.மா' கவிஞரல்லர்; ஆனால் அவர் கவிதை எழுதியிருக்கிறார்" என்னும் குறிப்புத்தான் அது.*

*'உரை' யில் அதாவது எழுத்தில் தனிநடை, தனிச்சுவை காட்டியவர் மாணிக்கனார். படைத்தவன் பழத்தினில் இனிப்பினைச் சேர்த்தது போலப் பாட்டிலும் அவர் கனிச்சுவை காட்டினார். அத்திறத்தினை மட்டும் இங்குச் சுருங்கச் சுட்டுவோம்.*

## ஆர்வப்பாட்டு

*பாட்டுக்குச் சொல்லப்படும் இலக்கணம் யாது? தானாக எழுகிற அகத்தூண்டுதலின் வெளிப்பாடாக வழிந்தோடுவதே* (Spontanious outflow) *கவிதை என்பர் மேனாட்டறிஞர்.*

உள்ளத்துள்ளது கவிதை - இன்பம்
உருவெடுப்பது கவிதை
தெள்ளத்தெளிந்த தமிழில் - உண்மை
தெரிந்துரைப்பது கவிதை

*என்பார் நம் கவிமணி. உணர்ச்சியின் அடியாகவே இன்பம் உருவெடுக்கும். எனவே உணர்ச்சியும் உண்மையும் கவிதைக்கு இரு சிறகுகளாயின. இதனினும் சுருக்கமாக எட்டாம் நூற்றாண்டிலேயே பாட்டுக்கு இலக்கணம் சொன்னார் ஒருவர்.*

"ஆர்வத்தால் பாடாதார் பாட்டு என்றும்
பாட்டல்ல கேட்டாமே"

*என்பது அவர்கூற்று. ஆர்வப்பாட்டே பாட்டு; அவ்வார்வம் இன்றேல், என்றுமே அது பாட்டாகாது என்பது அவர் துணிபு.*



### யார் அவர்?

*அவர் தாம், 'தமிழ்நன்னூல் துறைகள் அஞ்சுக்கு இலக்கியம்' செய்த திருமங்கையாழ்வார்.*

*நம் மாணிக்கனாரும் அத்தகைய ஆர்வப் பாட்டினரே. அதனால் தான் பெரும்பாலும் அவர் 'செய்தவை செய்யு'ளாகாமல் உணர்ச்சிக் கவிதைகளாயின. ஒருமுறை வாய்விட்டுப்படித்தோர் மனத்திலும் படிந்து நின்று, பக்கம் நின்று கேட்போர் நெஞ்சையும் கிறங்கடித்தன.சான்று, டாக்டர் உ.வே.சா. அவர்களுக்கு 'அன்புறை' (காணிக்கை)யாக. அவர் பாடிய பாடல்கள்.*

*'தமிழ்க்காதல்' தந்த நம் மாணிக்கனார்க்கு உ.வே.சா. மீது தனிக்காதல் உண்டு. அவரைப் 'பதிப்பின்வேந்து' என்று மதிப்பிட்டவர் அவர். 'அவரின்றேல் பண்டைத்தமிழ் நூல்கள் இல்லை; தமிழரின் நனிநாகரிகம் பற்றி இவ்வுலகம் அறியவும் வாய்ப்பில்லை' என்னும் கருத்தினர். 'இன்றைய தமிழ்த் தேசிய உணர்வுக்கும் தமிழ்க்காப்புக்கும் - இனமான மறுமலர்ச்சிக்கும் வித்திட்டவர் உ.வே.சா' என்று நினைக்கிறார். அந்த நினைவுத் தொடர்ச்சியால் நெஞ்சம் நெகிழ்கிறார். கொஞ்சம் பின்னோக்கிப் பார்க்கிறார். 'பார்காக்கவும் பயிர்காக்கவும் பாலர் உயிர்காக்கவும் காலந்தோறும் ஆயிரமாயிரம் பேர் இருந்தார்கள். ஆனால் தமிழ் காக்க யார் இருந்தார்கள்? ' இப்படி மனச்சோர்வுடன் நினைக்கையிலேயே, 'சாமிநாதனின் எழுச்சி' அவர் கண்ணுக்குத் தெரிகிறது. கவிதையும் பிறக்கிறது:*

பார்காத்தார் ஆயிரம்பேர்; பசித்தார்க் காகப்
    பயிர்காத்தார் ஆயிரம் பேர்; பாலர்க் காக
மார்காத்தார் ஆயிரம் பேர்; வாழ்ந்த நாட்டில்
    மானம்காத்த தமிழ்த்தாய் 'என்உடைமை எல்லாம்
யார்காத்தார்' எனக் கேட்க ஒருவன், 'அம்மா
    யான்காப்பேன்' எனவெழுந்தான் சாமிநாதன்
நீர்காத்த தமிழகத்தார் நெஞ்சின் உள்ளான்
    நிலைகாத்த மலையிமய நெற்றிமேலான்

*அடுத்துவரும் பாடல் அடிக்கரும்பாக -இன்னும் சுவையாக அமைகிறது. அடிக்கரும்பின் அடுத்தடுத்த மொழிகளைக் கடித்துச் சுவைக்கையில் மொழிக்கு மொழி தித்திப்பாவது போலப் பாடலின் அடிமேலடி சுவையேறி நிற்கிறது.*

பொய்யாத தமிழ்க்குமரி ஈன்ற சாமி!
    போகாத புகழ்க்கன்னி மணந்த நாத!
செய்யாத மொழித்தொண்டு செய்த ஐய!
    சிறுகாத நெஞ்சத்தேம் வணங்கு செம்மல்!
எய்யாத திருவடியால் எண்பத் தாண்டும்
    இளையாத உள்ளத்தால் எங்கும் சென்று
நெய்யாத தமிழ்நூல்கள் நிலைக்க வைத்த
    நீங்காத தமிழ்க்குயிரே நின்தாள் வாழ்க!

எங்கேனும் 'மாணிக்கக்கல்' கரைவதுண்டா? உ.வே.சா.வின் தமிழ்த்தொண்டில் உருகி உருகிக் கரைந்து நிற்கிறது நம் 'மாணிக்கம்'.

நாயகனுக்குத் தலைப்பட்ட நாயகி போல் 'சாமிநாத ஐயர்' என்று அவர் பெயர் சொல்லவும் நாணி, 'சாமி' என்றும் 'நாத' என்றும் 'ஐய' என்றும் முதல் இரண்டடிகளின் வெவ்வேறு சீர்களில் அச்சொற்களைத் தனித்தனி நிறுத்தி நிறுத்திச் சொல்லிப் பார்க்கிறார்; சுவைகாண்கிறார். நாமோ அவற்றைச் 'சாமிநாத ஐயர்' என்று முறையே சேர்த்துப்படித்து அழகு பார்க்கிறோம்.

மனமொழிமெய்களால் முற்றும் தமிழான - பெருந்தமிழன் நீ. இனத்தால் உன்னை வேறுபடுத்தி விலக்கிப் பார்க்கும் 'சிறியமனம்' எங்களுக்கில்லை - என்பதை அவர் வெளிப் படுத்தும் விதமே தனி.

"சிறுகாத நெஞ்சத்தேம் வணங்கு செம்மல்"

என்பதிற் பொதிந்து கிடக்கும் பொருள் இதுவே. விரிவானம் போல் அவரின் விரிவான மனத்தைக் காட்டும் இடமிது. நிறைவாக,

"நீங்காத தமிழ்க்குயிரே நின்தாள் வாழ்க" என்று முடிக்கும்போது,

"தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே"

என்னும் திருநாவுக்கரசரின் தேவாரம்தான் நம் நினைவுக்கு வருகின்றது.

அது மட்டும்தானா? இதே 'சாமிநாதப்புலவனுக்கு' மகாகவி பாரதி பாடிய பாட்டொன்று கூடவே நம் நினைவில் ஓடுகின்றது.

'நிதியறியோம் இவ்வுலகத் தொருகோடி
இன்பவகை நித்தந் துய்க்கும்
கதியறியோம்' என்று மனம் வருந்தற்க
குடந்தைநகர்க் கலைஞர் கோவே!
பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்
காலமெலாம் புலவோர் வாயில்
துதியறிவாய் அவர் நெஞ்சின் வாழ்த்தறிவாய்
இறப்பின்றித் துலங்கு வாயே!

பாரதியின் இவ்வறுசீர் விருத்தப் பாடலோடு, நாம் முன்னர்க் காட்டிய வ.சுப.மாவின் எண்சீர் விருத்தப் பாடல்களை ஒப்புநோக்குக; வாய்விட்டுப் படிக்க.

இப்போது மகாகவி பாரதிக்குப் பக்கத்தில் நம் மாணிக்கனார் வந்து நிற்பதைப் பார்க்கலாம்.

### மற்றுமொரு சான்று

இனி, மரபு - புதுமை இரண்டிலும் தடம் பதித்த கவிஞர் மீராவின் பாடலும் மூதறிஞர்



மாணிக்கனார் பாட்டும் ஒத்து நடப்பதற்கு ஒருசான்று காட்டுவோம்.

தென்றலும் நிலவும் போலப் பிறர்க்காக வாழ்வதே சிறந்த வாழ்க்கையாகும். எனவே தன்னால் மாநிலம் பயனுறுவதற்காகப் பராசக்தியிடம் வரம் கேட்டான் பாரதி. 'உலகம் உண்ண உண்; உடுத்த உடுப்பாய்' என்றார் பாவேந்தரும். வாழையடி வாழையென வந்த பொதுமைச் சிந்தனை இது.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த இளம் பெருவழுதியும் பிறர்க்கென முயல்வோர் வாழ்வதாலேயே இவ்வுலகம் வாழ்கிறது (புறநா.182) என்றான். சான்றோர் கூட்டுறவால் நிலம் - தன் பாரத்தைத் தாங்குகிறது (990) என்றும் பண்புடையார் இருப்பதாலேயே உலகம் இருக்கிறது (996) என்றும் உறுதியாக நம்புகிறது வள்ளுவம். இத்தகைய சிந்தனைப் பள்ளியில் பயின்றவரே அறிஞர் வ.சுப.மாவும், தமக்கென வாழாத இயற்கைப் பொருள்களின் இயல்பினை அவர் எண்ணுகிறார். இவ்வியல்புக்கு விலக்கான பொருள் ஒன்றும்கூட அவர் கண்ணிற்படவில்லை. எனவே பார்க்கின்ற பொருளிலெல்லாம் இந்த எண்ணமே மனத்திற்பட்டுப் பாட்டுப் பிறக்கின்றது.

நல்லாவின் பால்முழுதும் கன்றுக் கில்லை;
நறும்பூவின் மணமுழுதும் சோலைக் கில்லை;
நெல்லாகும் கதிர்முழுதும் நிலத்துக் கில்லை;
நிறைகின்ற நீர்முழுதும் குளத்துக் கில்லை;
பல்லாரும் கனிமுழுதும் மரத்துக்கில்லை;
பண்ணரம்பின் இசைமுழுதும் யாழுக் கில்லை;
எல்லாமே பிறர்க்குழைக்கக் காணு கின்றேன்;
என் வாழ்வும் பிறர்க்குழைக்க வேண்டும்; வேண்டும்!

வ.சுப.மாவின் இக் கவிதை வாக்குமூலம் (Declaration) அவரின் பொதுமைச் சிந்தனையையும் அதன் மீது அவருக்கிருந்த தீரா வேட்கையையும் தெரிவிக்கின்றது. 'ஆவின்பால் முதலான யாவும் அடுத்தவர்க்கே' என்பதை அவர் அடுக்கிச்சொல்வது கவிதைக்கு அழகூட்டுகிறது. படிப்போரை மீண்டும் மீண்டும் வாய்விட்டுப் படிக்க வைக்கிறது. அது பற்றிச் சிந்திக்க வைக்கிறது. சிந்திப்போருள் சிலரேனும் செயல்படக் கூடுமன்றோ? அதுவே பாட்டின் பலன். அப்படி ஒரு பலன் கிடைத்தால், 'பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்த பெருமை' நம் மாணிக்கனார்க்கும் வந்து சேரும்.

இனி மீராவின் கவிதைக்கு வருவோம், பொதுவுடைமைப் பூவான ஜீவாவின் மறைவு குறித்த இரங்கற்பா அது.

தனக்காகக் கார்மேகம் பொழிவ தில்லை;
தனக்காகச் சோழநதி பாய்வ தில்லை;
தனக்காகப் பூங்குயில்கள் இசைப்ப தில்லை;
தனக்காகச் செவ்வாழை செழிப்ப தில்லை;

தனக்காக இயற்கையிலே முகிழ்த்த ஒன்றும்
 தழைப்பதில்லை பிழைப்பதில்லை மனிதன் மட்டும்
தனக்காக வாழ்கின்றான் என்பர்; அந்தத்
 தரையுரையைப் பொய்க்கவைத்த சான்றோன் நீயே!

*(தாமரை - ஜீவா நினைவுமலர் (1965)*

*மீரா நாடறிந்த பெருங்கவிஞர்; 'வ.சுப.மா' - அறிஞர் போற்றும் பேரறிஞர். இவ்விருவரின் பாட்டும் உணர்ச்சி, கருத்து இரண்டாலும் ஒத்து நடப்பதைக் காணலாம். 'போலச் செய்தலாக' இல்லாமல் தனித்தன்மையுடன் ஒன்றற்கொன்று அவை 'இணை'யாக நிற்பதும் காண்க.*

*நாம் இதுவரை பார்த்த மாணிக்கனார் பாடல்கள் உணர்ச்சிப் பெருக்குடையன.*

## கருத்துச்செறிவு

*'வ.சுப.மா' அவர்கள் தம் - வள்ளுவம் என்னும் நூலில் (கற்பனைப் பொழிவுகள் - அவர் படைத்த புதிய இலக்கியவகை) தமையனார் திருப்பதி அவர்களுக்கு 'அன்புறை'யாக இரண்டு வெண்பாக்கள் பாடியிருக்கிறார்.*

எங்கள் குலமுதல்வன்; இல்லாண்மை ஏற்றமகன்;
பொங்கல்மனைபோற் பொலிவுடையன்; - சங்கத்
தமிழனைய தூயன்; தனைமறந்த தொண்டன்;
கமழும் குடிமைக்கோர்காட்டு (1)

குடும்பக் களத்துக் குறிக்கோட் படையால்
இடும்பைப் புறங்கண்ட எம்முன் - நெடும் பொறையை
வள்ளுவ நூலகத்து வாழ்வெண்ணிக் கற்பவர்
கொள்ளுப நெஞ்சிற் குறித்து (2)

*இவ்விரு வெண்பாக்களும் குடிசெயல்வகை (103) குடிமை (96) இடுக்கணழியாமை (63) என்னும் திருக்குறள் அதிகாரக் கருத்துகளை உள்வாங்கிப் பாடப்பெற்றவை. அன்றியும்,*

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும் (1023)

இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்
நல்லாள் இலாத குடி (1030)

*என்னும் குறட்பாக்களின் கருத்துச் செறிவாகவும் இவற்றைக் காணக்கூடும்.*

*முதல் வெண்பாவில் இடம்பெறும் 'இல்லாண்மை' வேறெங்கும் காணப் பெறாத ஒன்று; இவரின் புதிய சொல்லாக்கம். குடும்பத்தைக் குற்றம் மறைப்பின் வலிமைக்கு இவர் சூட்டிய புதிய பொன் மகுடம் அது.*



ஒன்றை மட்டும் இங்குக் குறிப்பிட்டுச் சொல்லியாக வேண்டும் ஆசிரியன், தனது நூலை - தன் மனம் உகந்தவர்க்குக் காணிக்கையாக்குவது புதுவதன்று; இயற்கையே. மகன் தந்தைக்கும், மாணாக்கன் ஆசிரியற்கும், 'அன்புறை'யாக்குவது போலத் தமையனுக்குத் தம்பி(ன்) செய்த காணிக்கை இது. வாசகர்க்கும் இதற்கும் என்ன தொடர்பு? என்று நாம் நினைக்கலாம். நுட்பமாக நோக்கின் மற்றவர் போலன்றிப் படிப்பவர்க்கும் நூலுக்கும் ஒரு தொடர்பு காட்டுகிறார் மாணிக்கனார். அத்தொடர்பு, நூலைக் கற்போரையும் சேர்த்துப் பிணிப்பது; குழந்தைக் கண்ணனை உரலோடு பிணித்த 'கண்ணிநுண் சிறுத்தாம்பி'னைப் போன்றது. இரண்டாம் வெண்பாவில்,

> "வாழ்நெறி காட்டுவது வள்ளுவம்; அந்த நெறியின் நீங்காது வாழ்ந்து காட்டி, இடுக்கண்களை ஏற்றுக் குடும்பப்பாரத்தைச் சுமந்தவர் அண்ணன் திருப்பதி. எனவே இந்நூலினைக் கற்பார் அவரது நெடும்பொறையை (பெரும்பாரத்தைத் தனியொருவனாய் ஏற்று நின்றதை) நெஞ் சிற்குறிக்கொள்வாராக! கொண்டால் அவர்தம் வாழ்வு சிறக்கும்"

என்னும் குறிப்பினைத் தருகிறார். தமையன் - தம்பி உறவுப்பாட்டாக இல்லாமல், ஆசிரியர் - வாசகர் உறவையும் சேர்த்துக் காக்கும் கருத்துச்செறிவே இதன் சிறப்பு எனலாம்.

**முடிவுரை**

'தமிழ்க்காதல்' 'வள்ளுவம்' ஆகிய இருபெருநூல்களின் 'அன்புறை'ப்பாடல்களே இங்கு எடுத்துக் காட்டப்பட்டன. 'கொடைவிளக்கு' முதலான அவரின் ஏனைய பாட்டுப் பனுவல்கள் விரிவஞ்சி இங்குப் பேசப் பெறவில்லை. ஆழ்ந்து கற்பார், அவற்றிலும் 'மாணிக்கப்பரல்' கண்டு மகிழலாம்.



## மாணிக்கச் சிந்தனைகள்

**இறைவன் என்பவன் குணமற்ற தனிப்பொதுப் பேராற்றல்.**

**இறைநெறியை அறிவுநெறியாக வாழ்க்கைச் செயல் நெறியாக ஒழுக்க நெறியாகக் காண்பது வள்ளுவ இறைமை.**

**இறை தொழும் நமக்கு முதற்கண் பொய்யா நெஞ்சம் வேண்டுவதை உள்ளுக.**

**ஒரு குறிக்கோள் பற்றினன் தானும் வாழ்வான்; மற்ற வரையும் வாழ்விப்பான்.**

# மூதறிஞர் வ.சுப.மாணிக்கம் நல்கிய மனைவியின் உரிமை



பேராசிரியர் **பா.வளன்அரசு**
தலைவர், உலகத் திருக்குறள் தகவல் மையம்,
பாளையங்கோட்டை.

## முன்னுரை

*புறநானூற்றில் பரணரும் பெருங்குன்றூர்கிழாரும் பாடிய பாக்களை (எண் 145: 147) அடிப்படையாகக் கொண்டு பேராசிரியர் வ.சுப.மாணிக்கம் அவர்கள் இந்நாடகத்தை நல்கியுள்ளார். கடையெழு வள்ளல்களுள் ஒருவன் வையாவிக்கோப்பெரும் பேகன்; மயிலுக்குப் போர்வை ஈந்த பேகனையும் அவன் மனைவி கண்ணகியையும் கூடி வாழுமாறு கபிலர், பரணர், பெருங்குன்றூர் கிழார், அரிசில்கிழார் ஆகிய நற்றமிழ்ப் புலவர் நால்வர் மேற்கொண்ட முயற்சி கற்பனை நயந்தோன்ற நான்கு காட்சிகளில் மாட்சிமிகு நாடகமாக்கப்பட்டுள்ளது. அரசியலில் புலவர் தம் தன்னலமற்ற தூய தொண்டின் தேவை தெளிவாகிறது. தன் மகனுக்கும் நாட்டிற்கும் நன்மை பயக்கும் கற்றோர் பெற்றிமை போற்றப்படுகிறது. தன் கணவன் பரத்தையொழுக்கத்தைத் தடுக்கும் உரிமை மனைவிக்குப் பிறப்புரிமை என்று எடுத்துரைக்கிறது.*

## கண்ணகியும் தோழியும்

*சோலை ஒன்றில் மாலைப்பொழுதில் பேகன் மனைவி கண்ணகி கவலையோடு தனிமையில் பேசுகிறாள், கணவன் உடல் பேணுவதும் அவன் புகழ் காப்பதும் வாழ்க்கைத் துணையாம் மனைவிக்கு உரிய செயல்கள் என்று வள்ளுவம் சொல்லுவதை உள்ளுகிறாள். தன் கணவனது வெண்ணிறப் புகழாடை அழுக்காக இருக்கும் வரையில் தூசுபட்ட ஆடையை உடுத்துவதாகத் தோழியிடம் தெரிவிக்கிறாள். கணவன் செயலை நினைந்து கண் கலங்கி நிற்கும் கண்ணகியின் முகம் குளிப்பாட்டாத பிள்ளை முகம் போன்று ஒளி மங்கித் தோன்றுகிறது. மயிலுக்கும் மக்களுக்கும் பகைவருக்கும் நல்லவராகிய பேகன் தன் மனைவிக்கு மட்டும் அவ்வாறு இல்லையே என ஏங்கி அழுகின்றாள் கண்ணகி.*

## பேகனும் கண்ணகியும்

*நிலாமுற்றத்தில் கண்ணகியின் நலம்புனைந்துரைக்கும் பாங்கில் பேகன் கண்ணகியைத் தேற்ற முனைகின்றான். இரு நாட்களாக ஊருக்குத் தெற்கே மூன்று கல் தொலைவுடைய நல்லூர் முல்லையுடன் பேகன் கூடி வாழ்வதைக் கேள்வியுற்று ஊடி நிற்கிறாள் கண்ணகி. 'ஓர் உழவன் தன் வயலுக்கு மடைவாய் நீர் விடுதல் வேண்டும் என்று கேட்பது உரிமை. மிகுந்து வரும் கண்மாய் நீரை மற்றையோர் வயலுக்கு விடாது மறித்தல் தன்னுரிமை என்பது பிழை' என்று எடுத்து ஓதி, 'முறை மாறி நடக்காத தன்னிடம் முகம் மாறி நடப்பது அழகில்லை'*



என்கிறான் பேகன். 'நாடு பிறர்க்குப் பொது என்பதை ஏலாத தனியுரிமையுடைய பேகனுக்கு மனைவியான நான் பேகன் பல பெண்டிர்க்குப் பொது என்பதைப் பொறுக்கவியலாது' என்கிறாள் கண்ணகி. மேலும், 'மனைவி இருக்கும்போது கணவன் வேறு ஒரு பெண்ணை நாடினால் பெண்டிர் உலகம் மனைவியையே குறைவாகப் பழித்துப் பேசும்' என்கிறாள். பேகனின் பரந்த இசைக்குப் பரத்தையொழுக்கம் வசையாகின்றது என்று அஞ்சுகிறாள். 'தன்னை மறவா என்னை மறவாதீர்கள்' என்று பேகனிடம் கெஞ்சுகிறாள் கண்ணகி. 'அவளுடைய அழுகண்ணும் அழுக்குடையும் முடியாக் கூந்தலும் வாடிய முகமும் தன் புகழோடு பழியையும் எடுத்துக் காட்டவல்ல தமிழ்ச் சான்றோரின் கூற்றும் பேகன் புகழிலிருந்து காமப் பழியைப் பிரிக்கும்' என்று துணிந்து கடிந்துரைக்கிறாள் கண்ணகி!

## நல்லூர் முல்லை இல்லத்தில் பேகனும் புலவரும்

நல்லூரில் அழகி முல்லையின் இல்லத்தில் நான்காவது மாடத்தில் பேகன் களித்துக் கிடக்கின்றான். கபிலரும் பரணரும் பேகனைத் தேடி அங்கே வருகின்றனர். இல்லத்தில் இருந்தால் புலவர் கூட்டம் அகர வரிசை போல் தொடரும் என அஞ்சியே பேகன் நாகரிகமான கணவனாகிய பேகன் வரையாது இன்று மற்றொருத்திக்கும் கணவனாகத் தன்னையே கொடுத்திருக்கின்றான் என மறைவாக மொழிகிறார் கபிலர். குலமகள் ஒருத்தி பேகனைத் தன் இருகண் வருந்திக் கிடப்பதால் அவளுக்கு அருளப் புறப்படுமாறு பரணர் பேகனை வேண்டுகிறார். அவன் அருள் வேட்கும் பெண் கண்ணகியே என்று தெளிவுறுத்துகிறார் கபிலர். கற்புடைய மனைவியின் உயிரைத் துடிக்கச் செய்வது கணவனது பரத்தையொழுக்கம் என்று பரணரும், பொருள் நீர்ப் பாய்ச்சிப் பரத்தைப் பைங்கூழ் வளர்க்கும் புன்செய்யாளனைப் புலவர் பரத்தையிற் பிரிதல் தலைவியின் ஊடலுக்கு அடிப்படையாவதாலும் புறத்துறைப் பழக்கமும் காமம் பெருகிக் கனியும் மனநிலமும் உடைய ஆடவர்க்குப் பலர் கூட்டம் இயல்பாதலாலும் தலைவன் பரத்தையுடன் கூடுவது தவறாகாது என்று வாதிடுகிறான் பேகன். பின்னர் அங்கு வந்த புலவர் அரிசில் கிழார், புணர்ச்சி இன்பம் பெருக வேண்டப்படுவதாகிய ஊடலுக்குப் பரத்தையிற் பிரிவே யன்றித் தூதிற் பிரிவும், வினைவயிற் பிரிவும் ஓதற் பிரிவும் ஆகிய எவ்வகைப் பிரிவும், பிரிந்து நீட்டிப்பும், பிரிய நினைக்கும் நினைவும் எல்லாம் காரணங்களாகும். மனைவி ஊடுதற்காகப் பரத்தையை நச்சும்படி உலகில் இல்லை! என்று கட்டுரைக்கிறார். மூவர் மொழியினையும் கேட்டுத் தெளிந்த பேகன். அறநூல் குணமே பேசும்; இலக்கியம் நல்வாழ்வு வாழ்ந்தாரையும் தீய வாழ்வு நடத்தினாரையும் பேசும் என உயர்த்துகின்றான். இலக்கியமும் தீய வாழ்வைப் பேசாதிருக்க நாட்டு மக்கள் நல்லொழுக்கத்துடன் வாழத் தக்க வகையில் வழிகாட்டுமாறு பேகனை வேண்டுகிறார் கபிலர். தன் கணவன் மற்றொருத்தியிடம் இன்பம் நுகர்வதால் ஏற்படும் பழிச்செயலைப் பார்த்துக் கொண்டிருப்பவள் பேதை என்ற அறிவும் உரிமையும் உடையவள் கண்ணகி என்று பரணர் பெருமிதத்துடன் பேசுகிறார். ஒவ்வொரு பெண்ணும் தன் கணவன் பரத்தையைத் தேடாது தடுப்பதைத் தன் உரிமையாகக் கொண்டால் ஒழுக்கக்கேடு விதைக்கும் உழவரையும் திருத்தலாம் என்று வழிமொழிகிறார். அப்போது அங்கு வந்து சேர்ந்த பெருங்குன்றூர்கிழார், குறிப்பிட்ட நேரத்தில் ஓரிடத்திற்குச் செல்லத் தேர் வேண்டும்.

அத்தேருக்குப் பேகனே பாகனாக வந்து, அவ்விடத்து அழுது கொண்டிருக்கும் கற்புடைய மனைவியின் கண்ணீரைப் பரத்தையை இனித் தீண்டாத அவன் கையால் துடைக்க வேண்டும் எனத் தொடங்க, பேணப்படாத அவள் தலை வாரிப் பூச்சூடி நுகர்தல் வேண்டும் என்று இதமாகவும் பதமாகவும் ஏனைய மூவரும் தொடுத்துக் கேட்கின்றனர். நால்வரும் நாடியதை நல்குவதாகப் பேகன் எழுகின்றான். உடனே நல்லூர் முல்லை, 'என் தாய் பரத்தை என்றாலும் யான் ஒரு தந்தைக்குப் பிறந்தவள், என்னைப் பிறப்பால் இழிவுபடுத்துதல் தமிழுக்கு முரண். யான் என் உயிர்க்கணவரையே கடவுளெனத் தொழுகிறேன். அவரை நீங்கள் நால்வரும் கூடித் தேரேற்றிச் செல்லினும் அவர் உருவம் என் உள்ளத் தேரிடத்து என்றும் ஒய்யாரமாக வீற்றிருக்கும் என்று மொழிந்து அவர் வழிகாட்டுக எனக் கூறிக் கீழே சாய்கிறாள். கண்ணீர் உகுத்தவனாக அவளைத் தூக்கி எழச் செய்யும் பேகன் அவளை நோக்கி, 'புலவர்கள் என்னைப் பிரிக்கவில்லை, அறம் என்னைப் பிரிக்கின்றது. என் மனத்தின் கலக்கம் அறிந்து உரிமையை விடுவதோடு உயிரையும் விடுவேன் என்று நீ கூறியவை கற்புடைச் சொற்கள். காதலாற் பிணிப்புண்ட நாம் இனி அன்பால் பிணிக்கப்பட்டோம். நீ உயிர் துறந்தால் நானும் கண்ணகியும் உன்னைத் தொடர்வோம். ஆறுதல் அடைந்து வாழ்க' என்று எடுத்துரைத்துப் புலவர் நால்வருடன் தேரேறி அரண்மனைக்குப் புறப்படுகின்றான்.

### பேகனும் பிறந்தநாள் பெருவிழாவும்

நாடாளும் பேகனின் பிறந்தநாள் கொண்டாட்டம் மணற்பரப்பில் பொதுக்கூட்டமாக அமைகிறது. கண்ணகியும் புலவர் பெருமக்களும் அருகிருக்க மக்களிடையே சொற்பொழிவாற்றுகிறான் பேகன். ஆண்டுதோறும் நடைபெறும் இவ்விழாவில் நாட்டு மக்கள் வாழ்வை வளர்த்திட ஏற்ற முறைகளை அறிவிப்பது மரபு. தாயாம் பெண்குலத்திற்குப் பரத்தையர் ஒரு மறுப்போல்வர்; பாலில் நஞ்சு போல்வர். பொருட்பெண்டிர் இனித் தமக்கு ஏற்ற ஆடவரை மணந்துகொள்ள வேண்டும். அதற்குத் தடை செய்வோர் உட்பகைவர் போலத் தண்டிக்கப்படுவர். பரத்தையொழுக்கம் நாட்டிற்கும் மக்கள் உடல், அறிவு, ஒழுக்கங்களுக்கும் பகை. தமிழ் மகளிர் தம் ஒழுக்கத்தைக் காத்தல் போன்று தம் கணவர் ஒழுக்கத்தையும் காக்கும் கடமை உடையவர். நாட்டில் காதலின்பம் சிறக்கவும் நோயற்ற பிள்ளைப்பேறு வாய்க்கவும் பெண்டிர் தம் உரிமை பேண வேண்டும். ஒரு மனத் துறவியர்க்கும் ஒருமைப் பெண்டிர்க்கும் பெருமை ஆடவர்க்கும் என் நாடு அரண்மனை ஆகும். தமிழகம் கல்வி, அறிவு ஆகியவற்றைக் காட்டிலும் காதல் முதலிய ஒரு மன ஒழுக்கத்திலும் வழிகாட்டியாகுக எனப் பேகன் பேசி முடித்ததும் கண்ணகி உரையாற்றுகிறாள். உடலை ஒரு பொருளாகக் கருதாத மறத்தமிழகம் உடல் விற்கும் பெண்டிர்க்கு உறைவிடம் ஆகலாகாது. புகழீட்ட விரும்பும் ஆடவர் அறிவைத் தம் அறிவிற்குள் அடக்கியாள விரும்பும் பெண்டிர் குடும்பக் கூற்று ஆவர்! கணவர் இன்பத்திலும் துன்பத்திலும் பங்கேற்கும் கற்பரசியர் தம் கணவர் அறிவு பெருகுமாறு அவர் வழி நடந்து இன்பம் திளைப்பர் என்று எடுத்தியம்புகிறாள். தொடர்ந்து பேசவந்த புலவர் குழுத் தலைவர் பரணர், பரத்தையொழுக்கம் தேவை என நினைப்பது பிழை என்பதைப் புலவர்குழு வெளியிடும் பொய்யா வாழ்வு புலப்படுத்தும். மனைவி கருவுறும் காலத்து ஆடவர் பரத்தையரை விரும்பினால் நாளடைவில் கழிகாமுகராகி



இளமையில் முதுமையுறுவர். மனைவி மகப்பெறும் காலம் ஆடவன் உடலுரமும் நெஞ்சுரமும் பெறுவதற்கு வாய்த்த காலம் ஆகும். பெற்றோர் காதலன் காதலியாவார் மனப்பொருத்தம் அறிந்து மணம் செய்தல் வேண்டும். உள்ளம் ஒன்றிய மணம் நடக்க ஏற்பாடானால் அஃறிணை ஒழுக்கத்திற்கு இடமிராது. இருமன ஒழுக்கம் அழியும் தொன்மைத் தமிழகத்து ஒரு மனத் துறவிகள் பெருகுவர் என்று அறிவுறுத்துகிறார். மக்கள் சார்பில் நன்றி நவில வந்த பேரிளம்பெண், மயிலுக்கு வாழ்வளித்த நம் அரச வள்ளல் இன்று மக்கள் குலத்தின் பெருந்தொண்டர் ஆகிறார். படை திரட்டவும் வரி விதிக்கவும் அறிஞர் ஆற்றல் அனைத்தையும் அவ்வினைக்கே பயன்படுத்தலும் பல அரசுகளின் கொள்கையாக இருந்து வருகிறது. நம் அரசர் ஏனை அரசர்க்கு வழிகாட்டியாகிறார். மக்கள், இல்லறத்தை நல்லறமாக்குதல், தொழிலில்லா மனிதனும் பள்ளியில்லா ஊரும் இல்லையாகச் செய்தல், பிள்ளைப் பேறு இல்லாதவர்க்கு ஆறுதல் அளித்தல், மக்களைத் தொண்டாற்றத் தூண்டுதல் ஆகியவற்றை ஒரு சேரச் செய்வதே நம் அரசு என்று பாராட்டிப் பேசினாள்.

**நிறைவுரை**

சங்க இலக்கிய விளக்கமாகவும் பரத்தை யொழுக்கத்தை விலக்கும் கொள்கை முழக்கமாகவும் இந்நாடகம் இலங்குகின்றது. புலவர் குழுவை அரசுக்கு நெஞ்சமாக நினைந்து முனைந்து செயலாற்றும் பழந்தமிழக ஆட்சி மாட்சி மிக்கது. வாழ்வைச் சீரமைக்கும் ஓரங்க நாடகமாகவும் பெண்மைக்குப் பெருமை நேர்க்கும் சீர்த்தியுடையதாகவும் காட்சிகள் அமைந்துள்ளன. மூதறிஞர் வ.சுப.மாணிக்கம் அவர்கள் நாடகத்துறையிலும் முத்திரை பதிக்கும் வகையில், மனைவியின் உரிமை என்னும் இந்நாடக நூலைக் கொள்கைப் பிடிப்போடும் இளமைத் துடிப்போடும் எழுதியுள்ளார். வள்ளுவ உள்ளம் கொண்ட மூதறிஞர் வ.சுப.மாணிக்கம் அவர்கள் பரத்தமை உறவை அறவே வெறுத்து ஒதுக்க அனைவருக்கும் வழிகாட்டியுள்ளார்.



## மாணிக்கச் சிந்தனைகள்

**காதல் என்பது இன்பத்துட் பேரின்பம்; உணர்ச்சியுள் பேருணர்ச்சி; ஆற்றலுள் பேராற்றல்; அடிப்படையுட் பேரடிப்படை; உரிமையுள் எல்லார்க்கும் உரியது; நட்பினுள் இருபாலரையும் இணைப்பது; கல்வியுட் கசடறக் கற்க வேண்டுவது; நாணினுள் நனி நாணுடையது; ஒழுக்கத்துள் விழுமியது.**

- தமிழ்க்காதல்.

# தமிழ் இலக்கண ஆய்வில் வ.சுப.மாணிக்கனாரின் பங்களிப்பு

முன்னைப் பேராசிரியர் முனைவர் **அ.பிச்சை**
தமிழ்த்துறை, காந்திகிராமக் கிராமியப் பல்கலைக்கழகம், காந்திகிராமம்.



## முன்னுரை

1917இல் மேலைச்சிவபுரியில் பிறந்த வ.சுப. மாணிக்கனார் பத்து வயதில் பர்மாவில் வட்டிக் கடையில் பணிபுரியச் சென்றார். 4/5 ஆண்டுகள் வேலை செய்த பொழுது முதலாளி கூறியபடி பொய்கூற விரும்பாமல், தமிழகத்திற்குத் திரும்பினார். 'பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற செய்யாமை செய்யாமை நன்று' என்னும் திருவள்ளுவரின் கொள்கையைப் பின்பற்றத் தொடங்கினார். தமிழ் வித்துவான் படிப்பை முடித்து MOL, M.A. பட்டங்களைத் தொடர்ந்து கற்றார் - பெற்றார். தமிழ் விரிவுரையாளர் பணியில் சேர்ந்து பின்பு பி.எச்.டி. பட்டம் பெற்று, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகி, காரைக்குடி அழகப்பா கல்லூரியில் முதல்வராகி, பின்பு மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகத் தம் பணியை 60 ஆவது அகவையில் பணிநிறைவு செய்தார். தமிழ்ப் பல்கலைக் கழக உருவாக்கத்திலும் இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றச் செயல்பாட்டிலும் முக்கியப்பங்காற்றியவர். திரு.வி.க., மு.வ., தெ.பொ.மீ., ஆகிய அறிஞர்களோடு ஒப்பிடத்தக்க அறிஞர்களில் ஒருவரான வ.சுப. மாணிக்கனாரின் இலக்கண ஆய்வை நினைவு கூர்வோம்.

## சிறந்தது பயிற்றல்

காமம் சான்ற கடைக்கோட்காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே

*சிறந்தது பயிற்றல் - சிறந்ததாகிய செம்பொருளை இடைவிடாது நினைத்தல்*
*... ச.வே.சு., தொல்காப்பியம், தெளிவுரை. இப.460, நூ,1138*

சிறந்தது என்பது அருமையாதலின் அறம் ஒன்றையே குறிக்கும். தலைவனும் தலைவியும் உடனிருந்து செய்யக்கூடிய ஓரறம் விருந்தோம்புவதேயாம். "விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை" என்ற சிலப்பதிகாரத்தாலும், "விருந்து கண்டபோது என்னுறுமோ என விம்மும்" என்ற இராமாயணத்தாலும், பெண் தனிமையும், ஆண் தனிமையும் விருந்தாற்ற இயலா என்பது பெறப்படும் ஆதலின் 'கிழவனும் கிழத்தியும் சிறந்தது பயிற்றல்' என்ற சூழ்நிலையில் சிறந்தது என்ற சொல் குறிப்பது விருந்தோம்பல் என்ற அறமே என்று துணியத்தகும். பயிற்றல் - பலகால் செய்தல், இடைவிடாது செய்தல், "பன்னாள் வந்து பணிமொழிபயிற்றி" (குறுந்.



*176), ''கரப்பில் உள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி'' (புறம். 34) என்ற மேற்கோள்களில் இப்பொருளுண்மையைக் காணலாம். சிறந்தது பயிற்றல் என்னும் தொல்காப்பியக் கருத்து திருக்குறள் இல்லறவியல் விருந்தோம்பல் அதிகாரத்து வளம் பெறுகின்றது. 'வருவிருந்து வைகலும் ஓம்புவான்' எனவும், 'வருவிருந்து பார்த்திருப்பான்' எனலும் வருங் குறள்கள் தொல்காப்பியத்தின் உரைகளாகப் படவில்லையா?*

## மருளறு சிறப்புவமம்

*பொருள் என்பது புலவன் பாடற்பொருளாகச் சொல்ல நினைக்கும் கருத்து. உவமை என்பது அப்பாடற் செய்தியை விளக்க மேற்கொள்ளும் கருத்து.சொல்ல நினைக்கும் முதன்மைப்பொருள் உவமை வாய்ப்பாடாகவும், விளக்குவான் மேற்கொள்ளும் கருத்து உவமேய வாய்ப்பாடாகவும் வாய்ப்பாடுகள் மாறி வருவதுண்டு.*

இழந்தொறுஉங் காதலிக்குஞ் சூதேபோல் துன்பம்
உழத்தொறுஉங் காதற் றுயிர் (குறள் 940)

*இது திருக்குறட் பொருட்பாவில் சூது என்னும் அதிகாரத்து வரும் குறள். சூதாடி கைப்பொருளை இழக்க சூதின் மேல் மேலும் ஆசை கொள்வது போன்று உயிர் துன்பத்தில் உழல உழல உடல் மேல் மேலும் பற்றுக் கொள்ளும் என்பது குறளின் கருத்து. அதிகாரப் பொருளான சூதினையே திருவள்ளுவர் இக்குறளில் உவமையாகச் செய்துள்ளார். அதிகாரத்திற்கு ஏற்ப இதனைப் பொருள் என்று கொள்வதா? சூதேபோல் என்ற வாய்ப்பாட்டிற்குத் தக்க உவமை என்று கோருவதா?*

பொருளே உவமஞ் செய்தனர் மொழியினும்
மருளது சிறப்பினஃ துவமம் ஆகும்

*என்ற நூற்பாவின்படி வாய்ப்பாடு உவமமாக இருந்தலால், மருளறு சிறப்புவமம் எனக் கொள்ள வேண்டும் என்பது தொல்காப்பியக் கோளாகும். சுட்டிக் கூறாவுவமம், தடுமாறு உவமம்போல, பொருளுவமத்தை மருளறு சிறப்புவமம் எனக் குறியீடு செய்யக் காண்கின்றோம். "'உயிரினது அறியாமை கூறுவார் போன்று சூதினது அறியாமை கூறுதல் கருத்தாகலின் அதனை யாப்புறுத்தற் பொருட்டு உவமமாக்கிக் கூறினார்' என்ற பரிமேலழகர் விளக்கம் என் புத்துரைக்குத் துணையாகும். மருளறு சிறப்பு எனத் தொல்லாசிரியர் மொழிந்த உவமையை மருளுடையதுபோல விபரீதவுவமை எனத் தண்டியாசிரியர் குறியிடுவது எவ்வளவு முரண்!" என்கிறார்.*

## பாவின் இனங்களா?

*எல்லாம் கொச்சகப்பா என்ற பேராசிரியர் நச்சினார்க்கினியர் யாப்புக் கோட்பாட்டினை உடன்படுவதற்கில்லை எனினும், யாப்பு நூலோர் இன்ன பாவின் இன்ன இனம் என்று பாகுபடுத்திப் புகுத்திய நெறி பிழையானது என்ற அவர் தம் கருத்து எனக்கு உடன்பாடே. தாழிசை, துறை, விருத்தம் என்ற இனங்களின் தனித்தன்மை என்ன? வெண்டாழிசை, ஆசிரியத்தாழிசை, கலித்தாழிசை, வஞ்சித்தாழிசை என்று சொல்லும்போது பாவின்*

பொதுப் பண்பும் தாழிசையின் சிறப்புப் பண்பும் இனப் பாடல்களில் அமைய வேண்டும் அல்லவா? இவ்வாறே துறையிலும் விருத்தத்திலும் இருக்க வேண்டும் அல்லவா? ஒன்றை இனம் என்று குறிப்பிடும்போது பிறிதொன்றிற் கில்லாத் தனித்தன்மை அதனிடத்து வேண்டுமே. முதலெழுத்து, சார்பெழுத்து என்பது போலப் பாவும் பாவினமும் என்று இருவகைப்படுத்துவதை நான் அத்துணை மறுக்க விரும்பவில்லை. அப்பாகுபாடு தெளிவான வரையறையுடையதாக இருக்க வேண்டும் என்பதே என் நோக்கம். ஒரு வரையறை கண்டுபிடித்து நால்வகை இனங்களையும் மாற்றி ஒழுங்குபடுத்த முடியுமா? வரையறை காண முடியாவிடின், பாவின் எண்ணிக்கையைக் கூட்டிப் புதுக்குறியீடுகள் கொடுக்கலாமா? என்று நாம் சிந்திக்க வேண்டும். இச்சிந்தனை பழைமையை ஒழுங்குபடுத்துவதோடு புதுவகை யாப்புப் படைக்கும் துண்டுகோலாகவும் இருக்கும் என்று எண்ணுகின்றேன்.

## தமிழில் வினைச்சொற்கள்

இந்நூல், சென்னைப் பல்கலைக்கழக MOL பட்டத்திற்காக வழங்கப்பட்ட ஆய்வேடாகும். இதனை 24 ஆண்டுகள் கழித்து அண்ணாமலைப் பல்கலைக்கழகம் 1972 இல் வெளியிட்டுள்ளது (1948-5). ஆஸ்திரேலியாவின் தேசிய நூலகத்தில் இடம்பெற்ற பெருமை உடையது. இவருக்கு ஆய்வுநெறியாளராக இருந்தவர், தமிழில் முதன்முதலில் முனைவர் பட்டம் பெற்ற பேராசிரியர் அ.சிதம்பரநாதசெட்டியார் அவர்கள். இந்நூலின் தொடக்கத்தில் 38 கண்டுபிடிப்புகளாக இலக்கணக் கருத்துக்களைத் தொகுத்துத் தந்துள்ளார். இந்த நூல் 15 இயல்கள், ஒரு துணைநூற்பட்டியல், இலக்கணக் கலைச்சொற் தொகுப்பைக் கொண்டுள்ளது. இந்நூலின் அணிந்துரையில் உரிச்சொல் பற்றிய வ.சுப.மாணிக்கனாரின் கருத்தைப் பேரா.அகத்தியலிங்கனார் பாராட்டியுள்ளார். உரிச்சொல் என்பது பெயர் / வினைச்சொல்லின் வேர்ச்சொல் அல்ல. 'குறைசொற்கிளவி' என்று குறிப்பிடுகின்றார். (cf. தெய்வச்சிலையார் தான் வேர்ச்சொல் / தாதுச்சொல் எனக் குறிப்பிடுவர்.)

தன்வினை, பிறவினை என்ற தமிழ் வினைச்சொல்லுக்கு இணையாகச் செயப்படுபொருள் குன்றிய வினை (Intransitive) செயப்படுபொருள் குன்றாவினை (Transitive), காரண வினை (Causative) ஆகியவற்றைக் கூற முடியாது. ஏனென்றால் தன்வினை என்பதில் செ.பொ. குன்றிய வினையும் உண்டு. பிறவினை எப்போதும் செயப்படுபொருள் குன்றா வினையாக இருக்கும். இந்த மொழிநுட்பத்தை ஆங்கில இலக்கணத்தோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார். வினை சுட்டுகாலம் பற்றிய பகுதியும், அர்த்தங்களின் பொருள் மாற்றம் பற்றியும் கூறிய கருத்துக்கள் பாராட்டத்தக்கவை என்று மொழிப்புலமை வாய்ந்த அகத்தியலிங்கனார் பாராட்டியுள்ளார். சொல்வகைப்பாடு (முதல் இயல்) வினைப்பகுதி (6 இயல்கள்) தன்வினை - பிறவினை (2 இயல்கள்) காலம் (3 இயல்கள்) எதிர்மறை (ஓர் இயல்) நிகழ்காலம் (ஓரியல்).

வினைப்பகுதியே எதிர்காலத்தைக் காட்டும் தன்மை உடையது (ஏவல் வினையியல் வரும் வினைப்பகுதிகள் இப்பண்பினை உடையவை). பிறவினையில் வரும் பி, வி (படிப்பித்தான், செய்வித்தான்) என்பதில் ப்/வ் தொழிற்பெயரின் பகுதிகள் என்றும், 'இ' துணைவினை என்றும், எதிர்மறையில் 'ஆ' என்னும் உருபும் படர்க்கை விகுதியின் ஒரு சொற்கூறு என்றும் வ.சுப. மாணிக்கனார் முடிவுரையில் கூறியுள்ளார். மேலும், ஆநின்று, கின்று, கிறு ஆகிய



நிகழ்கால இடைநிலையைப் பழந்தமிழர் மூவிடங்களிலும் பயன்படுத்தியுள்ளனர் என்கிறார். இவர் திருக்குறளைச் சங்கப்பாடல்களுக்குப் பிற்பட்டதாகக் கருதுவர். தொல்காப்பிய நூற்பாக்களுக்கு, (512, 553, 682, 897, 932, 933, 934) புதிய விளக்கங்கள் கண்டுள்ளார். உரையாசிரியர்களின் கருத்துக்களைக் (இளம்பூரணர், சேனாவரையர், சங்கரநமச்சிவாயர், சிவஞானமுனிவர்). கண்மூடித்தனமாகவோ மரியாதை நிமித்தமாகவோ ஏற்றுக்கொள்ளாமல் தனது சிந்தனைக் கட்டளைக் கல்லில் உரசிப்பார்த்துத் துணிவாக மாறியுள்ளார். திராவிட இலக்கணம் எழுதிய கால்டுவெல்லின் கருத்துக்களையும் மறுத்துக் கூறியுள்ளார்.

ஆகு, போகு, வரு, தரு, நோ ஆகியவை மூல வேர்ச்சொற்களாகும் (Original Root) ‘போகு’ என்ற சொல் சங்ககாலத்திற்குப் பின் அதிகமாக ‘செல்’ என்னும் சொல்லைக் காட்டிலும் அதிகமாகப் பயன்பட்டது. வினைத் தொகையில் வரும் வினைப்பகுதிகள் இறப்பு, நிகழ்வு ஆகிய இரு காலத்தையும் காட்டக்கூடியவை. எனவே, கால இடைநிலைகள் இல்லாமலே தமிழில் வினைப்பகுதிகள் காலங்காட்டக்கூடியவை. வினைப்பகுதி எதிர்காலத்தை, (ஏவல் வினையில்) காட்டக்கூடியது. எனவே, இறந்த கால இடைநிலை முதலிலும், நிகழ்கால இடைநிலை அடுத்தும் வெளிப்படையாகத் தோன்றியிருக்க வேண்டும். செ. சிவன், ஆன், நூழ், என, சொலி, எய், பழிச்சு போன்ற சொற்கள் வழக்கிறந்து விட்டன. ‘ச’ என்பது பழஞ்சொற்களிலிருந்து உருவாகியிருக்க வேண்டும். இற, சூழ், தூங்கு போன்ற சொற்களின் பொருளும் சங்க காலத்திற்குப் பின் மாறியிருக்கின்றன. தொழிற்பெயரோடு ‘அது’ என்னும் ஒட்டினைச் சேர்க்கும்போது, படர்க்கை பொதுப்பால் ஒருமையில் எதிர்காலம் தோன்றும் என்று டாக்டர் கால்டுவெல்லின் கருத்துக்கு எதிராகக் குறிப்பிட்டுள்ளார். மேலும் மலையாளத்தைப் போலத் தமிழிலும் எதிர்மறையில் முக்காலமும் சுட்டப்படும் என்று அவரின் கருத்துக்கு மறுப்புத் தெரிவித்துள்ளார்.

## பிற கட்டுரைகள்

1967 - A Phonological study in Tolkappiyam - IATR First Conference Volume.

1972 - An Introduction to the study of Tolkappiyam - Journal of IITS, Chennai

தமிழில் இலக்கண ஒருமைப்பாடு, தமிழகப்புலவர் குழு ஆய்வுநூல், திருச்சி.

## முடிவுரை

தமிழில் வினைச்சொற்கள் என்னும் நூலைத் தவிர, கட்டுரைகள் பல எழுதியுள்ளார். திருவள்ளுவரின் சான்றாண்மை இலக்கணத்திற்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்தவர். பொய்சொல்லா வ.சுப. மாணிக்கனார் என்னும் இணையதளத்தில் அவரது பண்புகள் பின்வருமாறு தொகுத்துத் தரப்பட்டுள்ளன. எளிய வாழ்வு, அளவான பேச்சு, எந்நிலையிலும் எதிர்கால நம்பிக்கை, பதவிகளைத் தொண்டாக மதித்தல், தன்னைப் பற்றிய திருத்தமான சிந்தனைகள், வாழ்க்கைத் திட்டங்கள், பெரியவர்களின் வரலாறுகளைப் படித்தல், சோர்வுக்கு இடங்கொடாத ஊக்கங்கள், பகட்டின்றித் தூய எண்ணத்தால் இறைவனை வழிபடல் ஆகிய அவர்தம் அரிய பண்புகள் அறிந்து பின்பற்றத்தக்கவை.

# தமிழறிஞர் வ.சுப.மாணிக்கனாரின் உரைநோக்கும் எதிர்கால ஆய்வுத் தேவையும்

பேராசிரியர் முனைவர் **பெ.மாதையன்**
முன்னைத் தமிழ்த்துறைத்தலைவர், பெரியார் பல்கலைக்கழகம்,
இணைப்பதிப்பாசிரியர், அகரமுதலித் திட்டம், சென்னைப் பல்கலைக்கழகம்



*தமிழறிஞர் வ.சுப. மாணிக்கனாரின் 'சிந்தனைக் களங்கள்' (1974 முதற்பதிப்பு 2009ஆம் ஆண்டுப் பதிப்பு. மீனாகோபால் பதிப்பகம். சென்னை) எனும் நூல் தொல்காப்பியம் தொடங்கி இக்கால உரைநடை வரையிலானவை தொடர்பான ஆய்வுச் சிந்தனைகளின் தொகுதியாக மட்டுமல்ல தமிழியல் ஆய்வுக்கான ஆய்வியல் நெறிமுறைகளை முன்வைக்கும் நூலாகவும் அமைந்துள்ளது. தமிழியல் ஆய்வுகளை மேற்கொள்வாரைத் தூண்டிப் 'புதியன காணுவதே ஆராய்ச்சி' என்பதை அவர்களுக்கு உணர்த்தி அத்தகைய ஆய்வுகளுக்கான வழிகாட்டுதல்களை முன்வைப்பதாக அமைந்துள்ளது இந்நூல். இந்நிலையில் முன்னாய்வுகளின் ஆய்வுப்போக்குகளை இனங்காண்பது என்பது, தமிழியல் குறித்த முன்னாய்வுகளை உரிய வழியில் இனங்கண்டு தற்சிந்தனைகளுடன் எதிர்கால ஆய்வுகளை மேற்கொள்ள வழிவகுக்கும் என்ற அடிப்படையில் இந்த ஆய்வுரை கட்டமைக்கப்பட்டுள்ளது. இந்த இலக்கை நோக்கமாகக் கொண்டு இந்த நூலில் இடம்பெற்றுள்ள உரையாசிரியர் உரைமரபுகள் தொடர்பான ஆய்வுகளை அடிப்படையாகக் கொண்டு வ.சுப. மாணிக்கனார்தம் உரையியல் ஆய்வுமுறையை முன்வைக்கின்றது இந்த ஆய்வுரை.*

## உரைகள் குறித்த இருவகை நோக்கு

*இன்றைய சூழலில் உரைகளை எல்லாம் புறந்தள்ளிவிட்டுத் தொல்காப்பியத்தைப் படிக்கவும் ஆராயவும் வேண்டும். மாணவர்களிடமும் இந்த நோக்கு வளர்த்தெடுக்கப்பட வேண்டும் எனும் நிலையில் உரைகளை முற்றிலுமாகப் புறந்தள்ளும் போக்கு காணப் படுகின்றது. இந்நிலையில் மரபான தமிழறிஞர்கள் உரைகளைப் புறந்தள்ளிவிட்டு ஆய்வுகளை மேற்கொண்டதில்லை; மேற்கொள்வதுமில்லை. அவற்றை வேண்டும் இடங்களில் முறையாகப் பின்பற்றிக் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டும் நடுநிலை ஆய்வுப்போக்கை அவர்கள் கைக்கொண்டுள்ளனர். இந்த அணுகுமுறையை முறையாகக் கையாண்ட வ.சுப. மாணிக்கனாரிடம் உரைகள் குறித்து உடன்பாடு, எதிர்மறை என்ற நிலைகளில் ஏற்பும் மேலாய்வும் மேலாய்வுத் தேவையும் என்ற நிலைகளில் இருவகையான நோக்குகள் உள்ளன.*

## மூலநூலினை ஒத்தவை உரைகள்

*தொல்காப்பியம் என்ன முன்னூல்கள் பல இடைக்காலத்து அழியாது இன்றுவரை நின்றுவரக் காரணம் உரைத் தொடர்பேயாம்.*

தமிழ் வரலாற்றில் மூல வரலாறு உரை வரலாறு என இரு கூறுகள் உள. பின்னது முன்னதற்கு நிகரானது; தாழ்ந்ததன்று. மூலாசிரியர்கள் ஒப்ப உரையாசிரியர்களையும் போற்றுவது



தமிழ்மரபு. இடைக்காலம் என்பது உரைக்காலம் அன்று; தொன்னூல்களை உரையென்னும் கயிற்றால் பிணித்த உயிர்க்காலம் *(2015:13)*

*என உரைகளை மூலநூல்களோடு ஒப்பவைத்துக் கருதியுள்ளார்.இத்துடன் உரைகளில் காணும் குறைகளைச் சுட்டிக்காட்டவும் இவர் தவறவில்லை.*

### உரை வழு

மேற்படி நோக்கிற்கு ஊறு விளைவிக்காத வகையில் உரைநோக்கு தொடர்பான எதிர்முகச் சிந்தனையும் இவரிடம் உள்ளது. நூலாசிரியரின் கருத்தை வெளிப்படுத்துவதே உரையின் ஒழுக்கம். தன் கருத்து எதுவாக இருந்தாலும் இன்னொருவர் எழுதிய நூலில் அதனை ஏற்றிக் கூறலாகாது. அப்படிச் செய்வது உரை வழுவாகும் *(மேலது. 251)*

*எனும் கருத்தை முன்வைத்து மூலநூலைப் பாதிக்கும் இப்போக்கை 'உரைவழு' என்கிறார் வ.சுப. மாணிக்கனார். இத்துடன் உரைஞர்கள் பொருள்காண வேண்டிய முறையையும், ஒன்றன் பொருளைக் காண வேண்டுவார் பல நிலையையும் நாடிப் பொருளைத் தெளிய வேண்டும். தவறான பிரிவானால் பொருள் மறையும்; நடையோட்டத்தைச் செவ்வன் கொள்ளாமையால் பொருள் மறையும்; இது நயம். இதுதான் கருத்தாதல் வேண்டும் என முன்னரே துணிந்த ஆசைத் திரையால் பொருள் மூடி மறையும். இத் தவறுகளுக்கு இடங்கொடாது பார்ப்பதே உரைநெறி (மேலது. 255)எனக் குறிப்பிட்டு இதுவே பொருள்காண்பதற்கான நல்ல உரைமரபு என்கிறார். மூலநூல் பற்றிய புரிதல் சரியானதாக இருக்க வேண்டிய அவசியத்தை வலியுறுத்தியுள்ளார்.*

### உரைநோக்கிற்கான அறிவுக் கூறுகள்

மக்கள் வாழ்வின் பல்வேறு கூறுகளையும் உள்ளடக்கியது இலக்கியம் என்பதால் உரைகாண்பவர் பல்துறை அறிவும் உடையவராக இருக்க வேண்டிய தேவையை வலியுறுத்தும் வ.சுப. மாணிக்கனார், ஒரு நூலின் கருத்தையோ பாட்டின் பொருளையோ காண்பதற்குப் பல அறிவுக் கூறுகள் வேண்டும். இது இன்ன காலத்துத் தோன்றிய நூல் என நூல் தோன்றிய காலவறிவும், இக்காலத்து இச்சொல்லுக்கு இப்பொருள் என்ற சொல்லறிவும், இன்ன காலத்து இருந்த பழக்கவழக்கங்கள் இவை என்ற சமுதாய அறிவும், இத்தொடர் ஓடிக் கிடக்கும் முறை இது என்ற நடையறிவும், நாட்டின் வரலாற்றறிவும் இன்ன பிறவும் இருந்தால்தான் உரையெழுதும்போது நினைவுக்கு வந்தால்தான் பொருளை முரணின்றிக் காண முடியும் *(மேலது. 251)*

*எனக் கூறி உரைகளை நோக்குவதற்குரிய அறிவுத்தேவைகளை முன்மொழிந்துள்ளார். இந்த இலக்கே இவர்தம் உரை நோக்கிற்கான, உரைகள் குறித்த மறு ஆய்வுக்கான பாதையைத் திறந்துவைத்துள்ளது.*

### உரைநோக்கும் உரைகொள் நெறிமுறைகளும்

*'சொல்லியமுறை,' 'வழுவமைதியா? மயக்கமா?' எனும் இரண்டு ஆய்வுரைகளின் மூலமாக இவர் முன்வைத்துள்ள உரை நோக்குகளை இனங்காணலாம்.*

## சொல்லியமுறை

'முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' (950) எனும் நூற்பாவில் வரும், 'சொல்லிய முறை' என்பதற்கான உரையாசிரியர் உரைப்போக்குகளை எடுத்துக்காட்டி மறுப்பதோடு அதற்கான பொருளை வரையறுப்பதற்கான நெறிமுறையையும் முறைப்படுத்திக் காட்டியுள்ளார் வ.சுப. மாணிக்கனார்.

1. காடுறை உலகம் முல்லை என்றாற் போன்று நிரல்நிறையாக அவை பெயர் பெறுதல். 2. சொல்லவும் படுமே என்ற எதிர்மறைஉம்மையால் முல்லை முதலானவை காடு மலை நாடு என்றாற் போலவும் குறிப்பிடப்பெறும் எனல். 3. முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்ற வரிசைமுறையால் அன்றிப் பிற வரிசைமுறைகளிலும் சொல்லுதல் எனும் மூன்று கருத்துகள் உரைகளில் நிலவுவதைக் காட்டி இவற்றில் 1.முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்ற குறியீடுகளைப் பெறுதல். 2. முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்ற வரிசைமுறைகளைப் பெறுதல் என்ற இரண்டு கருத்துகள் நிலவுவதைக் காட்டிக் குறியீட்டு நெறிமுறையே இந்நூற்பா தரும் கருத்து என்பதை நிலைநாட்டியுள்ளார்.

## வரிசைமுறை மறுப்பு

திணைகளுக்குப் பொழுது கூறுகையில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்ற வரிசைமுறையும் உரிப்பொருள் கூறுகையில் குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்ற வரிசைமுறையும் புறத்திணைகளைக் குறிப்பிடுகையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற வரிசைமுறையும் தொல்காப்பியரால் பின்பற்றப் பட்டுள்ளது. இத்துடன் 'கைக்கிளை முதலாப் பெருந்திணை' என அகத்திணையியல் முதல் நூற்பாவில் பின்பற்றிய வைப்புமுறை புறத்திணையியலில் பெருந்திணை, கைக்கிளை என மாற்றிக் கூறப்பட்டுள்ளது. இந்த வகையில் தொல்காப்பியத்திலேயே இவ்வரிசைமுறை மாறிக்கிடப்பதால் சொல்லியமுறை' என்பது வரிசைமுறை அல்ல என்கிறார். இந்த அடிப்படையில்.

> தாம் சொன்ன முல்லை குறிஞ்சி நெய்தல் என்ற வரிசையைத் தொல்காப்பியனாரும் பின்பற்றவில்லை; அவருக்குப்பின் வந்த சான்றோர்களும் பின்பற்றவில்லை என்று குற்றம் அடுக்கிக்கொண்டு போவதைக் காட்டிலும் தொல்காப்பியர் வரிசைமுறை சொல்லவே இல்லையே; சொல்லாததைச் சொன்னதாகச் 'சொல்லியமுறை' என்ற தொடருக்கு உரை கண்டதுதான் தவறு என்று முடிப்பதே பொருந்தும் என்பது என் கருத்து (மேலது. 39)

எனும் முடிவுக்கு வந்தார்.

## குறியீட்டுக் கருத்து ஏற்பு

பொதுவாகத் தொல்காப்பிய உருவாக்கம் 'பெயரீடு' என்பதை முக்கிய இலக்கண உருவாக்கநெறியாகக் கொண்டுள்ளது. உயிர்மயங்கியல். புள்ளிமயங்கியல், புணரியல், தொகைமரபு, அகத்திணையியல், புறத்திணையியல், பொருளியல் என இயல்களுக்குப் பெயரீடு தந்ததோடு பெயரெஞ்சுகிளவி, வினையெஞ்சுகிளவி, குற்றியலிகரம், குற்றியலுகரம்,



*முப்பாற்புள்ளி, உடம்படுமெய், உரிச்சொற்கிளவி, இடைச்சொற்கிளவி, மெய்மயங்கு. உடனிலை என்றாற் போன்று தான் கையாண்டுள்ள கருவிமொழியில்* (Mela languagge) *கலைச்சொற்களையும் ஆட்சிப்படுத்திக்கொண்டு இலக்கணத்தை வரைந்துள்ளார். இந்நிலையில் பொருளதிகாரத்தில் பரவலான நிலையில் கலைச்சொற்கள் தொல்காப்பியரால் கையாளப்பட்டுள்ளன. இந்த அடிப்படையில் திணைகளுக்குப் பெயரீடு தருவதும் அவர்தம் இலக்கண நெறியாக அமைந்துள்ளது. இந்த நெறியையே வ.சுப. மாணிக்கனார் திணைக் குறியீட்டுமுறை என்கிறார்.*

> மேல் மறுத்தபடி திணை வரிசையன்று. குறியீட்டுவரிசை எனக் கொள்ளவேண்டும். நூற்பாவில் காடுறையுலகம் முதலாக ஒரு நான்கு முன்னர்க் கூறப்படுகின்றன. முல்லை முதலாக ஒரு நான்கு பின்னர்க் கூறப்படுகின்றன. இவற்றைக் காடுறையுலகம் முல்லையென, மைவரையுலகம் குறிஞ்சியென, தீம்புனல் உலகம் மருதமென, பெருமணல் உலகம் நெய்தல் என நிரல்நிறை முறையால் பொருள்கூட்டிக் கொள்ள வேண்டும். இதனையே முறையென்றார். *(மேலது. 42,43)*

*எனக் கூறி 'முறை என்று மேலே சொன்ன வரிசைமுறைக்குப் பின்னர் குறியீட்டுச் சொற்களைக் காட்டுவதே வரிசைமுறை என்கிறார். மேலும் 'சொல்லிய' எனும் சொல் தொல்காப்பியத்தில் 'மேலே சொல்லியது' என்ற பொருளிலேயே ஆளப்பட்டிருப்பதை, 'முல்லை முதலாச் சொல்லிய முறையாற்' (973) 'சொல்லிய அல்ல பிறவும்' (658) 'சொல்லிய தொடை' (1358) எனும் நூற்பாக்களைச் சான்றுகாட்டி நிறுவியுள்ளார்.*

*'சொல்லவும் படுமே' என்ற தொடரில் வரும் 'உம்' என்பதற்கான பொருளை வரையறுப்பதன் வழியும் மேற்கருத்தை நிறுவிக்காட்டியுள்ளார். இது உரையாசிரியர்கள் எல்லோரும் கருதுவதைப் போல 'எதிர்மறையும்மை' அன்று என்கிறார். 'முல்லை குறிஞ்சீ என்ற குறியீட்டிலேயே திணைகளைக் குறிப்பிட வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. இவற்றைக் காடு நாடு மலை கடல் என்பதே பெருவழக்கு' எனும் இளம்பூரணர் கருத்தை எடுத்துக்காட்டி முல்லையின் முதல் என்ன? கரு என்ன? உரி என்ன? எனக் கேட்பதே முறை. இவ்வாறன்றிக் காட்டின் முதல் என்ன? காட்டின் கரு என்ன? என்றாற் போன்று கேட்பது முறையல்ல என்கிறார். திணைக் குறியீடுகளைக் குறிப்பிட்ட தொல்காப்பியர் பின்னர், 'காரும் மாலையும் முல்லை, குறிஞ்சி; கூதிர் யாமம் என்மனார் புலவர்' என்றாற் போன்று அவர்தம் இலக்கணக் குறியீட்டு முறைக்கு உட்பட்டே கலைச்சொல் ஆட்சிகளைக் கையாண்டுள்ளார் என்றும் கருத்துரைத்துள்ளார்.*

> அப்படியானால் காரும் மாலையும் காடு என்று கூறுதல் பொருந்துமா? கூதிர் யாமம் மலை என்று கூறுதல் பொருந்துமா? அங்ஙனம் கொண்டால் திணைக்குப் பொழுது என்று ஆகாமல் நிலத்துக்குப் பொழுது சொல்லினார் என ஆகிவிடும். மேலும் நிலமும் பொழுதும் என்ற இரண்டுமே முதலின் ஒத்த வகைகளாக உள்ள நிலையில் நிலத்துக்குள் காலத்தையடக்கினார் என முரணாகவும் முடியும் *(மேலது. 43, 44)*

*எனக் கூறி இளம்பூரணர் போன்றோர் கருத்து தொல்காப்பியத் திணைக்கோட்பாட்டிற்கு*

*முரணாக அமையும் என்பதைக் காட்டி, 'முல்லை முதலான குறியீடுகள் ஒருதலையாகக் கடைப்பிடிக்கத்தக்கவை' என்கிறார். மேலும் இந்நூற்பாவில் 'உலகமும்' என்பதில் வரும் உம்மை குறித்த கருத்து விளக்கத்தில்.*

> 'உலகமும்' என வருகின்ற நான்கும் எண்ணும்மைகள் அல்லவே அல்ல; எதிரது தழீஇய எச்சவும்மைகள். காடுறையுலகமும் முல்லை, ஏனைக் காலமும் கருவும் உரியும் முல்லை என்றின்னவையும் முல்லையாம் என்று கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். காரும் மாலையும் இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லையென்றாங்கு ஏனைப் பொருள்களும் இதனால் குறியீடு பெறுகின்றன *(மேலது 44)*

*எனக் கூறி இது 'எதிரது தழீய எச்சஉம்மை' எனும் இவர் 'சொல்லவும் படுமே' என்பதில் உள்ள உம்மை 'சிறப்பும்மை' அல்ல என்கிறார். இதற்குச் சான்றாகப் 'புணர்ந்த வகையாற் புணர்க்கவும் பெறுமே' (1147). 'பல்வகை யானும் படைக்கவும் பெறுமே' (1182) என்றாற் போன்று பிற நூற்பாக்களில் தொல்காப்பியர் கையாண்ட உம்மைகளையும் பொருத்திக் காட்டி விளக்கியுள்ளார்.*

*குறியீட்டுச்சொற்கள் எனக் கூறப்பெறும், தொல்காப்பியக் கலைச்சொற்களின் ஆட்சி களைப் புரிந்துகொள்ளல். வரிசைமுறையைத் தம் இலக்கணத்திலேயே மாற்றிமாற்றிக் கையாண்டவர் அதை மாற்றிக் கையாளலாம் என்பதை வரையறைப்படுத்தத் தேவையில்லை. சொல்லிய என்ற தொல்காப்பியச் சொல்லாட்சி பிறஇடங்களில் முன்சொன்னதையே குறிப்பிடல் என்ற அடிப்படைகளில் சொல்லிய முறை என்பதற்குக் குறியீட்டுச்சொற்களை ஆளும் முறை என்பதை இந்த ஆய்வுரையில் நிறுவிக்காட்டியுள்ளார். உம் எனும் இடைச் சொல்லுக்கும் தொல்காப்பிய மரபுப்படி முறையாகப் பொருள்கொண்டு கருத்தை நிறுவும் முறையையும் காட்டியுள்ளார்.*

### ***வழுவமைதியா? மயக்கமா?***

> இலக்கணத்தில் வழுவமைதி என்ற குறியீடும் பிழை; வழுவை நீக்கிக் காத்தல் என்ற கோட்பாடும் பிழை என்ற என் அண்மைக்காலக் கருத்தை ஓராற்றால் வெளிப்படுத்த எழுந்ததே இந்த ஆய்வுரை *(மேலது. 55)*

*என்கிறார். இவ்இலக்கை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ள இந்த ஆய்வுரையில், தொல்காப்பிய இலக்கணக் கோட்பாட்டில் வழுவுக்கோ வழுவமைதிக்கோ இடமில்லை. இடைக்கால உரையாசிரியர்களின் உரை அணுகுமுறைகளே இதற்கு வழிவகுத்துள்ளன. இதைத் தொடர்ந்து பின்வந்த நன்னூல் போன்ற இலக்கணங்களும் இலக்கண விதியாக்கிவிட்டன என்கிறார்.*

> 'வினை விகுதியும் பெயர் விகுதியும் மயங்கக் கூடாது' (கிளவியாக்கம், 11) என்ற தொல்காப்பிய இலக்கண வரையறைக்கான உரைதான், முதன்முதலாக வழுவமைதி, வழுக்கள் என்பன தோற்றம் பெறுவதற்கான முதற்காரணம் என்கிறார். வழு என்ற கோட்பாடு தொல்காப்பியருக்கு இருந்திருந்தால் வேற்றுமை போன்றவற்றைத் தொகுத்துச் சுட்டியுள்ளதைப் போல வழுக்களையும் அவர் தொகுத்துச் சுட்டியிருப்பார். அவ்வாறு சுட்டாததே அவருக்கு



வழுக்கோட்பாடு இல்லை என்பதை உணர்த்துகின்றது என்கிறார் *(மேலது. 56)*

### மயக்கமே அன்றி வழுவல்ல

> தொல்காப்பியம் இலக்கணத்தின் ஒரு கூறாகச் சொல்வனவெல்லாம் மயக்கங்களே யன்றி வழுக்கள் அல்ல. மயக்கம் என்பது பண்டை இலக்கணக் குறியீடு. கலத்தல் - சேர்ந்து நிற்றல்- புணர்தல் என்பது அதன் பொருள். கலத்தல் என்ற இம்மயக்க இலக்கணம் எழுத்து சொல் பொருள் என்ற மூன்று அதிகாரத்தும்உண்டு. உயிர் மயங்கியல், புள்ளிமயங்கியல் என்ற தலைப்புகள் பெருஞ் சான்று *(மேலது. 57)*

*எனும் இவர் 'மெய்ம்மயங்கு' (நூ. 47), 'மெய்நிலை மயக்கம்' (நூ. 47) 'மகரத் தொடர்வழி மயங்குதல்' (நூ. 82) 'திணை மயக்குறுதல்' (நூ 960). 'உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறும்' (நூ 961) என்ற மூவதிகாரச் சொல், சொற்றொடர் ஆட்சிகளைக் காட்டித் தொல்காப்பிய இலக்கணக் கோட்பாட்டில் மயக்கம் உண்டே ஒழிய வழு இல்லை என்கிறார். 'புள்ளிமயங்கியல்' என்பதில் வரும் 'மயங்கியல்' என்பது 'புணரியல்' என்ற பொருளினது என்கிறார். மேலும் வேற்றுமை மயக்கங்கள் எல்லாம் வழுவற்றவை. அவை இயல்பாக மொழியில் மயங்கிவருதற்கு உரியமொழியுரிமை உடையவை என்பதே தொல்காப்பியக் கோட்பாடு என்கிறார். இதனால் வேற்றுமை மயக்கங்கள் வழுக்கல் அல்ல என்கிறார்.*

*பின்வந்த உரையாசிரியர்களும் இலக்கணங்களும் குறிப்பிடும் திணை, பால், எண், இடம், காலம், செப்பு, வினா, மரபு ஆகிய வழுக்கள் எல்லாம் தொல்காப்பியத்தில்,*

> இறப்பே எதிர்வே ஆயிரு காலமும்
>
> சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக் கிளவி (730)
>
> ஏனைக் காலமும் மயங்குதல் வரையார் (731)

*என 'மயக்கம்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளனவே அன்றி 'வழுக்கள்' எனக் குறிப்பிடப் பெற வில்லை என்பதையும் சான்றுகாட்டி இவை மயக்கங்களே அன்றி வழுக்கள் அல்ல என்கிறார்.*

*உரையாசிரியர்கள் 'பால்மயக்குற்ற ஐயக்கிளவி' என்பது போன்ற இலக்கண வரையறை களுக்கு 'ஆண்மகனோ பெண்மகளோ தோன்றுவான்/தோன்றுவாள்' என்பன பால்வழுக்கள், 'ஆண்மகனோ பெண்மகளோ தோன்றுவார்' என்பது பால்வழுவமைதி எனக் காட்டும் சான்றுகளைக் குறிப்பிட்டு இவற்றை வழுக்களாகவும் வழுவமைதிகளாகவும் வரையறுத்துக் கொண்டவர்கள் உரையாசிரியர்களே என்கிறார்.*

> தோன்றுவார் என்ற தொடர் ஏன் வழுவமைதியாயிற்று என்ற வினாவைச் சேனாவரையர் தாமே எழுப்பிக்கொண்டு, ஒருமையாற் கூறின் வழுப்படுதல் நோக்கிப் பன்மை கூறலென வழாநிலை போலக் கூறினாரேனும் ஒருமையைப் பன்மையாற் கூறுதலும் வழுவாதலின் இவ்வாறு வழுவமைத்தவாறாயிற்று என அமைதி கூறுவார் *(மேலது. 60)*

*எனும் உரையாசிரியஅணுமுறையைக் காட்டி முன்னது வழு. பின்னது வழுவமைதி என்றால் 'சரியான மொழிப் பயன்பாட்டான வழாநிலை எது?' என்ற வினாவை எழுப்புகின்றார்.*

*இத்தொடர்களுக்கு வழாநிலை என்றதொரு பயன்பாடே மொழியில் இல்லாத சூழலைக் குறிப்பிட்டு.*

> மீண்டும் கேட்கின்றேன் வழாநிலையாகச் சொல்ல ஒரு வழி கூறுங்கள் என்று. மொழியில் அங்ஙனம் சொல்லிக் காட்ட ஒரு தொடர் இல்லாதபோது வழுவுக்கோ வழுவமைதிக்கோ இடமில்லைகாண். அவ்வாறு கூறப்புகின் மொழிவழு என்று ஆகுமேயன்றிப் பால்வழு என்று ஆகா *(மேலது. 61)*

*எனக் குறிப்பிட்டு,*

இது பால்வழு அல்ல 'மொழிவழு' எனப் பொதுமைப்படுத்துகின்றார். இவ்வாறு வருவதே மொழி வழக்கு என்பதைச் சிறிது எண்ணிப் பார்த்திருக்கின்றார் கல்லாடனார். 'இவ்வையத்துக்கு இலக்கணவழக்கென வேறு காணாமையின் இதுதான் இலக்கணம் ஆகற்பாற்று எனின், வேறு வழக்கில்லை எனினும் இது பொருள்வகை தொக்க வழூஉ எனக்கொள்ளப்படும்' என்பது இவர்தம் குறிப்பு *(மேலது. 61)*

*எனும் கல்லாடர் கூற்றுவழியும் நிறுவிக்காட்டுகின்றார். இதை மேலும் விளக்கும் வகையில் 'நிகழுங் காலத்து மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்' (நூ 725) என்ற விதிப்படி முக்காலத்திலும் வருவனவற்றைத் 'தீச்சுடும்', 'ஆறு ஓடும்' என்பன போன்று நிகழ்காலத்தில் சொல்ல வேண்டும் எனத் தொல்காப்பியர் கூறிய வரையறையை மீறி அவற்றைக் காலவழுக்களாகக் காட்டியிருப்பது பொருந்தாது என மறுத்துரைத்துள்ளார். மேற்காட்டிய காலமயக்கக் கருத்தை முன்வைக்கும் 'முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை' எனும் நூற்பாவில் வழுவுக்கோ வழுவமைதிக்கோ இடமில்லை என்பதால், மேற்காட்டியவாறு நிகழ்காலத்தில் அவற்றைக் கூறவேண்டும் என்பதுதான் மொழி இயல்பு என்கிறார். இவ்வாறு நிகழ்காலத்தில் கூறவேண்டியதுதான் இயல்பு என்றால் இங்கு வழுவுக்கோ வழுவமைதிக்கோ இடமில்லையே என்கிறார்.*

> திணையும் பாலும் இடமும் காலமும் பிறவும் தம்முட் சேர்ந்தால் அஃதாவது திணையோடு காலமும் காலத்தோடு திணையும் சேர்ந்தாற்றான் வழுவாகும். இருதிணை தம்முள்ளும் ஒருதிணைப் பால்கள் தம்முள்ளும் முக்காலம் தம்முள்ளும் செப்புக்கள் தம்முள்ளும் கொடுத்து வாங்கிக்கொள்ளுதல் ஒருமொழிக் குடும்பத்துள் வழுவில்லை. போக்கின்று, புகரின்று. வரைநிலையின்று. கடிநிலை யின்று. ஒல்வழியறிதல், நோக்கோரனைய, சிறப்பத்தோன்றும், மயங்குமொழிக் கிளவி என்று நூல் முழுதும் வரும் தொல்காப்பியத் தொடர்களால் இவ்வுறவு மொழிக்குள் இயல்பானது என்பதனை விளங்கிக்கொள்ளலாம். *(மேலது. 62)*

*எனக் கூறி மயங்கி வருதல் என்பது தொல்காப்பிய இலக்கணக் கோட்பாட்டின்படி வழுவல்ல வழுவமைதிகளும் அல்ல. அவை மொழி இயல்புகளே என வரையறைப்படுத்திப் புதுஅணுகுமுறையை முன்வைத்துள்ளார். 'குற்றி கொல்லோ மகன் கொல்லோ தோன்றாநின்ற உரு' என வருவது, செய்தென் எச்சம் 'உண்டு வருவான்' என் எதிர்காலத்தைக் கொள்வது என்பனவற்றை நாம் வழுவமைதிகளாகக் கொள்ளமாட்டோம். இவற்றை இயல்பான வழுக்களாகவே கொள்வோம் என்கிறார்.*



'வியங்கோள் எண்ணுப்பெயர் திணை விரவு வரையார்' *(528)* என்ற நூற்பா திணை வழுவமைதி பற்றியது என எல்லா உரையாசிரியர்களும் கூறி 'ஆவும் ஆயனும் செல்க' எனும் வியங்கோள் தொடரில் 'செல்க' என்பது இருதிணைக்குமான பொதுவினையாக வந்திருந்தபோதிலும் ஆ. ஆயன் எனும் அஃறிணை உயர்திணைகள் வருவது வழுவமைதி எனக் கூறிய கருத்தையும் மறுத்துரைத்துள்ளார். வியங்கோள் பொதுவான வழக்கினது என்பதை,

> தமிழ் வாழ்க, தமிழர் வாழ்க, பாரதம் வாழ்க, பாரதர் வாழ்க எனத் தனித்தனியாகவும் வியங்கோள் வரலாம். தமிழ், தமிழர், பாரதம், பாரதர், உலகம், உலகோர் எல்லாம் வாழ்க என ஒரு முடிபான வியங்கோளும் வரலாம். தனிப்பட வருதலும் பொதுப்பட வருதலும் இடத்தைப் பொறுத்தது *(மேலது 63)*

எனக் காட்டி, வழு என்பார்க்கு விடை கூறி இவ்வாறு வருவது மொழி இயல்பே, வழுவோ வழுவமைதியோ அல்ல என்கிறார். இவ்வாறே பொருளதிகாரத்தில் உரையாசிரியர்களால் வழுவமைதிகளாகக் காட்டப்பெற்றவையும்மீள்பார்வைக்கு உட்படுத்தி ஆராயப்படவேண்டும் எனும் நோக்கில்,

> தமிழ் இலக்கணக் கொள்கைகளை ஆராய முயலுநர் உரையாசிரியர்களைக் கடந்தும் தொல்காப்பியத்தின் தமிழியங்களைக் கண்டெடுக்க முற்படுவார்களாக *(மேலது. 64)*

என எதிர்கால ஆய்வுத் தேவையையும் முன்னிறுத்தியுள்ளார்.

வழு, வழுவமைதி என்ற நெறிமுறையே தொல்காப்பிய இலக்கணக் கோட்பாட்டில் இடம்பெறாமை, சார்பெழுத்து. வேற்றுமை போன்றவற்றைத் தொகுத்துச் சுட்டுவதைப் போலக் குறிப்பிட்ட இலக்கண வகைகளைத் தொகுத்துச் சுட்டுதல், தொல்காப்பிய இலக்கண உரைத்தல் நெறி; இந்நெறி வழுவழுவமைதி என்ற சிந்தனைக்கே இடமில்லாத தொல்காப்பியத்தில் இடம்பெறவில்லை. கலத்தல் - சேர்ந்து நிற்றல்- புணர்தல் என்ற பொருட்களில் ஆளப்பட்டுள்ள மயக்கம் என்ற தொல்காப்பியச் சொல்லாட்சி வழுவையோ வழுவமைதியையோ சுட்டுவதல்ல, வழீஇயினும் வரைநிலை இன்று, இருவீற்றும் உரித்து. செப்புவர் நிகழுங் காலத்தானே, வியங்கோள், திணைவிரவு வரையார். மெய்ந்நிலை மயக்கம் மானமில்லை எனவரும் தொல்காப்பியச் சொல்லாட்சிகள் சொற்கள் கலந்துவரும் மொழி நிலையை இயல்பாக ஏற்றுக்கொள்ளும் இலக்கணக் கோட்பாட்டினை உரைப்பனவாக உள்ளன எனும் அடிப்படைகளில் இடைக்காலச் சிந்தனையான வழுவையும் வழுவமைதியையும் புறந்தள்ளி மொழியின் இயல்பான பயன்பாட்டைச் சுட்டும் மயக்கமே தொல்காப்பிய இலக்கண நெறி என்பதை நிறுவியுள்ளார்.

வ.சுப. மாணிக்கனாரின் இந்த உரை நோக்குகள். 1. மூலநூலை முழுமையாக நோக்குதல். 2. மூலநூலுக்கு முரணான உரைகளைத் தொல்காப்பிய மூலம் சங்கஇலக்கியம் போன்ற இலக்கியச் சான்றுகளின் அடிப்படையில் மீளாய்வுக்கு உட்படுத்துதல், மூலநூல் அடிப்படையிலேயே கருத்தை நிறுவுதல், 3. உரையாசிரியர்கள் அவரவர் காலக் கருத்துகளைப் பல நூற்றண்டுகளுக்கு முன்வந்த மூலநூல்களில் ஏற்றாமல் அம்மூலநூல்களை அவை எழுந்த

காலச்சூழலில் வைத்தே நோக்குதல். 4. மூலநூலின் சொல்லாட்சிகள் ஒருங்கு திரட்டப்பட்டு அவற்றின் அடிப்படையில் நூற்பாச் சூழலுக்கு ஏற்றவகையில் அவை ஆளப்பட்ட முறைகளை உணர்ந்து பொருள் வரையறை செய்தல். 5. மூலநூலில் இடம்பெறாத கருத்தை இருப்பதாக உணர்ந்துகொண்டு அதில் ஏற்றிக் கூறாமை போன்ற ஆய்வியல் நெறிகளை முன்வைப்பனவாக உள்ளன.

உரையாசிரியர்கள் கூறும் கருத்துகளின் ஏற்புடைமை ஏற்பின்மைகளை எடுத்துக்காட்டி ஏற்புடைய கருத்துகளை மேலும் செம்மைப்படுத்துவதற்கு உரிய நெறிமுறைகளைச் சுட்டி எதிர்கால ஆய்வுக்கு வழிகாட்டுதல், தொல்காப்பியத்திற்கு முரணாகப் புரிந்து கொள்ளப்பட்டவற்றை தொல்காப்பியத் தரவுகளின் அடிப்படையிலேயே விளக்குதல் என்பன போன்ற நெறிமுறைகளை அறிவுறுத்துவனவாக இந்த உரைநோக்குகள் அமைந்துள்ளன.

ஒட்டுமொத்தத்தில் வ.சுப. மாணிக்கனாரின் உரைநோக்கு, உரைகளை அணுகுவதற்கான நெறிமுறைகளையும் அவற்றைத் தொல்காப்பிய மூல அடிப்படையில் மீளாய்வுக்கு உட்படுத்துவதற்கான அடிப்படைகளையும் முன்வைக்கும் ஆய்வியல் நோக்கினதாக, மூலநூலின் தனித்தன்மைகளைப் பேணவேண்டிய அவசியத்தை வலியுறுத்துவதாக அமைந்துள்ளது. இந்த ஆய்வுப்போக்குகளை அடிப்படைகளாகக் கொண்டு மூலநூல்களையும் உரைகளையும் இனங்காணுவதற்கான, ஆராய்வதற்கான ஆய்வியல் நெறிமுறைகளை மாணவர்களுக்குக் கற்பிக்கவேண்டியதும், ஆய்வாளர்கள் தற்சிந்தனைக்கான ஆய்வியல் நெறிமுறைகளாகக் கைக்கொள்ள வேண்டியதும் தமிழாய்வுலகின் கடமை.



## மாணிக்கச் சிந்தனைகள்

**நல்ல அறிவான நயமான நாணயமான கடுமையான உழைப்பினாலும் திட்டத்தாலும் போதிய பொருள் தொகுக்க முடியும் என்பது என் வாழ்க்கைத் தெளிவு.**

**நான் இன்னும் எவ்வகையில் திருந்த வேண்டும் எக் குற்றங்குறைகளைக் கைவிடவேண்டும் என்று எண்ணிப் பார்க்கின்றேன். இத் தன்னுணர்வு நல்லது.**

*-தற்சிந்தனைகள்*

# மாணிக்கனாரின் சொல்நேர்த்தி

பேராசிரியர் முனைவர் **அ.அறிவுநம்பி**
முன்னைப் புலமுதன்மையர்,
சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலம்,
புதுவைப்பல்கலைக்கழகம், புதுச்சேரி



எழுத்து, பேச்சு எதுவாக இருந்தாலும் ஒருவருடைய வெற்றிக்கு அவர் செதுக்குகின்ற சொற்களே அடிப்படைக் காரணமாக அமையும்.

சிலப்பதிகார இலக்கிய மேடை ஒன்றில் உதிர்க்கப்பெற்ற சில சொற்களை இங்கே அடுக்கிப் பார்க்கலாம். "கோவலன் இறந்தவுடனேயே கண்ணகியும் இறந்திருந்தால் என்ன ஆகியிருக்கும் கள்வன் ஒருவன் இறந்தான் என்பதற்கு நாணி கள்வி ஒருத்தியும் மறைந்தாள் எனப் பேசப்பெறுமே தவிர அவளைக் கற்பி என உலகு போற்றியிருக்குமா? " இப்பகுதியில் கள்வன் என்ற ஆண்பாலுக்குரிய பெண்பாலாகக் 'கள்வி' என வருதலும் கற்புடை மங்கை என்ற பொருளை உணர்த்தக் 'கற்பி' என வருதலும் தமிழுக்கான புதுச்சொல்வரவுகள். கள்வி எனச் சில செய்யுட்களில் வருவதாகக் கூறப்பெறினும் தமிழ் உரைநடையில் செறிவும் செழுமையும் நிறைந்து அமைந்தவை இச்சொல்லாடல்கள். இவற்றை மொழிந்தவர் மூதறிஞர் முனைவர் வ.சுப.மாணிக்கனார்.

பண்டிதமணி கதிரேசனிடம் தமிழ் கற்றவரும் மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தராகப் பங்காற்றியவருமான செம்மல் வ.சுப.மாணிக்கம் சின்னஞ்சிறு சொற்களுக்குள்ளே கூடச் செந்தமிழை நிறைத்தவர்; தாம் கற்ற நூல்களில் தமிழ்ச் சொற்களின் நிமிர்ச்சியைக் கண்டவர்; தாம் கண்டெடுத்த அருமைச் சொற்களை மொழிந்தவர்.

ஒரு பதச்சோறு வருமாறு: கம்பன் பாடல்களில் புகழ்பெற்ற ஒரு பாடலின் நிறைவு வரியாக "ஏழிரண்டாண்டின் வாவென்று இயம்பினன் அரசன் என்றாள்" என்ற வரி ஒளிரும். ஆணையிடுபவன் தந்தையும் அரசனுமான தயரதன்; இங்கே கதை மாந்தரின் நிலைப்படி ஏவினன் என்று வருவதுதான் முறையே தவிர இயம்பினன் என்ற சொல் பொருத்தமுடையதாக அமையவில்லை எனக் கருதுகிறார் மாணிக்கம். அவ்வாறு ஒரு சொல் மாற்றம் (பாடபேதம்) உள்ளதெனவும் கண்டறிந்த அவர், காப்பியப் பக்கங்களை மீண்டும் மீண்டும் அலசுகின்றார்.

மரபு, நடைமுறை, உளவியல் போன்ற கூறுகளின் அடிப்படையில் தந்தை ஒருவன் தன்மகனுக்குக் கட்டளையிடுவதே முறைமையாகும். ஒரே நிலையில் வாழும் இருவரிடம் இடம்பெறுவதே இயம்புதல் என்ற சொல். அச்சொல் இங்கே ஏற்புடையதில்லை என்ற தன் கருத்தை நிறுவ அவர்பட்ட தொல்லைகள் பற்பல. காப்பியத்தின் வேறிடங்களில் வரும் நிகழ்வுகளில் காப்பியப் புலவன் இழைத்தளித்த சொற்களைத் தரங்காண்கிறார் அவர்.

'என்று பின்னரும் மன்னன் ஏவியது'

'ஏவிய குரிசல் யாவர் ஏகிலார்'

'தெருளுடை மனத்து மன்னன் ஏவலிற்றிறம்ப'

போன்ற மணிவரிகளைத் தெளிவுற நிரல்படுத்துகிறார் வ.சுப.மா.

'தாதை ஏவலின் மாதொடு போந்து' கானகம் கண்ட காகுத்தன் கதையில் தயரதன் மொழிந்தது இயம்புதல் அன்று; ஏவல் மட்டுமே எனத் தெளிவுறுத்த அவர் மேற்கொண்ட கடுமையான உழைப்பே அடித்தளமானது. பொருத்தமான சொல்லும் நமக்குப் பரிமாறப் பெற்றது.

மதுரையில் துணைவேந்தராகப் பணிபுரிந்தபோது உணவுச்சாலைக்கு (Canteen) 'உண்டியகம்' எனவும், ஆசிரியர் குடியிருப்புப் பகுதிக்கு (Quarters) 'குடிமனை' எனவும் விருந்தினருக்கான ஓய்விடத்திற்கு (Main Guest House) 'முதன்மை விருந்தில்லம்' எனவும பெயர் சூட்டி, சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மதுரையில் தங்கத்தமிழை வளர்த்தெடுத் ததையும் கணக்கில் கொள்ள வேண்டும்.

'சொல்லுக சொல்லிற் பயனுடைய' என்ற வள்ளுவம் மாணிக்கனாரின் வாழ்க்கைப் பாடமானது. அமைதியாக உட்கார்ந்து எழுதும்போது மட்டுமல்லாமல் சட்டென்று மேடைக்கு வரும்போதும் அவர் நெய்துதரும் சொல்லாட்சிகள் கவனத்துக்குரியன ஆகும்.

காரைக்குடி அழகப்பர் கல்லூரியில் நடந்த ஒரு நிகழ்வினை இங்கு பதிவு செய்வது தக்கது. மாணவர்கட்கான மேடைப் பொழிவுக் கலையை வளர்க்கக் 'கலைக்கழகம்' என்ற அமைப்பை உருவாக்கினார் அவர்.

ஒருநாள் அரங்கில் மாணிக்கனாரும் ஏனைய பேராசிரியர்களும் அமர்ந்திருந்தனர். பேசிப் பழக மேடையேறிய மாணவருக்குப் பேச நா எழவில்லை. ஓரிரு மணித்துளிகள் கடந்தபின் தன் சட்டைப்பையில் வைத்திருந்த ஒருபக்கக் காகிதத்தை எடுத்து கிடுகிடு என அதில் எழுதியிருந்த கருத்துகளை உரத்து வாசித்துவிட்டு அமர்ந்து கொண்டார். பார்வையாளர்கள் பக்கம் அந்த மாணவர் திரும்பவேயில்லை.

நிறைவாக வ.சுப.மா. மேடையேறினார். செந்தமிழ், நாப்பழக்கம் ஆகவேண்டுமென உரைத்து, "முயற்சியும் பயிற்சியும் இருந்தால் உயர்ச்சி தானே இடம்பெறும்" என்றார். அவ்வுரையில் நிறைவில் அவர் கூறிய தொடர் குறிக்கத்தக்கது. மாணவர்கட்கு வழிகாட்டிய பிறகு நிறைவில் அவர் மொழிந்த சொல்வரிசை:

'ஆள்முகம் பார்த்துப் பேச வேண்டுமே தவிரத்
தாள்முகம் பார்த்துப் பேசக்கூடாது'

- *தினமணி தமிழ்மணி, 17.04.2016*

# மாணிக்கக் குறள் மாட்சி

திரு.கெ.பக்தவத்சலம்



மூதறிஞர் வ.சுப. மாணிக்கனாரின் 'வள்ளுவம்' என்ற திறனாய்வு நூல், சென்ற நூற்றாண்டில் வெளிவந்த திருக்குறள் விளக்க நூல்களில் தனிச்சிறப்புடையது. இரண்டடிகளால் ஆன திருக்குறட் பாக்களுக்கு இரண்டிரண்டு வரிகளில் அமைத்து, எழிற்றமிழ் உரைநடையில் முதுமுனைவர் வ.சுப. மாணிக்கம் அவர்கள் தனித்ததொரு தெளிவுரையும் தீட்டியுள்ளார்.

'இந்திய நாட்டின் தேசிய இலக்கியமாகத் திருக்குறள் திகழ வேண்டும்' என்று நிறுவிய தமிழறிஞர் வ.சுப.மாணிக்கனார் எழுதிய 'திருக்குறள் சுடர்' முதலிய கட்டுரை நூல்கள், அவர்தம் திருக்குறள் தொண்டிற்குக் கட்டியங் கூறும்.

இவை யாவற்றிற்கும் மேலாக, ஆயிரம் குறள் வெண்பாக்களைத் தாமே புதிதாக அந்தாதி முறையில் இயற்றித் தமிழன்னைக்குக் காணிக்கையாக்க விழைந்தார் வ.சுப. மாணிக்கனார். அவ்வாறு படைக்கத் தொடங்கிய 'தமிழாயிரம்' முற்றுப்பெறாமல், மூதறிஞரின் எதிர்பாராத மறைவினால் பாதியிலேயே தடைப்பட்டு நின்றுவிட்டது. இருப்பினும் 506 குறட்பாக்களுடன், இன்று நமக்குக் கிடைக்கும் "மாணிக்கக் குறள்", வ.சுப.மாணிக்கனார் வாழ்நாட் பணியாகக் கொண்ட திருக்குறள் காதலை விளங்க வைப்பதாகும்.

இருபதாம் நூற்றாண்டில் எழுந்த இந்தப் புத்தாக்கக் குறள் நூலுக்குப் புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் அரிய பொருள் விளக்கத்தினை உரை விளக்காக நுட்பமுடன் வரைந்து உதவியுள்ளார்.

## தமிழின் சிறப்பு

"தமிழிற் சிறந்ததோர் தாய்மொழி இல்லை
இமிழ்கடல் ஞாலத்(து) எமக்கு" (1)

என்பது மாணிக்கக் குறளின் முதற்குறள்.

" உலக மொழிகளுக்கெல்லாம் மூல முதல்மொழி தமிழே ஆதலின் தம் தாய்மொழி, உலக மொழிகளின் தாய் என்னும் பெருமிதத்தால் 'எமக்கு' என்றார்"

என்பது இளங்குமரனார் அளிக்கும் இனிய விளக்கம்.

"எமக்கென்ப(து) என்னோ? எனைமொழி யாளர்
தமக்கும் பழந்தாய் தமிழ்" (2)

என்பது அந்தாதித் தொடையில் அமைந்த அடுத்த குறள்.

"தமிழ் எமக்குத் தாய்மொழி என்று கூறுவது என்ன தெரியாத்தனம்? அந்தமிழ், உலகத்திலுள்ள (வழங்கு மொழிகள், வழங்கா மொழிகள், திருந்திய மொழிகள், திருந்தா மொழிகள், எழுத்து மொழிகள், எழுத்திலா மொழிகள் எனப்படும்) எல்லா மொழியினர்க்கும் மூத்த முதல் தாய்மொழியாகும்"

*என்று இதற்குப் பொருத்தமுறப் பொருள்கூறுவார் இளங்குமரனார்.*

## திருக்குறள் மாட்சி

*"முப்பாலாம் திருக்குறள் முழுவதனையும் தமிழராகப் பிறந்த ஒவ்வொருவரும் மனப்பாடம் செய்து கற்க வேண்டும். அவ்வாறு கற்றபின் ஒழுக்கம் என்னும் அணியினை அணிகலன்போல் அணிந்து வாழ்வோம்" என்று அறிவுறுத்தும் மாணிக்கக் குறள் பின்வருமாறு*

"காண்போம் முழுக்குறள் கற்போம் வரப்பண்ணிப்
பூண்போம் ஒழுக்கப் பொறை" (283) (வரப்பண்ணல் – மனப்பாடம் செய்தல்)

*ஒளிமிக்க வாழ்க்கை அமைய வேண்டுமென ஒருவர் விரும்பினால், அவர் ஒரு திருக்குறளையாவது தெளிவுடன், ஆழமாகக் கற்று, அதனை வாழ்நாள் முழுவதும் கடைப்பிடித்தல் சிறந்த முறையாகும் என்று அடுத்து வலியுறுத்துவார் வ.சுப.மா.*

"ஒளிவாழ்வு வேண்டின் ஒருகுறளை யேனும்
தெளிவாழ்ந்து செய்தல் திறம்" (285)

"ஒரு குறளைக் கடைப்பிடித்தால் அதன் வழியே பல குறள்களின் பயன் கூடிவரும் என்பது உண்மையாகலின் அங்ஙனம் உரைத்தார்" *என்பது உரையாசிரியர் குறிப்பு.*

"திருக்குறள் பிறந்த மண்ணில் பிறந்திருந்தும், திருக்குறளைக் கல்லாதவன் கொடுந்தமிழன், அவன் வீதி சமைக்க இடப்பெறும் சரளைக் கல்லுக்குச் சமமாவான்" *என்று பிறிதொரு குறளில் இடித்துரைப்பார் வ.சுப.மா.*

"குறளை உணராக் கொடுந்தமிழன், வீதிச்
சரளைப் பொடிக்குச் சமம்" (399)

*'நடக்க வேண்டிய அவன், சரளைக் கல்லாகக் கிடக்கலாமோ?' என்று இழித்துரைத்தும் அமைதி பெறவில்லை அறிஞர் நெஞ்சம்.*

*'வீதிச் சரளைக்கல்லுக்கு அவனைச் சமமெனலும் ஆகாது. ஏனெனில், தெரு நடைக்கு ஏற்ற அமைவுடையதாக அல்லவோ அச்சரளை உலவுகிறது! இவன் அவ்வகைக்கும் உதவானே!' என்று அந்தாதியாகத் தொடரும் 'மாணிக்கக் குறள்' வருமாறு :-*

"சமமெனல் ஆமோ? சரளை, தெருவுக்(கு)
அமைவுடைத் தாகும் அறி" (400)

*சரளைக் கல்லுக்கு ஒப்பென முன்னர்க் கூறிப் பின்னர் அதற்கும் ஒப்பில்லை என மறுக்கும் அணிநலம் தோன்ற அமைந்தவை இவ்விரு குறட்பாக்களும்!*



## சங்க இலக்கியச் சால்பு

"பழம்போலும் சங்கப் பனுவலைக் கற்றால்
கிழம்போகும் கீழ்மையும் போம்" (461)

என்பது புகழ்வாய்ந்த மாணிக்கக் குறட்பாக்களில் ஒன்று.

பழுத்த கிழவரும் சுவையும் ஊட்டமும் மிக்க பழந்தமிழ் நூல்களைக் கற்றால், முதுமை ஒழிந்து, தாழ்வு நீங்கி, வாழ்க்கையில் புத்திளமை பெறுவர் என்று சங்கத் தமிழின் சால்பினை எடுத்துக் கூறிடும் இனிய குறள் இது.

தொல்காப்பியத்தையும், திருக்குறளையும் இருகண்களெனப் போற்றி வாழ்ந்த மூதறிஞர் வ.சுப.மாணிக்கனார், திருவாசகத்திலும், கம்ப இராமாயணத்திலும் திளைத்தவர். அதனைப் போலவே, சமய வேறுபாடு கருதாமல் ஆழ்வார் தமிழிலும்ஆழங்கால்பட்டவர்.

"ஆழ்வார் தமிழிலும் ஆண்டாள் தமிழிலும்
வீழ்வார்க் குளதோ விதி?" (299)

"ஆண்டாள் உள்ளிட்ட ஆழ்வார் பன்னிருவர் பாடல்களையும் ஆழ்ந்து பயின்றவர்க்குத் துன்புறுத்தும் விதி என்பது ஒன்றும் உண்டோ? இல்லை" என்று உறுதிபட உரைக்கும் மாணிக்கக் குறள், வ.சுப.மாவின் சமரச மனப்பான்மைக்குச் சான்று பகருகிறது.

## மாண்பமை மாணிக்கக் குறள்

சென்ற நூற்றாண்டில் செந்தமிழை மீட்டெடுத்துப் பதிப்பித்த பைந்தமிழ்க் காவலர்கள் உ.வே.சாமிநாதர், யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர், சி.வை தாமோதரனார். உரையாசிரியர்கள், திரு.வி.க., மறைமலையடிகளார், பண்டிதமணி மு.கதிரேசனார், மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் முதலாய தமிழறிஞர்களை மாணிக்கக் குறள் நூலில் ஒவ்வொரு குறட்பாவில் செவ்விய முறையில் நன்றியுடன் போற்றியுள்ளார் வ.சுப.மா.

அவ்வாறே, கல்விப் பணிக்குக் கோடி கொடுத்த கொடைஞர் வள்ளல் அழகப்பரையும் தமிழிசை இயக்கங்கண்ட அண்ணாமலை அரசரையும் வெவ்வேறு குறட்பாக்களில் விதந்து பாராட்டியுள்ளார் வ.சுப.மா.

நாடு போற்றும் பெருந்தலைவர்களாகிய காந்தியடிகள், பெரியார் ஈ.வெ.ரா., அண்ணா, காமராசர், முதலியோரைக் கட்சிக் கண்ணோட்டத்தில் பாராமல், அவர்தம் மாட்சிமைகளை மதித்து மனமாரப் பாராட்டுவார் மாணிக்கப் பெருந்தகை.

## பேணிக் கருதிடும் பேறு

சங்கிலித்தொடர் போல அந்தாதித் தொடையில் அமைந்ததனால், ' மாணிக்கக்குறள்'. அதிகார அமைப்பினில் நிரல்படத் தோன்றவில்லை. எனினும், காலத்திற்கேற்ற அறக்கருத்துகளும், மொழிநலம் காக்கும் பொருண்மை பொதிந்த சீரிய கருத்துகளும் நூல் முழுவதும் அள்ளித் தெளித்த எண்ணப் புள்ளிகள் நிறைந்த எண்ணக் கோலமாக இனிதமைந்து பேணிக் கருதிடும் பேறாகத் திகழ்கிறது.

# வ.சுப.மாணிக்கனாரின் தொல்காப்பியக் கட்டுரைகள்



முனைவர் **ஆ.மணி**
துணைப் பேராசிரியர்,
பாரதிதாசன் அரசினர் மகளிர் கல்லூரி, புதுச்சேரி

## உரைக்களம்

*தமிழ்க்காதல் தந்த வ.சுப. மாணிக்கனார் எழுதிய தொல்காப்பியக் கட்டுரைகளின் திறனை எடுத்துரைப்பது இவ்வுரையின் களமும் தளமும் ஆகும். வ.சுப. மாணிக்கனார் 45 ஆண்டுகளாக எழுதி வெளியிட்ட பன்னூற் கட்டுரைகள் 1989 ஆம் ஆண்டில் மணிவாசகர் பதிப்பகத்தாரால் தொகைப் பதிப்புக்களாக வெளியிடப்பட்டன. சிந்தனைக் களங்கள், தொல்காப்பியப் புதுமை, இலக்கிய விளக்கம், ஒப்பியல் நோக்கு, எந்தச் சிலம்பு, தொல்காப்பியத் திறன் ஆகிய ஆறு நூல்களிலும் இடம்பெற்றிருந்த தொல்காப்பியக் கட்டுரைகள் முப்பத்து ஒன்றும் தொல்காப்பியக் கடல் என்னும் பெயரில் தொகைப் பதிப்பாக வ.சுப. மாணிக்கனாராலே தொகை பெற்று நூற்கோலம் எய்தின. அத்தொகையே இந்த ஆய்வு முயற்சிக்கு முதன்மைப் பொருளாம். தொல்காப்பியம், அதன் உரைகள்; ஆய்வு நூல்கள்; கட்டுரைகள் முதலியன துணையன்களாம். செறிவும் பெருமிதமும் கொண்ட ஆய்வுக்கும் மொழிநடைக்கும் உரிய வ.சுப. மாணிக்கனார் தந்த தமிழ்க்கொடையாம் தொல்காப்பியக் கடலில் பயணம் செய்வோம், வாருங்கள்.*

## தொல்காப்பியக் கடல் அறிமுகம்

*தொல்காப்பிய நயம் முதலாகத் தொல்காப்பியம் இன்றும் நாளையும் என்ற ஆய்வுரை ஈறாக முப்பத்து ஒரு கட்டுரைகளில் தொல்காப்பிய நயமும் திறனும் பெருமையும் புலப்படக் காண்கின்றோம். தொடரோ, பொருளோ, கருத்தோ தெளிவுற உணரப்படாத இடங்களை ஆய்வுப் பொருளாகக் கொண்டு மெய்மையைக் கண்டறிந்து புலப்படுத்தும் மாண்பினர் மாணிக்கனார் என்பதற்குச் சான்றாக இந்நூற்கண் ஐந்தில் ஒரு பங்குக் கட்டுரைகள் அதாவது 6 கட்டுரைகள் வினாத்தலைப்புக்களைக் கொண்டிலங்குவதைக் கண்டறியலாம். பழந்தொடருக்குப் புதுப்பொருள் காண்பதில் மாணிக்கனாருக்கு நிகர் அவரே என்பதற்கு இந்நூற்கண் அமைந்துள்ள கட்டுரைகள் பல சான்றாக இலங்குவதைக் காணமுடிகின்றது. சிக்கல்கள் எவையும் இல என நாம் கருதிக் கொண்டிருக்கின்ற இடங்களிலும் சிக்கல்கள் இருப்பதைத் தம் நுண்மாண் நுழைபுலத்தால் கண்டறிந்து தெளிவுபடுத்தியவர் வ.சுப. மாணிக்கனார் என்பதை அவர்தம் நூல்களைக் கற்போர் அறிவர். "கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும், உணர்வுடை மாந்தர்க்கல்லது தெரியின், நன்னயப் பொருள்கோள் எண்ண ருங்குரைத்தே" (தொல். பொருள். மெய்ப். 27) என்ற தொல்காப்பியக் கருத்து மெய்ப்பாட்டிற்கு மட்டுமல்லாது வ.சுப. மாணிக்கனாரின் ஆய்வுரைகளுக்கும் நூல்களுக்கும்*




பொருந்தும். இக்கருத்துரைகள் மாணிக்கனாரின் தொல்காப்பியக் கடல் என்ற நூலுக்கும் பொருத்தமுடையன என்பது வெள்ளிடை மலை.

## வ.சுப. மாணிக்கனாரின் ஆய்வுநெறிகள்

காலந்தோறும் ஆய்வறிஞர் பெருமக்கள் தோன்றித் தமிழன்னைக்குத் தம் ஆய்வு மாலைகளால் அணி சூட்டி மகிழ்வதைக் கண்டு வருகின்றோம். அத்தமிழ் மகன்களுள் சிலரே தம் ஆய்வுத்திறத்தால் தமிழன்னையின் அணிகளைச் சுடரணிகளாகத் துலக்கியோராவர். அவர்களுள் முன்வரிசையில் நிற்கும் பெருமகனார் வ.சுப. மாணிக்கனார் என்பது புகழ் மொழியன்று; பொருள்மொழியே என்பதற்குச் சான்றாகத் தொல்காப்பியக் கடலில் காணப்பெறும் ஆய்வுநெறிமுறைகள் சிலவற்றை மாதிரி அணுகுமுறையில் இவண் காணலாம்.

## சிக்கலை முன்னிட்ட ஆய்வுகளை முன்னிறுத்துதல்

ஓர் ஆய்வுரை என்பது ஒரு புதிய உண்மையையேனும் எடுத்துரைப்பதே என்னும் கருத்தை வ.சுப. மாணிக்கனாரின் நூல்களில் பரக்கக் காணலாம். அறிமுக ஆய்வுகளும், விளக்கமுறை ஆய்வுகளும், பகுப்புமுறை ஆய்வுகளும், தொகைமுறை ஆய்வுகளும் தமிழுக்குத் தேவை என்ற கருத்தை நாம் மறுக்கவில்லை. எனினும், சிக்கலை முன்னிட்ட ஆய்வுகளே தமிழின் சிறப்புக்கு மேலும் துணைபுரிவன என்ற உண்மையையும் நாம் உணரவேண்டும். வ.சுப. மாணிக்கனார் இவ்வகை ஆய்வுகளை மேற்கொண்டு தமிழாய்வு தழைக்க முன்னேர் செலுத்தியவர் என்பதற்குச் சான்றாகத் தொல்காப்பியக் கடற்கண் ஆய்வுரைகள் இலங்கக் காண்கின்றோம். சான்றாக ஒன்று தருகுவன்.

இலக்கணத்தில் வழுவமைதி, நீக்கிக் காத்தல் என்ற இரு நிலைப்பாடுகள் காலந்தோறும் இருந்து வருவதைத் தமிழ் இலக்கண நூல்களும், அவற்றுக்கு எழுந்துள்ள உரைகளும் உரைக்கக் காண்கின்றோம். ஆனால், இவ்விரு நிலைப்பாடுகளும் பிழையானவை என்ற கருத்தை உணர்த்தும்முகத்தான் வழுவமைதியா? மயக்கமா? என்ற ஆய்வுரை ஒன்றை எழுதினார் வ.சுப. மாணிக்கனார் (1989: 160-172). இக்கருத்து முற்கால இலக்கண நூல்களிலோ, உரைகளிலோ, ஆய்வுநூல்களிலோ இல்லாத ஒன்றென்பது வெளிப்படை. வழுக்களாக நம்மால் கருதப்படுவன எல்லாம் தொல்காப்பிய மரபுப்படி, மயக்கங்களே என்ற உண்மையைத் துணிச்சலாகப் புலப்படுத்தியது அக்கட்டுரை. தொல்காப்பியர் முதலான இலக்கணிகள் கூறாத கருத்துக்களும் அவர்தம் பெயரால் வழங்கி வருகின்ற உண்மையைப் புலப்படுத்திய பெருமை வ.சுப.மாணிக்கனாருக்கு உரியது. இவ்வகை ஆய்வுகள் தழைப்பது தமிழுக்கு நன்மையளிக்கும் எனச் சொல்ல வேண்டா. தமிழாய்வாளர்தம் கருத்து இவ்வகையிலும் செல்லும் என நம்புகின்றோம். அவ்வாறு செல்வது முன்னேர் செலுத்திய மாணிக்கனாருக்கு நாம் செலுத்தும் நன்றியாகும்.

சிக்கலை முன்னிட்ட ஆய்வுகளைச் செய்ய முனைவோருக்கு மாணிக்கனார் தம் ஆய்வுரைகளிடத்துச் சில வழிகாட்டுதல்களையும் தந்துள்ளார். இக்கால ஆய்வாளர்களுக்கு அவைபெரிதும் பயன் நல்குமாதலால் அவற்றைக் காணலாம்.

எந்தவொரு நூலாய்வுக்கும் உரிய சான்றுகளை அந்நூலுக்குள்ளிருந்தே தருவது சாலச்

சிறந்தது. சான்றாகத் தொல்காப்பியம் குறித்த ஆய்வில் தொல்காப்பிய நூற்பாக்களில் இருந்தே சான்று நல்க வேண்டும். அகச் சான்றுகளே மெய்ம்மையை அறிவதற்குப் பெரிதும் பயன் நல்குவன. பிறவகைச் சான்றுகள் இரண்டாம், மூன்றாம் நிலையினவாகவோ, புறச் சான்றுகளாகவோ அமைவன. அவற்றைத் துணையாகக் கொள்ளலாமே தவிர, முதன்மையாகக் கொள்வது சிறப்பன்று. மேற்கட்டுரைக்கண், தொல்காப்பியர் கூறுவன வழுக்களன்று; மயக்கங்களே என்ற கருத்துக்கு,

"மெய்ம்மயங் குடனிலை தெரியுங்காலை(22)

மெய்ந்நிலை மயக்கம் மான மில்லை (47)

மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த (82)" ஆகிய தொல்காப்பியத் தொடர்களையே அகச் சான்றுகளாகத் தருகின்றார் வ.சுப. மாணிக்கனார். (1989: 163)

முழுமையாகக் கிட்டாத ஒரு நூல் அல்லது ஒரு பாடல்/ நூற்பா மட்டும் கிடைத்துள்ள பெயரறியப்பட்ட அல்லது பெயரும்அறியப்படாத நூலின் தொடர்/ கருத்து/ பாடம் பற்றிய ஆய்வுகளில் எப்படி அகநூற் சான்றுகளைத் தர இயலும்? என்ற ஐயம் இப்போது உங்களுக்கு எழலாம். இந்த ஐயத்தையும் தீர்க்கும்வகையில், தொடர்நிலைக்கண் வழக்கில் இயற்பெயர் முன்னரும், சுட்டுப்பெயர் பின்னரும் வரும். செய்யுளாயின் இயற்பெயருக்கு முன்னர்ச் சுட்டுப்பெயர் வரலாம் என்னும் கருத்துடைய "முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே" (39) என்னும் நூற்பாவுக்கு உரையாசிரியர் எடுத்துக்காட்டியுள்ள 'அவனணங்கு நோய் செய்தான்' என்ற வெண்பாவில் அவன் என்பது சேந்தனா? என வினா எழுப்பி விடை காண முற்படும் மாணிக்கனார் (1989: 156 - 159) அவ்வெண்பா இன்ன நூலுக்குரியது என அறியப்படாததும் முழுமையாகக் கிடைக்காததுமாதலால், நற்றிணை, அகநானூறு, புறநானூறு, திருமுருகாற்றுப்படை வெண்பாக்கள் ஆகிய பிற நூற்சான்றுகளைத் தந்து கருத்தை நிறுவலாம் என வழிகாட்டுகின்றார்.

ஒரு பொருண்மைக்குக் கூறப்பட்டுள்ள ஒன்றுக்கு மேற்பட்ட கருத்துக்களை எடுத்துக்காட்டி, அவற்றை முழுமையாக மறுத்துப் புதுப்பொருள் கூறுதலும், ஒன்றே கூறப்பட்டுள்ள விளக்கங்களை மறுத்துப் புதிய விளக்கம் தருதலுமாகியவை சிக்கலை மையமிட்ட ஆய்வுகளின் நிலைகளுள் அடங்கும். இவ்வுண்மைகளுக்கு மாணிக்கனாரின் தொல்காப்பியக் கடலில் இடமுண்டுகாண். முழுமையாக மறுத்துப் புதுப்பொருள் கூறுதலுக்கு 'வழுவமைதியா? மயக்கமா?', 'அவன் என்பது யார்?' ஆகிய கட்டுரைகள் சான்றாம். ஒன்றை ஏற்றுப் புதிய சான்றுகள் காட்டி நிறுவுதலுக்கும் பழைய விளக்கங்களை மறுத்துப் புதிய விளக்கம் தருதலுக்கும் சொல்லிய முறை என்னும் கட்டுரை விளக்கமாக அமைகின்றது.

## ஆய்வுச் சிக்கலை எடுத்துரைத்தல்

எந்தவொரு கட்டுரைக்கண்ணும், தாம் எடுத்துக்கொண்ட ஆய்வின் சிக்கல் இதுவென எடுத்துரைத்துக் கற்போனுக்கு அறிமுகம் செய்த பின்னரே தாம் கண்டறிந்த மெய்ம்மைகளை



*விளக்குவது மாணிக்கனாரின் அடிப்பட்ட பண்பாகும். இவ்வுண்மைக்குப் பின்வரும் பகுதி பதச்சோறாம்.*

"என் கட்டுரை 'தொல்காப்பியப் புதிய உத்திகள்' என்ற தலைப்பினது ஆதலின், மேற்கூறிய முப்பத்திரண்டு உத்திகளை ஆராயப் புகவில்லை. தொல்காப்பியத்தின் பொருள்களையும் கோட்பாடுகளையும் மயக்கமறச் சிக்கல் அறுத்துத் தெளிவதற்கு வேண்டும் அடிப்படையுத்திகளை - வழிநெறிகளை - ஓர் அளவாக எடுத்துக் காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம்." *(வ.சுப. மாணிக்கம் 1989: 84-85).*

*பல கட்டுரைகளில் இவ்வகை விளக்கங்கள் விரிவாக அமைந்து உரைப்பொருளைத் தெளிவாக உணரத் துணை நிற்கின்றன என்பதைக் காண முடிகின்றது.*

## கருத்துக்கு முதன்மை தருதல்

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" *(திருக்குறள் 423)*

*என்பது தமிழியம். மாணிக்கனார் அடிப்பட்ட தமிழியக் கொள்கையினர் என்பதை அவர்தம் நூல்கள் பறை சாற்றுகின்றன. மாணிக்கக் குறளிலும்,*

"முறைதமிழ் போற்றி முழுமடங் கொன்று
மறைகுறள் கற்க மதி" *(மாணிக்கக் குறள் 47)*

*எனத் திருக்குறள் கற்பதே அறிவு எனப் போற்றுகின்றார் மாணிக்கனார். புலவர் குழந்தை தம் தொல்காப்பிய உரைக்கண் தொல்காப்பிய இயல் வைப்பு, நூற்பா வைப்பு ஆகியவற்றை மறித்து நோக்கித் தன் மறித்த சிந்தனையை வரம்பின்றிச் செயல்படுத்தி, அவ்வரிசைக்கேற்ப உரையும் வரைந்துள்ளார் என்ற கருத்துடைய மாணிக்கனார் (1989: 88). "புலவர் குழந்தையிடம், மறித்த சிந்தனை யுத்திக்கு அளவோ அறமோ இல்லை" என அறச்சீற்றத்துடன் கடிந்துரைத்தபோதிலும், கருத்துக்கே முதன்மை தரவேண்டும்; கருத்துக் கூறியவர்களை மனங்கொளக் கூடாது என்னும் தமிழ்மறைக்கேற்ப, "புலவர் குழந்தை இந்நூற்பாக்களை (மரபியல் நூற்பாக்கள்) இடைவிரவினவாகக் கொள்ளாமல் ஏற்றுக்கொண்டு, வருணம் படாமல் தமிழ் நாகரிகத்திற்குத் தக உரை செய்துள்ளார் என்பது நினையத்தகும்" (வ.சுப. மாணிக்கம் 1989: 93) என முன்னர் தாம் மறுத்துரைத்த புலவர் குழந்தையின் கருத்தையே பின்னர் ஏற்றதற்குரிய காரணத்தை விளக்கியுள்ளார். தமிழ் ஆய்வாளர்கள் இவ்வுண்மையை மனங்கொள்ள வேண்டும்; ஆய்வில் ஏற்றுப் போற்ற வேண்டும் என்பது நமது எதிர்பார்ப்பு.*

## நூல் கிடந்தாங்கு போற்றுக

*எந்தவொரு நூலையும் அந்நூல் கிடக்கைக்குத் தக்கவாறே பொருள் கொள்ளவேண்டும் என்ற கருத்தினை மாணிக்கனார் முன்வைக்கின்றார். அதுபோன்றே, ஒரு நூலின் கருத்தினை அறியத் தம் காலத்துப் பொருளையோ, உரையாசிரியர் காலப்பொருளையோ, பிற நூற்காலப் பொருளையோ கொண்டு இடர்ப்படாமல், அந்நூலின் காலக் கருத்தை அறிவதே முறை என்பதைவும் நல்லாய்வுத் துணையாக வழிகாட்டுகின்றார் மாணிக்கனார்.*

"மூலம் எதுவாயினும், அதனைக் கிடந்தாங்கு வைத்துக் கொண்டே எண்ண வேறுபாடுகளைத் துணிவாகப் புலப்படுத்துக என்பதே என் அறிவுரை" (வ.சுப. மாணிக்கம் 1989: 93 - 94) என்றும், "மூலநூல் கிடந்தாங்கு ஆராய வேண்டும் எனவும், தொல்காப்பியத்தையே முதற் சான்றிலக்கியமாகவும் கொள்ள வேண்டும் எனவும் இக்கட்டுரையில் வலியுறுத்த விரும்புகின்றேன். பனம்பாரனார் பாயிரமும் உடன்காலத்தெழுந்த முதல் இலக்கியச் சான்றாகும். தொல்காப்பியத்து வரும் பல சொற்கள் பிற்காலத்தும் தொடர்ந்து வழங்கின..... என்ன வினை செய்கின்றாய் என்று கேட்டால் தொல்காப்பியர் காலப்பொருளென்ன, இன்றைய பொருளென்ன? எவ்வளவு குறும்பான மாறுபாடு.

ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே
தாவென் கிளவி ஒப்போன் கூற்றே
கொடுவென் கிளவி உயர்ந்தோன் கூற்றே

என்ற தொல்காப்பிய நூற்பாக்களில் வரும் இழிந்தோன், ஒப்போன், உயர்ந்தோன் என்ற சொற்களுக்கு இடைக்கால, இக்காலச் சாதிப்பொருள் உண்டா? இன்ன சொற்களைத் தொல்காப்பியர் ஆளும்போது இவ்வாறு விழிப்பாக நினைத்துப்பார்க்க வேண்டும், இக்காலச் சூழல் இடைக்காலத்திலில்லை, இடைக்காலச் சூழல் தொல்காப்பியக் காலத்திலில்லை. சொற்கள் தொடர்ந்து வரும்; அப்பொருளே தொடர்ந்து வருவதின்று" *(வ.சுப. மாணிக்கம் 1989: 96)*

*என்றும் வரும் மாணிக்கத் தொடர்கள் ஆய்வுக் கைத்துணைகளாம்.*

## என் கருத்தென மொழிதல்

*இக்கால ஆய்வுகளிலும் பரக்கக் காணப்பெறாத ஒரு பண்பினை மாணிக்கனார் தம் ஆய்வுரைகளில் காண்கின்றோம். முன்னோர் கருத்துக்களையே மொழிபொருளாகக் கொண்டு விளங்கிவரும் ஆய்வுரைகள் பல, தம் கருத்தென எதுவும் மொழியாமலேயே சென்றுவிடக் காண்கிறோம். மாணிக்கனாரோ, தாம் எழுதிய ஒவ்வோர் உரையினும் என் கருத்து இதுவென மொழிந்து செல்லும் பண்பினராகத் திகழ்கின்றார். தொல்காப்பிய அகத்திணையியலின் 25 ஆம் நூற்பாவில் புறத்து என்ற தொடருக்கு உரையாசிரியன்மர் கூறிய பொருளையெல்லாம் தொகுத்துரைத்த பின்னர் (வ.சுப. மாணிக்கம் 1989: 196) "என் புத்துரை" எனத் தலைப்பிட்டு அவர் கூறியுள்ள உரை மேற்கருத்துக்கு ஒரு சான்றாம்.*

## மேலாய்வுக்களங்களைக் குறித்தல்

*ஆய்வு என்பது ஓருரைக்கண்ணே முடிந்துவிடுவதோ, நிறைந்துவிடுவதோ அன்று. ஆய்வு என்பது ஒரு தொடரோட்டம் என்பர் அறிஞர். எந்தவோர் ஆய்வுரையும் தன்னளவில் நிறைவுடையதாகலாம்; பொருள்நிறைவு பெறுதல் சிந்தனைக்குரிய ஒன்றே. எனவே, தான் கைக்கொண்ட உரைக்கண் முற்றுப்பெறாக் கருத்துக்களை மேலாய்வுக்குரியன எனக் குறித்துச் செல்வது நல்லாய்வர்தம் பண்பாகக் காண்கின்றோம். தேர்ந்த ஆய்வராகத் திகழ்ந்த மாணிக்கனார் உரைகளுள்ளும் இக்கூறு பரக்க விரிந்துள்ளது என்பதற்குச் சான்று ஒன்று தருவோம்.*



*சொல்லியமுறை பற்றிய கட்டுரைக்கண், "எழுதிணையுள் கைக்கிளை, பெருந்திணை, நடுவணது என்று மூன்றுக்கும் நிலமில்லாதிருக்கும்போது, நடுவணது ஒழிய வையம் பகுத்த பண்பு என ஒன்றை மட்டும் விலக்கியது பொருந்துமா? கைக்கிளையும் பெருந்திணையும் நிலம்பெறா என்று இதுபோல் வெளிப்படியான ஒரு சூத்திரம் வேண்டாவா? என்பவை மேலாய்வுக்குரியவை" (வ.சுப. மாணிக்கம் **1989: 174**) என எழுதுகின்றார்.*

*வ.சுப. மாணிக்கனாரின் தொல்காப்பியக் கட்டுரைகள் என்னும் இவ்வுரைக்கண் கூறப்பெறாத மாணிக்கனாரின் நடையியல், நடையியல் உத்திகள், கருத்துவிளக்க உத்திகள், அவற்றின் வன்மை; மென்மைகள், புதுச்சொல்லாக்கங்கள், உவமை நயங்கள் முதலானவை தனித்த பார்வைகளுக்குரியன.*

**முடிபுகள்**

*1. தொடரோ, பொருளோ, கருத்தோ தெளிவுற உணரப்படாத இடங்களை ஆய்வுப் பொருளாகக் கொண்டு மெய்ம்மையைக் கண்டறிந்து புலப்படுத்தும் மாண்பினர் மாணிக்கனார் என்பதற்குச் சான்றாக இந்நூற்கண் ஐந்தில் ஒரு பங்குக் கட்டுரைகள் அதாவது **6** கட்டுரைகள் வினாத் தலைப்புக்களைக் கொண்டிலங்குவதைக் கண்டறியலாம்.*

*2. சிக்கல்கள் எவையும் இல என நாம் கருதிக் கொண்டிருக்கின்ற இடங்களிலும் சிக்கல்கள் இருப்பதைத் தம் நுண்மாண் நுழைபுலத்தால் கண்டறிந்து தெளிவுபடுத்தியவர் வ.சுப. மாணிக்கனார் என்பதை அவர்தம் நூல்களைக் கற்போர் அறிவர்.*

*3. ஓர் ஆய்வுரை என்பது ஒரு புதிய உண்மையையேனும் எடுத்துரைப்பது என்னும் கருத்தை வ.சுப. மாணிக்கனாரின் நூல்களில் பரக்கக் காணலாம். அறிமுக ஆய்வுகளும், விளக்கமுறை ஆய்வுகளும், பகுப்புமுறை ஆய்வுகளும், தொகைமுறை ஆய்வுகளும் தமிழுக்குத் தேவை என்ற கருத்தை நாம் மறுக்கவில்லை. எனினும், சிக்கலை முன்னிட்ட ஆய்வுகளே தமிழின் சிறப்புக்கு மேலும் துணைபுரிவன என்ற உண்மையையும் நாம் உணரவேண்டும். வ.சுப. மாணிக்கனார் இவ்வகை ஆய்வுகளை மேற்கொண்டு தமிழாய்வு தழைக்க முன்னேர் செலுத்தியவர்.*

*4. தொல்காப்பியர் முதலான இலக்கணிகள் கூறாத கருத்துக்களும் அவர்தம் பெயரால் வழங்கி வருகின்ற உண்மையைப் புலப்படுத்திய பெருமை வ.சுப. மாணிக்கனாருக்கு உரியது. இவ்வகை ஆய்வுகள் தழைப்பது தமிழுக்கு நன்மையளிக்கும் எனச் சொல்ல வேண்டா. தமிழாய்வாளர்தம் கருத்து இவ்வகையிலும்செல்லும் என நம்புகின்றோம். அவ்வாறு செல்வது முன்னேர் செலுத்திய மாணிக்கனாருக்கு நாம் செலுத்தும் நன்றியாகும்.*

*5. முன்னர் மறுத்துரைத்த புலவர் குழந்தையின் கருத்தையே பின்னர் ஏற்றுப் போற்றுகின்றார் மாணிக்கனார். தமிழ் ஆய்வாளர்கள் இவ்வுண்மையை மனங்கொள்ள வேண்டும்; ஆய்வில் ஏற்றுப் போற்ற வேண்டும் என்பது நமது எதிர்பார்ப்பு.*

# தமிழறிஞர் வ.சுப.மா. ஒரு கலங்கரை விளக்கம்!

**செம்முதாய் சதாசிவம்**



*"தோன்றிற் புகழோடு தோன்றுக" எனும் திருவள்ளுவரின் வாக்கிற்கிணங்க வாழ்ந்து காட்டியவர் மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார். தமிழிலக்கிய உலகில் அவரின் பங்களிப்பு அளப்பரியது. தமிழ்மொழியை உணர்வு மொழியாகவும், சிந்தனை மொழியாகவும், பகுத்தறிவு மொழியாகவும் போற்றியவர். புதுக்கோட்டை மாவட்டம் மேலைச்சிவபுரியில் வாழ்ந்த வ.சுப்பையா செட்டியாருக்கும் தெய்வானை ஆச்சிக்கும் 17.4.1917 அன்று இரண்டாவது மகனாகப் பிறந்தவர். 'அண்ணாமலை' என்ற தம் இயற்பெயரை, மாணிக்கவாசகரின் திருவாசகத்தின்மீது கொண்டிருந்த ஆழ்ந்த ஈடுபாட்டால், 'மாணிக்கம்' என மாற்றிக் கொண்டார் எனச் சொல்லப்படுகிறது.*

*இளம்வயது முதலே பிள்ளைகளுக்குத் திருக்குறள், திருவாசகம், ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை நல்வழி முதலிய இலக்கியங்களைப் பிழையின்றி தகுந்த ஒலிப்புமுறையுடன் சொல்லிக் கொடுப்பாராம். அத்துடன் திருக்குறளில் ஓர் அதிகாரத்தை முழுதும் மனப்பாடமாகப் படித்து ஒப்புவித்தாலோ அல்லது பிழையின்றி எழுதிக் காட்டினாலோ பத்து முதல் இருபது பைசா வரைக் கொடுத்து ஊக்கப்படுத்துவாராம்.*

*ஒருமுறை காரைக்குடியில் இல்லத்தின் ஓர் அறையில் வ.சுப.மா., ஆழ்ந்து படித்துக் கொண்டிருந்தபோது, கொசு ஒன்று அவரது தோள்மீது அமர்ந்து குருதியைக் குடித்துக் கொண்டிருந்தது. இதைக் கண்டுவிட்ட அவருடைய மகள் தென்றல், அந்தக் கொசுவை அடித்து அப்பாவிற்கு நன்மை செய்து விட்டதாக நினைத்து அவரின் பாராட்டை எதிர்பார்த்து நின்றிருந்தாராம். அப்போது வ.சுப.மா., "படிப்பதில் கவனம் இருக்கும் போது கொசு கடிப்பது எப்படித் தெரியும்? நீ எனது தோளில் அடித்ததால் என் சிந்தனையோட்டம் தடைப்பட்டுவிட்டது" என்று கடிந்து கொண்டாராம்.*

*படிப்பதையும் எழுதுவதையும் வ.சுப. மாணிக்கனார் ஒரு தவமாகவே செய்து வந்திருக்கிறார். எல்லோரும் உறங்கிய பின் உறங்கி, அவர்கள் விழிக்கும் முன் விழித்து தமது கடமைகளைச் செம்மையுடன் செய்ததன் விளைவாகத்தான் கம்பர், வள்ளுவர், அகத்திணை ஆராய்ச்சி (தமிழ்க்காதல்), இலக்கியச்சாறு, கொடை விளக்கு, நெல்லிக்கனி, மாமலர்கள், மாணிக்கக்குறள், மனைவியின் உரிமை, உப்பங்கழி, தலைவர்களுக்கு, உலக முரசு, இரட்டைக் காப்பியங்கள், நகரத்தார் அறப்பட்டயங்கள், தற்சிந்தனைகள் முதலிய முப்பதுக்கும் மேலான நூல்களை அவரால் எழுத முடிந்திருக்கிறது. இந்நூல்கள் அனைத்தும் தமிழக அரசால் 2007ஆம் ஆண்டு நாட்டுடைமை ஆக்கப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது.*




காரைக்குடி அழகப்பச் செட்டியார் கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றிய போது இவரின் தமிழ்ப் புலமையைக் கண்ட அரசர் முத்தையவேள் செட்டியார் 1970இல் தமது அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைக்கு அழைத்து தலைவர் பொறுப்பை அளித்துப் பெருமைப்படுத்தினார். ஏழு ஆண்டுகள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அவர் செய்த தமிழ்ப்பணிகள் இன்று விருட்சங்களாய் வளர்ந்து நிற்கின்றன.

சங்கப்பாக்களின் நுட்பங்களையெல்லாம் கட்டுரைகளாக வடித்தவர். பிசிராந்தையார், 'யாண்டு பலவாக' என்று தொடங்கும் புறப் பாடலில், 'மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்' என்று குறிப்பிட்டிருப்பார். இதில் வரும் 'ஒடு' என்ற சிறு சொல் மனைவி ஒருத்தி, மக்கள் பலர் எனப் பிரித்துப் பொருள் தருவதாக அமைகிறது. இச்சொல் இடம் பெறாதிருக்குமானால் மனைவியும் பலர், மக்களும் பலர் எனப் பொருள் மாறுபட்டிருக்கும் என்பதனை வ.சுப.மாணிக்கனார் சுவையுடன் தெளிவுபடுத்துவார்.

இவர் உரைநடையில் கையாளும் சொல்லாக்கங்கள் பல அரியவை. 'காற்று எனும் சொல் மக்கள் வழக்கிற்குரியது என்றும், வளி என்னும் சொல் இலக்கிய வழக்கிற்குரியது என்றும் பலர் கூறுவார்கள். ஆனால், பொதுமக்கள் சூறாவளி என்னும் வழக்கில் வளி என்னும் சொல்லினை மிக எளிதாகப் பயன்படுத்துகிறார்கள்' என்று 'இலக்கிய விளக்கம்' எனும் நூலில் குறிப்பிடுகிறார்.

வ.சுப. மாணிக்கனார் எதையும் புதிய நோக்கில் சிந்திக்கும் ஆற்றல் படைத்தவர். 'எந்தச் சிலம்பு?' எனும் நூலில் கண்ணகியின் சிலம்பு தான் சிலப்பதிகாரம் என்று பெயர் இடுவதற்குக் காரணம் எனப் பலரும் கூறிவரும் நிலையில், இவரோ பாண்டியன் நெடுஞ் செழியனின் மனைவி பாண்டிமா தேவியின் சிலம்புதான் நூற்பெயர்க்குக் காரணம் எனக் கூறுவது புதுமை.

முந்நீர் என்பது ஆற்றுநீர், ஊற்றுநீர், மழை நீர் எனும் மூன்றும் நிறைந்த கடலைக் குறிக்கும் சொல் என்பது புறநானூற்று உரையாசிரியர்களின் கருத்து, முந்நீர் எனும் சொல் படைத்தல், காத்தல், அழித்தல் எனும் மூவகைச் செயல்பாடுகளையும் குறிப்பது என்பது அடியார்க்குநல்லாரும், நச்சினார்க்கினியரும் கூறும் கருத்து, இவ்விரு கருத்துகளையும் மறுத்து வ.சுப.மாணிக்கனார். "முந்நீர் எனும் சொல் முப்புறம் தமிழகத்தை வளைத்துக் கிடக்கும் ஒரு பெருநீர்ப்பரப்பைக் குறிப்பது என்பதனையும், தீபகற்பமாகிய நிலவடிவைச் சுட்டுவது என்பதையும் இடைக்கால உரையாசிரியரெல்லாம் எண்ணிப் பார்க்கவில்லை" (தமிழ்க்காதல் ப. 152) என்று குறிப்பிடுகிறார்.

பண்டிதமணி மு.கதிரேசன் செட்டியாரின் மாணவர் என்கிற தனித்த அடையாளம் வ.சுப.மாணிக்கனாரிடம் எப்போதுமுண்டு. தமது இல்லத்திற்குக் 'கதிரகம்' என்றே பெயர் சூட்டி மகிழ்ந்தார்.

அவரது எழுத்தும் பேச்சும் தமிழ்நலம் சார்ந்தவையாகவே இருந்தன. தமிழ் வழிக்கல்விகாகப் பல்வேறு ஊர்களுக்குச் சென்று கூட்டங்கள் நடத்தி விழிப்புணர்வை ஏற்படுத்தியவர். எத்தனை இடர்வரினும் நடுவுநிலையோடு நின்று உண்மையின்

அடையாளமாய்த் திகழ்ந்தவர். எழுத்திலோ, பேச்சிலோ எவர் பிழை செய்யினும் நெஞ்சுரத்துடன் உடனே வெகுண்டெழுந்து நேருக்கு நேர் சுட்டிக்காட்டும் இயல்பினர்.

ஒவ்வொரு மனிதரும் ஒரு குறிக்கோளுடன் வாழவேண்டும் என்பதே வ.சுப.மா.வின் வேண்டுகோள். கவர்ச்சி தரக்கூடிய கேளிக்கைப் பேச்சுகளில் பொழுதைக் கழிப்பதை விடுத்து சங்க இலக்கியம், திருக்குறள், திருவாசகம், சிலப்பதிகாரம், கம்பராமாயணம், மூதுரை, நல்வழி, கொன்றைவேந்தன், ஆத்திசூடி உள்ளிட்ட உயர்வான நோக்குடைய இலக்கியங்களைக் கற்று வாழ்வைச் செம்மைப்படுத்திக் கொள்ளுதல் வேண்டும் என்பதே வ.சுப.மா.வின் கருத்து. ஒரு நூற்றாண்டைக் கடந்தும் (24.4.1989) தமிழ் நெஞ்சங்களில் நிலைத்து நின்று வாழ்பவர் வ.சுப.மாணிக்கனார். தமிழ்ச் சமூகத்திற்கு அவர் ஏற்றிய ஒளி கலங்கரை விளக்கமாய் என்றும் அணையாமல் ஒளிர்ந்து கொண்டிருக்கிறது.

தமிழின் மறுவுருவாய் வாழ்ந்து மறைந்த மூதறிஞர் வ.சுப.மாணிக்கனாரின் நூற்றாண்டு விழாவைப் பலரும் சிறப்பாகக் கொண்டாடிவரும் நிலையில், தமிழக அரசு அவருக்கென தனியொரு நினைவிடம் அமைத்து, விழாவெடுத்து, சிறப்பு செய்தால் தமிழ்கூறும் நல்லுலகம் பெருமை கொள்ளும். அந்நாள் எந்நாளோ?

- தினமணி தமிழ்மணி, *16.04.2017*



## மாணிக்கச் சிந்தனைகள்

- **புகழ் பெறுவதில் விருப்பம் இருப்பது தவறில்லை; எனினும், அதற்குரிய செயல் விருப்பம் வேண்டும்.**
- **தளர்ச்சி வருதல் இயல்பே; அதனை நிமிர்த்திக் கொள்ளுதல் அறிவுடைமை.**
- **நன்றியுணர்வு மனிதப் பண்புகளுள் தலையாயது. மனத்தைப் பண்படுத்துவது.**
- **பெருமை பொறுமையால் வலிமை பெறும்; பொறுமை, தெளிந்து துணியும் செயலால் வலிமை பெறும்.**
- **சிலவற்றைப் பொருட்படுத்தாமல், அலட்டிக் கொள்ளாமல் இயல்பாக விட்டுவிடுவது வாழ்வு முறையுள் ஒன்று.**
- **விளங்காமற் பேசுவர் சிலர்; திமிரினால் பேசுவர் சிலர்; இவ்வாறு பாடறிந்து செயல்பட வேண்டும்.**



மாணிக்கத் தமிழ்

# தமிழ் யாத்திரை

வணக்கம் ஐயா,

*வணக்கம்*

ஐயா அவர்களின் தமிழ்த்தொண்டு மிகவும் போற்றுதற்குரியது– பாராட்டுதற்குரியது எல்லாரும் பின்பற்றுதற்குரியது. தங்கள் வாழ்க்கை அனுபவங்களைத் தங்கள் வாக்கினாலே கூறக்கேட்டால் பலருக்கும் பயனுள்ளதாக அமையும் என்ற வகையிலே இந்த நிகழ்ச்சியிலே தங்களைப் பற்றிய பல கருத்துகளையும் கூற வேண்டும் என்று வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். ஐயா அவர்கள் தமிழ் கற்க வேண்டுமென்ற ஆர்வம் எப்படி வளர்ந்தது?

*அதை ஒரு சிறு கதை நிகழ்ச்சி என்றே சொல்ல வேண்டும். நான் 6ஆவது வகுப்பு வரையிலேதான் என்னுடைய ஊர்ப்பள்ளியில் படித்திருந்தேன். 11 வயதுக்கப்புறம் பர்மா நகருக்குச் சென்று கணக்குப்பிள்ளையாக 7 ஆண்டுகள் வேலை பார்த்தேன். அப்பொழுது எனக்கு வயது 18. அன்று ஒரு பெரிய மாறுதல் நிகழ்ந்தது. அந்தப் பெரிய மாறுதலான நிகழ்ச்சிதான் என்னுடைய பல்வேறு வாழ்க்கை நெறிகளுக்குக் காரணமாகும். 18ஆவது வயதில் எனக்கு இயல்பான ஒரு உணர்ச்சி வந்தது. வாழ்க்கையில் பொய்சொல்லக்கூடாது என்று தானே எனக்கு யாரும் சொல்லாமலே, ஒரு உணர்ச்சி எனக்குத் தோன்றியது. அது என்ன ஆயிற்றென்றால்- அந்த நிகழ்ச்சியில்- நான் கணக்குப்பிள்ளையாக இருந்தபொழுது, ஒரு நாள் வருமான வரி அலுவலகத்திலிருந்து பார்க்கும்படியாக ஒரு உத்தரவு வந்தது. அன்று நல்லகாலமாக எனக்கு மேற்பட்ட கணக்குப்பிள்ளைகள் யாருமில்லை. நான் மாத்திரம்தான். அன்று சிறு கணக்குப்பிள்ளையாக இருந்தேன். மேலவர் என்ன கூறினார் என்றால், நீ போய் வருமான வரி அலுவலகத்தில் யாருமில்லை என்று சொல்லிவிட்டு வா என்று கூறினார். எனக்கு அச்சமாக இருந்தது. நீங்களெல்லாம் இருக்கும்போது நான் எப்படிப் பொய் சொல்லுவது? என்று நான் சொல்லிவிட்டேன். பொய் சொல்ல முடியாது என்று நான் மிகவும் நடுக்கமாகச் சொல்லிவிட்டேன். அந்த நிகழ்ச்சிதான் பர்மா தலைநகரிலிருந்து மறுபடி தாயகத்திற்கு வரவும், தமிழ் படிக்கவும், அந்த வாய்மைக் குறிக்கோள்தான் எனக்கு*

*ஒரு பெரும் காரணமாக இருந்தது.அந்த வாய்மைக் குறிக்கோள்தான் எனக்கு ஒரு பெரும் காரணமாக இருந்தது என்பதனை என்னுடைய வாழ்க்கைக்கெல்லாம் அடக்கமான ஒரு குறிக்கோளை நான் வானொலி மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.*

ஐயா அவர்கள் பர்மாவிலிருந்து தாயகம் திரும்பிய பிறகு எப்படித் தமிழ் கற்றீர்கள்?

*வாய்மைக்குறிக்கோளை நிறைவேற்றவேண்டுமென்றால், படிப்புத்தான் வேண்டு மென்று நான் நினைத்து, பண்டிதமணி அவர்களின் துணையாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்குச் சென்று, புலவர் வகுப்புப் படிக்கத் தொடங்கினேன். அது, வாய்மையை நிறைவேற்றுவதற்காகத்தான் தமிழ் கற்கத்தொடங்கினேன் என்று கூடச் சொல்லிவிடலாம்.*

தங்களை மிகவும் கவர்ந்த அல்லது தங்களுக்கு வழிகாட்டியாக அமைந்த தமிழறிஞர் என்று யாரைக் குறிப்பிடலாம் ஐயா?

*எனக்குப் பாடம் நடத்திய பலரும் பெரும்புலவர்கள்தான். மகா மகோபாத்தியாய பண்டிதமணி, நாவலர் வேங்கடசாமி நாட்டார், மகாவித்துவான் ரா.ராகவையங்கார் இப்படி பலபெரும் புலவர்கள்- இலக்கிய வரலாற்றில் இடம்பெறுகின்ற பலபெரும்புலவர்கள் எனக்குப் பாடம் நடத்தினாலும், பொதுவாக என் வாழ்க்கைக்குத் துணையாகவும்,அறிவுக்கு ஒளிகாட்டியாகவும் இருந்தவர் பண்டிதமணி கதிரேசச்செட்டியார் என்று நான் கருதுகிறேன்.*

ஐயா அவர்கள் தமிழ் கற்கும் காலத்திலே, தமிழ் இலக்கியங்களில் இடம்பெறுகின்ற பல செய்யுட்களையும் மனப்பாடமாகப் படித்திருந்திருப்பீர்கள். அந்த வகை எவ்வாறு இருந்தது என்பதைச் சற்று விளக்கமாகச் சொல்லலாமா?

*பொதுவாக அழுத்தமான படிப்பிற்கும், நீண்ட ஆய்வுக்கும் இளமைக்காலத்தில் மிகுதியாக மனப்பாடம் பண்ணுவது நல்லது என்பது என்னுடைய அனுபவம். இலக்கிய மாக இருந்தாலும் சூத்திரமாக இருந்தாலும், ஓரளவு உரைகளைக் கூட நல்ல நடைக்கு மனப்பாடம் செய்து கொண்டால், அது பின்னே நமக்கு ஒரு வற்றா வளமாக இருந்து நூல் இல்லாமலே நாமே நினைந்து ஆராய்தற்குத் துணை செய்யும். ஆனால் மனப்பாடத்தை இக்காலத்து மக்கள் இகழுகிறார்கள். நம்முடைய மரபுப்படி மனப்பாடம் மிக இன்றியமை யாதது. இளமையில் இன்றியமையாதது என்று நான் கருதுகிறேன். மிகுதியான பலவற்றை மனப்பாடம் செய்திருந்த காரணத்தினால்தான் என்னுடைய ஆய்வு ஓரளவுக்கு அழுத்தமாக இருக்கிறது என்று கூடக் கருதலாம்.*

ஐயா அவர்கள், எந்த இலக்கியத்தில் எந்தக் காப்பியத்தில் அதிகமாக மனப்பாடம் செய்திருக்கிறீர்கள் என்று சொல்லுங்களேன்...

*திருக்குறள் முழுதும் மனப்பாடம் உண்டு. சிலப்பதிகாரம் முழுதும் மனப்பாடம் உண்டு. சங்கஇலக்கியத்தில் இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட பாடல்களில் ஆயிரத்திற்கு மேற்பட்டவை மனப்பாடம் உண்டு. தொல்காப்பியம் முழுதும் மனப்பாடம் உண்டு. திருவாசகம் முழுதும் மனப்பாடம் உண்டு என்று நான் கூறலாம்.*



தொல்காப்பியத்தில் தனிநாட்டம் கொள்ளக் காரணமாக அமைந்த நிகழ்ச்சி என்று எதாவது குறிப்பிடலாமா?

*தொல்காப்பியத்துக்குரிய சிறப்புக்குக் காரணம் அவர் காலத்தால் அழியக்கூடிய இலக்கணங்களை எழுதவில்லை. காலங்கடந்தும் தமிழுக்கு உறுதுணையாகக்கூடிய இலக்கணங்களைத்தான் அவர் எழுதியிருக்கிறார். அவ்வளவு இலக்கணங்களையும் எழுதிக் கழிக்காமல் தமிழ் என்றும் வாழத்தக்க இலக்கணக் கூறுகள் என்ன? என்று காலங்கடந்த இயற்கையான இலக்கணக் கூறுகளை எழுதியிருக்கின்ற காரணத்தினாலே அந்தத் தொல்காப்பியம் இன்றும் பயன்படக் கூடிய ஒரு புதுநூலாக இருக்கிற காரணத்தினாலே எனக்கு அதிலே அதிக ஈடுபாடு உண்டு.*

தொல்காப்பியத்தைக் குறிப்பிட்டு ஏதாவது ஒரு தமிழறிஞரிடத்துத் தாங்கள் விளக்கம் பெற்றுக் கற்றீர்கள் என்று சொல்லலாமா?

*எனக்குப் பாடப்பகுதியாக இருந்தது என்பதைத் தவிர, தனிநாட்டம்தான் அதில் முக்கியம் என்று கருதுவேன்.*

பொதுவாக இலக்கணம் என்றால் சிலருக்கு கசப்பாகத் தோன்றுவதாகக் கூறுவார்கள். ஆனால் தாங்கள் மிகவும் சுவையோடு அதனைக் கற்றிருக்கிறீர்கள். இலக்கணம் கற்க அல்லது அதில் சுவை கொள்ளத் தாங்கள் கூறும் அறிவுரைகள் என்று எதாவது சொல்லுங்களேன்...

*பொதுவாகக் கசப்பு என்பது வாழ்க்கைக்கு நல்லது என்பதை மருந்து வகையினாலும் நாம் அறிவோம். அதனால் கசப்பு என்று சொல்வதிலிருந்தே அந்த இலக்கணம் வாழ்க்கைக்கு இன்றியமையாதது என்று நாம் கருதலாம். ஆனால் இலக்கணம் படிப்பதென்பது எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் கூறுவதற்கு என்று கருதுவது மிகப்பிழை.*

*ஒழுங்கான வாக்கியம் எழுதுவதற்கும் ஒழுங்கான எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் கூறுவதற்கும் இலக்கணமே தேவையில்லை. பேச்சே போதும். இலக்கணத்தை ஏன் படிக்கிறோம் என்றால் புதிய சொல்லை எங்ஙனம் ஆக்கலாம், பழைய சொற்களில் எப்படி உருவாக்கலாம்? எது மரபு? இலக்கணம் மரபைக்காட்டுவதேதவிர, கேவலம், எழுவாய், பயனிலை, வாக்கியம் என்ற மொழியமைப்பைக் காட்டுவதில்லை.அது மரபைக்காட்டுவது, நம்முடைய நாகரிகத்தைக் காட்டுவது என்று நினைத்தால், இலக்கணத்தையும் இலக்கியம்போலப் படிக்க ஓர் ஆசை ஏற்படும் என்று நான் கருதுகிறேன்.*

தாங்கள் மிகவும் ஆராய்ந்த நூல்கள் பற்றிச் சிலவற்றைக் குறிப்பிடுங்கள். இவற்றில் இளைஞர்களின் ஆய்வுக்குத் தகுந்த சில குறிப்புகளையும் சொல்லுங்கள் ஐயா...

*என்னுடைய கல்வியின் ஒரு பெருநோக்கம் ஆய்வு என்று என்னை அறிந்தவர்கள் நன்றாக அறிவார்கள். அந்த ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளும்பொழுது, தேர்ந்து எடுக்கின்ற பொருள் கூடியவரை சிக்கலாக இருக்க வேண்டும். தொகுப்பாகவோ, கருத்துரையாகவோ இருந்தால், அது ஆய்வுக்கு ஒரு பெரிய வளந்தராது. எந்த இடத்தில் எது சிக்கல்?என்று சிக்கலான இடங்களை நாம் கண்டுபிடித்து ஆராய்வதுதான் ஆராய்ச்சியினுடைய*

வன்மைக்குப் பயன்படும். இன்னொன்று, ஆராய்ச்சியில் நாம் தெரிந்துகொள்ளவேண்டும். பொதுவாகப் பல்லாண்டு கூறப்பட்ட கருத்துக்களைக்கூட, அது சரியா என்று ஆராய்வது ஆராய்ச்சியினுடைய பெருங்கூறு. ஓர் எடுத்துக்காட்டு சொல்லுகிறேன். சிலப்பதிகாரத்திற்குச் சிலம்பு என்ற பெயர் கண்ணகியின் சிலம்பால் வந்தது என்று 1500 ஆண்டுகளாக நாம் கொள்ளுகிறோம். அந்தக் கருத்து எனக்கு உடன்பாடு இல்லை. அங்கே இருக்கின்ற

எல்லாச் சிலம்பாலும் வந்ததே தவிர, கண்ணகி ஒருத்தியினுடைய சிலம்பால் மாத்திரம் இல்லை என்று நான் அதனை மறுத்து எழுதியிருக்கிறேன். இவ்வாறு பொதுவாக வழித்தடமாகக் கூறப்பட்ட கருத்துக்கள் கூட, சரியா? திருக்குறளுக்குப் பொதுமறை என்று சொல்வது சரியா? என்று இப்படி எடுத்துப்பார்த்தால், நடைமுறையிலே அடிபட்ட கருத்துக்கள் கூடக் கிளறிப்பார்க்க வேண்டிய தேவை தமிழ் ஆராய்ச்சிக்கு உண்டு என்று நான் சொல்ல விழைகிறேன்.

ஐயா, தாங்கள் மிகவும் ஆராய்ந்த நூல்கள்பற்றிச் சில விவரங்கள் தாருங்களேன்...

திருக்குறளை நான் மிகவும் ஆராய்ந்து, ‘வள்ளுவம்’ என்ற ஒரு நூலில் அதனைப் பற்றி எழுதி, அது செயல் நூல் என்று முடித்திருக்கிறேன். பொதுமறையன்றி, அது வாழ்க்கைக்கு நடைமுறைக்கு ஏற்ற செயல்நூல். கூறப்படுகின்ற அறங்களெல்லாம் நம்முடைய நாள்வாழ்க்கைக்கு ஏற்ற வாழ்க்கை நூல், செயல் நூல் என்ற கருத்தை வள்ளுவம் என்ற நூலில் நிறுவியிருக்கிறேன். அடுத்து, சங்க இலக்கியத்தைப் பற்றி மிகவும் ஆராய்ந்து, அகத்திணை என்பது தூய தமிழ் இலக்கியம், இன்றைய வாழ்க்கைக்கும் அந்தக் காதல் ஒழுக்கம் பயன்படும் என்று கூறியிருக்கிறேன். ‘கம்பர்’ என்ற நூலில், கம்பரைத் தனித்தனிப்பாடல்களாகப் படிக்காமல், காப்பியத்தை முழு நூலாகப் படிக்க வேண்டும். முழுநோக்கோடு படிக்கவேண்டும் என்ற காப்பிய அறத்தையும் வலியுறுத்தியிருக்கிறேன்.

ஐயா அவர்கள் படைத்த தமிழ் நூல்கள் பற்றிக் குறிப்பிடுங்களேன்...

நான் முதல்ல எழுதிய நூல் நாடக நூல் என்று நீங்கள் தெரிந்துகொள்ளவேண்டும்.அதற்குக் காரணம் தமிழில் வடமொழிபோல நாடக நூல்கள் இல்லை. ஆங்கிலம் போல நாடக நூல்கள் இல்லை. தமிழுக்கு நாடகம் இல்லாதது ஒரு குறையாக இருக்கிறது. இக்காலத்தில், சிறுகதைகளும், புதினங்களும் அதிகமாக எழுதிவருகிறார்கள். நாடகத்துறை குறைவாக இருக்கின்றது என்று நினைத்து, நான் என்னுடைய தொடக்கநூலாக, ‘மனைவியின் உரிமை’ என்ற நாடக நூலை எழுதினேன். அப்படி நான்கு நாடக நூல்கள் எழுதியிருக்கிறேன். அவற்றுள் குறிப்பிடத்தக்க ஒன்று, ‘ஒரு நொடியில்’ என்பது. என்னுடைய நூல்களெல்லாம் ஏறக்குறைய கலப்புநடையாக இல்லாமல், தூய நடையாக இருக்கின்றமையாலே, ஒரு சாரார் அது நாடகத்திற்குக் குறைவு என்று கருதுகிறார்கள்.

நான் மொழியைப் பற்றிக் கவலைப்படாமல், நாடக அமைப்பைப் பற்றி எண்ணுகின்றவன் ஆதலால், ‘ஒரு நொடியில்’ என்று (எழுதியது) குறிப்பிடத்தக்க நூல் அது. தற்கொலை கூடாது என்று தற்கொலை நிகழ்ச்சிகளையெல்லாம் ஆராய்ந்து, இன்னின்ன காரணங்களால் தற்கொலைக்கு எண்ணங்கள் எழுகின்றன என்று தற்கொலைகளைச் சமுதாயத்தில் தடுக்கும்



நோக்கத்தோடு, 'ஒரு நொடியில்' என்று சமுதாயத்திற்கு ஏற்ற ஒரு பெரிய நாடக நூலை எழுதியிருக்கிறேன்.

தமிழ் காரணமாகத் தங்களுக்குக் கிடைத்த பெருமைகள் என்று ஏதாவது சொல்லுங்களேன்

*நீங்கள் கேட்பதனால் சிறிது நான் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். நீங்கள் நினைக்கின்ற அளவுக்குப் புகழ்ச்சிக்குரிய கருத்துகள் இல்லாவிட்டாலும் இயல்பான சிலவற்றைக் குறிப்பிடலாம். இயல்பான பட்டங்கள் ஒருபுறம் இருந்தாலும் கூட அண்ணாமலைப்பல்கலைக்கழகம் தன்னுடைய பொன்விழாவில் என்னை அழைத்து*

*டி.லிட் பட்டம் கொடுத்தது. நான் அதைப் பெரிதும் சிறப்போடு மதிக்கிறேன். காரணம் என்னவென்றால் தமிழுக்குக் கொடுத்தது மாத்திரம் அன்று . நான் அந்தப் பல்கலைக் கழகத்தில் படித்த மாணவன் என்பதும் மற்றொரு பெருமையாகும்.*

ஐயா அவர்கள் ஆராய்ச்சி நூல்கள் எழுதுகின்ற காலத்திலே எந்த நேரத்தில் எழுதுவீர்கள்?

*ஆராய்ச்சிக்குத் தக்கநேரம் என்று நான் கருதுவது காலையில பத்து மணிவரை தக்கநேரம் எனவும், மாலையில் நாலிருந்து பதினோரு மணிவரை தக்க நேரம் எனவும் இடைப்பட்ட நேரங்களிலே எல்லாம் அதற்கு உரிய கருத்துகளைத் தொகுப்பது அதற்குரிய நூல்களைப் படிப்பது என்பதைப் பெரும் மரபாக வைத்துக் கொண்டிருக்கிறேன்.*

ஐயா அவர்கள் பல நூல்களைச் சேகரித்திருக்கலாம்.

*நான் - எனக்கு - மாணவனாகச் சென்ற நாள் முதல் இன்றுவரை புதிய புதிய நூல்களை வாங்கி ஒரு பெரிய நூலகம் சேர்த்து என்னுடைய ஆராய்ச்சிக்குரிய நூல்கள் அவ்வளவும் கூடியவரையில் இருக்கும்படியாக ஒரு மூவாயிரம் நூல்கள் என்னுடைய நூலகத்தில் என்னுடைய ஆராய்ச்சிக்குரியனவாக இன்றும் இருக்கின்றன. இன்றும் நான் புதிய நூல்கள் வாங்குவதிலே அதிக நாட்டம் உடையவனாக இருக்கிறேன்.*

பழந்தமிழ் இலக்கியங்களில் இன்றும் கூடத் தாங்கள் எடுத்து விரும்பிப் படிக்க வேண்டும் என்று விரும்புகிற ஏதாவது ஒரு நூல் குறிப்பிடலாமா ஐயா...

*நீங்கள் கேட்கும்போது நான் ஒன்றைச் சொல்ல வேண்டும். எனக்குத் தொல்காப்பியத்தில ஒரு ஈடுபாடு, சங்க இலக்கியத்தில் ஈடுபாடு இருந்தாலும் நான் இன்றுவருகிற நூல்களிலேயும் அதிக ஈடுபாடுடையவன். உங்களுக்கு ஒரு குறிப்பைச் சொல்லுகிறேன் . திரைப்படப்பாடல்களினுடைய தொகுதி என்னிடத்தில் மிகுதியா இருக்கும். அந்தவகையில் நான் பழநூல் புதுநூல் என்று அவ்வளவு வேறுபாடு பார்ப்பதில்லை. இன்றும் கூட நேற்று வந்த திரைப்படத்தின் ஒரு பாடலைக்கூடப் பத்துப் பைசா கொடுத்துச் சேர்த்து வைக்கின்ற பழக்கம் எனக்குண்டு என்பதனைத் தொல்காப்பியம் கற்றாலும் என்னுடைய புதுமையையும் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும்.*

ஐயா, தாங்கள் தமிழ்த்துறைத் தலைவர், முதல்வர் என்று பல பதவிகளையும் பின்னர் துணைவேந்தர் என்ற பல முக்கியப் பொறுப்புகளையும் ஏற்றுப் பணியாற்றி வந்திருக்கிறீர்கள்.தற்போது செய்து வரும் அல்லது செய்ய முனைந்திருக்கும் தமிழ்ப்பணி பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்...

என்னுடைய எழுத்துப்பணி பல காலம் - நாற்பதாண்டு பதவியிலே இருந்த காரணத்தினாலே தொடர முடியாமல் அரைகுறையாகச் சில பணிகள் இருக்கின்றன. தொல்காப்பியம் போலக் காலத்திற்கு ஏற்ற ஓர் இலக்கணமும் திருக்குறள் போலக் காலத்திற்கு ஏற்ற ஓர் அறநூலும் சிலப்பதிகாரம் போலக் காலத்திற்கு ஏற்ற ஒரு காப்பியமும் எதிர்காலத்திற்கேற்ப இந்த மூன்று நூல்களும் என்று கருதிய கருத்துக்கள் கருத்துகளாக இருக்கின்றனவே தவிர, இன்னும் வடிவுபெறவில்லை. இவை எதிர்காலத்தில் வடிவு பெறும் என்று நான் நம்புகிறேன். என்னுடைய சில எழுத்துப்பணிகள் முடிந்ததற்குப் பின்னர், நாட்டில் தமிழ் யாத்திரை என ஒன்று தொடங்கி, தமிழைப்பற்றி முறையாக எங்கும் படிக்கவும் பரவவும் தமிழ் யாத்திரை என்ற ஒன்று ஏற்பட்டு அது செய்யவேண்டும் என்றஒரு நோக்கமும் எனக்கு உண்டு.

தங்களுடைய வாழ்க்கை அனுபவங்களையும் தமிழ்த்துறையில் தங்களுக்குள்ள ஆழ்ந்த புலமையையும் எல்லோர்க்கும் பயன்படும் வகையிலே எடுத்துச் சொன்னதற்கு நன்றி வணக்கம்.

வணக்கம்.

***-(வ.சுப.மாணிக்கனார் 100 தமிழ் யாத்திரை ஆவணப்படத்தில் ஒலிக்கும், 'மாணிக்கக்' குரலின் எழுத்து வடிவம்)***



## 'மாணிக்க' மொழி

***ஓர் உண்மை கூறவேண்டும். ஆட்சியினால் எனக்கு இடையூறில்லை. தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் என்னிடம் ஒரு பரிந்துரை கூடச் செய்ததில்லை. என் ஆட்சி நலத்தைப் பாராட்டிப் பேராதரவு அளித்தார். பல்கலைக்கழக ஊழியர்கள் குற்றஞ்சாட்டப்பட்டு வழக்குக்கு இடனாக இருந்தபோது என் பல்கலைக்கழக ஊழியர்கள் இப்போது நன்றாக நடந்துகொள்கின்றனர். அவர்கள் மேலுள்ள வழக்குகளைத் தொடராது விட்டுவிட வேண்டுகிறேன் என்று என் கைப்பட ஒரு வேண்டுகோள் விளம்பரப்படுத்தாது எழுதியிருந்தேன். என் வேண்டுகோளை மதித்து உடனே ஏற்று அங்ஙனம் வழக்கினைத் தொடராது விட்டுவிடும்படி மதுரை மாவட்ட ஆட்சியர்க்கு அரசு ஆணை பிறப்பித்தது. இவ்வாறு என் துணைவேந்தர் பதவிக்காலத்துத் தமிழகவரசின் துணைபெற்றேன்.***

– மதுரைப்பொழிவு 1986.




## மடல் - ஒன்று

**டாக்டர் வ.சுப.மாணிக்கம்** காரைக்குடி
எம்.ஏ., எம்.ஓ.எல்., பி.எச்.டி., 27.12.67

***முதலமைச்சர் அறிஞர் அண்ணாதுரை அவர்கள்,***
***சென்னை.***

# மொழிச்சிக்கலும் தீர்த்தலும்

*மாண்புமிக்க அறிஞ,*

வணக்கமும் நலமும்.

மொழிச்சிக்கல் நாட்டுக் குழப்பமாக வளர்கின்ற இச்சூழ்நிலையில் மொழிநிலை பற்றிப் பல்லாண்டுகள் சிந்தித்தும் எழுதியும் வரும் என் கருத்துக்கள் தங்கள் பார்வைக்கு உரியவை என்று பணிவோடு எழுதுகின்றேன். 'தலைவர்களுக்கு' என்ற என் மொழி வெளியீட்டில், இந்திய ஆட்சி மொழியைப் பலநிலையிலும் ஆராய்ந்திருக்கின்றேன். தங்கட்கும் ஏனை நம் அமைச்சர்கட்கும் முன்னரே இந்நூலை அனுப்பியுள்ளேன். தங்கள் ஆட்சியில் தொடக்கத்திலேயே மொழிச்சிக்கல் இறுதியாகத் தீர்க்கப்பட வேண்டும் என்பது என் வேணவா. தங்கள் ஆட்சிக்காலம் முழுதும் இதனை நீட்டிக்க விடலாகாது.

நாட்டுப்பிரிவினை மொழிச்சிக்கலை ஒருகால் தீர்க்கலாம் என்றாலும் தீர்க்கவாராப் பல சிக்கல்கள் கிளைத்துவிடும். பர்மா அகதி, இலங்கை அகதி போல வடநாட்டகதி எனப் புதுத் தமிழகதிகள் வந்து சேருவர்; சில சாதிகள் இணைந்துகொண்டு, சில சாதிகளை அணைத்துக்கொண்டு சாதியாட்சி நடத்துவர். பிரிவினை எண்ணம் கொள்ளாதபடி தாங்கள்

பேசிவரும் மொழிப்பேச்சு தமிழும், தமிழகமும், தமிழரும் எல்லாம் வாழ நினைப்பவரின் வாழ்த்துக்கும் பாராட்டுக்கும் உரியது. பிரிவினையின்றியே ஆட்சிமொழிச் சிக்கலைத் தமிழினம் தீர்த்துக் கொள்ள வேண்டும், தீர்த்துக் கொள்ள முடியும். இந்திய ஒருமை எண்ணத்தை எவ்வகையானும் தளர விடலாகாது என்பது என் வேண்டுகோள்.

திராவிடநாடு தி.மு.க.வின் உயிர்க்கொள்கையாக ஒருகாலத்து இருந்தது. தாங்கள் துணிவுடைய தூய நல்லறிஞர் ஆதலின், அக்கொள்கையைத் துறந்தீர்கள். அதனால் தி.மு.க. எய்திய மதிப்பும், பரப்பும் ஆற்றலும் கொஞ்சமில்லவே. "ஆவது அறிவார் அறிவுடையார்" என்ற வள்ளுவத்தின்படி, தங்கட்கு அறிஞர் என்ற சிறப்புப் பெயர், நீருக்குத் தண்மை போல எவ்வளவு பொருத்தம் என்று கண்டு மகிழ்ந்தேன். அத்தகைய துணிவை இம்மொழித் தீர்ப்பிலும் தங்களிடத்துக் காண ஆசைப்படுகின்றேன்.

இனி என் கருத்துக்கள் வருமாறு

1. **தமிழ் உட்பட எல்லாத் தேசிய மொழிகளும் மத்திய அரசின் ஆட்சி மொழியாக வேண்டும்.** இதுவே தி.மு.க.வின் பழைய மொழிக் கொள்கையாக விளங்கியது. இப்போதும் இக் கொள்கை இருக்கலாம். எனினும், இல்லை என்ற அளவுக்கு மறைந்து கிடக்கின்றது. ஆட்சிக்கு வருவதற்கு முன் தெளிவாகக் கொண்டிருந்த இம்மொழிக் கொள்கையை ஆட்சிக்கு வந்தபின் - தேர்தலுக்குப்பின் - கட்டாயம் வலியுறுத்தி இருக்கவேண்டும். பாராள் மன்றத்தில் தமிழக உறுப்பினர்கள் எல்லாரும் தி.மு.க. உறுப்பினர்களே. என்ன அரிய புதிய வாய்ப்பு! அத்துணை உறுப்பினர்களும் பாராள்மன்றத்தில் தமிழில் பேசுவதையே கொள்கையாகக் கொண்டிருத்தல் வேண்டும். இந்தியப் பாராள்மன்றம் பன்மொழிமன்றம் என்பதனை நாடும், உலகமும் அறியச் செய்திருத்தல் வேண்டும். இனியாவது நம் உறுப்பினர்கள் ஆங்கிலம் தெரிந்திருந்தாலும், தமிழில் பேசுவார்களாக. தமிழ்ப் பேச்சை ஏனை மொழியுறுப்பினர்கள் கேட்டுக் கொண்டிருப்பார்களாக. மத்திய அரசு மொழி பெயர்ப்பில் உதவியை நாடுவதுபோல, பன்மொழியுடைய நம் பாராள்மன்றமும் மொழி பெயர்க்கச் செய்யட்டும். இதுவே இன்றைய உலகியல்.

2. பாராள்மன்றத்தில் இந்தியிலோ, ஆங்கிலத்திலோ தான் பேசலாம் என்றால், பாராள்மன்ற வேட்பாளர்க்கு மொழிவரம்பு ஏற்படுகின்றது. தமிழ் மாநிலத்தில் தமிழ் அறிந்தவர்களைத் தில்லிக்கு நிறுத்தும் உரிமை மறைமுகமாக அறுக்கப்படுகின்றது. மாநிலமொழி வேறு, மத்தியமொழி வேறு என்று ஆட்சியில் மொழிப் பிரிவினை கூடாது. இது பெருங்கேடு தருவது. மாநில மொழி நாளாவட்டத்தில் மறைமொழியாகி விடும்.

3. பலமொழி மத்திய ஆட்சியின் நடைமுறைக்கு ஒத்துவராது எனவும் ஆட்சி வேகமாக இயங்காது எனவும், ஒருமொழி இருமொழியளவோடு நிறுத்திக் கொண்டாற்றாம் ஆட்சிச் சகடம் இயங்கும் எனவும் பலர் கூறி வருவதை அறிவேன். இக்கருத்தை முழுதும் மறுப்பதற்கு இல்லை. ஆங்கில ஒருமொழி நாடு முழுதும் ஆட்சி செலுத்தக் கண்டவர்கள் நாம். அவ்வெளிமையை விட்டுவிட மனம் வராதது இயல்பே. ஆனால் இக்கொள்கை நம் நாட்டிற்கு நெடுகிலும் பொருந்தாது. மாநிலந்தோறும் வெவ்வேறு ஆட்சிமொழியும்,



சட்டமன்றங்களும், அமைச்சவையும், தேர்தல்களும் உடைய நம் நாட்டிற்குப் பொருந்தாது. வாக்குரிமைக்கு வயதை அடிப்படையாக வைத்திருக்கும் நம் பெருங்குடியரசுக்குப் பொருந்தாது. சிறந்த தொன்மொழிகளையும், இனங்களையும், நாகரிகப் பன்மைகளையும் உடைய நம் பெருநாட்டிற்குப் பொருந்தாது. ஒருமொழி ஆட்சி அடிமைக்காலத்தில் புகுத்தப்பட்டதேயன்றி உரிமைக் காலத்துக்கும் ஒத்து வாராது. இந்திய நாட்டிற்கு உரிமையும், ஒருமொழியும் இணங்கிப் போகா. உள்ளமொழியெல்லாம் மத்திய அரசின் ஆட்சி மொழியாதல் வேண்டும்.

**4.** ஒரு மதச் சார்பற்ற அரசு என்பது போல ஒருமொழிச் சார்பற்ற அரசு என நம் மத்திய அரசை ஆக்க வேண்டும். ஆட்சி எளிமை கருதி மக்களின் உரிமையைக் கைவிட முடியாது. தனித்தனி மாநில அரசுகள் இல்லாவிட்டால், எவ்வளவு எளிமை, எவ்வளவு சிக்கனம் என்று வினவ முடியுமா? மொழியுரிமை வழங்கவேண்டும். ஆட்சியில்வரும் சிக்கலை அகற்ற வழி பார்க்க வேண்டும். அரசியல் தலைவர்கள் இவ்வாறாகச் சிந்திக்க வேண்டும். மொழியையும் ஆட்சியையும் ஒன்றாகக் கருதலாகாது. விடுதலை பெற்றுக் குடியரசு வந்ததற்பின் எவ்வளவோ புதுப்புதுச் சிக்கல்கள் தோன்றியுள்ளன. விடுதலையையும் குடியரசையும் பழிக்க முடியுமா? இந்திய அரசு வடநாட்டவர்க்கு இந்தியரசாகவோ, தென்னாட்டவர்க்கு ஆங்கில அரசாகவோ இல்லாமல், இந்திய மொழிகள் எல்லாம் எங்கும் கூடிக் குலாவும் இந்திய அரசாகவும் பாராளுமன்றமாகவும் விளங்கவேண்டும். உரிமை நாட்டில் ஒரு மொழி ஒருமொழிக்குத் தடையாகக் கூடாது. மாநிலச் சட்டமன்றத்தில் கூட, இன்னொரு இந்தியமொழி பேசினால் மொழி பெயர்க்க இடம் இருத்தல் வேண்டும். புதுக்கருவிகளும் மொழிபெயர்ப்புக் கலையும் வளர்ந்து ஓங்கி வரும் இக்காலத்தில் பன்மொழியாட்சி அரிதன்று. பன்மொழி தவழும் நாட்டில் ஒருமொழியாதிக்கம் உரிமைக் கொல்லியாகும்.

**5.** நம் தமிழ், பாராள்மன்றத்தில், மத்திய ஆட்சியில் இடம் பெறுவதே இந்திக்கு உண்மையான உரமான எதிர்ப்பு. இந்தி நுழையும் இடத்தெல்லாம் முன்னரே தமிழை வீற்றிருக்கச் செய்ய வேண்டும். இந்திக்கு ஆங்கிலமே சரியாக எதிர்ப்பு என்று பலர் கூறும் கருத்து உடன்படத்தக்கதில்லை என்றளவில் என் மறுப்பை முடித்துக்கொள்கின்றேன். இந்திக்கு எதிர்ப்பாளர் பலர் தமிழுக்கு ஆதரவாளர் இல்லை. இந்தி வரக்கூடாது என்பது போலவே தமிழும் பல்கலைக்கழகத்து வரக்கூடாது என்பவரே எண்ணிறந்தோர். தமிழை அறிவியற்றுறையில் பயிற்றுமொழியாக்கும்போது தமிழ் எதிர்ப்பு வெளியாகும்.

**6.** உலகத்து எல்லா நாட்டு மக்களுக்கும் ஆங்கிலம் வேண்டுமளவு போல நமக்கும் வேண்டும். ஆங்கிலம் நமக்கு உரம். தமிழே விளைநிலம். போர்க்கால வேகங்கொண்டு, அறிவியல் முதலான எல்லாத் துறைகளிலும் தமிழ்ப் பட்டதாரிகளைப் பெருக்கி விட வேண்டும். இப்பட்டதாரிகளே இந்திக்கு வேலியாகவும், மொழி வீரர்களாகவும் விளங்குவர். இவர்தம் கல்வியே தமிழைக் காக்கும். தங்கள் அருமையான ஆட்சிக் காலத்திலும் தமிழில் பல்துறைப் பட்டதாரிகள் தொகை தொகையாகத் தோன்றாது போய் விடுவார்களாயின், ஐயகோ, தமிழின் நிலை என்னாம்? இன்றுள்ள ஆங்கிலத் தமிழர்கள்

வேலை கருதி ஒரே பாய்ச்சலில் நாளை இந்தித் தமிழர்களாக மாறிவிடுவர். தமிழ்நாட்டில் இந்தி வைக்காவிடினும் வடநாட்டில் குடிகுடியாகத் தங்கியிருந்து இந்திப் பட்டதாரிகள் ஆகி விடுவர். இதுவே இதுகாறும் இழிந்த தமிழகத் தமிழ் வரலாறு. இத்தகைய வேலைத் தமிழர்களை நம்பி நாம் ஆங்கிலத்தை இனியும் இன்று போல் நெடுங்காலம் அணைத்து வைத்துக் கொள்ளக் கூடாது. அணைத்துக் காத்து வளர்த்தற்கு உரியவள் அன்னையே.

7. ஒருபெருஞ் செல்வாக்கு உடைய தமிழரிடை இன்று இந்திக்குக் காணப்படும் எதிர்ப்பு நெஞ்சான எதிர்ப்பில்லை. இந்தியில் நன்கு தேர்ச்சியடைவதற்குக் காலம் வேண்டியிருக்கும் சமய எதிர்ப்பேயாகும். வடநாட்டில் வேலை வேண்டும் தமிழர் எப்படியும் இந்தியைக் கற்றுக் கொள்வார்கள். ஆங்கிலத்தையும் இன்னும் அயல் மொழிகளையும் கற்றுக் கொள்வார்கள். ஆதலின் தமிழக அரசு செய்யக் கடமைப்பட்டது தமிழ் வளர்ச்சியேயாகும். ஒவ்வொரு தமிழனையும் தமிழில் துறைப் பட்டம் பெற வழி வகுப்பதேயாகும். தமிழன் வாழ்வுக்கு, எங்கு சென்றாலும் எம்மொழி கற்றாலும் முதன்மொழியும், முதற்பட்டமும் தமிழாக இருக்கவேண்டும். இதனை எவ்வளவுக்கு விரைவாகச் செய்கின்றோமோ, அவ்வளவுக்குத் தமிழ் வாழும். இந்தி தமிழகத்தில் வீழும். தமிழ் வளர்ச்சியே இந்திக்குத் தளர்ச்சி தரும்.

**என் கருத்துச் சுருக்கம்.**

1. நம் தமிழ் மத்திய ஆட்சிமொழியில் ஒன்றாதல் வேண்டும். நம் உறுப்பினர்கள் பாராளுமன்றத்தில் தமிழிலேயே பேசவேண்டும்.

2. எல்லாத் துறைகளிலும், சிறப்பாக, அறிவியல் துறைகளில் எல்லாம் ஆயிரக்கணக்கான தமிழ்ப் பட்டதாரிகளைத் தங்கள் ஆட்சிக் காலத்திலேயே உருவாக்கி விடவேண்டும். 1968 முதல் இதற்கு உரிய தமிழ்த் திட்டங்களை உருவாக்க வேண்டும். கல்வியுலகில் தமிழாண்டினைத் தெளிவாக முன்னரே அறிவித்து விட்டால் பல பதிப்பகங்கள் தக்கவர் களைக் கொண்டு பாடநூல்களைக் குவித்து விடும்.

3. எல்லாக் கட்டத்திலும், சிறப்பாக, கல்லூரிகளில் ஆங்கிலம் கட்டாயத் துணைமொழியாதல் வேண்டும். அங்ஙனம் இருக்கும் ஆங்கிலம் தத்தம் துறையறிவு பெறுதற்கு உரிய ஆங்கிலமாக அமைய வேண்டும். இவ்வாறு தமிழ் எங்கும் முதன்மொழி, ஆங்கிலம் எங்கும் துணைமொழி என இருமொழிக் கட்டாயம் வேண்டும்.

4. வேறு பன்மொழிகள் விரும்பியோர் படிப்பதற்கு நாட்டிலும் கல்லூரிகளிலும் வழிசெய்யவேண்டும்.

நல்லறிஞ, உங்களின் பல அலுவல்கட்கும் ஆட்சிக்கும் இடையே இக்கருத்துக்களைக் காண நேரம் இருக்குமோ? ஆட்சிக்கு உதவுவது என் கடமை என்ற உணர்வில் என் கருத்துக்களைப் புலப்படுத்தியுள்ளேன். இதன் விரிவும் விளக்கமும் இரண்டாண்டுகட்கு முன்னரே யான் எழுதிய “தலைவர்களுக்கு” என்ற நூலில் உள.

அன்பன்,

**வ. சுப. மாணிக்கம்**



## மாணிக்கத் தமிழ்

### மடல் - இரண்டு

**டாக்டர் வ.சுப.மாணிக்கம்**
எம்.ஏ., எம்.ஓ.எல்., பி.எச்.டி.,

கதிரகம்
காரைக்குடி
31.01.1968

*முதலமைச்சர் அறிஞர் அண்ணாதுரை அவர்கட்கு,*

*சென்னை.*

# தமிழ் பயிற்றுமொழியும் செயல் முறைகளும்

*குறிவு:- என் முன்னைக் கடிதம் 27.12.67*

*மாண்புமிகு அறிஞ,*

*நலம். மொழிகள் பற்றிய தங்கள் அண்மைத் தீர்மானங்களுக்கு நன்றி செலுத்துகின்றேன்.*

*கல்லூரிகளில் வரும் ஆண்டிலிருந்து தமிழ் பயிற்றுமொழியாகும் என்ற தீர்மானம் என் உயிரைத் தளிர்ப்பித்தது.*

*தமிழ்த் தீர்மானம் இன்றியமையாத, முறையான தீர்மானம். இதனை நிறைவேற்றுவதில் உண்மையாகவே பல இடர்ப்பாடுகள் உண்டு. மேலும் இந்தி எதிர்ப்புக்குத் தங்கட்கு இருந்த பலமுனை ஆதரவு இத் தமிழ்வரவுக்கு இருக்காதுதான். தமிழ் பயிற்று மொழியாவதால் வரும் பல நிறைவுகளையும், நன்மைகளையும் பலர் சிந்தித்ததில்லை. சில குறைபாடுகளையே கிளிப்பிள்ளை போல் எடுத்துக்காட்டி வருகின்றனர். ஆண்டு சுட்டிப் பயிற்றுமொழி ஆக்கினால் தான், எண்ணிறந்த நூல்கள் வெளிவரும்; அறிவியற்றுறைகளைத் தாய்மொழி வாயிலாக முதன்முதலில் கற்கும்போது தான் சிந்தனை வளரும். எவ்வகை*

எதிர்ப்புக்களையும் தாங்கித் தகர்த்துத் தமிழ்க்கொள்கையை முழுதும் நிறைவேற்றக்கூடிய ஆற்றலைத் தங்கட்கும், தங்கள் துணையர்கட்கும் திருவள்ளுவர் அளிப்பாராக.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியர்
திண்ணிய ராகப் பெறின்."

தமிழ்ப் பயிற்றுமொழித் தீர்மானம் வெற்றி பெற, எனக்குத் தோன்றிய வழிமுறைகளைத் தங்கட்குச் சொல்லிக்கொள்கின்றேன்.

**1. நம்பிக்கை.**

'தமிழ் பயிற்றுமொழியாவதை அரசு சோதித்துப் பாராது, கட்டாயம் நிறைவேற்றியே தீரும்,' என்ற நம்பிக்கை எல்லார்தம் மனத்தும் பதிய வேண்டும். அப்போதுதான் இது மாறா முடிபு என்று பலர் துணிந்து அதற்கு உரிய வழியில் சிந்தனை செய்வர்.

**2. பொருள்.**

இதற்கு ஓர் அறிகுறியாக, ஐந்து கோடி ரூபாய் தமிழ்நூல் வெளியீட்டிற்கு இவ்வாண்டு வரவு செலவுத் திட்டத்தில் ஒதுக்கவேண்டும்.

**3. எல்லாந் தமிழ்.**

பல்கலைக்கழகப் புகுமுகவகுப்பில் முதற்கண் அறிவியற்றுறைகளுக்குத் தமிழ்பயிற்று மொழியாதல் வேண்டும். இத்துறைகளுக்குத் தமிழைக் கொண்டு வராதவரை யாருக்கும் நம்பிக்கை பிறக்காது; தமிழ் வந்தததாகவோ, வளர்ந்ததாகவோ சொல்லமுடியாது. தமிழில் வைத்தால், தமிழர்க்கு அறிவியல் வளர்ச்சி குறையும் எனவும், மருத்துவம் முதலான மேற்படிப்புக்களில் குறைபாடு ஏற்படும் எனவும் கல்வியறிஞர்கள் சுட்டிக்காட்டுவர். இவை இன்று உண்மையே. அறிவியலைத் தமிழில் வைக்காவிட்டால், தமிழ் வளர்ச்சியே குறையாதா? எதிர்கால நீண்ட தமிழின் வளர்ச்சியே குறையாதா? தமிழை வைத்துக் குறைவு வாராத வழிகளைக் கல்விச் சான்றோர்கள் காட்டவேண்டுமேயன்றித் தமிழே அறிவியலுக்குக் கூடாது என்று சொல்வது பொருந்தாது. என்றும் ஒருநாள் இந்த இடர்ப்பாடு நீங்க ஒரேவழி தமிழை அறிவியலுக்கு முதன்மொழியாக வைத்து, ஆங்கிலத்தைக் கட்டாயத் துணைமொழியாக வைப்பது; துறைக்கு உரிய ஆங்கில நூல்களை மாணவர்கள் நன்கு புரிந்துகொள்ளுமாறு கடுமையான பயிற்சியளிப்பது. என்றும் செய்ய வேண்டிய இக்கல்வி முறையை இன்றே நாம் செய்வோமாக. இதுவே சரியான காலம். ஆதலின் வரும் ஆண்டு முதல் அறிவியல் உட்பட எல்லாத் துறையும் - உயர்நிலைப்பள்ளியின்பால் - தமிழாதல் வேண்டும். தமிழாக்குவதில் துறைப்பிரிவினை கூடாது. தமிழ்த் தீர்மானம் வெற்றியாவதற்குக் கடைப்பிடிக்க வேண்டிய தலையாய நெறி இது.

**4. எங்கும் தமிழ்.**

தமிழ்பயிற்று மொழியில், அரசினர் கல்லூரி, தனியார் கல்லூரி என்ற பாகுபாட்டிற்குத் தொடக்கத்திலேயே இடம் கொடுத்தலாகாது. தமிழகக் கல்லூரிகள் என்ற பொதுநிலை-



யிற்றான் சிந்தனை செய்ய வேண்டும். இதில் சட்டம் குறுக்கிட இடமளித்தல் கூடாது. அரசினர் கல்லூரியில் தமிழ், தனியார் கல்லூரியில் ஆங்கிலம் என்று வருமானால், கொள்கைத் தோல்வியை எதிர்பார்க்கவேண்டியதாகிவிடும். ஆங்கிலவழிப் படித்தவர்கள் முதலாந்தர மாணவர்களாகவும், தமிழ்வழிப் படித்தவர்கள் இரண்டாந்தர மாணவர்களாகவும் சமுதாயத்தில் உணர்ச்சி ஏற்படும். அங்ஙனமே கல்லூரிகள், முதல்வர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள் எங்கும் தாழ்வுணர்ச்சி ஏற்படும். இது புதுவகை அரசியற் பூசலுக்கு உய்த்துவிடும். ஆதலின் எல்லாக் கல்லூரிகளுக்கும் - உயர்நிலைப்பள்ளியிற்போல- ஒரேவகையாகத் தமிழ்க்கொள்கையைச் செயற்படுத்துங்கள்; செயற்படுத்த ஆவன செய்யுங்கள். அல்லது செயற்படுத்துங்காலம் வரும்வரை பொறுத்திருங்கள். அல்லது எல்லாவற்றையுமே அரசினர் கல்லூரியாக்குங்கள்.

அறிவியல் முதலாக எல்லாந் தமிழ்;
தனியார் கல்லூரி முதலாக எங்குந் தமிழ்.

என்ற இரண்டு அடிப்படைகளிற்றான் தமிழையும் தமிழ்ச் சமுதாயத்தையும் முறையாக வளர்த்துக் கொண்டு செல்ல முடியும்; வெற்றி காணமுடியும்.

வரும் ஆண்டு முதல் தமிழைப் பயிற்றுமொழியாக்க உறுதி பூண்டுள்ள நாம் மேலும் இப்போதே என்ன செய்ய வேண்டும் என்ற சில குறிப்புகளை எழுதுகின்றேன்.

*1.* அ. ஆங்கிலக் கல்வியைப் பிழையற எழுதவும் படிக்கவும் சொல்லிக் கொடுக்க வேண்டும். முப்பது ஆண்டுகட்கு முன் இருந்தது போல, தனியாக இலக்கணம் கற்பிக்கச்செய்து பயிற்சியளிக்க வேண்டும்.

ஆ. கல்லூரி மாணவர்கள் நிலையில் அவர்கள் கற்கும் துறைகளுக்கு உரிய ஆங்கில நூல்களை - கலையியலாயினும் அறிவியலாயினும் - தாமே படித்துப் புரிந்துகொள்ளுமாறு பயிற்சியளிக்க வேண்டும்.

*2.* தமிழ்க் கலைச் சொற்குழு என்ற ஒரு தனிக்குழு அமைக்கவேண்டும். பல்துறைக் கல்வியாளர்கள் நிலையாக அமர்த்தப்படவேண்டும். ஒவ்வொரு துறைக்கும் பெரிய கலைச் சொல்லகராதி விரைவில் வெளியாதல் வேண்டும். கலைச்சொல் பற்றி விளக்கமோ பிறவோ வேண்டுமெனின் கல்வியாளர்கள், எழுத்தாளர்கள் இக்குழுவுக்கு எழுத வேண்டும். கலைச் சொல்லில் ஒருமைப்பாட்டை முடிவில் உண்டாக்கித் தருவது இக்குழுவின் பொறுப்பு. பத்தாண்டுகள் வரை கலைச்சொல் செம்மை பற்றிக் கவலைப் படலாகாது. பத்தாண்டிற்குப் பின் சொற்செம்மைக்கு உருவம் அளிக்கலாம்.

*3.* எல்லாத் துறைகளிலும் திங்களிதழ்களோ, அரையாண்டு இதழ்களோ தமிழில் உடனே வெளிவர ஏற்பாடு செயல் வேண்டும். புதிதாகப் பிறமொழிகளில் வரும் அறிவியற் கட்டுரைகளை அவ்வப்போது தமிழ்ப்படுத்தி இவ்விதழ்களில் வெளியிட வேண்டும். தமிழ்நாட்டு அறிஞர்களும் தாம் கண்டவற்றை இவ்விதழ்களில் எழுத வேண்டும். அப்போது இவை வெளிநாட்டாரால் மதிக்கப்படும். இதனால் தமிழிதழ்களிலிருந்து மொழிபெயர்த்துக் கொள்ளும் உலகப் பெருமை தமிழுக்கு ஏற்படும்.

*4. இன்றுள்ள தமிழிலக்கியப் பாடங்கள் எந்தப் பட்ட வகுப்புக்கும் குறைதல் கூடாது. அறிவியல் தமிழில் வந்தாலுங்கூட, தமிழிலக்கியக் கல்வி எவ்வகைப் பட்டதாரிக்கும் இன்னும் பற்பல ஆண்டுகள் வேண்டும். உணர்ச்சியுள்ள அளவுக்கு மாணவர்களிடத்துச் செம்மையான தமிழறிவு இல்லை. இன்றுள்ள உணர்ச்சி கூட இலக்கியப் படிப்பால் வந்த பேறாகும். கற்கும் இளைஞர்களிடை தமிழுணர்ச்சி இன்னும் பல்லாண்டு நின்று ஒளி பெற வேண்டும். அதற்குச் சங்க இலக்கிய முதலான தூய தமிழ் நூற்பயிற்சி வேண்டும். இப்பயிற்சி இருந்தாற்றான், செம்மையான சொல்லாக்கங்களும் அறிவியல்நூல்களும் ஆக்க முடியும். ஆதலின் இன்றைய இலக்கியத் தமிழ்ப்பாடங்கள் எந்த மேல் வகுப்புக்கும் குறையக் கூடாது.*

*தமிழ்பயிற்றுமொழியாவதால் தொடக்கத்து இடர்ப்பாடுகள் நிரம்ப உள. ஆனால் இடர்ப்பாடுகளைக் கடக்கும் வழிமுறைகளும் இக்காலத்து மிகமிக உள. இவ்விடர்ப்பாடுகளை தங்கள் தமிழாட்சி தாண்டிக் காட்டாவிட்டால், தமிழுக்கு இனி என்றேனும் உய்தியுண்டா? எவ்வளவு எதிர்ப்பு இருந்தாலும் தங்கள் அன்புத் தமிழாட்சியில் தமிழ் பயிற்றுமொழியாவது இயற்கையாகும்.*

*வரும் ஆண்டுமுதல் ஐந்தாண்டிற்குள் தம் தமிழ்மொழியை எல்லாவற்றிற்கும் பாடமொழியாக்கி எல்லாப் பல்கலைக்கழகங்களிலும் வீற்றிருக்கச் செய்து, தமிழ்த் தெய்வத்தின் அருளை மேன்மேலும் பெறுவீர்கள் என வாழ்த்துகின்றேன். 'மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்' என்றபடி, எல்லாப் பணிகளிலும் பயிற்றுமொழிப்பணியே நிலைபேறான நீடித்த பணி என்பதை எண்ணி, கலங்காது கண்ட தமிழ்வினைக்கண் எதிர்ப்புக்குத் துளங்காது செயலாற்ற வேண்டுகின்றேன்.*

*அன்பன்,*

வ. சுப. மாணிக்கம்

## மாணிக்கச் சிந்தனைகள்



**யாருடைய நல்வாழ்வுக்கும் ஒரு பெரியவர் தொடர்போ, ஒரு பெரிய நூலின் தொடர்போ இன்றியமையாதது. இரு தொடர்பும் ஒருங்கே ஒருவர்க்குக் கிடைக்குமாயின் வாழ்க்கைக்கடல் இருகரையுடையதாகும்.**

*- இலக்கியச் சாறு*




## மடல் - மூன்று

**டாக்டர் வ.சுப.மாணிக்கம்**
எம்.ஏ., எம்.ஓ.எல்., பி.எச்.டி.,
முதல்வர் & தமிழ்ப்பேராசிரியர்

அழகப்பா கல்லூரி
காரைக்குடி – 3
18.2.1969 | திவ.எ.கக. 2000

**கலைஞர் மு. கருணாநிதி அவர்கள்,**
*தமிழ்நாடு முதலமைச்சர்,*

*மாண்புமிகு முதலமைச்ச,*

# மூன்றாண்டுத் தமிழ்த் திட்டம்

*வணக்கம்,*

*தங்கள் நல்லாட்சிக்கு என் பெருவாழ்த்துக்கள். தெளிவும் துணிவும் இயல்பிலே வாய்ந்த தங்களின் ஆட்சி தனக்குவமையில்லாத் தமிழாட்சியாக இலங்குக. தங்கள் ஆட்சி சங்ககாலம் போலப் புலவர் பாடும் புகழுடையதாக ஒளிர்க.*

*அறிஞர் அண்ணா அவர்கட்கு மூன்றாண்டுத் தமிழ்த் திட்டம்பற்றி 14.1.1969ஆம் நாள் எழுதிய முடங்கலின் படியொன்றினைத் தங்கட்கு இதனொடு விடுத்துள்ளேன். முன்னாள் கல்வியமைச்சர் நாவலர் நெடுஞ்செழியனார்க்குத் தமிழ் வளர்ச்சி பற்றி எழுதிய வேண்டுகோளின் படியொன்றும் இதனொடு உண்டு. பொருந்துவன மேற்கொள்ள வேண்டுகின்றேன்.*

*தமிழின் வளர்ச்சிக்கு இனியொருவர் இவ்வளவு செய்யமுடியாது என்னும் அளவுக்குக் கவிதை நெஞ்சங் கொண்ட தாங்கள் நிதிநீர் பாய்ச்சித் திட்டவுரமிட்டுத் தமிழ்ப் பைங்கூழை உலக நன்மதிப்பு உடையதாக்க வேண்டும் என்பது என்போன்ற புலவர்களின் பணிவுடை வேண்டுகோள்.*

*அன்பன்,*
வ.சுப.மாணிக்கம்




## மடல் - நான்கு

**டாக்டர் வ.சுப.மாணிக்கம்**
எம்.ஏ., எம்.ஓ.எல்., பி.எச்.டி.,
தலைவர், இந்தியப் பல்தமிழ்க்கழகம்,
காரைக்குடி –2.

க. தை 2000 செவ்வாய்
14.1.1969

# முதல் மூன்றாண்டுத் தமிழ்த்திட்டம்

**அறிஞர் கா. ந. அண்ணாதுரை அவர்கள்,**
தமிழக முதலமைச்சர்,
தமிழ் நாடு.

மாண்புடை முதலமைச்ச,

பொருள்: முதல் மூன்றாண்டுத் தமிழ்த்திட்டம் -
வரவு செலவுத்திட்டத்தில் நிதி ஒதுக்கீடு.

---

வணக்கம். தங்கள் உடல் நலம் பெருகுக என வாழ்த்துவன். உடல் நலம் கருதித் தாங்கள் தமிழகத்தைவிட்டு அமெரிக்கா விரைந்தபோது, வாழ்க, நலத்தொடு வருக என்று வழுத்திய கோடி நெஞ்சங்களுள் எனதும் ஒன்று. தமிழன்னையின் அருளாலும், தமிழ் மக்களின் அன்பாலும், என் அனைய தமிழ்ப் புலவர்களின் வாழ்த்தாலும், தமிழுக்கும் தமிழினத்துக்கும் வாழவேண்டும் என்ற நலம்பேணிக்கொள்ளும் தங்கள் ஆசையாலும், முருகன்போலும் இளநலம் எய்தி இருபதாம் நூற்றாண்டு கடந்தும் மனக்கினதாக வாழ்வீர்களாக.

நம் தமிழ்நாடு இத் தைத் திங்கள் முதல் பாராளுமன்றப்படி தமிழ்நாடு என்னும் அரசுப் பெயர் சூடிக் குமரிமுதல் இமயம்வரை வழக்காறு பெறுவதை எண்ணிப் பூரித்து, ‘வாழிய பெரும நின் வரம்பில் படைப்பு’ என வாழ்த்துகின்றேன்.



அ) தமிழ்நாடு என்ற பெயரிற்கேற்ப, தமிழக மக்களும் பிற நாட்டு மக்களுங்கூட, எவ்வகை அறிவுக்கும் தமிழை நாடுக என்னும்படி அறிவு வளத்தைத் தமிழுக்கு ஆக்கவேண்டும். உலகிற்கு ஆங்கிலம்போல இந்தியமொழிகளில் தமிழ் எனப்பாராட்டுமாறு தமிழை இந்திய உலகமொழியாக உயர்த்த வேண்டும்.'ஆரியத்திற்கு நிகரென வாழ்ந்தேன்' என்று தமிழ் கூறுவதாகப் பாரதியார் பாடினார். ஆங்கிலத்திற்கு நிகரென வாழ்கின்றேன் என்று பெருமை பாடுமாறு தங்கள் ஆட்சி செய்யவேண்டும். இது என் வேணவா; "பொச்சாவாக் கருவியாற் போற்றிச் செயின் அரிய என்று ஆகாதவில்லை."

ஆ) **23.1.1968உ** சட்டமன்றத்தில் அமைச்சவையின் மொழிக் கொள்கையைத் தாங்கள் வெளியீட்டு விளக்கஞ்செய்கையில், தமிழகத்தின் எல்லாக் கல்லூரிகளிலும் ஐந்தாண்டுகளில் தமிழ் பயிற்றுமொழியாக்கப்படும் என்று காலவரம்பு காட்டியதை நினைக்கின்றேன். இது தெளிவான துணிவான இன்றியமையாத வெளியீடு. எவ்வெதிர்ப்பு ஏற்றும் இதனைத் திண்ணிதாக இக்கால வரம்புக்குள் நிறைவேற்றிடவேண்டும். எவ்வளவு விரைவாகக் கல்வியுலகில் தமிழை வைக்கின்றோமோ, எவ்வளவு துறைகளைத் தமிழ் வடித்துக்கொள்ளும்படி செய்கின்றோமோ, அவ்வளவும் தமிழுக்கு உரிய தற்காப்பிடிகள். இந்தி எதிர்ப்பின் நோக்கம் தமிழ் வைப்பே. ஆங்கிலத்தை ஆதரிப்பதன் நோக்கமும் தமிழ் வளர்ச்சியே. தமிழின் இடத்தை இந்தி ஒருநாளும் பிடிக்கவிடக்கூடாது. அதுபோன்றே தமிழுக்கு உரிய இடத்தை ஆங்கிலம் இனியும் பிடித்துக்கொண்டிருக்க விடக்கூடாது. தமிழகத்தில் தமிழ் பயிற்று மொழியாதற்குப் புறத்தார் எதிர்ப்பில்லை. தமிழகத்தாரே எதிர்ப்பு. ஆங்கிலத்தைத் தமிழ் வளர்ச்சிக்கு உரிய துணைமொழியாகக் கருதாது. ஆங்கிலமே வாழ்வுமொழி என்று கருதும் சின்னத் தமிழர் பலர் உளர். இந்தி புறப்பகை. ஆங்கிலம் உட்பகை. குடியரசில் குடிமொழியே முதன்மொழி. எவ்வகை அயன்மொழி இருப்பினும் வலுப்படாது. தமிழர்கள் பன்னூற்றாண்டுகளாக கலப்பான்மையை வளர்த்துக் கொண்டவர்கள். தமிழை வளர்த்துத் தமிழை வைத்துத் தமிழால் எல்லாம் பெறமுடியும் என்று தலைமைப் பான்மையை ஊட்டவேண்டிய காலம் வந்துவிட்டது.

இ) தமிழ் பயிற்றுமொழியைச் சிறிது சிறிதாகப் புகுத்துவது என்பதும் சிறிசில துறைகளில் சிற்சிலருக்கு வைப்பது என்பதும் தமிழெதிர்ப்பு வளர இடங்கொடுப்பதாகும். ஆங்கிலம் பயிற்றுமொழியுடைய மாணவர்கள் முதற்குடியினராகவும் தமிழ் பயிற்றுமொழியுடைய மாணவர்கள் இரண்டாந்தரக் குடியனராகவும், தமிழிளைஞர்களை இரு சாதியாக்குவதாகவே போய்ச்சேரும். இந்தி எதிர்ப்புக்குச் சொல்லும் காரணம் இதற்கும் ஒக்கும். தாழ்வு மனப்பான்மையுடன்தான் தமிழ் பயிற்றுமொழி மாணவர்கள் உள்ளனர். மாற்றுமொழிக்கு இடங்கொடுத்தால் அயல்மொழியை எளிதில் விரும்பும் கூறுடையவன் தமிழன். பயிற்றுமொழியில் விருப்பமொழிகள் என்ற பன்மை இருத்தல் கூடாது. யார்க்கும் எத்துறைக்கும் பயிற்றுமொழி ஒன்றுதான். அது தமிழ்தான். பல்கலைக் கழகங்களும் கல்லூரிகளும் விருப்பப்பாடங்கள் என்று துறைப்பன்மை வகுக்கும் உரிமை நாட்டுக்கு முரண். வேற்றுப்பயிற்றுமொழி வைத்துக்கொள்வதாயின், அரசின் இசைவு பெற வேண்டும் என்பது என்கருத்து. இவ்வகையில் தனியார் கல்லூரி, அரசினர் கல்லூரி என்ற பாகுபாடு வேண்டியதில்லை.

உயர்நிலைப்பள்ளிகளுக்குத் தமிழைப் பயிற்று மொழியாக்கியபோது, விருப்ப மொழிகள் என்று பன்மொழி வைக்கவில்லை. தனியார் உயர்நிலப்பள்ளிகள் என்று உரிமை வழங்கவில்லை. ஒரே மூச்சாக ஓராண்டில் எங்கும் எத்துறைக்கும் தமிழை வைத்தமையால், தமிழ் பயிற்றுமொழி வாகை சூடிற்று. இம்முறையைத்தானே கல்லூரிக்கும் பல்கலைக்கழகத்துக்கும் பின்பற்றவேண்டும்?

ஈ) அண்ணல் அறிஞ! தமிழ் நாட்டில் கற்றவர்கள் பெரும்பாலும் தமிழ் வரவுக்கு நேரடியாகவும் மறைமுகமாகவும் பேரெதிர்ப்புச் செய்வர். தமிழ் வரவை கல்வியுரிமை போனதுபோலவும் உலக வாழ்வுபோவது போலவும் பறைப்பர். இயல்பாகத் தமிழை இந்நாட்டில் ஒருநாளும் வைக்கமுடியாது. எதிர்ப்பு மலைக்கிடையேதான் தமிழருவி பாயவேண்டும். தமிழ்த்திட்டமிட்டுத் தமிழ்ப் புரட்சிசெய்து தமிழ்க்கனலை எழுப்பினாற்றான் கனவுத் தமிழ்நாடு நனவுத் தமிழ்நாடாகும். தமிழ்த் தளபதியாம் தாங்கள் அரசோச்சும் இஞ் ஞான்று சிலநாள் முழுதும் தமிழ்த்திட்டம் பற்றி நுண் சிந்தனைசெய்ய வேண்டும் என்பது என் பணிவுடை வேண்டுகோள். தங்கள் சிந்தனைகளோடு பின்வரும் என் சிந்தனைகளும் இணையுமாக.

## மொழிச் சிந்தனைகள்

### 1. முதல் மூன்றாண்டுத் தமிழ்த்திட்டம்

பொருளாதாரத்தைத் திட்டமிட்டு வளர்ப்பதுபோல மொழியாதாரத்துக்கும் திட்டம்வேண்டும். இத்திட்டம் தமிழ் மொழிக்கு இன்றியமையாதது. எவ்வளவு திட்ட மிட்டாலும் பொருளாதார வளர்ச்சி நிரம்பாது, காலச் சூழ்நிலையில் ஆண்டுதோறும் ஏற்ற இறக்கம் ஏற்படும். மேலும் சில பொருள்கள் குறைவுபடின் இறக்குமதிசெய்து கொள்ளலாம். தமிழ் தமிழகப் பண்ணைக்குள் வளர வேண்டியமொழி, தமிழரே வளர்க்கவேண்டிய கடமை மொழி, வழிவழிச்செல்லும் உடைமை மொழி, வளர்த்தாரை வளர்த்து வரலாறு கூறும்.

### 2. ஆண்டுக்குப் பத்துக்கோடி நிதியீடு

இத்தகைய பெருநிதி ஆண்டுதோறும் முறையான விரைந்த தமிழ் வளர்ச்சிக்கு வேண்டும். பொருளென்னும் செல்வச் செவிலி இருந்தாற்றான் அறிவென்னும் தமிழ்க்குழவி வளரும். பிறநாடுகளில் கல்விமொழி வேறு, நாட்டுமொழி வேறு என்ற அறிவில் பிரிவு இல்லை. நம்நாட்டில் உண்டு. ஆதலின் இன்றைய நிலையில் கல்விக்குச் செலவிடும் 60 கோடி தமிழ் வளர்ச்சியின்பாற்பட்டது. கல்வியும் தமிழும் இரண்டறக்கலத்தல் வேண்டுமென்றால், கல்விச் செலவுக்கு ஒப்பாகத் தமிழ் வளர்ச்சிக்கும் ஆண்டுதோறும் செலவிடவேண்டும். தமிழுக்குப் பத்துக்கோடி என்பது தமிழக வரவுசெலவு திட்டத்தில் சிறு விழுக்காடே. தமிழை ஓர் அணைக்கட்டாக எண்ணிக்கொண்டாற்போதும். ஆட்சி தொடங்கிய ஆண்டே படியரிசித் திட்டத்துக்குப் பலகோடி சலுகைசெய்யவில்லையா நம் அரசு? இரண்டு நாட்களுக்குமுன் எதிர்பாராவகையில் பஞ்சப்படியை உயர்த்தி



மூன்று கோடி வழங்கவில்லையா? புகுமுக வகுப்பு இலவசக்கல்விக்கெனக் கோடி வழங்க வில்லையா? ஆதலின் பிறப்புக்குறிக்கோளான தமிழுக்கு ஆண்டுக்குப் பத்துக்கோடி ஒதுக்குவது புரட்சியான தமிழ் வளர்ச்சிக்கும் தமிழ் மக்களின் எழுச்சிக்கும் துணைசெய்யும். வேண்டுமானால் தமிழ்வரிகூடப் போடலாம். வரும் ஆண்டுக்கு இப்போது வரவுசெலவுத் திட்டம் ஆயத்தமாகிக்கொண்டிருக்கும் நிலையில் இச்சிந்தனையைத் தங்கள் முன்னர்க் கூறுகின்றேன். "முனிவரும் மன்னரும் - முன்னுவ பொன்னால் முடியும்."

### 3. தமிழமைச்சர்

ஆங்கிலத்திற்கு நிகராகவும் உலக மொழிகளுள் ஒன்றாகவும் நம் தமிழ் வளர்ந்து உயர்ந்து பரவ வேண்டுமென்றால் ஓயாச் சிந்தனையும் ஒடுங்கா நிதியும் உலையாத்திட்டமும் வேண்டும். அதற்குத் தமிழமைச்சகம் என ஒரு தனித்துறையும், தமிழ் அமைச்சர் என ஓர் தனியமைச்சரும் ஆட்சியில் இடம்பெறவேண்டும். இதுவே மக்களின் கவனத்தை இழுப்பதற்கு வழி, தமிழைத் திட்டமிட்டு விரைந்து வளர்ப்பதற்கு வழி. நம் தமிழக அமைச்சு இவ்வகையில் இந்தியாவிற்கு எடுத்துக்காட்டாகுக.

ஆண்டுத்திட்டம், பெருநிதி, தனியமைச்சு என்ற அடிப்படையில் முறையாக விரைவாக மேற்கொள்ளும் தமிழ்த்திட்டம் பின்வருவன:

### 4. தமிழ்ப் பல்துறைக்கழகம்:

தமிழ்ப் பல்துறைக்கழகம் என ஒன்று பல்கலைக்கழகம்போல எல்லாத்துறையும் (மருத்துவம் பொறியியல் உட்பட) கொண்டதாய் விளங்கவேண்டும். ஒவ்வொரு துறைக்கும் பேராசிரியர் ஒருவர், விரிவுரையாளர் பதின்மர் என நியமனஞ் செய்யவேண்டும். இக்கழகத்தில் ஐந்நூறு பேராவது நியமனஞ் செய்யவேண்டிவரும். ஓய்வு பெற்றவர்களை இந்நியமனங்களுக்கு அமர்த்தலாம். அவரவர் துறையில் நூல்கள் தமிழில் எழுதுவது இவர் தம் பணியாகும். கல்லூரிகளில் தொழில் பார்த்துவரும் பல்துறையாசிரியர்களையும் நூல்கள் எழுதித்தருமாறு பணிக்கலாம். எழுதுவாரைப் பெருக்கிக்கொண்டாற்றான் நூல்களும் விரைவிற் பெருகும். ஒவ்வொரு துறையிலும் ஆண்டுக்கு நூறு முதல் நூல்களாவது வெளிவரும்படி நூலாக்கத் திட்டத்தை அமைக்கவேண்டும். இப்பல்துறைக்கழகம் பண்டைத் தமிழ்ச்சங்கங்கள் போல என்றும் நிலையாகப் பல்லூழி பணியாற்றவேண்டிய நிறுவனமாகும்.

### 5. தனியச்சகங்கள்

தெளிவான விரைந்த தமிழ் வெளியீட்டிற்கெனப் பதின்பேரச்சகங்கள் தனியாக வேண்டும். தமிழ்த் தொழிற்சாலையாக இவ்வச்சகங்கள் அமையவேண்டும்.

### 6. துறையிதழ்கள்

ஒவ்வொரு துறைக்கும் (மருத்துவம் பொறியியல் உட்பட) திங்கள்தோறும் துறைத்தமிழிதழ் வெளியிடவேண்டும். இவ்வகையில் நூறு துறையிதழ்களாவது வரலாம்.

பல்கலைக்கழகப் பேராசிரியர்களையும் பிறரையும் இவ்விதழ்களுக்குத் தமிழில் கட்டுரை வழங்கச் செய்யலாம். ஆங்கிலம், ரசியம், செருமனி முதலிய மொழிகளில் வரும் புத்தம் புதுக் கட்டுரைகள் இத்தமிழிதழ்களில் மொழிபெயர்த்து இடம் பெறலாம். உலகில் எம்மொழியில் எங்குவரும் புதுக்கருத்தினையும் உடனுக்குடன் தமிழில் கற்கலாம் என்ற நிலையை - நம்பிக்கையை இவ்விதழ்கள் நம்மக்கட்கு நல்கவேண்டும். அறிவுக்காக எல்லாத் தமிழனும் பன்மொழி படிக்கவேண்டா. ஒரு சில தமிழர்கள் அயல்மொழிகள் கற்று அயன்மொழிச் செல்வங்களைத் தமிழில் தந்தால், அதுவே தமிழினத்தை வளஞ்செய்யும்.

### 7. பன்மொழிக் குழு

இக்குழுவில் தமிழோடு அயலகமொழி அறிந்த தமிழர்கள் இருப்பர். அமெரிக்காவும் ரசியாவும் பிறமொழிகளைக்கற்க அவ்வந்நாட்டுக்கே தம்மவர்களை அனுப்பக் காண்கின்றோம். அதுபோல் தமிழகவரசும் நம்மவர்களை அனுப்பிப் பிறமொழிகளைக் கற்றுவரச்செய்யலாம். இம்மொழியாளர்கள் தாம் கற்ற அயன்மொழிகளில் அவ்வப்போது வரும் அரிய கட்டுரைகளையும் அரிய நூல்களையும் தமிழ்ப்படுத்து வழங்குவர். அதுபோல் தமிழர் எழுதும் அரிய கட்டுரைகளையும் அரிய நூல்களையும் அயன்மொழியில் பெயர்ப்பர். இவ்விருவகைக் கொள்வினை கொடுப்பு வினையைத்தான் தொல்காப்பியர் “மொழி பெயர்த்து அதற்பட யாத்தல்” என்ப.

### 8. எளியநூல் வெளியீடு

எளிய சிறு வரிசை நூல்கள் பல்துறைகளில் படங்களோடு வெளியிடவேண்டும். இந்நூல்களில் புதுக்கலைச்சொற்களும் இலைமறைகாய்போல் இடம் பெறுதல் நல்லது. பல்வேறு தொழில் நிலையங்களில் எல்லாம் அவ்வத் தொழிலுக்குரிய தமிழ் நூல்கள் புக வேண்டும். தொழிலாளர்கள் படிக்குமாறு பார்வைப்படவேண்டும். ஆக்கும் புதுச்சொற்கள் அடிப்பட்ட வழக்குச் சொற்கள் ஆமாறுசிறுவெளியீடுகளை வெள்ளம்போல வாரி இறைக்க வேண்டும்.

### 9. மறுபட்டம்

ஏற்கெனவே ஆங்கில வாயிலாகப் படித்துப் பட்டம் பெற்றவர்கள் தம் துறைக்குரிய தமிழ் நூல்களை மீண்டும் படித்துத் தமிழ்ப்பட்டம்பெறுதற்கு வழி வகுக்க வேண்டும். பயிற்றுமொழியை வலுப்படுத்துவதற்கும் மொழிபெயர்ப்பின்றித் துறை நூல்களைத் தமிழர்களை எழுதுவதற்கும் இது பெருவாய்ப்புச் செய்யும். இங்ஙனம் மறுபட்டம் பெற்றவர்களுக்குக் கூடுதல் ஊதியம் வழங்கவேண்டும்.

### 10. தமிழ் பரப்புக் கழகம்

தமிழ் பரப்புக் கழகம் என ஒரு பெருங்கழகம் தனியாக நிறுவவேண்டும். இக்கழகத்தில் மூன்று உட்குழுக்கள் அமையும்.

1. ஒரு குழு இந்தியப் பிறமாநிலங்களில் (இந்திப்பிரசாரசபை போல) தமிழைப்



பரப்பவேண்டும். இந்தியப் பிறமொழிகளில் தமிழ் நூல்களை வெளியிடவேண்டும். பிற மாநிலங்களில் உள்ள தமிழர்க்கும் தமிழரல்லாதார்க்கும் தமிழை அவரவர் நிலைக்கேற்பக் பரப்ப வேண்டும்.

**2.** ஒரு குழு வெளிநாடுகளில் தமிழைப் பரப்பவேண்டும். வெளி நாட்டு மொழிகளில் தமிழ் பற்றி வெளியிடவேண்டும். வெளிநாட்டிலுள்ள தமிழர்க்குத் தமிழை எப்போதும் தொடர்பு படுத்தவேண்டும்.

**3.** ஒரு குழு தமிழ் வழங்கும் இலங்கை, மலேயா, மோரிசு முதலிய நாடுகளில் வாழும் தமிழர்களோடு மிக்க பிணைப்பை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். தமிழ் தாய்மொழியாகவுடைய ஒருவனை என்றுமே அவனுக்குத் தமிழ் தாய் மொழி என்ற நினைவை வளர்க்கவேண்டும். சமய மாறுதல் போய்த் தமிழ் மாறுதலுக்கு இடங் கொடுக்க லாகாது. தமிழன் எங்கிருந்தாலும் அவனோடு தொடர்பு கொள்வது இவ்வுட்குழுக்களின் கடமையாகும்.

## வேண்டுகோள்

பெறலரும் முதலமைச்ச,

என் மேற்சிந்தனைகளுள் தழுவுள்ள தழுவி, எதிர்காலப் பெருந் தமிழ் வளர்ச்சிக்கு ஆல வித்தூன்ற வேண்டுகின்றேன். தமிழ் வரலாறு உள்ளவரையும் தமிழ் வளர்த்த தங்கள் ஆட்சியென இடம் பெற்றொளிர வேண்டுகின்றேன்.

அ. வரும் ஆண்டுமுதல் - **1969**சூன் முதல் புகுமுக வகுப்பில் எல்லாக் கல்லூரியிலும் எல்லாத்துறையிலும் எல்லா மாணவர்களுக்கும் உயர்நிலைப்பள்ளிகளிற்போல வேற்றுமை யின்றித் தமிழே பயிற்றுமொழியாதல் வேண்டும். இம்முழுமையே வெற்றிதரும். எவ்வெதிர்ப்புவரினும் தங்கள் ஆட்சி இக்குறிக்கோளை நாட்டி வெல்வதாகுக.

ஆ. புகுமுக வகுப்பில் பயிற்றுமொழியாதலைத் தொடர்ந்து அடுத்த அடுத்த ஆண்டுகளிலும் பட்டப்படிப்பு, பட்டமேற்படிப்பு எல்லாம் வரிசையாகவே பயிற்று மொழியாகவேண்டும். கற்றவர் தெளிவுக்கும் மக்களின் நம்பிக்கைக்கும் மாணவர் அறிவு வளர்ச்சிக்கும் அரசின் உறுதிக்கும் பயிற்றுமொழி இடையறவுபடாது தொடர்ந்து செல்ல வேண்டும்.

இ. தங்கள் அரசு முன்னர் வலியுறுத்தியபடி நடுவண் பொதுப்பணித்தேர்வு பதினான்கு மொழிகளிலும் அடுத்த ஆண்டு நடக்கும் என அறிகின்றோம். இத்தேர்வில் எண்ணிறந்தோர் தமிழில் எழுதுவதற்குப் பட்டவகுப்பு மாணவர்களை ஆயத்தப்படுத்த வேண்டும். அதற்குத் துறையெல்லாம் தமிழ்ப் பயிற்று மொழி விரைவில் ஆகவேண்டும். தமிழ் வாயிலாக நம் மாணவர்களுக்குக் கற்றுக்கொடுக்காவிட்டால், தமிழ்த்தேர்வு எழுத யாரும் முன்வரவில்லை என்றோ, எழுதியவர்கள் தேறவில்லை என்றோ தமிழ்ப்பழி ஏற்படலாமன்றோ!

'செந்தமிழ் வழக்கொடு சிவணிய நிலம்'

என்பது தொல்காப்பியப் பாயிரம். ஆதலின் தமிழ் நாடு என்ற மொழிப்பெயர்பூண்ட நம் தாய்நாடு இந்தியாவும் உலகமும் தமிழை நாடும்படியான ஏற்றத்தைத் தங்கள் முதலாட்சியிலேயே பெறுகதில்.

விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

அத்தகைய சொல்வல்லவரை முதலமைச்சராகப் பெற்ற தமிழன்னை "தமிழகக்கல்வித் துறை முழுதும் நான் முதன் மொழியாக வீற்றிருக்கும் காலம் ஆண்டு பல இல்லை; திங்கள் பலவே" என்று இறும்பூது எய்துகின்றாள்.

"இமிழ்கடல் வேலியைத் தமிழ்நா டாக்கிய
இதுநீ கருதினை யாயின் ஏற்பவர்
முதுநீ ருலகின் முழுவதும் இல்லை" - இளங்கோ

தமிழ்ப்பற்றுக் குறையக் காண்கின்றேன். தமிழெதிர்ப்புக் கூடக் காண்கின்றேன். இக்காட்சி எதிர்காலத் தமிழினத்துக்கு மாட்சியன்று.

அன்னையைத் தொழும் அண்ணா! தமிழன்னையைக் கல்வி முடி சூட்டித்தொழல் நம் கடன்.

தமிழ்த் திட்டம்பற்றிச் சிந்தித்து வரைந்த தமிழ்ப்புலவன் முடங்கல் தங்கள் பார்வைக்குவரும், தமிழ்ப்பயன் விளைக்கும் என்று விழைகின்றேன்.

அன்பன்,
மா

## மாணிக்கச் சிந்தனைகள்



**தமிழ் வழிக்கல்வியே தாய்ப்பால் ஆகும்;**
**தமிழ் வழிக்கல்வியே சமநிலை வழங்கும்;**
**தமிழ்வழியோடு பிறமொழி கற்க;**
**தமிழ்ஒன்றே நம் பயிற்றுமொழி!**




# மதிப்புரை

மதுரைப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர்
பெரும்புலவர் டாக்டர் வ.சுப.மாணிக்கம் அவர்களின்
மதிப்புரை

*நம் கலைஞர் நாள்தோறும் சந்தித்து வாரந்தோறும் தமிழோவியமாக வரைந்த குறளோவிய நூலுக்கு நன் மதிப்புரை எழுதுவது என்கடமை; என் எழுத்துக்குக் கூடுதற் பெருமை.*

*குறளோவியம் எழுதிய நூலாசிரியர் யார்? எத்தகையர்? அவர்தம் நெஞ்சின் மாண்பென்ன? நினைவின் மூச்சு எத்தகையது? பன்னூறாண்டு கழித்து இக் குறளோவியத்தைப் படிப்பவர் கூடப் பின்வருமாறு எண்ணுவர்; "இந்நூலை எழுதியவர் தமிழ்ப்பற்று, தமிழறிவு, தமிழுணர்வு மிக்கவர். சங்க இலக்கியப் பயில்வினர். தமிழ்நாகரிகமே மனித நாகரிகம் என்ற கடைப்பிடியினர். புத்திலக்கியம் படைக்கும் கற்பனைக் கவிஞர். எழுத்திலும் சொல்லிலும் தொடை வளமிக்க உரைநடைக் கவிதையர். நாடகப் பார்வையர். உரைபல கற்றவர். நாட்டின் ஆட்சியில் உயர்பதவி தாங்கியவர். உலக அரசியற் கண்ணோட்டத்தர். பல்துறை மக்களொடு அணுகிப் பழகிக் காலவுலகியல் கைவரப் பெற்றவர். வாழ்வுப் பாசறையில் மலையும் கடலும் கண்டவர். தோலாநாவினர், தொய்யா நெஞ்சினர். சாதிசமயச் சழக்கிற்புகாப் பகுத்தறிவினர். சிந்தனைச் செயலினர். திருக்குறட் சிந்தையர். தமிழினத் தலைவர். எழுத்துக்கலை, செந்நாக்கலை, நாடகக் கலை, கவிதைக் கலை, அரசியற்கலை, எழிற்கலை என்றாங்கு பல்வேறு கலைகளிலும் நெஞ்சு அறிவு செயல் தோய்ந்த கலைஞரே இவர்" இவ்வாறு நாம் இன்று காண்பது போல எதிர்காலத் தமிழரும் இந்நூலாசிரியரின் பல திறங்களைப் பற்றி மதிப்புக் கொள்வார் என்பதில் ஐயமில்லை. ஏன்? இத்துணைக் கலைகளும் ஒருங்கு குடிகொண்ட பெருங் கலைஞர் ஒருவராலல்லது இக்குறளோவியம் கலைக் காவியமாக எழுதியிருக்க முடியுமா? மண்ணின் சிறப்பை வளங் காட்டும்; பண்ணின் சிறப்பைத் தமிழ்காட்டும்; கலைஞரின் சிறப்பைக் கருத்து வண்ணம் காட்டிவிடும்.*

டாக்டர் கலைஞரின் குறளோவியத்திற் பல புதுநெறிகள் உள. ஒவ்வொரு குறட்கு முன்னும் ஏற்ற சூழ்நிலை அல்லது பின் புலம் அமைத்துக் காட்டியிருப்பது முதற்சிறப்பு. திருக்குறள் ஒரு நூலின் கிளையில்லை. அதுவே முதல். மக்கள் வாழ்வியக்கத்தை அலசிப்பார்த்துக் குறளுருக் கண்டவர் வள்ளுவர். அவர் கண்ட பல நிகழ்ச்சிகள் குறட்பிழிவா-யின. இவ்வுண்மைப்படையை அறிந்த நம் கலைஞர் கருணாநிதியார், கற்பனையானாலும், குறட்கேற்ற சூழ்நிலைகளைத் தொடுத்தும் அடுத்தும் கற்பாரை வழிப்படுத்துகின்றார். இத்தனிநெறிநோக்கிக் குறளோவியத்தைச் 'சூழ்நிலையுரை' என்றும் கூறலாம், உரையென்ற மரபுப்பெயர் சிறப்பாக இருக்குமாயின் சொற்புலங்காட்டுவது எளிது; பின்புலங்காட்டுவது அத்துணை எளிதன்று. சில குறட்பாக்கட்கு இரண்டு மூன்று பக்கங்கள்கூடப் பின்புலம் போட்டிருக்கும் பெருந்தடத்தைக் காண்கின்றோம்.

தன் பின்புலக் கட்டுமானத்தில் திருவள்ளுவரையும் ஈடுபடுத்திப் பணி கொண்டிருப்பது இந்நூலின் மற்றொரு தனிச்சிறப்பு, மக்களின் புரட்சிக் கண்ணீரையும் கொடிய அரச குலத்தின் ஓட்டக் கால்களையும் கண்டபோது தான், வள்ளுவருக்கு 'அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர்' என்ற திருக்குறள் பிறந்தது எனவும், ஏரிக்கரை ஓரமாக நடந்து சென்றபோது 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல' என்ற உவமையைக் கண்டுபிடித்தார் எனவும், வெற்றி வேலொடு தன் முன் நின்ற மன்னனைப் பார்த்து 'வேலன்று வென்றி தருவது' என உண்மை கூறினார் எனவும், கயவனைக் காட்டுக என்று கேட்ட இளங்கோவுக்கு நேரிடையாக ஒரு நிகழ்ச்சியைச் சுட்டிக் காட்டித் தெளிவித்தார் எனவும் குறளோவியத்தில் வள்ளுவரின் நடமாட்டத்தைக் காண்கின்றோம். கம்பர் தன் இராமாயணத்திற்குப் பாடபேதத்தைத் தன் காலத்திலேயே கேட்டார் என்பது போல, 'அறத்தாறு இதுவென வேண்டா' என்ற குறட்குப் பொருந்தா உரையை வள்ளுவரே கேட்டு உண்மையுரைகூறித் திருத்தினார் என்று ஒரு பின்புலத்தைக் கலைஞர் செப்பனிட்டிருப்பது துணிவு கலந்த புலமையாகும்.

வள்ளுவம் என்ற என்நூலில், திருக்குறள் ஒவ்வொருவருக்கும் ஏற்ற வாழ்வுத் தனிமறை எனவும், தத்தம் நடைமுறைக்கு ஒத்த செயல்நூல் எனவும், அவரவரும் தம் வாழ்வுப் போக்கோடு வைத்துப் பார்ப்பதே திருக்குறட்பயன் எனவும் வலியுறுத்தியிருக்கின்றேன். என் கருத்தோடு ஒத்த கருத்துடைய கலைஞர் அவர்கள் பல்வேறு மாந்தர்களின் நடைமுறை வாழ்வுப் பின்னணியாக முப்பாற் குறட்களையும் பின்னிக்காட்டியிருப்பது இதுகாறும் திருக்குறள் பற்றி எழுந்த நூல்களிற் காணப்படாத, ஆனால் காணவேண்டிய புதிய முறையாகும் என்று சுட்டிக்கூற விழைகின்றேன்.

அறிவுசான்ற திருக்குறட்கு விளக்கமாகத் தேவர்களின் வான வாழ்வையும் புராணங்களின் மயக்கக் கதைகளையும் காட்டிவரும் போக்கு ஒவ்வாது. நம் போல் மானுடமாய் வாழ்ந்த நன்மக்களின் ஒழுகலாறுகள்தாம் திருக்குறட்குக் காட்டாகத் தக்கவை. 'தொழுத கையுள்ளும் படையொடுங்கும்' என்ற குறட்குக் காந்தியடிகளின் சுட்டுக் கொலையையும், 'பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர்' என்பதற்கு அறிஞர் சாக்கிரத்தரின் நாகரிகத்தையும், 'தான் சாம் துயரம் தரும்' என்பதற்கு பாகித்தானில் பூட்டோவின் தூக்குநிலையையும், 'நிறைமொழி மாந்தர் பெருமை' என்பதற்குப் பேரறிஞர்



அண்ணாவின் அறவுரையையும், 'நிரைநீர நீரவர் கேண்மை' என்பதற்குப் பெரியார் - மூதறிஞர் கேண்மையையும், 'வளத்தக்காள் வாழ்க்கைத் துணை' என்பதற்குக் காரல் மார்க்கின் மனைவி சென்னியாளின் மாட்சியையும் இவ்வாறே நடந்த நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டுவர் நம் கலைஞர். நடப்பினைக் காட்டுவதால் திருக்குறள் வாழ்க்கைநூல் என்பதும், பிறநாட்டு நல்லறிஞர்களின் வாழ்வையும் மேற்கோட்படுத்துவதால் திருக்குறள் உலக அறநூல் என்பதும் கற்புப் பெண் கழுத்துத்தாலிபோல் விளங்கக் காணலாம்.

இத்தகைய பின்புலச் சூழலில் கலைஞர் வெளியிடும் தம் குடும்ப நிகழ்ச்சி ஒன்று உண்டு. அதுகேட்டு நம் மெய் அரும்பி விதிர் விதிர்க்கின்றது. கலைஞரின் அருமைத் தந்தையார் முத்துவேலர் தன்மேல் நல்ல பாம்பு ஊருவதை அறிந்த போது ஏறிய பாம்பு தானே இறங்கும் வரை, உள்ளம் நடுங்காதும் உடல் அசையாதும் இருந்து கடிவாய் பிழைத்தார் எனவும், 'வெள்ளத்தனைய இடும்பை' என்ற குறட்பாவிற்கு இவ்விருக்கை எடுத்துக்காட்டாம் எனவும் குறளோவியம் மெய்ம்மை சுட்டுகின்றது. எங்கெல்லாம் கலைஞர் குறட்காட்சி காண்கின்றார் என்பதற்கு இஃதோர் வீட்டுச் சான்று. இதற்கு வரைந்த ஓவியத்தில் அஞ்சுக அன்னையும் அதனை அசையாது பார்த்துக் கொண்டிருப்பதாகப் பின்னணி செய்திருப்பது கலைஞர் பிறந்த குடியின் மாட்சியைப் புலப்படுத்தும்.

குறளோவியத்தின் தனிச்சிறப்பு பரந்த சூழ்நிலைப்புலமாகும். கலைஞர் கற்பனையில் வந்துபோம் எந்நிலைப் பெண்களும் ஆண்களும் சின்னஞ்சிறு குழந்தைகளுங்கூடத் திருக்குறளைக் கற்றும், உரையாடலிற் குறள் கலந்தும் பேசுகின்றனர். கலைஞர் கண்ட பட்டிதொட்டி நாடு நகரமெல்லாம் குறள் மணக்கின்றது. உறையூர்க் கோழிக்கும் உரனுண்டு என்பது போலத் தமிழ்நாட்டுக்கரடியும் இவ்வோவியத்தில் 'கேட்டினும் உண்டு ஓர் உறுதி' என்ற நட்புக் குறளை நல்லான்செவியுள் அறிவுறுத்துகின்றது. மண்ணுலகம் வந்து திரும்பிய விண்மண்டல வீரர்களுங்கூட, வள்ளுவரின் வான்சிறப்பினைப் பாராட்டுகின்றனர். மக்கள் எங்கு சென்றாலும் அங்கெல்லாம் திருக்குறள் தொடரும், தொடர வேண்டும் என்ற கலைஞரின் பெருந்தமிழுணர்வை இது காட்டவில்லையா? வள்ளுவர்கோட்டம் கண்ட கலைஞர்க்கு இவ்வுணர்வு இருப்பது இயல்புதானே. உயர்திணை அஃறிணை அனைத்தையும் திருக்குறட்கண்ணாகக் காண்பது நம் கலைஞரின் தமிழொருமைப்பாடு.

கலைஞர் ஒரு பெருங்கட்சியின் தலைவராகவும், தமிழ்கூறு நன்மாநிலத்தின் முதலமைச்சராகவும், பல்வேறு அரசியல் தொடர்பினராகவும் ஆட்சிநிலைகளை நன்கறிந்தவர். ஆதலின் குறளோவியத்தில் ஆட்சிக்குறள்கள் பெரிதும் இடம் பெற்றுள. இன்னும் உண்மை வரலாற்று நிகழ்ச்சிகளைப் பல பொருட்குறள்கட்கு அவரால்காட்ட முடியும். எனினும் நனிநாகரிகம் கருதி, குறட்பார்வைக்கு வேண்டுமளவு கோடிட்டுச் சென்றார் எனக் கொள்ள வேண்டும்.

குறளோவியத்தின் மேலும் ஒரு சிறப்பு காதற்குறள்கள் கணக்காகச் செம்பாகம் இடம் பெற்றிருப்பது. கற்பவர்க்குப் பொருளும் இன்பமும் அடுத்தடுத்துக் கிடைக்குமாறு இருபாற்குறள்களும் ஒன்றன்பின் ஒன்றாக வைக்கப்பட்டுள.ஒரு பக்கம் புற ஓவியம்; அடுத்த

பக்கம் அக ஓவியம். தமிழுக்கு இனிமை, இன்பம் என்ற பொருளுண்டு. அப்பொருள் அன்புக்காதல் கூறும் அகத்திணையால் வந்தது. தமிழ் அகப்பொருள் தெரிந்தவரைத்தான் தமிழகம் தெரிந்தவர் என்று கூறலாம். அதனாலன்றோ அறங்கூறவந்த திருவள்ளுவர் காமத்துப்பாலினை நெறிபடவும் சுவைபடவும் பாடினார்.

கலைஞரின் குறளோவியத்திற் காதற்காமக் குறள்கள் கற்புக் காவியமாக உயர்கின்றன. அறக்குறட்கும் பொருட்குறட்கும் பின்புலம் பருப்பொருள் வடிவுடையது; வெளிப்படையானது. காதற்குறளின் பின்புலமோ எண்ணத்திலும் நுண்ணியது; சிறிது வழுவினும் தள்ளுபடியாவது. சங்க இலக்கியத் தோய்வுடைய தமிழ்ப் பெருமகனார் தொல்காப்பியம் வரையறுத்த நெறியில் நின்று, காதலோவியங்களைப் பொன்வண்ணத் தமிழ் நடையில் வரைந்துள்ளது கண்டு வியந்தேன். அன்றொழியும் ஐம்புல நுகர்ச்சியாகக் காட்டாமல், என்பும் அன்பும் இன்பும் கலந்த ஆராப்புணர்ச்சியாக ஒவ்வொரு குறட்கும் உள்ளழகு காட்டியிருப்பது எம் போன்ற புலவோர்க்கு விருந்துப் படைப்பு.

கடலின் ஆழ்ந்த ஒண்தீந்தமிழின் அகத்திறனை இடைக்காலப் புலவர்களும் இக்காலப் புலவர்களும் கூடச் செவ்வன் இதுகாறும் தெரிந்திலர், தெளிந்திலர். அகத்தினை அரச குடிகட்கும் படைமறவர்கட்கும் செல்வப் பெருமக்கட்கும் உரியதென அப்புலவர்கள் தவறாகக் கருதி வழுவாகப் பரப்பி வருகின்றனர். உண்மையைத் தெளிந்து கண்டு, தெளியக் காட்டுகின்றார் நம் பெரும்புகழ்க் கலைஞர். உழவுக் குடும்பத்தார், உப்பங்கழிக் குடிசையார், ஆனினம் மேய்ப்பார், மீனினம் பிடிப்பார், விறகு வெட்டுவார், இன்னும் என்ன, தெருவீதிக்குப்பை கூட்டுவார் எல்லாரும் குறட்காதலர்களாக விளங்குவது மட்டுமில்லை. குறள் கற்றுத் தம் ஊடற்காலத்தும் கூடற்காலத்தும், காதற்குறளை, கன்னித்தமிழை, பாலும் தேனும் பழமும் கலந்தாற் போலப் பேசிப் பின்னிப்பிணைந்து இரண்டறக் கலந்து ஒரு மெய்ப்பாடு எய்துகின்றனர். 'எளிய குடும்பத்துப் பருவப் புறாக்கள்' குறளகத்துத் தலைவன் தலைவியராக இணைகின்ற அகத்தமிழ் உண்மையை மீண்டும் உயிர்ப்பித்துக் காட்டுகின்றார் கலைஞர். இக்கலைத் தொண்டிற்கு எவ்வளவு நன்றி கூறினும், நன்றி என்ற மூன்றெழுத்துக்குள் நம் உணர்வு அடங்கும் அளவினதன்று.

குறளோவியத்தின் பதிப்புப்பேறு பெற்ற பாரதி பதிப்பகம் புகழ்மிக்க பெரியவர்களின் புதுமை சான்ற நூல்களை வெளியிட்டுவரும் பெருமைதாங்கியது. 'வாழிய செந்தமிழ்' என்று வாயூறிப் பாடிய தேசிய மாகவி பாரதியின் பெயரைக் கொண்ட பாரதி பதிப்பகம் தமிழ்த் தொண்டாற்றும் சிறப்பைச் சொல்லவும் வேண்டுமோ! அப்பெருந்தொண்டுகளுள் ஒன்று குறளோவிய வெளியீடு, எழுத்தோவியத்துக்குத் தக, பெரிய வடிவோவியம் கொடுத்திருப்பது இவ்வெளியீட்டின் தனிச் சிறப்பு. காதல் நோய்ப்பட்ட பெண்ணின் கவலை நெஞ்சம் பருத்துப் பெருத்து இருகையாலும் மணலை அள்ளி அள்ளிக் கடலைத் தூர்த்துக் கொண்டிருப்பதாகக் காட்டும் பூதநெஞ்சின் ஓவியமும், மூதறிஞர் இராசாசி நீடுதுயில் கொண்டபோது பெரியார் கைத்தடியைச் சாய்த்துப் பிடித்துச் சுடலை மண்ணுத்தரையில் அமர்ந்திருக்கும் சோக ஓவியமும், கற்பனைக் குற்றம் கணவனைக் கண்டவுடன் தோன்றாது என்று காட்டும் தலைவியின் மைக்கோல் ஓவியமும், இன்ன பல




வனப்புக்களும் தனிச்சுட்டுக்கு உரியவை. குறளோட்டம் கண்ட வள்ளுவர்க்கு வள்ளுவர் கோட்டம் கண்டார் நம் கலைஞர். ஆதலின் பக்கந்தோறும், வள்ளுவர் கோட்டம் பதிவு பெற்றிருப்பது இயல்பும் இனிமையும் ஆம். ஒப்பில் கலைஞரின் ஓவியக் குறளை ஓவியமாகவே பதிப்பித்த பதிப்புச் செம்மல் சிதம்பரனார்க்கு நன்றி கூறுவது மட்டும் போதாது; நும் பதிப்பகம் புகழோவியமாக வளர்க என்று வாழ்த்தும் கூறுவல்.

"இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் வாழ்ந்தவர் வள்ளுவர் என்று யார் கூறியது- அவர் இன்னமும் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார். வாழ்வுக்கு இலக்கணம் வகுத்தவர். அவர் வழங்கிய குறட்பாக்கள் உள்ள வரையில் வாழ்ந்து கொண்டுதான் இருப்பார்."

என்ற கலைஞரின் நிறைமொழி தமிழினத்துக்கு வழங்கிய உறுதிமொழியாகும், கற்புத் தெய்வமாம் கண்ணகிக்குச் செங்குட்டுவன் கல்லோவியம் கண்டான்; இளங்கோ சிலப்பதிகாரம் என்னும் சொல்லோவியம் கண்டார். இங்ஙனம் வேந்தர் இருவர் செய்த ஓவியங்களையும் தமிழ்த் தெய்வமாம் திருவள்ளுவர்க்குக் கலைஞர் என்னும் ஒருவரே கண்டார். வள்ளுவர் கோட்டமாகவும் குறளோவியமாகவும் தமிழ் என்ற குருதியோட்டம் ஓடும்வரை நிலைநிறுத்தினார்.

தமிழ்ப் பெருமகன் கலைஞர்க்கு நாம் செய்யவேண்டிய கடப்பாடு என்ன? திருக்குறளைக் குழந்தைப் பருவமுதலே முழுதும் கற்க; நும் வாழ்க்கை நடை முறையோடு திருக்குறளைப் பொருத்தி நினைக. உங்கள் ஒரு கைக்குத் திருக்குறளும் ஏனைக் கைக்கு குறளோவியமும் கையணிகளாக விளங்குக.

"சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சா னவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது"

என்று என் தொல்நட்பும் நன்மதிப்பும் வாய்ந்த கலைஞரை வாழ்த்துகின்றேன்.

**கதிரகம்** **டாக்டர் வ.சுப.மாணிக்கம்**
**காரைக்குடி**



## விருப்பமுறி (உயில்)

**என் எஞ்சிய உடைமைகளில் (Net assets) ஆறில் ஒரு பங்கினை அறநிலையத்தின் (Trust) வைப்பு முலநிதியாக (Capital Fund) வைத்து அதிலிருந்து வரும் வருமானத்தை நான் பிறந்த ஊரான மேலைச்சிவபுரியில் கல்வி, மருத்துவம், நலவாழ்வு, குழந்தைகள் நலம், அஃறிணை உயிர்களின் நலம் முதலான ஊர்ப் பொது நலங்கட்குச் சாதிசமய எவ்வகை வேறுபாடுமின்றி இலவசமாகச் செலவு செய்ய வேண்டியது.**

## வரவேற்பும் நன்றியும் தொகுப்பும்




திரு. வ.சுப.மா. தொல்காப்பியன்



திரு.வ.சுப.மா. பூங்குன்றன்




திருமதி அழ.தென்றல்




திரு.வ.சுப.மா. பாரி




திருமதி. வெ.மாதரி



திருமதி. செ.பொற்றொடி



திரு. வ.சுப. திரு.சுப்பையா



திரு. பழ. முத்துவீரப்பன்



திரு. கிருங்கை சேதுபதி

# திறப்பு விழா நிகழ்வு







02.09.2017

# செம்மல் வ.சுப.மாணிக்கனாரின் நூற்றாண்டு நிறைவுவிழா
# ஒரு கண்ணோட்டம்

சொ.அருணன்

*தன்னேரிலாத் தமிழ்மாணிக்கம் ஆகிய செம்மல் வ.சுப.மாணிக்கம் அவர்களின் நூற்றாண்டுவிழாவானது, 18.04.2016 அன்று, அப்பெருமகனார் பணியாற்றிய அழகப்பா பல்கலைக்கழகத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. அதன் பின்னர் தாயகத்திலும் அயலகத்திலும் பல்வேறு இடங்களில் பல்வேறு அமைப்புகளின் நன்முயற்சி யால் நூற்றாண்டுவிழாக்கள் நடைபெற்றன. நிறைவாக, செம்மலார் பிறந்த மேலைச்சிவபுரி மண்ணில், 02.09.2017 சனிக்கிழமை அன்று நூற்றாண்டுவிழா நிறைவு நிகழ்வு மிகச்சிறப்பாக நிகழ்ந்தேறியது.*



*நிலைகொண்ட வாழ்வால் தலைநின்ற அச்செம்மலாருக்கு, மேலைச்சிவபுரியில் சிலை எழுப்பியும், அவர்தம் அனைத்து நூல்களின் தொகுதிகளையும், அப்பெருமகனார் குறித்து அறிஞர்கள் எழுதிய நூல்களையும், அன்னாரது வாழ்வியல் குறித்த ஆவணப் படத்தையும், நூற்றாண்டுவிழா மலரையும் அதே நிகழ்வில் வெளியிட்டமை வரலாற்றுச் சிறப்புடையன. இன்னுமொருசிறப்பு, செம்மல் வ.சுப.மா. அவர்கள் பயன்கொண்ட பொருள்களையெல்லாம் சீருறச் சேர்த்தமைத்து ஒரு கண்காட்சியைச் சன்மார்க்க சபைக்குள் அமைத்திருந்தமையாகும்.*

*சன்மார்க்க சபையின் கணேசர் திருமுன்பு, நூற்றாண்டு காணும் இலக்கியப் பேராளுமையின் நினைவுச்சின்னங்களைக் கண்டபோது ஏற்பட்ட சிலிர்ப்பை எழுதி உணர்த்த முடியாது; அத்தனை பெருஞ்சிறப்பு.*

## செம்மலாரின் சிலைத் திறப்பு

*சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கிடத் திருப்பணி ஆற்றும், மேலைச்சிவபுரி*




கணேசர் கலை அறிவியல் கல்லூரி- சன்மார்க்க சபைக்கு முன்புறம், ஊருணிக்கரையின் கீழ்கரையில், நல்லாலின்கீழ் கிழக்குமுகமாக அமைந்த மண்டபத்தில் செம்மலாரின் மார்பளவு சிலை அமைக்கப் பெற்றிருந்தது.

குன்றக்குடி திருவண்ணா மலைஆதீனக்குருமகாசந்நிதானம் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்களின் அருள்தலைமையில், நீதியரசர் மெ.சொக்கலிங்கம், சன்மார்க்க சபையார், வ.சுப.அவர்களின் குடும்பத்தார், மாணாக்கர்கள், உற்றார் உறவினர், நட்பினர், ஊரார்கள் மற்றும் சான்றோர்பலர் முன்னிலையில், கலைத்தந்தை கரு. முத்து தியாகராசச் செட்டியார் அவர்களின் தவப்புதல்வர் திருவாளர் கரு.முத்து. தி. கண்ணன் அவர்கள் வ.சுப.மா.அவர்களின் திருவுருவச் சிலையைத் திறந்துவைத்தார்கள். அனைவரும் மலர் வணக்கம் செய்து போற்றினர்.

பின்னர், சன்மார்க்க சபைக்கு முன்னர் அமைந்த தமிழ்க்கதிர் அரங்கத்தில் நூற்றாண்டு விழா காலை அமர்வு, தமிழ்த்தாய் வாழ்த்துடன் இனிது தொடங்கியது. செம்மல் வ.சுப.மா. அவர்களின் திருவுருவப்படத்திற்கு முன்னால், சான்றோர்கள் மங்கல விளக்கேற்றி வைக்க, வ.சுப.மா. அவர்களின் புதல்வர் வ.சுப.மா.தொல்காப்பியன் அவர்கள் வரவேற்புரை ஆற்றினார்கள். பின்னர் வ.சுப.மா. குடும்பத்தினர் சான்றோர்களுக்குப் பொன்னாடைகள் அணிவித்து நினைவுப் பரிசில்கள் வழங்கிச் சிறப்பித்தனர்.

## வெளியீடுகள்

தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளாரின் அருள்தலைமையில் நிகழ்ந்த இவ்விழாவில், வ.சுப.மா 100 மலர், வ.சுப.மா.வின் தொகுப்பு நூல்கள், வ.சுப.மா. குறித்த அவர்தம் அறிவார்ந்த மாணாக்கர்கள் சான்றோர்கள் எழுதிய நூல்கள், மாணிக்கனார் 100 - தமிழ் யாத்திரை என்னும் ஆவணப்படக் குறுந்தகடு ஆகியன வெளியிடப்பெற்றன.

வ.சுப.மா.100 மலரினை நீதியரசர் மெ.சொக்கலிங்கம் வெளியிட, தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார், கருமுத்து தி.கண்ணன் ஆகியோர் பெற்றுக் கொண்டனர். தொடர்ந்து ‘மாணிக்க விழுமியங்கள்’ என்ற தலைப்பில், தமிழ்மண் பதிப்பகம், 18 தொகுதிகளாகக் கொணர்ந்திருந்த, வ.சுப.மா. அவர்களின் 33 நூல்களையும், தவத்திரு அடிகளார் வெளியிட அவற்றை, திரு. கருமுத்து தி.கண்ணனின் புதல்வர் திரு ஹரிதியாகராசன் பெற்றுக்கொண்டார். மாணிக்கனார் குறித்த 9 நூல்களை முனைவர் கா.செல்லப்பன் அவர்கள் வெளியிட, விழாத் தலைவர் தவத்திரு அடிகளார் பெற்றுக்கொண்டார். பேராசிரியர் கி.நாராயணன் தயாரித்த ஆவணப்படக்

குறுந்தகட்டினை, பேராசிரியர் சாரங்கபாணியின் புதல்வர் மருத்துவர் அந்துவன் வெளி-யிட்டார். பின்னர், நூலாசிரியர்களுக்கும், மலரின் பதிப்பாசிரியர்களுக்கும், தமிழ்மண் பதிப்பகர் திரு கோ. இளவழகன் மற்றும் ஆவணப்படத்தயாரிப்பாளர்களான சென்னையைச் சார்ந்த திருவாளர்கள் சுரேந்திரன், மோகன் ஆகியோருக்கும் சிலைக்குரிய மாடத்தைச் செய்தளித்த சிற்பி சுந்தரம் உள்ளிட்டோருக்கும் நீதியரசர் ஆடைஅணிவித்துச் சிறப்புச் செய்தார்.

வ.சுப.மா. அவர்களின் குடும்பத்தினருக்குப் பொன்னாடைகள் அணிவித்துப் பாராட்டுத் தெரிவித்த பின்னர், நிகழ்வின் தலைமை உரையாற்றினார் தவத்திரு பொன்னம்பல அடிகளார்.



அவர்களைத் தொடர்ந்து, திருவாளர். கரு முத்து. தி. கண்ணன், மாண்பமை நீதியரசர் மெ.சொக்கலிங்கம், பாரதிதாசன் பல்கலைக்கழக மேனாள் ஆங்கிலத்துறைத் தலைவர் பேராசிரியர் முனைவர் கா.செல்லப்பன், பேராசிரியர் மா.இராசமாணிக்கனாரின் புதல்வர் மருத்துவர் இரா.கலைக்கோவன், கணேசர் கலை அறிவியல் கல்லூரிச் செயலர், திரு.ப.சா.சிங்காரம், மற்றும் வ.சுப.மா. அவர்களின் உறவினர்கள் ஆகிய திருவாளர்கள். அ.சுப.அண்ணாமலை, மருத்துவர் வ.சுப.சொ.சேதுராமன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தனர். உரிய காலங்கடந்து போனாலும் இவர்களின் உரைத்த மொழியில் திளைத்திருந்த அரங்கினர் அனைவருக்கும் நன்றி பாராட்டினார் வ.சுப.மா. அவர்களின் திருமகள் திருமதி தென்றல் அழகப்பன்.

பின்னர், செட்டிநாட்டு விருந்தோம்பல் பாங்கில் அறுசுவை உணவு அனைவருக்கும் பரிமாறப்பெற்றது. இடைப்பொழுதில் ஆவணப்படம் முழுவதும் திரையிடப்பெற்றது.

தொடர்ந்து கருத்தரங்கம் நிகழ்ந்தேறியது. அந்நிகழ்வுக்கு வரவேற்புரை ஆற்றிய திரு வ.சுப.திரு. சுப்பையா அவர்கள் செம்மல் வ.சுப. அவர்கள் ஆய்வுரையைவிடவும் அவர் தொடர்பான அனுபவங்களைச் சொல்லவேண்டும் என்று கேட்டுக் கொண்டது குறிப்பிடத்தக்கது. அவ்வண்ணமே உரையாளர்கள் தத்தம் மனவுணர்வுகளைத் திறம்பட எடுத்துரைத்தனர். இவ்வரங்கிற்கு, பேராசிரியர் முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியம் தலைமை தாங்கினார். பாவலர்மணி ஆ.பழநி, பொற்கிழிக் கவிஞர் சொ.சொ.மீ.சுந்தரம், முனைவர் பா.வளன்அரசு, முனைவர் ச.சவகர்லால், முனைவர் பழ-முத்துவீரப்பன், முனைவர் இரா.மோகன், முனைவர்



விசு.பழனியப்பன், முனைவர் தி.மா.பூங்குன்றன் ஆகியோர் உரையாற்றினர். பின்னர் வ.சுப.மா. அவர்களின் திருமகள் திருமதி மாதரி நன்றி நவின்றார்.

மாலை நிகழ்வு தொடங்கும் வேளையில் வான்மழை வந்து வாழ்த்தியது அனைவரையும் சிலிர்க்கச் செய்தது. தோழர் தா.பாண்டியன் அவர்கள் தலைமை ஏற்க, கோவிலூர் ஆதீனம் சீர்வளர்சீர் மெய்யப்ப சுவாமிகள் முன்னிலை வகித்தார்கள். திருவாளர்கள் பழ.கருப்பையா, சுப.வீரபாண்டியன் ஆகியோர் உரைநிகழ்த்திச் சிறப்பித்தனர். இந்நிகழ்வுக்கு, வ.சுப.மா. அவர்களின் புதல்வர் மா.பாரி வரவேற்க, செம்மலாரின் புதல்வி திருமதி செ.பொற்றொடி நன்றியுரை வழங்கினார். நிகழ்ச்சி முழுவதையும் முனைவர் கிருங்கை சேதுபதி தொகுத்து வழங்கினார். நாட்டுப்பண்ணுடன் நிறைவுற்ற இந்நிகழ்வினைத் தொடர்ந்து வான்முகில் வழாது பெய்து குளிர்வித்தது. நெஞ்சை நிறைவித்தது என்றுதான் சொல்லவேண்டும்.

இந்நிகழ்வில் பங்கேற்ற உரையாளர்களின் கருத்துரைகளின் சில பகுதிகள் பின்வருமாறு தொகுத்தளிக்கப்பெறுகின்றன. இந்நிகழ்வின் முழு உரைகளையும் இணைய தளத்தில் https://www.youtube.com/watch?v=OyKpvWJ_24I என்னும் பகுதியைச் சொடுக்கினால் கண்டு மகிழலாம்.

# மதிப்புரைகள்

## தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்



அனைத்துத் தமிழறிஞர்களின் மாநாடாக, உலகத் தமிழ்ச்சங்க மாநாடாக மேலைச்சிவபுரியில் தமிழறிஞர்கள் கூடியிருக்கிற வேளையில், மரபும் உறவும் உணர்வும் கருதி சில வார்த்தைகளை இந்த மன்றத்தில் பதிவுசெய்து, பாராட்டி, வாழ்த்தி விடைபெறுவதில் மகிழ்ச்சியும் மனநிறைவும். ஒரு சீனக்கவிதை சொல்லும்:

ஒரு நாள் காலை குடையிடம் கேட்டேன்

நீ விரும்புவது மழையில் நனைவதையா? அல்லது வெயிலில் காய்வதையா?

குடை புன்னகைத்துச் சொன்னது, என் கவலை இதைப்பற்றியல்ல.



பின் எதைப்பற்றியது உன் கவலை?
குடை சொன்னது,
எப்படிப்பட்ட பேய்மழையானாலும் என் மக்களை
நனையவிடக்கூடாது.
எப்படிப்பட்ட வெயிலானாலும் என் மக்களைக் காயவிடக்கூடாது
இதுதான் என் கவலை என்று சொன்னது.

*இது சீனக்கவிதையின் சாரம்.*

*இதைத்தான் வள்ளுவம் நமக்கு வரமாய் வழங்கியது.*

ஊழிபெயரினும் தாம் பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார்

*என்று வள்ளுவர் நமக்கு வரமாய்த்தந்தது. அந்த வரத்தின் வழியே தான் நமக்குக்கிடைத்த தமிழ் வரம் வ.சுப.மாணிக்கம் என்கிற தமிழ்மாணிக்கம்.*

ஈடிலா அன்பன் எளியன் இனியன்
கேடிலா மனத்தன் கிளர்ச்சித்தலைவன்
நண்பன் பண்பன் நயத்தகு தமிழைக்
கண்ணென, உயிரெனக் கருதும் இயல்பினன்
பொய்யா மாணிக்கப் புலவன் அவனே
உண்மைத் தமிழ்த்தொண்டன்

*என்று கவியரசு முடியரசனார் பாராட்டிய அந்த வரிகளில்தான் இன்று அவரது வாழ்க்கை வரலாறு ஆகியிருக்கிறது.*

*இளமைக்காலத்தில் எப்படி, மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி ஒரு மகாத்மாவாக மாறினாரோ, அதன் ஊன்றுகோல் அன்ன, வாய்மை தவறாத வாழ்வு, அந்த வாய்மை தவறாத பணியைத்தான் ரங்கூனில் பணியாற்றியபோது, 'இன்னார் வந்தால், இல்லை என்று சொல். ஐயா அவர்கள் சொன்னது, 'நீங்கள் இருந்தால் இருக்கிறீர்கள், இல்லையென்றால்தான் இல்லையென்று சொல்வேன். அதனால் அவருக்கு அங்கிருந்து பயணம் புறப்பட்டது. பணி நிறைவு பெற்றது. ஆனால், வாழ்க்கைப்பயணத்தில் வாய்மையால் வெற்றி பெற்ற ஒரு மகத்தான மனிதர் இருக்கிறார் என்றால், வ.சுப.மாணிக்கனார் ஒருவர்தான். இல்லை யென்றால், வட்டிக்கடையில் தன் வாழ்க்கையைத் தொடங்கி, ஒரு பெரிய தொழிலதிபராக வாழ்ந்திருப்பார். ஆனால், தமிழுக்கு அதிபராக அவர் கிடைத்திருக்க மாட்டார்.*

*எப்போதும் நன்றி மறவாமை தமிழர்களின் இயல்பு.நன்றி மறவாமல் இருப்பது தான் தமிழர்களுக்கு இருக்கிற தனிச்சிறப்பு. இந்தச் சிறப்பான பண்பை எப்பொழுதும் தன் வாழ்வில் காத்தவர் வ.சுப.மா.*

*தான் யாரை இதயத்தில் பூசித்தாரோ, தன் ஆசானாக, தன் வழிகாட்டியாக, தன் வாழ்வின் எல்லாநிலைகளிலும் யார் தன்னை முழுக்கவழி நடத்தினாரோ, அந்தப்*

பண்டிதமணி கதிரேசஞ்செட்டியாருக்குத் தன் வாழ்வை அர்ப்பணம் செய்து, தனது இதயத்தின் கதவுகளைத் திறந்து வைப்பதுபோல, இல்லத்தின் கதவுகளைத் திறந்து வைத்து- ‘கதிரகம்’ என்று பெயர் சூட்டினார்.தன் அருமை மகனுக்கு, ‘பூங்குன்றன்’ என்று பெயர் சூட்டினார்.

இவற்றுக்கெல்லாம் மேலாகத் தன் வாழ்க்கைத் துணைநலத்தை மிகச்சிறப்பாகப் பேணியவர் வ.சுப.மாணிக்கனார். அவர் அறிவறிந்த மக்கட்பேறு பெற்றவர். குன்றக்குடியில் எழுந்தருளியிருக்கிற சண்முகநாதனுக்கு ஆறு முகங்களைப் போல,வ.சுப.மாணிக்கனாருக்கு ஆறு முகங்களைப் போல ஆறுகுழந்தைகள்.

ஒரு தந்தையார் செல்வந்தராக இருந்தால், அவர் மறைவுக்குப் பிறகு, சண்டைகள் நடக்கும். ஆனால், ஒரு தமிழ்ப்புலவரின் மறைவுக்குப்பிறகு, அந்தத் தமிழ்ப்பணிகளைத் தொடர்வதற்கு, எடுத்துச் செல்வதற்கு, ஆறுபேர் தோள்கொடுத்திருக்கிறார்கள். மாணிக்கனார் மறைவை இன்று சிலையால் மட்டும் நிறைவு செய்துவிடவில்லை. அவர் ஆற்றிய பணிகளுக்கும், இனி தமிழுக்கு நாம் ஆற்றவேண்டிய பணிகளுக்குமாகத்தான் இன்று இந்த மேலைச்சிவபுரியில் விழாவை ஒருங்கிணைத்திருக்கிறார்கள்.

அந்த வகையில், ஏகம்மை ஆச்சியோடு, அவர் நடத்தியது நல்லறமாகிய இல்லறம். தன் வாழ்வைத் தமிழுக்குத்தந்துவிட்டு, தன் வீட்டையும், வீட்டுப்பணிகளையும் இல்லத்துப் பணிகளையும் வாழ்க்கைத் துணைநலத்திடம் ஒப்படைத்துவிட்ட பெருந்தகை அவர். அதன் மூலம் அவருக்குக் கிடைத்திருக்கிற அறிவறிந்த மக்கட்பேறு, தொல்காப்பியன், பூங்குன்றன், பாரி, தென்றல், மாதரி, பொற்றொடி. இந்த ஓராண்டாக தங்கள் தந்தையின் நூற்றாண்டை, அவர்கள் திட்டமிட்டுத் திட்டமிட்டுச் செயலாற்றியதன்விளைவுகள், அங்குலம் அங்குலமாக இமைப்பொழுதும் துஞ்சாது அதற்கு ஆற்றிய பணிகள் பாராட்டத்தக்கவை.

"ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்றோன் எனக்கேட்ட" நிலையில் தாய் மிக மகிழ்வாள். ஆனால், தன் தந்தை விட்டுச் சென்ற பணிகளை எல்லாம் இன்று ஒருங்கிணைத்து அறிவறிந்த மக்கட்பேறாக இவர்கள் ஆற்றுகிற பணி நல்ல தந்தை நல்லதாய் என்ற நற்பேரைப் பெற்றுத்தந்திருக்கிறது.

நல்ல தந்தை, நல்ல தாய் என்ற பெயரினை எப்படிப் பெற முடியும்?

பெரியபுராணத்தில் சேக்கிழார் சொல்லுவார். அப்பூதியடிகளின் இல்லத்திற்குத் திருநாவுக்கரசர் வந்திருக்கிறார். அவருக்கு உணவு பரிமாறுவதற்கு வாழை இலை எடுத்து வரச் சொல்கிறார் அப்பூதியடிகள். தோட்டத்திற்கு ஓடுகிறது மூத்த திருநாவுக்கரசு. அங்கு விஷப்பாம்பு தீண்டிவிடுகிறது, உடலில் விஷம் ஏறுகிறது. உயிருக்குப் போராடுகிறது அக்குழந்தை. தன் தந்தை ஆணையிட்டவண்ணம், வாழை இலையைக் கொண்டுவந்து தந்துவிட்டுப் பின்னர் மயங்கிவிழுகிறது. ஏன்?

விஷப்பாம்பு தீண்டி உயிருக்குப் போராடும் அந்த நிலையிலும் தன் வீட்டுக்கு வந்திருக்கிற திருநாவுக்கரசர் உணவு உண்பதில் காலதாமதம் ஏற்படக்கூடாது என்பதால் வாழையிலையைக் கொண்டுவந்து வீடு சேர்த்துவிட்டு மயங்குகிறது குழந்தை.



எடுத்துக்கொண்ட கடமையில், உயிர்ச்சோர்வு ஏற்பட்டாலும், தளர்வு ஏற்பட்ட நிலையிலும், அந்தக் குழந்தை சொன்ன வார்த்தை,

"நல்ல தாய் தந்தை ஏவ நான் இது செய்யப்பெற்றேன்" என்பது.

நல்ல அப்பா, நல்ல அம்மா என்கிற பட்டத்தை யார் தருவார்கள்? கல்லூரிகள் தருமா? பல்கலைக்கழகங்கள் தருமா? இவை முனைவர் பட்டம் தரும். எம்.ஃபில் பட்டம் தரும். எம்.ஏ . பட்டம் தரும்?

நல்ல அப்பா, நல்ல அம்மா என்கிற பட்டத்தை அவர்களின் குழந்தைகள் மட்டும்தான் பெற்றுத் தர முடியும். அதனால்தான் திருவள்ளுவர் சொன்னார்.

.பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த
மக்கட் பேறல்ல பிற.

திருவள்ளுவர் அடையாளம் காட்டிய மக்கட்பேறு, உலகத்தின் இயல்பான மக்கட்பேறு அல்ல. அறிவறிந்த மக்கட்பேறு. அந்த நிலையில் ஆறு மக்கட்செல்வங்களைப் பெற்று- சகோதரர்களும் சகோதரிகளும் இணைந்து இந்தத் தமிழ்ப்பணியைத் தங்கள் தந்தை தூக்கிச் சுமந்த பணியை மீண்டும் இந்த மண்ணில் விதைப்பதற்கு நாம் நன்றிகூரக் கடமைப்பட்டிருக்கிறோம்.

நம்முடைய ஆதீனத்தில், பெருமைக்கும் பாராட்டுக்கும் உரிய ஐயா வ.சுப.மாணிக்கம் அவர்களுக்கு, முதுபெரும்புலவர் என்ற பட்டத்தை, நமது மகாசன்னிதானம் அவர்கள் வழங்கி மகிழ்ந்தார்கள். அந்தப் பெருமைக்குரியவரை எல்லா விருதுகளும் தேடித்தான் வந்தன. எந்த விருதையும், எந்தப் புகழையும் தேடி, நாடிச் செல்லாத அந்தத் தமிழாய்ந்த தலைமகனைத் தேடித்தான் திருவள்ளுவர் விருது வந்தது. எல்லா நிலைகளையும் தாண்டியது அவர்தம் தமிழ் உணர்வு.

தமிழையும் சைவத்தையும் பேணிக் கட்டிக் காத்த மண் செட்டிநாட்டுமண்தான். ஒரு காலத்தில் தமிழ்நாட்டு மேடையில் தமிழ் பாட முடியாது. தமிழ் பாடிய காரணத்தால், மேடையைக் கழுவிவிட்ட சம்பவங்களும் உண்டு. மேடை தீட்டாகிவிட்டது. எதனால், தமிழைப்பாடிவிட்ட காரணத்தால். ஒற்றை மனிதன் எழுந்தான். மிகப்பெரிய தமிழ் எழுச்சியைச் செய்தான். அந்த ஒற்றை மனிதன் தமிழ் இசை இயக்கமாக மாறினான். அந்த மனிதர்தான் அண்ணாமலை அரசர் என்கிற மகத்தான மாமனிதர். அது செட்டிநாடு தந்த பெரிய பரிசு. தமிழ் இசையைக் கட்டிக்காத்த இந்த மண்ணில் பிறந்தவர்தான் வ.சுப. மாணிக்கனார் தமிழ்நாட்டுக்கோயில்களில் தமிழ் முழுங்கப்பட வேண்டும் என்ற ஆன்மநேய முழக்கத்தை நமது மகாசன்னிதானம் 1950களிலிருந்து தமிழ் மண்ணில் எடுத்துவைத்தார்கள். நாடெங்கும் திருவாசக வேள்வி நடைபெற்றது.

'அருச்சனைப் பாட்டேயாகும்- அதனால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக' என்று சுந்தரரிடம் ஆணையிட்டார் சிவபெருமான்.

'தமிழோடு இசைபாட மறந்தறியேன்' என்று திருநாவுக்கரசர் பெருமான் பாடுகிறார்.

பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண்ட லத்தீசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண் டக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்

*உலகத்தின் தலைவன் சிவபெருமான் மண் சுமக்கிறான். அவன் பொன்மேனி புண் சுமக்கிறது. எதற்கு, தீந்தமிழ்ப்பாடல்களுக்காக.*

*திருவாசகத்திற்கு உருகாதார் ஒருவாசகத்திற்கும் உருகார். அந்தத் திருவாசகத்தைக் காதலித்தார் வ.சுப.மாணிக்கம்.*

*உலகத்தில் மொழியால், அறிவைப் பெறலாம். ஞானத்தைப் பெறலாம். ஒரு மொழியால் வீடுபேற்றை அடைய முடியுமா?*

தந்தது நின்றன்னை. கொண்டது என்றன்னை
சங்கரா யார்கொலோ சதுரர்

*யார் கேட்கிறார்?*

*இறைவனுக்கும் மணிவாசகருக்கும் நடக்கிற போட்டி, 'என்னிடமிருந்து நீ எதைப் பெற்றிருக்கிறாய்?'*

*மணிவாசகர் கேட்கிறார்:'நான் கடைக்கோடி ஆன்மா. பேரின்பப்பெருவெள்ளத்தில் நீந்தித் திளைக்கிறேன். ஆனால், நீ என்னிடமிருந்து எதைப் பெற்றாய்?' என.*

*ஆனால், இறைவன் நினைத்துக்கொண்டிருக்கிறான்?*

*கடையூழிக் காலம் வர இருக்கிறது. பிரளயம் தோன்ற இருக்கிறது. 'தாயுமிலி தந்தையிலி தான் தனியன் என்ற நிலையில், உலகத்தின் தலைவனே இருக்கப்போகிறான். அந்த நிலையில் தான் தனிமைத் துயரை நீக்குவதற்குத் தேனார் தீந்தமிழ்த்திருவாசகத்தை இறைவன் தானே கைப்பிரதி எடுத்துக்கொண்டானாம்.*

*மணிவாசகரை ஆட்கொள்வதற்காக, மதுரையில் மண் சுமந்தான். குதிரைச் சேவகனாக வந்தான். கொற்றாளாக வந்தான். அவன் பொன்மேனி புண் சுமந்தது. ஆன்மாவை ஈடேற்றுவது ஆண்டவனின் பணி. எப்படி ஒரு வகுப்பறையில் ஆசிரியர் தன் மாணவர்கள் அனைவரையும் தேற வைக்கிறாரோ, அப்படி எல்லா ஆன்மாக்களையும் ஈடேற்ற வேண்டிய கடமை இறைவனின் கடமை. அந்தக் கடமையைச் செய்து மணிவாசகரை ஈடேற்றுகிறார்.*

*ஒரு மணிவாசகரை ஈடேற்ற, இவ்வளவு அல்லற்பட்டார். எல்லா ஆன்மாக்களையும் ஈடேற்ற எத்தனை முறை அல்லற்படுவார்?*

*அதனால்தான் எல்லாவுயிர்களையும் ஈடேற்றுவதற்கு எளிய கருவியாக இறைவனுக்குக் கிடைத்த கருவிதான், தேனார் தீந்தமிழ்த் திருவாசகம். திருவாசகத்தை*




யாரெலாம் ஓதுகிறார்களோ, அவர்கள் இறைவனின் திருவருளின்பத்தை எளிதாகப் பெற்று விடுவார்களாம்.

ஆன்மாவை ஈடேற்ற வேண்டிய ஆண்டவன் பணியை எளிமைப்படுத்திவிட்டது திருவாசகம். அதனால் தான் வீடுபேறு தருகிற ஒரு மொழி உலகத்திலே இருக்குமேயானால், அது தண்ணார்தமிழ்மொழி ஒன்றாகத்தான் இருக்க முடியும். அந்த மொழியின் ஞானக் கருவூலம்தான் திருவாசகம். அந்தத் திருவாசகத்தின்மீது காதல் கொண்டுதான், 'உயிர்த் தூய்மைக்குத் திருவாசகம் என்பதைக் கொள்கை முழக்கமாக இல்லை உயிர் முழக்கமாகக் கொண்டார் வ.சுப.மாணிக்கனார்.

தில்லையம்பலத்தில் ஏறாத திருமுறைகளை ஏற்றினார். மிகப்பெரிய அறப் போராட்டத்தைச் சிந்தித்து, வெள்ளைவாரணார் போன்ற தமிழறிஞர்களோடு இணைந்து தில்லையம்பலத்தின் மேடையில் திருமுறைகள் ஏறவேண்டும் என்பதை நிறைவேற்றிக் காட்டியவர் பெருமைக்குரிய ஐயா, வ.சுப.மாணிக்கம் அவர்கள்.

எங்கும் தமிழ் எதிலும் தமிழ் எல்லா நிலைகளிலும் தமிழ் வளர வேண்டும் என்று ஆசைப்பட்டார்கள். அதனுடைய விளைவுதான் இன்றைக்கு நாம் எண்ணிப்பார்க்கிறோம். உலகத்தின் வளர்ச்சியடைந்த நாடுகள் வளரும் நிலையில் இருக்கிற நாடுகள் இருக்கின்றன.

வளரும் நாடுகளுக்கும் வளர்ச்சியடைந்த நாடுகளுக்கும் இடையில் இருக்கும் வேறுபாடுகளுக்கு என்ன காரணம்?

சிலர் சொல்வார்கள். ஒரு நாடு செல்வவளத்தில் உயரவேண்டுமானால், இயற்கைவளம் வேண்டும் என்று சொல்வார்கள்.

இயற்கைவளம்தான் ஒரு நாட்டை உயர்த்தும் என்றால், இஸ்ரேல் ஒரு பாலைவன நாடு. அது செல்வச்செழிப்பில் கொடிகட்டிப்பறக்கிறது.

சிலர் சொல்கிறார்கள், மிகப்பெரிய நிலப்பரப்பு இருந்தால் உயர்ந்துவிடும் என்று. சிங்கப்பூர் ஒரு நகர அளவில் இருக்கிற நாடுதான். சென்னை அளவில் இருக்கிற ஒரு நாடுதான். அது செல்வச்செழிப்பில் கொடி கட்டிப் பறக்கிறது.

சிலர் மனித வளத்தால்தான் (Human Resource) என்கிறார்கள். அப்படியானால், சீனாவும் இந்தியாவும்தான் முதல் நாடுகளாக இருக்கவேண்டும்.

ஒரு நாடு செல்வச்செழிப்போடு இருப்பதற்குத்தேவை, இயற்கை வளமா? மனிதவளமா? நிலப்பரப்பா என்று பிரித்துப் பார்த்தால், கிடைக்கிற தெளிவான உண்மை இதுதான். எந்த நாட்டில் அறிவியல் தொழில் நுட்பம் கடைக்கோடி மக்களின் வீட்டுக்கதவைத் தட்டி இருக்கிறதோ, அந்த நாடுதான் செல்வவளத்தில் உயர்ந்திருக்கிறது.

எந்த நாட்டில் மக்கள் பேசுகிற எழுதுகிற அவர்களின் தாய்மொழி வழியே அறிவியல் பரப்பப்படுகிறதோ, அந்த நாடுதான் செல்வவளத்தில் உயர முடியும். அதைத்தான் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் சொல்வார்.

உலகியலின் அடங்கலுக்கும் துறைதோறும் நூற்கள்
ஒருத்தர்தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்
சலசலவென எவ்விடத்தும் பாய்ச்சிவிட வேண்டும்

பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்

*என்றார் பாரதியார்.*

*அதைத் தனது வாழ்வின் இலட்சியமாகக் கொண்டவர் வ.சுப.மாணிக்கம் அவர்கள்.*

*இன்றும் அது நிறைவேறாத கனவாகவே இருக்கிறது. ஆனால் காலம் ஒருநாள் அந்தக் கனவை நிறைவேற்றியே தீரும் என்பதில் தமிழறிஞர்களுக்கு கருத்துவேறுபாடு இருக்க முடியாது.*

*நாமெல்லாம் எதை எழுதத் தொடங்கினாலும், பிள்ளையார் சுழி போடுவோம். வ.சுப. மாணிக்கம். 'த' என்பதைத்தான் சுழியாகப் போடுவார். ஏனென்றால் தமிழுக்குத்தான் வாழ்வு என்ற நிலையில். தமிழுக்குத் தொல்காப்பியம் வாழ்வின் உயர்வுக்குத் திருக்குறள். உயிர்த்தூய்மைக்குத் திருவாசகம் என்பதைத் தன் வாழ்வின் இலட்சியமாகக் கொண்டவர்.*

*இவற்றுக்கெல்லாம் மேலாக, நன்றி மறவாத அவர் பண்புக்கு அடையாளம். மகத்தான மனிதராகத் திகழ்ந்த வள்ளல் அழகப்பர் தன் ஊரில் கல்விநிலையம் வேண்டும் என்பதற்காக, குடியிருந்த அரண்மனையையே தானமாகக் கொடுத்தார். அந்தப்பெருமையை,*

"கோடி கொடுத்த கொடைஞன் குடியிருந்த
வீடும் கொடுத்த விழுத்தெய்வம் – தேடியும்
அள்ளிக் கொடுத்த அழகன் அறிவூட்டும்
வெள்ளி விளக்கே விளக்கு!"

*என்று வள்ளல் அழகப்பரைத் தன் நன்றிமறவாத பாடலில் பாடுகிறார். அது அழகப்பா கல்வி நிறுவனங்களில் கடவுள் வாழ்த்தைப்போல் அமைந்திருக்கிற பாடல்.*

*இப்படி எல்லா நிலைகளிலும் நன்றி மறவாதவராக, தமிழையே எப்போதும் நினைவூட்டிக் கொண்டிருப்பவராக,*

மாசிலாத் திருக்குறளோ, மனங்கவரும் சிலம்படியோ
காசிலா வாசகமோ, கம்பனார் காப்பியமோ
சங்கத்தின் இலக்கியமோ தடம் புதிய பாரதியோ
எங்கள் தொல்காப்பியமோ எல்லாமும் நீ தானோ

*என்று குழந்தையைத் தாலாட்டுகிற அந்தத் தாலாட்டுக்கூட தமிழ்த் தாலாட்டாகவே இருக்கிறது.*

*வ.சுப.மாணிக்கனார் என்ற மூதறிஞர் தமிழ்ப்பேரறிஞர் என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. அவர் தமிழுக்குத் தன் வாழ்வை அர்ப்பணித்தார் என்பதில் இரண்டு*



சிந்தனைக்கு இடமில்லை. எல்லாவற்றுக்கும் மேலாக ஒப்பற்ற மனிதநேயர் என்பவரைத்தான் காலம் எப்போதும் சொல்லிக்கொண்டிருக்கிறது.

தன் வாழ்வில் மிகப்பெரிய செல்வத்தைத் திரட்டவில்லை என்றாலும் ஒரு விருப்ப முறியில் எழுதிவைக்கிறார்.

தன்னுடைய செல்வத்தில் ஆறில் ஒரு பகுதியை மூலதனமாக வைத்து இந்த ஊரின் வளர்ச்சிக்கு, தான் பிறந்த ஊரின் வளர்ச்சிக்கு, கல்வி, சமூக மேம்பாடு, மருத்துவத்திற்குப் பயன்பட வேண்டும். அதில் மிகக்குறிப்பான ஒரு செய்தி, சாதி, சமய வேறுபாடின்றி அனைவருக்கும் சமமாக வழங்கப்படவேண்டும்.

இப்படி ஒரு மனித நேயத்தை எங்கும் காணமுடியாது. சுருக்கமாகச் சொன்னால், ஒரு மனிதனின் வாழ்க்கை எப்படி இருக்க வேண்டும்? ஒரு மனிதனின் வாழ்வுத் தொடக்கமும் முடிவும் எப்படி இருக்கவேண்டும்? ஒரு மனிதன் ஆற்றிய செயல்கள் எப்படி மாறவேண்டும்?

அவன் வாழ்க்கை வரலாறாக மாறவேண்டும். மார்ட்டின் லூதர்கிங் சொல்கிறார்: Whatever your life work is do it well a man should do his job so well that the living the dead and unwant do it no better. ('ஒரு மனிதன் தன்செயலை,கடமையையாற்றுகிறபோது, இதுவரை அந்தக் கடமையை ஆற்றியவர்கள் முன்பு வாழ்ந்து முடிந்தவர்கள், இப்போது வாழ்ந்து கொண்டிருப்பவர் கள், அந்தக் கடமையைச் செய்து கொண்டிருப்பவர்கள், இனிப் பிறக்க இருப்பவர்கள் எவரும்,இதைவிடச் சிறப்பாகச் செய்ய முடியாது என்னுமாறு சிறப்பாகக் கடமையைச் செய்ய வேண்டும்.')

அப்படித் தமிழுக்குத் தன் கடமையைச் செய்த, தகைசான்ற பேரறிஞர் வ.சுப. மாணிக்கம் அவர்கள்.

அவருக்குச் சிலை நிறுவுவதும், நூல்கள் வெளியிடுவதும், மலர் வெளியிடுவதும், ஆவணப்படம் வெளியிடுவதும் மட்டுமல்ல நம் கொள்கை. அதையும் தாண்டி,அவர் நினைத்த தமிழ்ப்பணிகளை, வாழும் தலைமுறைக்கும் வளரும் தலைமுறைக்கும் தாய்மொழிக்கல்வியாகத் தமிழ் இருக்கவேண்டும் என்ற இலட்சியத்தை நாம் தொடர்ந்து நிறைவேற்றுவதுதான் வ.சுப.மாணிக்கனார்க்குச் செய்கின்ற உண்மையான நன்றிக் கடப்பாடு.

அந்த நன்றிக் கடப்பாட்டைத் தமிழ்ச்சமூகம் தொடர்ந்து செய்யவேண்டும் என்று வ.சுப.மாணிக்கனாரின் திருவுருவச் சிலையைத் திறந்துவைத்திருக்கிற இந்த நேரத்தில் நாம் விடுகிற வேண்டுகோளாய், தமிழ், எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்பது வெற்று முழக்கமாய் இல்லாமல், வெற்றி முழக்கமாக மாறுகிற இலக்கு நோக்கி நாம் பயணிப்போம் என்று சொல்லி, அனைவருக்கும் வாழ்த்துக் கூறி விடைபெறுகிறோம்; நன்றி, வணக்கம்.

## சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள்



தமிழ்ச்செம்மல் பேராசிரியர் டாக்டர் வ.சுப.மாணிக்கனார் அவர்களுடைய நூற்றாண்டு விழாவிற்கு வருகை தந்துள்ள பெருமக்கள் அனைவருக்கும் என்னுடைய அன்பு நிறைந்த வாழ்த்துக்கள்.

இந்த அரங்கிற்குத் தலைமை யேற்றிருக்கின்ற தா.பாண்டியன் அவர்கள் நான் அழகப்பா கல்லூரியிலே பயில்கின்ற காலத்திலே ஆங்கில ஆசிரியராகப் பணியாற்றியவர்கள். வ.சுப. மா. அவர்கள் நான் புகுமுக வகுப்புப் படிக்கின்ற காலத்திலே எனக்குத் தமிழ் இலக்கணப் பாடம் எடுத்தவர்கள். அப்போது ஆ.முத்துசிவன் என்று ஒரு பேராசிரியர். அவர் பெயருக்குப் பின்னாலே போட்டுக்கொண்ட பட்டம் பி.ஏ.தான். அவர் இந்துக் கல்லூரியிலே இருந்து அழகப்பச் செட்டியாராலே அழைத்துவரப்பெற்றவர். நல்ல தமிழ் இலக்கியவாதி. அவர் பேராசிரியராகவும், வ.சுப. மா. துணைப்பேராசிரியராகவும் பணியாற்றினார்கள். நான் புதுமுக வகுப்புப் படிக்கிற காலத்திலேயே முத்துசிவனார் மறைந்துவிட்டார்கள். அதன்பிறகுதான் வ.சுப.மா. பேராசிரியர் ஆனார்கள். அப்போது, தமிழ்ப்புலமைக்காகவும் தமிழ் அறிவுக்காகவும் வித்துவான் பட்டம் பெற்ற தேசிகன், பூ.அமிர்தலிங்கம் போன்றவர்களையும் கல்லூரி-யிலே ஆசிரியர்களாகச் சேர்த்துக்கொண்டார்கள். அப்படி, பட்டங்களைப் பற்றிக் கவலைப்படாமல் உண்மையான தமிழ்ப் புலமை, தமிழ் அறிவு இவற்றுக்காகவே அவர்களைச் சேர்த்துக்கொண்டார்கள். அவர்களைப் பாராட்டி வளர்த்தார்கள். அப்படி, எந்த நிலையிலும் தமிழையே நினைத்து வாழ்ந்தவர்கள். அவர்கள் நிறையப் புத்தகங்கள் எழுதியிருக்கிறார்கள்.

எழுத்தாளர்களுள் ஒருவர் கதை மட்டும் நன்றாக எழுதுவார். ஒருத்தர் நாடகம் மட்டும். ஆனால், வ.சுப.மாணிக்கனார், ஆய்வு அறிஞர். அவருடைய வள்ளுவம், தமிழ்க்காதல் என்பதெல்லாம் அவருடைய ஆய்வுத்திறமைக்கு உண்டான சான்றுகள். அதேநேரத்தில் நாடகங்கள் எழுதியிருக்கிறார். நல்ல கவிஞரும்கூட. முறையாக எளிதாக மரபுக்கவிதை எழுதக்கூடியவர்கள். அதிலும் வெண்பா எழுதுவதிலே மிகத்தேர்ந்தவர்கள்.

அதிலும் நாங்கள் படிக்கிற காலத்திலேயே, கொடைவிளக்கு வெளிவந்துவிட்டது. கொடைவிளக்கில் இருக்கக்கூடிய வெண்பாக்கள், அந்தக் காலத்திலே புகழேந்தி எழுதிய நளவெண்பாவோடு ஒப்பிடக்கூடிய அளவிலே இலக்கியத்தரத்தோடு இருக்கும். அந்த அளவிற்கு, நல்ல திறமை வாய்ந்த கவிஞர் அவர். அதில், வள்ளல் அழகப்பச் செட்டியார்

நிலையாமையை உணர்ந்து எல்லாவற்றையும் தானம் செய்தார்கள் என்று சொல்வார்.

நில்லாப் பொருளாளன் நிலைத்த புகழாளன். அந்த மாதிரி நிலையில்லாத செல்வத்தைச் செலவிட்டு நிலைத்த புகழைப்பெற்றார் என்று சொல்வார். தமிழ்நாட்டில் வாழ்ந்த எல்லா வள்ளல்களோடும் இவரை ஒப்பிட்டிருக்கிறார்கள். இன்றைக்கும் தமிழ் நாட்டில் கொடை கொடுக்கிறார்கள். 90% கிள்ளிக் கொடுக்கிறவர்கள்தான். 10%லும் 9.99 பேர் அள்ளிக் கொடுத்தாலும் அளவோடு கொடுக்கிறவர்கள். அனைத்தையும் கொடுத்தவர்கள் 1%க்கும் கீழிருப்பவர்கள். அதில் ஒருவர் வள்ளல் அழகப்பர், மற்றொருவர் என்னுடைய குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள். இந்த இருவருமே தனது சொத்துகள் அனைத்தையும் தந்தவர்கள்.

வள்ளல் அழகப்பர் இறந்தபோது பாடுவதற்கு (கொடைவிளக்கு) வ.சுப.மா. இருந்தார்கள். நாச்சியப்ப சுவாமிகளைப் பாடுவதற்கு இதுவரை யாரும் இல்லை. இனிமேல்தான் ஆள் வரவேண்டும். இந்தக் கொடைகளை வழங்கியதாலே என்றைக்கும் நிலைத்திருப்பவர் வள்ளல் அழகப்பர். அவரைப் பற்றிப் பாடியதனாலும் நல்ல நூல்களை எழுதித் தமிழை வளர்த்ததனாலும் நிரந்தரமாக நிலைத்திருப்பவர் வ.சுப.மா. அவர்கள். நல்ல பேராசிரியர், நல்ல நிர்வாகி. நல்ல சிக்கனவாதி.

# அன்புரைகள்

## வ.சுப.மா.அவர்களின் வாழ்வு வழிகாட்டும் நல் வாழ்வு

**திரு. கருமுத்து தி.கண்ணன்**



தமிழறிஞர், தூயவர், அண்ணல் வ.சுப.மா அவர்களின் சிலையைத் திறந்து வைத்ததை, எனக்குக் கிடைத்த பேறாகக் கருதுகிறேன். அவர் மறைந்து 29 ஆண்டுகளுக்கும் மேலான பிறகு, அவரது நினைவைப்போற்றுகிற வகையில் சிலை எழுப்பி விழா நடத்துகிறவர்களாக இந்தக் குடும்பத்தினர் இருப்பது போற்றக்கூடியது.

பெட்டியடிப் பையனாகப் பர்மாவுக்குக் கைபழகச் சென்ற காலத்தில் கடைப்பிடித்த வாய்மையைத் தமது கடைசிக்காலம் வரைக்கும் பேணியிருக்கிறார் வ.சுப.மா. வாழ்வில் எதிர்நீச்சல் போட்டு முன்னேறி-யிருக்கிறார். சிக்கனத்தின் முன்மாதிரியாகத் திகழ்ந்திருக்கிறார். பேராசிரியர், முதல்வர்,

துணைவேந்தர், நூலாசிரியர் என்றெல்லாம் விளங்கிய பொய் சொல்லா மாணிக்கம் மனிதருள் மாணிக்கமாகத் திகழ்ந்திருக்கிறார்.

அவருடைய 'நல்லாவின் பால் முழுதும் கன்றுக்கில்லை' என்ற ஒரு பாடலை, அனைத்துக் கல்லூரி, பள்ளிகளிலும் பாடமாக வைக்கவேண்டும். அந்த வாழ்நெறி அனைவருக்கும் குறிப்பாக, இன்றைய இளைஞர்களுக்கு வரவேண்டும் என்று விரும்புகிறேன். வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமாக இருக்கும் வ.சுப.மா.வின் வாழ்வு வழிகாட்டும் நல் வாழ்வு.

## 'நான் கண்ட மனுநீதிச் சோழன் வ.சுப. மா'

## நீதியரசர் சொக்கலிங்கம்



வ.சுப.மா அவர்களிடம் நேரில் பயின்றவன் யான். அவரது மாணாக்கனாக இந்த விழாவில் பங்கேற்று மலரை வெளி-யிடுவதை, எனக்கு அவர் கொடுத்த அரிய வாய்ப்பாகவே கருதுகிறேன். உயர்நீதிமன்றத்தில் மனுநீதிச் சோழனின் சிலையை வைத்திருக்கிறோம். காரணம், அம்மன்னனை முன்மாதிரியாகக் கொள்ளவேண்டும் என்பதற்காக. அதுபோல் நான் நேரடியாகப் பார்த்த மனுநீதிச்சோழன், வ.சுப.மாணிக்கனார். காந்தியவாழ்க்கையைக் கடைப்பிடித்தவர். ஐந்துமொழிகள் அறிந்தவர். ஆங்கிலத்தில் நூல்கள் எழுதியவர். சத்தியமாக வாழ்ந்தவர். வழிகாட்டியாகத் திகழ்ந்தவர். பின்தொடரத்தக்கநூல்களைத் தந்திருக்கிறார். உலக நாடுகள் பலவற்றில் அவரது நூற்றாண்டு விழாக்கள் கொண்டாடப்பட்டிருந்தாலும், அவரை இந்த உலகுக்குத் தந்த இந்த மேலைச்சிவபுரியில், அவர் பிறந்த மண்ணிலேயே விழா எடுத்திருப்பதுதான் சிறப்பு.

அதில் அவரது மாணாக்கனாகிய நான் வந்து பங்கேற்கும் வாய்ப்பையும் வழங்கிய வள்ளல் வ.சுப.மாணிக்கம் அவர்கள்.

# வாழ்த்துரைகள்

வர இயலாத நிலையில் தனது வாழ்த்துரையினை எழுத்துவடிவில் ஆக்கித்தந்திருக்கிறார் முனைவர் வெ.இறையன்பு இ.ஆ.ப அவர்கள்.

## தமிழ்ப் பூங்காவில் ஒரு மரகத மரம்

**முனைவர் வெ.இறையன்பு இ.ஆ.ப**



தன்னலம் கருதாமல் தமிழை நேசித்து அதன் வளர்ச்சியை உயிர் மூச்சாகக்கொண்டு பலனை எதிர்பார்க்காமல் அது செழித்து செம்மாந்து நிற்பதைக் கண்டு அகமகிழ்ந்த தமிழறிஞர்களில் ஒருவர் வ. சுப. மாணிக்கனார். தமிழ் இமயமாக உயர்ந்த அவருடைய பங்களிப்பு மகத்தானது.

சின்ன வயதிலேயே பெற்றோரை இழந்து தமிழையே தாயாகவும், தந்தையாகவும் கொண்டு வாழ்வை உன்னதமாக்கிய உத்தமர் அவர். பொய் சொல்லாத காரணத்தால் வட்டிக்கடை-யிலிருந்து வெளியேறி பொய்சொல்லா மாணிக்கம் என்று பெயரெடுத்து. பண்டிதமணியிடம் படித்து, புலவர் தேர்வில் வென்று, தொடர்ந்து கல்வியில் ஆழ்ந்து, முனைவர் பட்டம் வரை முன்னேறி, பல பணிகளில் கல்வித் தொண்டாற்றிய பெருமகனார் அவர். தூய தமிழில் பிள்ளைகளுக்குப் பெயரிட்டவர். வழக்கமான வட்டாரப் பெயர்களைத் தவிர்த்து தொல்காப்பியன் என்றும், பூங்குன்றன் என்றும், பாரி என்றும், தென்றல் என்றும், மாதரி என்றும்,பொற்றொடி என்றும் பெயர் சூட்டி தமிழ்ப்பற்றை செய்கையால் வெளிப்படுத்திய செம்மல் அவர். அவருடைய நூல்களை ஆய்வுக்காக வாசித்திருக்கிறேன். தமிழின் மூலம் கல்விபெற வேண்டும் என்பதை தலையாய நோக்கமாகக் கொண்டிருந்த அவர் எளிமையாகவும், இயல்பாகவும் வாழ்ந்தவர். ஊக்கத்திற்கு ஊற்றுக்கண்ணாக விளங்கியவர்.

அத்தகைய மாமனிதருடைய திருவுருவச்சிலை மேலைச்சிவபுரியில் திறக்கப்படுவது, தமிழ்ப் பூங்காவில் காற்று வர இன்னொரு மரகத மரத்தை நடுவதற்கு ஒப்பாகும். அவர் புகழ் ஓங்கவும், நோக்கம் நிலைக்கவும் என்னுடைய வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

## ‘வ.சுப.மா.வைப் பெற்றதால் மேலைச்சிவபுரி புகழ் பெற்றது’

பேராசிரியர் முனைவர் கா.செல்லப்பன்



‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’ என்ற பூங்குன்றனால், பூங்குன்றம்பட்டி புகழ் பெற்றது. அதுபோல், வ.சுப. மா.வைப் பெற்றதால் இந்த மேலைச்சிவபுரி புகழ் பெற்றது. வ.சுப. மா. தமிழைப் பிழைப்புக்கு வழியாகக் கொள்ளாமல், வாழ்வுக்கு ஒளியாகக்கொண்டவர். தமிழ் அவரின் வாழ்வுக்கு வழியாகவும் ஒளியாகவும் திகழ்ந்தது. நானும் அவருடைய மாணவன்தான். 65 ஆண்டுகளுக்கு முன்பு, அழகப்பா கல்லூரியில் இண்டர்மீடியட் பயின்றவன். இப்போது இந்த 85 வயதில் இங்கு நின்று பேசுவதற்குக் காரணம் வ.சுப. மா. சொல்லித் தந்த தமிழ். அந்தத் தமிழின் செருக்கால் நின்று நிமிர்ந்து பேசுகிறேன்.

அங்கே படித்து முடித்த தருணத்தில் தமிழ் பி.ஏ. வருகிறது. நீதான் அதில் முதல் மாணவனாகச் சேர வேண்டும் என்று வ.சுப.மா சொன்னார். நானும் அவரைப்போலவே என் மனதில் பட்டதைச் சொல்பவன். மன்னிக்கவேண்டும் ஐயா. உங்கள் வேண்டுகோளை ஏற்க முடியாது. ஏனென்றால், எனக்கு ஏற்கெனவே, தமிழை நீங்கள் நன்றாகச் சொல்லிக்கொடுத்துவிட்டீர்கள். நான். தமிழுக்குத் தொண்டு செய்வதற்காக, ஆங்கிலம் பயிலப்போகிறேன் இதற்காக. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சேரப்போகிறேன் என்றேன். அதை அவர் மதித்து, அப்படியா நன்றாகப் போய் வா என்றார். நான் தமிழின் ஆசியால் படித்ததால்தான் நல்ல ஆங்கிலப்பேராசிரியனாக ஆக முடிந்தது. தமிழின் தளத்திலேதான் அறிவியல் பயில முடியும். தமிழின் தளத்திலேதான் மற்ற மொழிகளைக் கற்று உணர முடியும்.

அவர் மதுரைத் துணைவேந்தராகப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றிய பொழுது, திருச்சியிலே பேராசிரியராக இருந்தேன். அப்போது, என்னை ஒரு கமிட்டிக் கூட்டத்திற்கு அழைத்திருந்தார். அந்தக் கூட்டம் முடிந்தபிறகு, வ.சுப.மா. என்னருகில் வந்து ‘என்னுடைய வள்ளுவத்தை நீதான் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க வேண்டும்’ என்று சொன்னார். கலைஞர் குறளோவியத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கச் சொன்னார்.

ம.பொ.சி. ‘விடுதலைப்போரில் தமிழகம்’ என்ற நூலை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கச் சொன்னார். அவர்களையெல்லாம்விட, வ.சுப.மா. சொன்னது எனக்கு மகிழ்ச்சி தந்தது. அதற்குக் காரணம் என்ன சொன்னார் தெரியுமா? என்னுடைய தமிழைப் புரிந்துகொண்டு

நல்ல ஆங்கிலத்தில் செய்யக்கூடியவன் நீதான் என்று சொன்னார். நான் எத்தனையோ பட்டங்களைப் பெற்றிருந்தாலும் வ.சுப.மா. சொன்ன இந்த வார்த்தை என் வாழ்க்கை முழுதும் வலுவும் ஒளியும் சேர்க்கும் என்று நம்புகிறேன். அந்த நூல் விரைவில் வெளிவரும் என்று நம்புகிறேன்.

## 'வ.சுப.மா. அவர்களைச் சந்தித்ததும் சிந்தித்ததும்'

## மருத்துவர் இரா.கலைக்கோவன்



எனக்கு முன்னர்ப் பேசியவர்கள் எல்லாம் அவரிடம் பயின்றவர்கள் நெகிழ்ந்து பேசினார்கள். உடனிருந்து பழகியவர்கள் மகிழ்ந்து பேசினார்கள். நான் தனித்து விடப்பட்டவன். நான்கு முறை அவரை நேரில் சந்தித்திருக்கிறேன். அதில் ஒன்று காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழக நிகழ்வு. குன்றக்குடித் திருமடமும் அழகப்பாப் பல்கலைக்கழகமும் இணைந்து நடத்திய நிகழ்வு. அருள்நெறித்தந்தை அடிகளார் இருக்கிற அவையில், சிவபெருமானின் ஊர்த்துவ தாண்டவத்தைப் பற்றிப் பேசினேன். தன் காதில் இருந்து கழன்றுவிழுந்த குழையைத் தன் காலால் எடுத்துக் காதில் மாட்டுதற்காகச் சிவன் ஆடிய அவிநயத்தை, அம்பிகை பெண்ணான காரணத்தால் ஆடாது விடுத்தார். அதனால் சிவன் வென்றார் என்று விளக்கிப் பேசினேன். முடித்தபிறகு, அரங்கின் முன் வரிசையில் இருந்த வ.சுப.மா. என்னிடம் பேசியபோது கேட்டார்: "சிவபெருமானின் குழை ஆடுகின்ற வேகத்தில் தவறி விழுந்ததா? அல்லது வேண்டுமென்றே சிவபெருமான் அதை நழுவவிட்டாரா?" என்று. நான் சொன்னேன்: "அதைச் சிவபெருமானிடம்தான் கேட்கவேண்டும்" என்று. உடனே, "அடப்பாவி, என்னை மேலே போகச்சொல்கிறாயா?" என்று கேட்டார். என்னால் மறக்கவே முடியாது. கேட்பவர் யார் என்று கூடப் பார்க்காமல் சடாரென்று பதில் சொன்னேன். அவரும் அவையென்று கூடக் கருதாமல், ஒரு மகனைப்போல் கருதிச் சடாரென்று எதிரொலித்தார்.

எங்கள் இறுதியான சந்திப்பு புதுச்சேரி பல்கலைக்கழகத்தில் நடைபெற்றது. அப்போது அவர் சொன்னார்: "நீ மருத்துவன் ஆயிற்றே. நீ உன் துறை சார்ந்து ஏதும் செய்யவில்லையா?" என்று கேட்டார். அப்போது 'மருத்துவத்தை வாழ்வுக்குப் பயன்படுத்திக்கொள்கிறேன். ஆய்வுமுழுவதும் தமிழில்' என்று சொன்னேன். 'உளவியலில் கொஞ்சம் கவனம் செலுத்து' என்று சொன்னார். அவருடைய உளவியலைப் பற்றி நான் கவனத்தைச் செலுத்துவதற்கு முக்கியக்காரணம், அவரது 'ஒரு நொடியில்' என்கிற ஒரு நூல், தற்கொலையைத் தடுக்க முழுக்க முழுக்க உதவுகிற உளவியல் நூல். தமிழறிஞர்களில்

உளவியல் பக்கம் நின்று பேசக்கூடிய அறிஞராக, வ.சுப.மா. திகழ்கிறார். அதற்கு இந்த நூல் மிகச்சிறந்த சான்று. அவருடைய கவிதைகளில் 'தமிழ்சூடி' மிகவும் சிறப்பானது. நான் பாரதியாரின் புதிய ஆத்திசூடி படித்திருக்கிறேன். இவர் தனது சூடியில் அறிவியல் செய்திகளை எழுதியிருக்கிறார். அதில் ஒன்று 'எச்சில் துப்பேல்' என்பது. எச்சில் துப்புவதை ஒரு பொழுதுபோக்காக எல்லாரும் செய்கிறார்கள். இதனால் பெருகுகின்ற நோய்கள் கணக்கில் அடங்காதவை. இதையெல்லாம் உணர்ந்து சொல்லியிருக்கிறார். 'வேர்க்க உழை' என்றும் சொல்கிறார். 'நகத்தைக் கடியேல்' என்கிறார். இவையெல்லாவற்றையும் விட முக்கியமானது, 'நீளப் பேசேல்', 'மதுவை விலக்கு', 'மாற்றம் விரும்பு' என்றெல்லாம் சொல்லுகிறார். கடைசியாக 'வெட்கப்படு' என்று சொல்லியிருக்கிறார்.

இதற்கெல்லாம் மாற்றம் தருகிற 'மாற்றம் விரும்பு' என்று தெளிவாகச் சிந்தித்துச் சொல்லியிருக்கிறார். நூற்றாண்டு விழாக் கண்ட இராசமாணிக்கனார் குடும்பத்தில் இருந்து வந்து, வ.சுப.மாணிக்கனார் நூற்றாண்டுவிழாவில் கலந்துகொண்டு வாழ்த்துரைத்து நிறைவுசெய்கிறேன்.

## 'வைரவிழாவில் பட்டம் பெற்ற மாணிக்கம்'

### திரு. ப.சா.சிங்காரம்

சன்மார்க்க சபையென்னும் இத்திருச்சபைக்கு வருகைதந்த பண்டிதமணியின் தொடர்பால் தமிழ் கற்ற மூதறிஞர் வ.சுப.மாணிக்கனார் நூற்றாண்டு நிறைவுவிழாவிலும், திருவுருவச்சிலைத் திறப்புவிழாவிலும் கலந்து கொள்வதிலே பெருமகிழ்வு கொள்கிறேன்.



'தில்லையிலே திருமுறைகள் ஏற்றம் பெறவேண்டும்' என்று பாடுபட்டவர் அவர்.

அவருடைய வழிகாட்டுதலின்படி, இங்கே மேலைச்சிவபுரியில் தமிழ் வழி மழலையர் பள்ளி நடத்திக் கொண்டிருக் கிறோம். இன்றளவும் அதிலே மாணவர்கள் பயின்று கொண்டிருக்கின்றார்கள்.

சபையின் வைரவிழாவிலேயே வ.சுப. மா. அவர்களுக்குச் செம்மல் என்ற பட்டத்தைச் சபை வழங்கியிருக்கிறது.

அந்தப் பட்டம்தான் இன்றளவும் அவருக்குப் பெயரோடு நிலைத்திருக்கிறது. பெரும்புகழ் சேர்த்திருக்கிறது.

## ‘அவரது இயற்பெயரான அண்ணாமலையே என் பெயரும்’

### திரு. அ.சுப.அண்ணாமலை



எங்கள் ஊரில் வேறு எவருக்கும் சிலை வைத்ததில்லை. வ.சுப.மா. அவர்களுக்குத் தான் வைத்திருக்கிறோம். தேரோடும் வீதியும் காரோடும் வீதியும் இது ஒன்றுதான் என்று அவர் சொல்லுவார். அந்த வீதியில், மேலைச்சிவபுரிக்குள் நுழைந்தவுடன் வரவேற்கிற சன்மார்க்க சபை உண்டு. இப்போது சிலையும் உண்டு. சிக்கனமாக இருக்கவேண்டும் என்பார்.

அதிகமாக ஆசைப்படவும் கூடாது என்பார். வாய்மைக்குறிக்கோளைத் தனது வாழ்நாள் முழுவதும் கடைப்பிடித்தவர். அவரது தற்சிந்தனைகள் நூலைப் படித்தால் பல உண்மைகள் புரியும். தொல்காப்பியம் இலக்கண நூல்போல் மாணிக்கம் இலக்கண நூல் படைப்பேன் என்றார். 80 வயது வரை கண்டிப்பாக இருப்பேன் என்றார். அது பணம் சம்பாதிப்பதற்காக அல்ல, மக்களுக்கும் தமிழுக்கும் தொண்டு செய்ய வேண்டும் என்று விரும்பினார். அவரது இயற்பெயரான அண்ணாமலையே என் பெயரும் என்பதில் எனக்குப் பெருமை

## ‘வருடந்தோறும் வருக’

### மருத்துவர் திரு. வ.சுப.சொ.சேதுராமன்



திருவையாற்றில் ஆண்டுதோறும் தியாகராசர் ஆராதனையை இசைக்கலைஞர்கள் வந்து பாடி நடத்துவதுபோல, வ.சுப. மாணிக்கனாரின் சீடர்கள் இந்த சிலை நிறுவிய ஆண்டில் இருந்து தமிழறிஞர்கள் வருகைதந்து வருடந்தோறும் இங்கு வந்து ஏதேனும் ஒரு நிகழ்ச்சி நடத்த வேண்டும். தனது குருவுக்குச் செய்யும் மரியாதையாக அவரது சீடர்கள் வந்து நிகழ்ச்சி நடத்த வேண்டும். அதற்குப் பக்கபலமாக நாங்கள் இருப்போம்.

ஓர் இடத்தில் அனுமதி பெற்று வரவேண்டும். உத்தரவின்றி உள்ளே நுழையக்கூடாது. அன்னியர்கள் பிரவேசிக்கக்கூடாது என்றெல்லாம் எழுதுகிறார்கள். ஆனால் மிக எளிமையாக வ.சுப.மா. குறிப்பிடுவது ‘கேட்டு வருக’ என்று. இவ்வளவு சுருக்கமாகவும் தெளிவாகவும் சொற்களைப் பயன்படுத்துவதில் எங்கள் பெரியப்பா கவனமாக இருப்பார்.

# கருத்துரைகள்

## ‘அன்பும் பரிவும் சொல்லுதற்கெட்டாது’

### பேராசிரியர் முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியம்



விந்தையான பிறவி. கும்பகோணத்தில் இளங்கலை படித்து முடித்த தருணம். ‘தமிழ்க்காதல்’ படித்து நான்கு பக்கம் ஒரு கடிதம் எழுதினேன். அவரிடமிருந்து ஓர் அஞ்சலட்டை வந்தது. ‘அழகப்பர் கல்லூரியில் முதுகலை படிக்க விருப்பம் இருந்தால் வந்து படிக்கலாமே.’ நிறையப்பேர் வாசலில் காத்திருந்தார்கள். அந்த இடத்தில் ஒரு துண்டுச்சீட்டு எடுத்து,

வாயிலில் காத்துளேன் உள்ளே வரலாமா?
ஆயும் அறிவின் இமயமே– சேய் நானோர்
மாணவன் நும்பால் வளர்கல்வி கற்க வந்தேன்
காணும்என் வேட்கை கருத்து

என்று எழுதிக் கொடுத்தேன்.

அத்தனைபேருக்கும் இடையில் அழைப்புக் கிடைத்தது. முதுகலையில் சேர்ந்து படித்துப் பட்டமும் பெற்றேன். அப்போதுதான் நினைத்தேன், தமிழுக்கு உள்ள வலிமையை. அதற்குப்பிறகு செல்லும் இடமெல்லாம் இதுபோல் வெண்பா எழுதிக் கொடுத்துப் பார்த்தேன். ஒரு இடத்திலும் ஒருத்தரும் பார்க்கவில்லை. அவருக்குள் இருக்கிற தமிழ் ஆர்வம் என்னைப் பார்க்கத் தூண்டியது. அதற்குப்பிறகு அவருக்கும் எனக்கும் இடையில் இருந்த தொடர்பு மிகவும் நெருக்கமானது. பல மாணவர்களுக்கிடையில் அவர் என்னிடம் காட்டிய பரிவும் அன்பும் சொல்லுதற்கெட்டாது.

## ‘பெருங்காப்பியமே பேசுங்காலை...’

### பாவலர்மணி ஆ.பழநி

ஓர் அறிஞன் என்பவன் - ஆய்வாளன் என்பவன் என்ன தகுதிஉடையவனாக இருக்கவேண்டும் என்றால், காய்தல் உவத்தல் அகற்றி ஒருபொருட்கண் ஆய்தல் - எவன் ஆராய்ச்சி செய்ய வருகிறானோ, அவன் வெறுப்போடும் விருப்போடும் எதனையும்



பார்க்கக்கூடாது. வெறுப்பையும் விருப்பையும் கழற்றி எறிந்துவிட்டு தூக்கி எறிந்துவிட்டு நடுநிலையோடு எவன் பார்க்கிறானோ அவன் ஆய்வாளன். விருப்பும் வெறுப்பும் இருந்தால் முடிவுகள் வேறுவிதமாகிப்போய்விடும்.

உண்மையும் உண்மையைப் பற்றிப் பேசும் ஒன்றும் ஒன்றாகவே இருக்கவேண்டிய அவசியமில்லை என்று தர்க்கவியல் பேசும். காரணம் சார்புதான். சான்றாக ஒன்று சொல்லலாம். ‘சமைக்கப்பட்ட உணவு ஒன்றுதான். சாப்பிட்டவர்களின் கருத்துக்கள் மாறுகின்றன.’ ஏன், சார்பினால். ஏற்கெனவே நல்ல உணவைச் சாப்பிட்டவன் இது மோசம் என்கிறான். மோசமான உணவை ஏற்கெனவே சாப்பிட்டவன் இதை நல்ல உணவு என்கிறான். இவன் இந்த உணவைப் பற்றிச் சொல்வதெல்லாம் ஏற்கெனவே சாப்பிட்ட உணவின் சார்பில் சொல்வதால். இதனால் முடிவுகள் மாறிப்போய்விடுகின்றன. இது பாமரர்களுக்கு மட்டுமில்லை. படித்த மேதாவிகளுக்கும் உரியதுதான்.

சார்புகள் இடமாறும்போது முடிவுகள் இடம் மாறும். அது தவிர்க்க முடியாது. இந்தத் தர்க்க நியாயத்திற்கும் வ.சுப.மா.வுக்கும் ஒரு தொடர்பு உண்டு. 60 வருடங்களுக்கு முன்னால் காரைக்குடியில் ஒரு சம்பவம். கம்பன் விழா நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. தலைமை. கரு.முத்து.தியாகராசச் செட்டியார். அன்றைக்குச் சிறப்புச்சொற்பொழிவாளர் அ.சீனிவாசராகவன். தலைப்பு - ‘பெருங்காப்பியம்’. அவர் தனது உரையில், ‘பெருங்காப்பியமே பேசுங்காலை’ என்கிற நூற்பாவை ஒப்பித்துவிட்டு, தண்டியலங்காரத்தை ஒப்புவித்துவிட்டு, ‘இராமாயணம் ஒரு பெருங்காப்பியம்’ என்று சொன்னார். அதோடு முடித்திருந்தார் என்றால் அவரது பேச்சு மிகச்சிறந்த பேச்சு. ஆனால், அவர் என்ன சொல்லிவிட்டார் என்றால், இந்த ‘பெருங்காப்பியமே பேசுங்காலை’ என்ற சூத்திரத்தின் இரண்டாவது அடி, தன்னேரிலாத தலைவனை உடைத்தாய் என்று இருக்கிறது. சிலப்பதிகாரத்திலே தலைவரே இல்லை. அது மட்டுமில்லை. அவர் சொல்லுகிற இன்னும் சில விதிகள் கூடச் சிலப்பதிகாரத்திலே இல்லை. ஆகையினால் சிலப்பதிகாரத்தையெல்லாம் ஒரு பெரிய காப்பியம் என்று சொல்லக்கூடாது’ என்று சொல்லிவிட்டார்.

அவ்வளவுதான் தியாகராசச் செட்டியாருக்கு உடம்பெல்லாம் ஆடுது. முகமெல்லாம் சிவக்குது. எழுந்துவிட்டார். வந்து மைக்கைப் பிடித்துவிட்டார். ‘இப்படியெல்லாம் பேசப்படாது. சிலப்பதிகாரம் மிகச்சிறந்த காப்பியம்’. அவரால் அதற்கு மேலே சொல்ல முடியவில்லை. ஆனால், அந்த எதிர்ப்பைப் பதிவுசெய்துவிட்டார். ‘நீங்கள் சொல்வது சரியில்லை. சிலப்பதிகாரம் மிகச்சிறந்த காப்பியம்’ என்று முடித்துவிட்டார். அவர் மிகப்பெரிய

படிப்பாளி. இந்தப் பதற்றத்தில் நிரம்பச் சொல்லாமல் விட்டுவிட்டார். 'ஏம்ப்பா சீனிவாசராகவா, நீ சொன்னியே தண்டியலங்காரம், அது எந்த மொழிக்காக எழுதப்பட்டது? சமஸ்கிருத மொழிக்காக எழுதப்பட்டது. நீ அதை யல்லவா ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். இங்கே எதற்காக வந்தாய்?' என்று கேட்டிருக்க வேண்டும். கேட்டிருந்தால், தலையைத் தொங்கவிட்டிருப்பார். ஆனால், அவர் கேட்கவில்லை, விட்டு விட்டார்.

ஆனால், இந்த நிகழ்ச்சி வ.சுப.மாணிக்கனாரை உறுத்துகிறது; அதுதான் இங்கு முக்கியமான செய்தி, அதன்பிறகு ஒரு பத்துமாதத்திற்குப் பிறகு ஒரு புத்தகம் வெளிவருகிறது.

அது என்ன புத்தகம் என்றால், 'இரட்டைக்காப்பியங்கள்'. அதில், 'சிலப்பதிகாரத்திறன்' என்று ஒன்று எழுதுகிறார். எடுத்துக் கொண்டுவந்திருக்கிறேன். உங்களிடம் காட்டுவதற்காக.

இதில் சீனிவாசராகவன் பெயர் இல்லை. கரு.முத்துதியாகராசர் பெயர் இல்லை. ஆனால், இதில் உள்ளதைப் படித்தால் பட்டென்று உங்களுக்குப் புரிந்துவிடும். இலக்கியங்களைப் புறம் போய் ஆராயக்கூடாது. இப்படி யாராவது எழுதுவார்களா? உறுத்துது. அதைச் சொல்லணும். முட்டிக்கிட்டு நிற்குது. 'இலக்கியங்களைப் புறம்போய் ஆராயக்கூடாது. நூலளவில் நின்று திறன் காணவேண்டும். இந்நெறி பல இலக்கியங்களுக்கு உண்டு. பல இலக்கியங்கள் சில மூல இலக்கியங்களின் சாயல்கள். வால்மீகியினுடைய சாயல், வியாசருடைய சாயல், ஆக, மூல இலக்கியங்களின் சாயல்கள்தான் இவை. பிறர் இட்ட விதைப்பயனைத் தொகுத்த குவியல்கள். எவ்வளவு கடுமையாகச் சாடுகிறார் பாருங்கள். சொல்லிவிட்டு, 'அந்நூல்களின் ஆசிரியர்களோ, இலக்கிய உழவர்கள் அல்லர். யாரவர்கள்? இலக்கிய வணிகர்கள். யார்? கம்பன் ஒரு இலக்கிய வணிகன். ஏன்? வான்மீகி ஓர் இலக்கிய உழவன், ஏன் அவன் மக்களைப் பார்த்து எழுதினான். அந்த உழவனிடம் கொள்முதல் செய்ததை, வாங்கி வந்து விற்ற இலக்கிய வணிகன்தான் கம்பன். மூல இலக்கியம் என்பது நூல்களைப் பார்த்து எழுதியது அன்று. மக்கள் வாழ்க்கையைப் பார்த்து இயற்றியது.

சிலப்பதிகாரத்தை எழுதிய இளங்கோவடிகள் எதைப் பார்த்து எழுதினார், மக்கள் வாழ்க்கையைப் பார்த்து. வேதவியாசன் எதைப்பார்த்து எழுதினான், மக்கள் வாழ்க்கையைப் பார்த்து எழுதினான், வான்மீகி எதைப்பார்த்து எழுதினான்? மக்கள் வாழ்க்கையைப் பார்த்து எழுதினான்? கம்பனும் வில்லிபுத்தூராழ்வாரும் மக்கள் வாழ்க்கையைப் பார்த்து எழுதினார்களா? அதனால் இவர்கள் இலக்கிய வணிகர்கள். இலக்கிய வணிகர்களின் திருவிளையாடலைப் பற்றி கலில் கிப்ரான் அழகான சித்திரம் எழுதியிருப்பார்.

ஒரு பெரிய டிபார்ட்மெண்ட்டல் ஸ்டோர். அதில், இங்கே அரிய கலைப்பொருள்களும் வரலாற்றுச் சின்னங்களும் விற்பனைக்கு கிடைக்கும் என்று விளம்பரப்பலகை இருக்கிற இடத்தை ஒருவன் பார்த்துக்கொண்டே கடைசி வரைக்கும் போனால், இறுதியில் ஒரு எளிய விளம்பரப்பலகை இருந்ததாம். இங்கே தட்டுமுட்டுச் சாமான்கள் வாங்கப்படும் என்று.

இங்கே வாங்கப்பட்ட பொருள்கள் தான் முன்னே கலைப்பொருள்களாகவும்

வரலாற்றுச் சின்னங்களாகவும் விற்கப்படுகின்றன என்று சொன்னான். இதுதான் வணிகர்களின் திருவிளையாடல்.

வான்மீகி தந்த தட்டுமுட்டுச் சாமான்களை, கம்பன் இங்கே அழகிய கலைப் பொருள்களாக மாற்றினான். அதுதானேய்யா சொல்ல வர்றது?

ஒரு அநியாயம் நிகழ்கிறபோது, எங்கள் தாய்நாட்டு இலக்கியத்திற்கு ஒரு கேடு நிகழ்ந்து விட்டது என்றபோது பொங்கி எழுந்த ஆற்றல், இதில் ஆளைச் சுட்டவில்லையே தவிர, இவர் போட்ட போடு எல்லார் மீதும் பட்டது. அரிமர்த்தன பாண்டியன் அடித்த அடி, சிவன் முதுகில் பட்டது அல்லவா, அதுபோல் எவனையும் விடவில்லை அல்லவா?

அதுபோல் இவர் கொடுத்த அடி, சீனிவாசராகவனுக்கு மட்டுமல்ல, கம்பன் முதல் எல்லார்க்கும் கொடுத்தது. அப்படிக் கொடுக்கிற பேராண்மை, பேரறிவு, பெருந்துணிவு இம்மூன்றின் ஒட்டு மொத்தமாக அதோ சிலையாக இருக்கிறார். அவருக்கு நம் நன்றி வணக்கம்.

## ‘அவன்தான் இவன்’

## பொற்கிழிக்கவிஞர் சொ.சொ.மீ. சுந்தரம்

1955 எட்டாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்த மாணவன் (ஈஎஸ்எல்.சி) அந்த ஊரிலே முதற்பரிசு பெற்றான். அந்த மாணவனுக்கு ஒருவர் வந்து ஒரு பேனாவைப்பரிசாகக் கொடுத்தார். அந்தப் பையனுக்கு அந்தப் பேனா பெரிதாகத் தெரிந்தது. கொடுத்தவர் பெரிதாகத் தெரியவில்லை. பேனாவை வாங்கினான். எழுதினான். அப்புறம் உடைத்துவிட்டான். அப்புறம் சொன்னார்கள். அந்தப் பையனுக்கு அந்தப் பேனாவைக் கொடுத்தவர் யார் தெரியுமா? வள்ளல் அழகப்பச் செட்டியார் என்றார்கள். இந்தப்பையனுக்கு அழகப்பச்செட்டியாரைத் தெரியாது. சரி என்று சொல்லிவிட்டான். அப்புறம்,9,10, 11 படித்துவிட்டு காரைக்குடி அழகப்பா கல்லூரியிலே போய்ச்சேர்ந்தான். 58ஐ ஒட்டி. அங்கே ஒரு கவிதைப்போட்டி வைத்தார்கள். வ.சுப.மா. முன்னால் வந்து உட்கார்வார்.



அவரே கரும்பலகையில் 3 தலைப்பு எழுதுவார். போட்டியில் கலந்துகொள்பவர்கள், கீழே வந்து உட்காரவேண்டும். வகுப்பறையில். ஒரு 50 பேர் கலந்துகொண்டார்கள். இந்தப்பையன் முன்னிலை வகுப்பில், (Pre University) இல் போய்ச்சேர்ந்தவன். இவனும் ஆசையில் போய்க் கலந்துகொண்டான். 3 மணிநேரம் அங்கே உட்கார்ந்து தேர்வு மாதிரி

எழுதணும். மண்டபத்தில் யாரிடமும் எழுதி வாங்கமுடியாது. அப்படி ஒரு சூழ்நிலை.

ஐயா 3 தலைப்புகளை எழுதிப்போட்டார். இவனுக்குப் பிடித்த தலைப்பு, 'எவ்வுயிர்க்கும் அன்பாயிரு'. அங்கே அவர்கள் கொடுத்த தலைப்பில் 20 எண்சீர் விருத்தம் 3 மணிநேரத்தில் எழுதிக் கொடுத்துவிட்டான். 50 பேரும் எழுதிக்கொடுத்துவிட்டுப்போய்விட்டார்கள். 3நாளாச்சு. பேரா.தேசிகனார் அப்போது நீதிபதி. அவர் அனைத்தையும் பார்த்துவிட்டு, 2 பகுதிக்குரிய கவிதைகளைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்தார். வ.சுப.மா. பார்த்தார்.

இந்தப்பையன் பியூசி படிக்கிற பையன். அந்தப் பையன் கொஞ்சம் பெரிய வகுப்பு. (மூன்றாம் ஆண்டோ என்னவோ) படிக்கிற பையன். இந்த இரண்டு கவிதைகளுக்கும் பரிசு கொடுக்கலாம். ஐயா, சிக்கனத்துக்குப் பேர்போன ஆள். 'தொல்காப்பியர் இலக்கணம் படைத்தார்' என்று எழுதமாட்டார். 'இலக்கணர் தொல்காப்பியர்' என்று எழுதுவார். (அவ்வளவு சிக்கனம்.) அவர் சொன்னார். இரண்டு பரிசுகள் கொடுக்கமுடியாது. ஒன்று இந்த மூன்றாம் ஆண்டு பையனுக்குப் பரிசு கொடுங்க. இந்த பியூசி பையனை என்னை வந்து பார்க்கச் சொல்லுங்க. அந்தப் பையனுக்கு அன்னிக்குத்தான் லாட்டரி அடிச்சது.

அந்தப்பையன் போய் கைகட்டிக்கொண்டு நின்றான்.கம்பீரமாக அவர், 'நீ யார்? என்ன படிக்கிறாய்? என்றெல்லாம் கேட்டார். சொன்னான். உனக்கு நல்லாத் தமிழ் வருது- கவிதை நல்லா இருக்குன்னு தேசிகன் சொன்னார். இங்கே கலைக்கழகம்னு ஒன்று இருக்கிறது. இரண்டு ரூபாய் கொடு என்று கேட்டார். (கலைக்கழகத்தில், 50 பேர். ஆளுக்கு இரண்டு ரூபாய் (50X2=100 ரூபாய்) ஒரு டப்பாவில் போட்டுவைப்பார். தொடமாட்டார். கடைசியாக ஒரு போட்டி வைப்பார். அரை மணிநேரம் ஒரே யாப்பில் 50 பாட்டு, தலைப்பில் கவிதைப்போட்டி, கட்டுரை, போன்ற போட்டிகள் நடத்திப் பரிசாகக் கொடுப்பார்.

அந்தப் பையனைக் கலைக்கழகத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தார். புதன்கிழமைதோறும் சென்று கேட்க வேண்டும். அந்தப் பையன் பியூசி பாஸ் செய்துவிட்டான். எஞ்சினியரிங் சேரப்போகிறான். நல்ல மதிப்பெண் வாங்கியிருந்தான். அது வேறு விஷயம். சென்னை சேப்பாக்கத்திற்கு அவன் அனுப்பிய விண்ணப்பப்படிவம் தொலைந்துபோச்சு என்று சொல்லிவிட்டார்கள். அவன் அப்பா, தொடக்கமே சரியில்லை. இஞ்சினீயரிங் வேண்டாம் என்று சொல்லிவிட்டு, 'வேறு என்ன படிக்கிறாய்?' என்றார். அந்தப்பையன், 'தமிழ் படிக்கிறேன்' என்றான். 'போடா, தமிழ் சோறு போடாது. நீ காமர்ஸ் படி. பேங்க்கில் வேலை வாங்கித்தருகிறேன்'. படித்தான். பி.காம் சேர்ந்தான். ஒரு மகிழ்ச்சி. எஞ்சினியரிங் சேர்ந்தால், வ.சுப.மா.வைப் பார்க்கமுடியாது. பி.காம். சேர்ந்தால், பார்க்கலாம். அவர் கேட்டார். 'மதியம் சாப்பிட்டபிறகு என்ன செய்வாய்?'. 'சும்மாதான் இருப்பேன்.' 'எனது அறைக்கு வா'. அவன் வகுப்பும் அவரது அலுவலக அறையும் ரொம்பப்பக்கம். ஈஸி சேரில் ஒய்வாச் சாய்ந்திருப்பார். தூங்கமாட்டார். போய்ப்பார்ப்பான்.

'நாலடியார் ஒப்புவி. பரிசு தருகிறேன்' என்றார். 400ல் 200 ஒப்புவித்தான்.



இரண்டரை ரூபாய் மதிப்புள்ள பரிசு வாங்கிக் கொடுத்தார். அதற்கு அடுத்த வருடம். அவன் ஒப்புவிப்பதாகச்சொன்னது, ‘ஆத்திசூடி’. அவர் சொன்னார் ‘பரிசு சிறிதாகத்தான் இருக்கும்’. ‘அப்ப, திருவாசகம்’ என்றான். மர்ரே ராஜம் பதிப்பு. ஒரு ரூபாயில் வெளிவந்தது. 658 பாடல்கள். சுத்தமானது. பிழையே இருக்காது. அதில் 400 பாடல்கள் மனப்பாடம். மதியம், ‘குழைத்த பத்துச் சொல்லு’- கண்ணை மூடிக்கொண்டு கேட்பார். அவருக்குப் பிடித்த பாட்டு. ஒரு நாள். ‘ஓடும் கவந்தியுமே உறவு’ எனவரும் பாட்டை ஒப்புவித்தான். ‘நிறுத்து’ தூக்கிவாரிப்போட்டுவிட்டது, அவனுக்கு. ‘கவந்தின்னா என்ன?’ அவனுக்குத் தெரியாது.

காமர்ஸ் படித்தவன். ‘கவந்தின்னா, கோவணம். ஓடும் கவந்தியுமே உறவு என்று மாணிக்கவாசகர் சொல்கிறார்.’ இப்படி அங்கங்கே ஒரு வரி கேட்பார். ‘இதற்கு என்ன அர்த்தம்?’ என்று. பிறகு சொல்வார். இப்படியே 3 வருடம் அவரிடம் பாடம் கேட்டான்.

1959இலிருந்து, 62 வரை.658 பாடல்களில், 400 பாடல்கள் வரை ஒப்புவித்துவிட்டான்.

பாராட்டிப் பரிசும் கொடுத்தார். பாராட்டு என்ன? ஒரு பார்வை பார்ப்பார். முகத்திலிருந்து கண்டுபிடிக்கணும். சரிதான் ஐயா நம்மைப் பாராட்டுகிறார் என்று- அவ்வாறாக பரிசு கொடுத்தார். வளர்த்தார். அவன் தமிழ் பேசுவதற்குக் காரணமாக இருந்தார். அரை மணிநேரச் சொற்பொழிவு நடத்தினார். அதில் 3 வருடங்களாக அந்தப் பையன் பரிசு வாங்கினான்.

ஒருமுறை சாரங்கபாணி, உ.பாலசுப்பிரமணிய ஐயா ஆகியோர் நடுவர்கள்.

அரைமணி நேரத்தில் பேசும்போது, 78 கம்பராமாயணப் பாடல்களை மேற்கோள் காட்டினான் என்றார்கள். இவன் பேச்சைவிடக் கம்பன் பேச்சு அதிகமா இருக்கு. பரிசு கிடையாது என்று வ.சுப.மா. சொல்லிவிட்டார். அதிகமாக மேற்கோள் காட்டிவிட்டான் என்று. அப்படித்தான் அந்தப் பேராசிரியர் வ.சுப.மா, அவனை வளர்த்தார். அந்த மாணவன் அவருக்கு நன்றிக் கடன் செலுத்துவதற்காக, ஒப்புக்குப் பேசாமல், உப்புக்குப் பேச உங்கள் முன்னால் வந்துநிற்கிறான். இது சொந்தக்கதை.

நான் பெற்ற பேறு. அவர் குருநாதராகப்போற்றிய பண்டிதமணி மீது பிள்ளைத்தமிழ் பாடவைத்தார். இப்போது அவர்மீதே பாட அவர் குடும்பத்தார் தந்தார்கள். அதில் கடைசி மூன்று பருவங்கள்- சிற்றில், சிறுதேர், சிறுபறை என்பதை மாற்றி, வ.சுப. மா.பிள்ளைத்தமிழில், வள்ளுவப்பருவம், வாசகப்பருவம், வாய்மைப்பருவம் என்று மாற்றம் செய்து பாடியிருக்கிறேன். ஆசானுக்கும், மாணாக்கருக்கும் பிள்ளைத்தமிழ் பாடினேன். இது நான் பெற்ற பெரும்பேறு.

## ‘எழுதிய நூல்களினும், எழுத நினைத்த நூல்களே அதிகம்’
## பேராசிரியர் முனைவர் இரா.மோகன்



ஒரு தமிழறிஞருக்கு, அமெரிக்காவில், ஆறு தடவை நூற்றாண்டுவிழா நடத்தப்பெற்றது என்றால், அது ஐயா வ.சுப. மா. அவர்களுக்குத்தான். இங்கே 23 முறை, 23 இடங்களில். ஆக, இருபத்தொன்பது முறை நூற்றாண்டுவிழாக் கண்டவர் வ.சுப. மா. ஒருவர்தான்.

இது அவருக்குக்கிடைத்த தனிச்சிறப்பு. மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் முத்திரை பதித்தவர்கள் மூன்று துணைவேந்தர்கள். ஒருவர் தெ.பொ.மீ. மற்றொருவர் மு.வ. அடுத்து வ.சுப.மா. அவர் எழுதி வெளியிட்ட நூல்களை விட, அவர் எழுதவேண்டும் என்று நினைத்த நூல்களே அதிகம்.

## ‘இன்னும் எனக்குத் தலைவர் வ.சுப.மா.’
## பேராசிரியர் முனைவர் பா.வளன்அரசு



‘தொண்டுசெய்வாய் தமிழுக்குத் துறை தோறும் துறைதோறும் துடித்தெழுந்தே’ என்றார் பாவேந்தர் பாரதிதாசன். ‘ஒண்டமிழ்த்தாய் சிறப்படைய, முன்னேற் றம் ஒவ்வொன்றும் உன் முன்னேற்றம் கண்டறிவாய் எழுந்திரு நீ இளந்தமிழா’ என்று இளையோருக்கு அறைகூவல் விடுத்த பாவேந்தர் வழியிலே நாவேந்தராய் விளங்கிய மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்த மாமனிதர். ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னதாக அவரோடு பழகுகின்ற, அவரிடம் பயில் கின்ற ஓர் அரிய வாய்ப்பை ஆபிரகாம் அருளப்பர் என்கிற தூய சவேரியார் கல்லூரி



தமிழ்த்துறைத் தலைவர் ஆற்றுப்படுத்தலின் வாயிலாக எனக்கு ஏற்படுத்தித் தந்தார். ஈராண்டுகள். நினைத்து நினைத்துப் பார்க்க மகிழ்ச்சிப் பெருக்கு மிகுந்து செல்கிறது. ஐயா வ.சுப.மாணிக்கனாருடைய மாணவன் என்ற நிலையிலே இன்றும் நிமிர்ந்து நடைபோட்டு கல்லூரிப் பணியிலே, ஊழியம் செய்தாலும் கூட இன்னும் எனக்குத் தலைவன் என் பேராசிரியர் வ.சுப. மாணிக்கனார் என்று சொல்லிக் கொள்வதிலே மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன்.

இது முப்பதாவது நூற்றாண்டு விழா. மேலைச்சிவபுரியிலே நடக்கிறதைப் பார்க்கும் போது எனக்குப் பழந்தமிழ் இலக்கியம் மதுரைக்காஞ்சி நினைவுக்கு வருகிறது. அதில் ஐம்பதாண்டுகளாக நெடுஞ்செழியன் ஆட்சிசெய்தான் என்று மாங்குடிமருதனார் சொன்னதைப் போல, நீண்ட நெடுங்காலமாகத் தமிழருக்கு எழுச்சியை ஏற்படுத்தித்தந்த, இளையோரையெல்லாம் வழிநடத்தித் தந்த அந்த மேன்மைக்குரிய மேதையை இந்த வேளையில் நினைந்து நினைந்து மகிழ்கிறோம்.

கல்லூரியில் அவரிடத்துப் பயில்கிறபோதே பல்கலைக்கழக முதல் மாணவனாக வரவேண்டும் என்று தட்டிக் கொடுத்து வளர்த்தவர். பயின்று முடித்து வேலைக்காக விண்ணப்பித்துக் காத்திருந்த போது, அவரிடம் ஒரு வாழ்த்துக் கடிதம் பெற விழைந்தேன். 'இந்தக் கடிதம் வருகிறபோது, நீ வேலையில் இருப்பாய்' என்று கூறிய அந்த ஞானியின் வாக்குப்படியே எனக்கு வேலை வாய்த்திருந்தது.

மதுரையிலே ஆராய்ச்சி மாணவனாக இருந்தபோது மூன்று திங்கள் எனக்குப் பெரிய பணியைத் தந்தார்கள். ஐந்தாவது உலகத்தமிழ்மாநாடு நடக்கிறபோது நானூறு பேராளர்கள் வருகின்றார்கள். அவர்களைக் கவனிக்கிற பொறுப்பை நீ செய்ய வேண்டும் என்று சொன்னபோது அந்த மகிழ்ச்சி எழுச்சியை இன்றைக்கும் நினைத்துப் பார்க்கிறேன். உலகத் தமிழ்ச் சங்கம் உருவாக வேண்டும் என்று பொன்மனச் செம்மலிடம் சொல்லியபோது, அந்த மாநாட்டு மேடையிலேயே உலகத்தமிழ்ச்சங்கம் மதுரையிலேயே அமையும் என்று பொன்மனச் செம்மல் அறிவித்தார். அதை இன்று அரசு கொண்டுவந்துள்ளது என்று சொன்னால், ஐயா அவர்கள்தான் அதற்குக் காரணம். எந்தச் செயலை எடுத்தாலும் அந்தச் செயலிலே முத்திரை பதித்தவர்கள் ஐயா அவர்கள்.

## 'தந்தை நிகர்த்த தகைமையாளர்'

## பொற்கிழிக்கவிஞர் பேராசிரியர் முனைவர் ச.சவகர்லால்

இளமையிலேயே தமிழை நன்றாக - நானாகப் படித்திருந்ததாலும் ஒரு கவிஞனாகமலர வேண்டும் என்று விரும்பினேன். கல்லூரியிலே நுழைகின்ற போது எனக்குக் கவிதை எழுதுகின்ற ஆற்றல் இருந்தது. நிறைய நூல்களைப் படித்த நினைவாற்றலும் இருந்தது. ஆனால் ஆசிரியர்களிடம் நெருங்கிப் பழகுகின்றவன் இல்லை நான். தூரத்திலிருந்தே விலகிப் போய்விடுவேன். அவ்வளவு மரியாதை. அளவுக்கு அதிகமாகவே மரியாதை காட்டுகிறவன் நான். மேலும், பத்து மைல் தூரம் தினமும் சைக்கிளில் வந்து படித்துத் திரும்பிப் போவேன். 1958 இல் தமிழ் படிக்கிறேன். படிப்பைத் தொடர முடியாத நிலை.



படிப்பை விட்டுவிட்டு வேலை தேடிப் பொள்ளாச்சியில் போய் அமர்ந்துவிட்டேன். பேராசிரியர் நன்றாகப் படிக்கிற மாணவனைக் காணோமே என்று தேட, அமிர்தலிங்கனார் முகவரியைத் தேடி எடுத்துக் கடிதம் எழுத, பார்க்க விரும்புவதாக அந்தக் கடிதம் எனக்கு வந்தது. வந்தேன். 'ஏன் படிப்பை நிறுத்தினாய்?' என்றார்கள். 'வேறு வழியில்லை' என்றேன். 'பொருளாதாரச் சிரமமா?' 'ஆமாம்.' 'கல்லூரிப் படிப்புத் தவிர தங்கும் வசதி பண்ணனுமா?' சுயமரியாதையோடு அதை மறுத்தேன். 'தங்குவதற்கு நான் பார்த்துக்கொள்கிறேன்' என்று சொன்னேன். அவர்கள் உதவியுடன் படித்தேன். படித்து முடித்தவுடன் அக்கறையோடு அவர்கள் சொன்னார்கள்- 'நீ இதோடு நிறுத்தி விடாதே. படிப்புக்கு வேண்டிய எல்லாச் செலவுகளுக்கும் நீ தங்கிப்படிப்பதற்கும் நான் ஏற்பாடு செய்கிறேன். நீ எம்.ஏ. படிக்க வேண்டியது மிக மிக இன்றியமையாதது. நீ படித்தால் தங்கப்பதக்கம் பெறுவதும் உறுதி. வா' என்றார்கள்.

'நான் வேலைக்குப் போய் ஐம்பது ரூபாய் சம்பாதித்தால்தான் எங்கள் குடும்பத்தில் சாப்பிட முடியும். அப்படியொரு நிலை. ஆகையால் போகிறேன். ஆனால், எப்படியும் படிப்பைத் தொடர்ந்து விடுவேன்' என்று போனேன். பள்ளி ஆசிரியராக வேலைக்குப் போனேன். இப்படி நான் படிப்பைத் தொடர்வதற்கும் தொடர்ந்து முடிப்பதற்கும் பேராசிரியர் வ.சுப.மாணிக்கனார்தான் காரணமாக இருந்தார். அவரைப் பார்த்தால் எனது தந்தையைப் பார்ப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது. தோற்றமே அப்படி இருக்கும்.

அதுபோல அவர்தம் பிள்ளைகளும். எனது திருமணத்தையும் எனது பேராசிரியர்கள்தாம் நடத்தி வைத்தார்கள். அமிர்தலிங்கனார் ஐயா அவர்கள் இருந்து தமிழ் முறைப்படி திருமுறைகள் பாடி எனக்குத் திருமணம் நடத்தி வைத்தார்கள். வ.சுப. மாணிக்கனார், முடியரசன், அமிர்தலிங்கனார் எல்லோரும் வாழ்த்தரங்கத்திலே பேசினார்கள். பேராசிரியர் நான் மாப்பிள்ளை வீட்டுக்காரன் என்றார். முடியரசன் நான் பெண் வீட்டுக்காரன் என்றார். காரணம் நான் பேராசிரியரின் மாணாக்கன். என் மனைவி முடியரசனாரின் மாணாக்கி.

ஆதலால்தான். டாக்டர் வ.சுப.மாணிக்கனார் என்னைப் படிக்க வைத்ததற்கு நான் செலுத்தும் காணிக்கையாக அவர் வாழ்க்கையைக் கவிதை நூலாக வடித்துத் தந்திருக்கிறேன்.

இந்த நூற்றாண்டு விழாவில் இதைப் பெரும் பேறாகக் கருதுகிறேன். அப்படிப்பட்ட வாய்ப்பை எனக்குத் தந்த தம்பிகள் தங்கைகளுக்கு எனது நன்றியைச் சொல்லி நிறைவு செய்கிறேன்.

## ‘அவருக்குக்கீழ் ஆசிரியனாக, ஆறாண்டுகாலம் தவமிருந்தேன்’

## பேராசிரியர் முனைவர் பழ.முத்துவீரப்பன்



நாங்கள் மாணிக்கனாரிடத்திலே தமிழ் பயின்றவர்கள். கடமை, ஒழுங்கிற்குக் கட்டுப் பட்டவர்கள். நேரம் தவறாதவர்கள். பத்துப்பாட்டாகப் பாட வந்தோம்.

இருவர் வராத காரணத்தால் எட்டுத்தொகையாகச் சுருங்கிவிட்டோம். எட்டுத் தொகையில் ஆறாவது தொகை கலித்தொகை. அது ஒரு ஆரவாரமான பா. வெண்பாவாக வாழ்ந்த பெரியவர், ஆசிரியப்பாவாக எனக்கு இருந்தவர். அவரைக் கலிப்பாவாக நான் பேச வந்திருக்கிறேன். நிச்சயமாக வஞ்சிப்பாவாக உங்களை ஏமாற்ற மாட்டேன். எனது தந்தை நா.மு. மாணிக்கனார் அவர்கள், வ.சுப.மா. அவர்களின் அருமை நண்பர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தமிழ்த்துறைத் தலைவராக வ.சுப.மா. அவர்கள் இருந்தபோது என் தந்தை சொன்னார்: ‘நீ போய் வ.சுப.மா.விடம் சொல்லி இளம் அறிவியல் வேளாண்பட்டத்தில் சேர்வதற்கு ஏற்பாடு பண்ணிக்கொள்.’ வ.சுப. மா. பற்றி எல்லாருக்கும் தெரியும். பரிந்துரை என்றால் அவருக்குப் பிடிக்காது. இந்த விவரம் தெரியாமல் வ.சுப.மா.விடம் சொன்னேன். எனது மதிப்பெண் பட்டியலை வாங்கிப் பார்த்தார். தமிழில் நான் ஏ. வாங்கியிருந்தேன். ‘அப்ப நீ தமிழ் படிக்கலாமே!’ என்றார். ‘தமிழ் படித்தால் வேலை கிடைக்காதே’ என்றேன். ‘நல்லாப் படித்தா வேலை கிடைக்கும்’ என்றார். நான் தந்தையிடம் சொன்னேன். ‘அவர் சொல்லியபடி செய்’ என்று சொன்னார். இப்படித்தான் நான் திசை திருப்பப்பட்டேன். அதற்குப் பிறகு எனக்குத் திருமணம் ஆனபின் எனது மாமனார் மூலமாக எனக்கு வங்கிப்பணி கிடைத்தது. ஐயாவிடம் போனேன். ‘வேண்டாம் நீ தமிழிலேயே இருக்க வேண்டியவன்’ என்று சொல்லிவிட்டார்.

இருமுறை வங்கிப் பணி கிடைத்தது. இருமுறையும் என்னை வங்கிப்பணிக்குப் போகவிடாமல் தடுத்தாட்கொண்டார் வ.சுப. மாணிக்கனார். அவருடைய சிறப்பு என்னவென்றால், பழமையிலே புதுமைநோக்க முயல்வார். பழமையில் விருப்பமுள்ளவர், பழமையில் ஊறியவர், புதுமையை விரும்புகிறவர். தொல்காப்பியத்தில் புதுமை கண்டார்; பாரதியிடத்தில் பழமை கண்டார். சங்கப்புலவர் மாதிரி பெருமிதம் வாய்ந்த புலவர். பெருமையும் பெருமிதமும் வேண்டும் என்று வாழ்ந்து காட்டிய பெருமகனார்.

ஆ.பழநி, ‘பேராண்மை, பெருந்துணிவு, பெரும்புலமை இம்மூன்றுக்கும் சொந்தக்காரரர் வ.சுப.மா.’ என்று சொன்னார். நான் சொல்கிறேன்: ‘புலமைக்கு ஒருவர் மாணிக்கம். நேர்மைக்கு ஒருவர் மாணிக்கம். துணிவுக்கு ஒருவர் மாணிக்கர். வாய்ம்மைக்கு ஒருவர் மாணிக்கர். மொழிக்காப்புக்கு ஒருவர் மாணிக்கர். மொழிப்புரட்சிக்கு ஒருவர் மாணிக்கர். எழுத்துச் சீர்திருத்தத்துக்கு ஒருவர் மாணிக்கர்.’ எண்ணிப் பார்த்தால் - தன்னுடைய வாழ்க்கையை வரலாறாக எழுதிய ஒரு பெருமகனார் இங்கு சிலைவடிவத்தில் காட்சியளித்துக் கொண்டிருக்கிறார்.

அறிஞர் அண்ணா படியரிசித் திட்டம் கொண்டுவந்தார். அவரிடத்தில் வ.சுப. மாணிக்கம் சொன்னார்: ‘படியரிசித்திட்டம் கொண்டுவந்தது சரிதான். படிதமிழ்த் திட்டம் எப்போது கொண்டு வரப்போகிறீர்கள்?’ யார் கேட்க முடியும்? சங்கப்புலவர்தான் கேட்க முடியும். கலைஞர் அவர்கள் முதலமைச்சராக இருக்கிறார்; வள்ளுவர் கோட்டம் கட்டுகிறார்; குறளோவியம் எழுதுகிறார்; அதற்கு அணிந்துரை வ.சுப.மா. எழுதுகிறார்.

அதில், ‘சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கற்கோயில் படைத்தான். அவன் தம்பி கண்ணகிக்குச் சொற்கோட்டம் படைத்தான். அந்த இரண்டு அரசர்கள் செய்த பணியை இவர் ஒருவராகச் செய்திருக்கிறார் என்று பாராட்டியிருக்கிறார். பாராட்டுவது மட்டும்தான் புலவர் தொழிலா? தவறு செய்தால் சுட்டிக் காட்ட வேண்டாமா? அதையும் கேட்டார். ‘நீங்கள் வள்ளுவருக்குக் கோட்டம் அமைத்தது சரிதான். வள்ளுவத்தை எல்லாரும் படிக்க வேண்டாமா? வள்ளுவத்தை மலிவுப் பதிப்பாகப் போட்டு ஒரு ரூபாய்க்கு வழங்குங்கள். ஏன் இலவசமாகக் கொடுக்கக்கூடாது என்றால் நமது நாட்டில் இலவசமாகக் கொடுத்தால் எல்லாரும் படிக்க மாட்டார்கள். ஒரு ரூபாய் விலை வைத்து எல்லாருக்கும் வழங்குவதற்கு ஒரு திட்டம் கொண்டு வாருங்கள்’ என்று கலைஞரிடத்திலே சொன்னார்.

ஒருமுறை நிதியமைச்சராக இருந்த ஒருவர் அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு வந்தார். அதற்கு முதல்நாள்தான் வரவுசெலவுத் திட்டம் சமர்ப்பிக்கப்பட்டது. அவரிடத்திலே நமது பேராசிரியர் சொன்னார்: ‘வரவு செலவுத் திட்டம் கொண்டு வந்திருக்கிறீர்களே, தமிழ் வளர்ச்சிக்காக ஏதாவது நிதி ஒதுக்கியிருக்கிறீர்களா?’ என்று நிதியமைச்சரிடத்திலே மேடையிலேயே கேட்டார்.

ஐந்தாவது உலகத் தமிழ்மாநாடு மதுரையிலே நடைபெற்றது. பேராசிரியர் மதுரைப் பல்கலைக்கழகத்திலே இருந்தார். ம.கோ.ரா. (எம்.ஜி.ஆர்.) முதல்வராக இருந்தார். அவரிடத்திலே பேராசிரியர் சொன்னார்: “உங்கள் முதல்வர் பதவியை ஒரே ஒரு நாள் என்னிடத்திலே தாருங்கள். (முதல்வன் படம் உங்களுக்குத் தெரியும். அது வருவதற்கே ஒருவேளை, வ.சுப.மா.தான் காரணமாக இருந்தாரோ?) ஒரே ஒருநாள் முதல்வர் பதவியைத் தாருங்கள். நான் மழலையர் பள்ளிகளையெல்லாம் தமிழ்ப்பள்ளிகளாக மாற்றிவிட்டுக் கட்டாயமாக உங்களிடம் திருப்பித் தந்து விடுகிறேன். நான் சொன்ன சொல் தவற மாட்டேன்!” - இப்படிச் சொல்வதற்கு எவ்வளவு நெஞ்சுரம் இருக்க வேண்டும்; புலமைத் திறம் இருக்க வேண்டும்? மோசிகீரனார் மாதிரி...



எம்.ஜி.ஆர் அவர்களுக்கு வ.சுப.மாவுடன் அதிகமாகப் பழக்கம் இல்லை. ஆனால் ம.கோ.ரா. மாணிக்கனார் புலமையை நன்குணர்ந்து 'இப்பேர்ப்பட்ட தமிழ்ப் பெருமகனார்தான் மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராக விளங்கவேண்டும்' என்று சொல்லி, அப்போதிருந்த ஆளுநரிடம் சொல்லி, 'இவரைத் துணைவேந்தராக ஆக்க வேண்டும்' என்று கூறி ஆக்கிய பெருமகனார் ம.கோ.ரா. அவர்கள்.

தமிழ்ப்பல்கலைக்கழகம் உருவாக்கப்பட்டபோது அதை உருவாக்கக் கட்டில் அமைக்கப்பட்ட போது அதன் தலைவராக நியமிக்கப்பட்டார் வ.சுப.மா. அப்போது எம்.ஜி.ஆர் கேட்டார்: (வ.சுப.மா.வின் ஆன்மா என்னை மன்னிக்கவேண்டும்) "எத்தனை ஏக்கர் நிலம் வேண்டும்?" தயங்கித் தயங்கி வ.சுப.மா. "அறுநூறு ஏக்கர் நிலம் வேண்டும்" என்று கேட்டார். "ஏன் இவ்வளவு குறைவாகக் கேட்கிறீர்கள்? ஆயிரம் ஏக்கர் தமிழுக்குத் தருகிறேன்" என்று எம்.ஜி.ஆர் சொன்னார். இப்படி மூன்று முதல்வர்களிடத்திலும் துணிச்சலாகத் தனது கருத்துகளை எடுத்துச் சொன்னவர் வ.சுப.மா.

அவர் மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராக இருந்தபொழுது தன்னுடைய ஊருக்கு வந்தார். பேருந்து நிலையம் வரை மகிழுந்தில் வந்தவர், அங்கிருந்து பேருந்தில் காரைக்குடி செல்கிறார். எவ்வளவு பெரியவர். பேச்சொன்று செயலொன்று கிடையாது. சொல்வதைச் செய்வதுதான் அவரது பணி. ஊருக்குச் சொல்லியதை உள்ளத்துக்குச் சொல்லியவர். உரத்துச் சொன்னவர். வள்ளுவத்தை வாழ்வறமாக மாற்றியவர்.

எனக்கு வங்கிப்பணி பெறுவதற்குப் பரிந்துரை செய்யவந்த கம்பனடிப்பொடி சா. கணேசனிடம், "ஐயா, பேராசிரியர் வ.சுப.மா. காரைக்குடியில் இருக்கிறார். அவரைக் கம்பன் கழகத்திற்கு ஏன் அழைப்பதில்லை?" என்றேன். அதற்கு சா.க. சொன்னார்: "நான் கம்பன் புகழ்பாடிக் கன்னித்தமிழ் வளர்ப்பவன். பேராசிரியர் வ.சுப.மா. ஆய்வறிஞர். அவர் ஆய்வு செய்து கம்பனை விமர்சனம் பண்ணிவிடுவாரோ என்று பயம். அதனால்தான்!" என்றார்.

வ.சுப.மா. 'கம்பர்' என்றொரு நூல் எழுதியிருக்கிறார். இலக்குவன் இராமனுடைய நிழலாகவே இருந்து தொடர்வான். பரதன் அயோத்தியா காண்டம் வரை வருவான். பின்னால் யுத்த காண்டத்தில்தான் வருவான். பேராசிரியர் இலக்குவனையும் பரதனையும் ஒப்பிட்டார்.

இலக்குவனுக்குள்ள பெருமை பரதனுக்குண்டு. எப்படியென்றால் இலக்குவன் நீர்மேல் நீந்தி வருபவன்மாதிரி. பரதன் நீருக்குள் நீந்தி வருபவன் மாதிரி. கடைசியாக இராமன் வருகிறபோது பரதனும் இலக்குவனும் ஒருவரையொருவர் தழுவிக்கொள்கிறார்கள். இருவரது உடலும் மெலிந்து போயிருப்பதை ஊர்மக்கள் பார்த்தார்களாம். இதில் யாருடைய உடல் மிகவும் மெலிந்து போயிருக்கிறது? பரதன் உடலா? இலக்குவன் உடலா? என்று பட்டிமண்டபம் வைத்தார்கள்.

'தனிமை நீங்கி, காடு உறைந்து உலைந்த மெய்யோ, கையறு கவலை கூர நாடு
உறைந்து உலைந்த மெய்யோ, நைந்தது?' என்று உலகம் நைய

என்று கம்பன் பாடியிருக்கிறான். இவ்வாறு, கம்பனின் இலக்கியநேர்மையை, 'கம்பர்' நூலில் வ.சுப.மா. பதிவுசெய்துள்ளார்.

பேராசிரியர். வ.சுப.மா. அவர்கள் குடும்பத்தில் உடனிருந்தவர்கள் இராமன் உடனிருந்த இலக்குவன் போன்றவர்கள்; விலகியிருந்தவர்கள் பரதனைப் போன்ற அன்புடையவர்கள்.

தான் முன்மாதிரியாக இருந்து மற்றவர்களை ஒழுங்குபடுத்தியிருக்கிறார் வ.சுப.மா. யாராவது தாமதமாகப் பணிக்கு வந்தால், ஏன் என்று கேட்கமாட்டார். அவரிடத்தில் ஓராண்டு பணி புரிந்தவன் நான். தாமதமாக வந்து கையெழுத்துப் போடுபவரின் முகத்தைப் பார்ப்பார். சுவரில் மாட்டியிருக்கும் கடிகாரத்தைப் பார்ப்பார். தன் மணிக்கட்டில் கட்டியிருக்கும் மணிப்பொறியைப் பார்ப்பார். வேறு ஏதும் கேட்கமாட்டார். மறுநாள், அந்தப் பேராசிரியர் மந்திரம் போட்டதுபோல் நேரத்துக்கு வந்துவிடுவார்.

அந்தப் பேராசிரியரது திருவடி பட்ட மண்ணில், அவருடைய மாணவனாக, அவருக்குக்கீழ் ஆய்வாளனாக, அவருக்குக்கீழ் ஆசிரியனாக, ஆறாண்டுகாலம் தவமிருந்தேன் என்ற பெருமையோடு இந்த நல்வாய்ப்பை நல்கிய அனைவருக்கும் நன்றியைச் சொல்லி விடைபெறுகிறேன்.

## 'தெய்வம் போல உதவியவர் வ.சுப.மா.'

**பேராசிரியர் முனைவர்
விசு.பழனியப்பன்**



நான் சன்மார்க்க சபைக் குடும்பத்தைச் சார்ந்தவனாக இருந்த காரணத்தால், வ.சுப. மா. அவர்களோடு நெருங்கிப்பழகக்கூடிய வாய்ப்புக் கிடைத்தது. 1972இல் மே மாதம் முதுகலைப் பட்டத்தை முடித்துத் தேர்வு முடிந்து வந்த கட்டத்தில் இருந்தேன். நான் அந்தப் பட்டம் பெறுவதற்குக் காரணமாக இருந்தவர் மகிபாலன்பட்டி இராம.மா. நாகப்பச்செட்டியார். என்னை வ.சுப. மாணிக்கனாரிடம் அழைத்துச் சென்றவர் தமிழண்ணல். என்னுடைய தேர்வு முடிவு வந்தபிறகு, 'பழனியப்பனை, காரைக்குடிக்கு அழைத்துச் செல்கிறேன்' என்று என் அப்பாவிடம் அவர் சொன்னார். அவர் மறுபேச்சு இல்லை. எனக்கு என்னவென்று புரியவில்லை. மறுநாள் ஞாயிற்றுக்கிழமை அவர்கள் அழைத்துச் செல்லச் சந்திக்கிறேன்.



தமிழண்ணல், 'நமது விசுவநாதன் மகன்' என்று அறிமுகம் செய்துவைத்தார்.

'விசுவநாதன் வாய் பேசாதவன்' என்று இரு வரிகளில் முடித்துக்கொண்டார் வ.சுப. மா.

ஆராய்ச்சிப்படிப்புக்குரிய விண்ணப்பப்படிவத்தைக் கொடுப்பதற்கு அவரிடம் சென்றேன். எனக்குத் தலைப்பாக, 'யாப்பருங்கல விருத்தி- ஓர் ஆய்வு' என்று அவர்கள் தந்துவிட்டார்கள். 'நீ போய் இரு. பல்கலைக்கழகத்திலிருந்து ஆராய்ச்சி மாணவனாக உனக்கு அழைப்பு வரும். வந்துசேர்' என்று சொல்லிவிட்டார்கள்.

நான் போய் ஆச்சிவீட்டில் இருந்தபோது, முதல் வாரத்தில், ஒரு தந்தி வருகிறது.

பண்டிதமணியார் மகன் தியாகராசன் மூலமாக அந்தத் தந்தியை அனுப்ப ஏற்பாடு செய்கின்றார்கள். 'உடனே, புறப்பட்டு வா. உரையாளர் பதவி காத்திருக்கின்றது.' மறுநாளே புறப்பட்டு வந்துவிட்டேன். மறுநாள் பணியிலே அமர்த்தப்பட்டேன்.

1972இல் மிகச்சாதாரணமான பழனியப்பனாக, இருந்த என்னை, ரூ.70/- சம்பளத்திலே சேர்த்துவிட்ட வ.சுப.மா. அவர்கள், அப்படிச்சேர்த்துவிட்ட காரணத்தால், நான் பணியிலிருந்து ஓய்வு பெறுகின்றபோது, 70,000 ரூபாய் சம்பளம் பெற்று ஓய்வு பெற்றிருக்கின்றேன். இந்த வளமுள்ள வாழ்க்கைக்கு அடித்தளம் தந்தவர்கள் வ.சுப.மா. அவர்கள்.

என் பெயரை விளங்க வைத்தவரும் வ.சுப.மா. அவர்கள்தான். பணிக்காலத்தில், இரண்டு பழனியப்பன்கள் இருந்தோம். அதில் பாடவகுப்புப் பிரிவு செய்கிறவர் வி.பி. என்ற முதல் எழுத்தை, 28 இடத்தில் குறித்துவிட்டார். 'ந.வீ.ஜெயராமன் இது என்ன ஒருவருக்கு, 28 வகுப்புகள்?' என்று கேட்க, அவர், 'ஒரு பதினாறு பெரிய வி.பி.க்கு. இன்னொன்று சிறிய வி.பி.க்கு' என்றார். 'வி.பி' என்கிற நிலையில் பதிவாகி இருந்த என்னை, 'விசு.பழனியப்பன்' என்று குறிக்கச்சொல்லி, பழனியப்பனாக இருந்த என்னை விசு.பழனியப்பனாக மாற்றித்தந்தவர் வ.சுப.மா. அந்தப்பெயர்தான் இன்றைக்குத் தமிழகத்திலே விளங்கிவருகிறது.

எனக்குப் பல்வேறு நிலைகளில், உதவிசெய்தவர்கள் வ.சுப.மா. அவர்கள். எந்தெந்த நேரத்தில், என்னென்ன விதமான அறிவுரைகள் சொல்லவேண்டுமோ, அதையெல்லாம் சொன்னார்கள். எனது ஆராய்ச்சிப்பணி இடையில் தடைப்பட்டது. எனது பணிமுறிவு, ஆய்வுமுறிவு ஏற்பட்ட நெருக்கடிக்காலங்களில் அவற்றைச் சீர்செய்து எனது வாழ்க்கைக்கு வழிகாட்டியாகவும், இன்றைய சூழ்நிலைக்கு மேலே ஏறுவதற்குத் தெய்வம் போல உதவியவர்கள் அவர்கள்தான்.

## 'இனிக்கும் சிந்தையர் செம்மல் வ.சுப.மா.'

## முனைவர் தி.மா.பூங்குன்றன்

கற்கண்டை எந்தப்பக்கம் நாவினால் தொட்டாலும் இனிக்கும். செம்மல் அவர்களின் சிந்தனையை எங்கே தொட்டாலும் இனிக்கும். அவரது ஆய்வுமாணாக்கர்களில் நான் இறுதி



மாணாக்கன். பல்கலைக்கழகங்களிலும் கல்லூரிகளிலும் செம்மல் அவர்கள் செய்த பணி பெருமையும் பீடும் உடையன என்றால், சமுதாயத்தில் அவர்கள் செய்த தொண்டு உரனும் உறுதியும் மிக்கன.

இந்த ஊரை அவர் உயிராக நினைத்தார். இந்தச் சபையையும் கல்லூரியையும் உயிர்ப்பாக எடுத்துக் கொண்டார்.

'சேர்ப்பது எல்லாம் சொத்து அல்ல, தான் பிறருக்கு ஈவதே சொத்து' என்பதுதான் அவரது விருப்பமுறி (உயில்) உலகத்துக்குச் சொல்லித்தருகின்ற பாடம்.

அவர் நிறுவிய அந்த அறக்கட்டளையை கி.ஆ.பெ.விசுவநாதம் தொடங்கிவைத்தார், முதன்முதலில். அந்த அறக்கட்டளையின்படி கருவுற்ற மகளிர்க்கு உதவி செய்து தொடங்கி வைக்கப்பட்டது.

அந்தப் பெண்ணின் கணவர் என்னைச் சந்தித்தார். அவர் சொன்னார்: 'என் மனைவி ஆண்பிள்ளை பெற்றிருக்கிறார். எங்கள் வீட்டுக்கு வாருங்கள்' என்று அழைத்துச் சென்றார். போனேன். அந்தக் குழந்தையைப் பெற்ற தாயார் சொன்னார்: 'இந்தப் பையனுக்கு அவனுடைய ஐயா பெயரை வைப்பதுதான் மரபு. நான் அந்த மரபை மீறி, மாணிக்கம் பெயரை வைத்திருக்கிறேன்' என்றார். நான் நெகிழ்ந்துபோனேன்.

# பாராட்டுரைகள்

## 'என்றும் வழிகாட்டும் வ.சுப.மா. அவர்களின் வாழ்க்கை அறம்'

### திரு சுப. வீரபாண்டியன்

அறிஞர் வ.சுப.மா. அவர்களினுடைய மேடையில் நின்று பேசுகிற பெரிய வாய்ப்பினை எனக்கு அளித்த நண்பர்களுக்கு உறவினர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அறிஞர் வ.சுப. அவர்களை அவர்களுடைய தமிழ்ப் புலமைக்காகப் போற்றலாம்; அவருடைய விரிந்து அகன்ற கல்விக்காகப் போற்றலாம்; அவருடைய கட்டுரைகளில் காணும் அறிவியல் உண்மைக்காகப் போற்றலாம்; எல்லாவற்றையும் கூட நாம் கற்றுக்கொண்டு விடலாம்; இவை அனைத்தையும் தாண்டி வ.சுப. மா அவர்களை நம் தலைமுறை எதற்குப் போற்ற வேண்டுமென்றால் அவருடைய அறம் சார்ந்த வாழ்க்கைக்காகப் போற்றலாம். ஏனென்றால் இன்றை உலகில் அதுவே மிகப் பெரிய தேவையாக இருக்கிறது.



அறம் சார்ந்த வாழ்க்கை நம் கைகளை விட்டு நழுவிக்கொண்டே இருக்கிறது. அடுத்தடுத்த தலைமுறைப் பிள்ளைகளுக்கு நேர்மை என்பதும் அறம் சார்ந்த வாழ்க்கை என்பதும் என்னவென்றே தெரியாமல் போய்விடுமோ என்கிற அச்சம் நம்மைக் கௌவுகிறது. அரசியலில் மட்டும் அறம் இல்லை என்று பலரும் கருதுகிறார்கள் . நான் அப்படிக் கருதவில்லை. அரசியலில் மட்டுமல்ல கல்வித்துறையில்கூட இன்றைக்கு அறம் இல்லை. இலக்கியத்துறையில் அறம் இல்லை. திரைப்படத்துறையிலும் அறம் இல்லை. வாழ்வின் எல்லாத் துறைகளும் அறத்தை இழந்து நிற்கிற இந்த அவலத்தைக் காட்டிலும் இன்னொரு பெரிய அவலம் நேராது. ஐயா. வ.சுப. போன்றவர்களின் வாழ்க்கை அறம் இருக்கிறதே, அதை இப்போது எண்ணிப் பார்க்கிறபோதும் வியப்பாக இருக்கிறது.

துணைவேந்தர்பதவிக்காகப்பல்வேறு போட்டிகள்நிகழ்கின்றன. - நான்போட்டிகள்என்ற அந்தச்சொல்லை மிகக் கவனமாகப் பயன்படுத்துகிறேன். - அது வெறும் போட்டிகள் இல்லை. இன்னமும் 3 மாதம் பணி இருக்கிறது என்கிறபோதும் கல்வியாண்டு தொடங்குகிறவேளையில் வெளியில் வந்து இன்னொருவர் வந்தால்தான் சிறப்பாக இருக்குமென்று 3 மாதத்திற்கு முன்னால் அந்தப் பொறுப்பில் இருந்து வெளியில் வந்தவர் வ..சுப.மா. அது இந்தப் பணி வேண்டாம் என்பதற்காக இல்லை. அந்தப் பணியில் ஒரு சலிப்பு ஏற்பட்ட காரணத்தினால் இல்லை.

‘ஒன்று, தான் பொதுவாழ்வில் ஈடுபட வேண்டும்’ என்பதைத் தற்சிந்தனைகள் நூலில் ஐயா குறிக்கிறார். இன்னொரு பெரிய காரணம் என்ன என்றால், ‘ஒரு பல்கலைக்கழகத்தில் ஒரு கல்விக்கூடத்தின் கல்வியாண்டுதான் அதன் தொடக்கம். ஒரு கல்வியாண்டில் புதிய துணைவேந்தர் வந்தால்தான் அவர் அந்த ஆண்டினைச் சிறப்பாகக் கொண்டு போக முடியும்’ என்கிற கல்வி நலம் கருதித் தன் பொறுப்பைத் துறந்தவர் ஐயாவ.சுப. அவர்கள். ஆனால் அடுத்த வரியிலேயே எழுதுகிறார்: ‘நான் விலகிய பிறகும், எனது எண்ணம் ஈடேறவில்லை. நான் விலகி விட்டேனே தவிர, புதிய துணைவேந்தரை உடனடியாக அரசு நியமிக்கவில்லை.’

அப்போது புதிய துணைவேந்தரை நியமிக்கவில்லை என்பது ஒரு செய்தி. இப்போதெல்லாம் துணைவேந்தர்கள் நியமிக்கப்பட்டால்தான் செய்தி. ஏனென்றால் பல்வேறு பல்கலைக்கழகங்கள் துணைவேந்தர்கள் இல்லாமல் இயங்கிக் கொண்டிருக்கின்றன என்பது நம் இன்றைய வாழ்வியலில் இன்னொரு அவலம்.

பேரறிஞர் வ.சுப.மா. அவர்கள் தமிழ்ப்புலமை வாய்ந்தவர் என்பதையெல்லாம் தாண்டி மிக நேர்மையான, செம்மையான வாழ்க்கை முறையைக் கொண்டவர். அப்படி வாழ்தல் மிகக் கடினமாகும்.

இந்த சமூகத்தில் நான் என்ன கருதுகிறேன் என்றால், பெரிய நேர்மையாளனாக மட்டும் வாழ்வதல்ல. ஒரு சாதாரண மனிதனாக வாழ்வதே பெரிதினும் பெரிதாக அரிதினும் அரிதாக இருக்கிறது. சாதாரண மனிதனாக இருக்கிறான் ஒருவன் என்பதே போற்றுதலுக்குரியதாக இருக்கிறது. அதனால் வ.சுப.மா.வின் வாழ்க்கையை அடுத்தடுத்த தலைமுறைகளுக்கு எடுத்துச் செல்லவேண்டிய கட்டாயத்தில் நாம் இருக்கிறோம்.

மூதறிஞர் வ.சுப.மா. பல நூல்களை எழுதியிருக்கிறார். பொதுவாக மக்களுக்குத்தான் நூல்களை எழுதுவார்கள். ஆனால் இவரோ 'தலைவர்களுக்கு' என்றே ஒரு நூல் எழுதினார். தலைவர்கள் சரியாக இருந்தால் மக்கள் சரியாக இருப்பார்கள். எனவே தலைவர்களைச் சரிப்படுத்த வேண்டிய கட்டாயம் நமக்கு இருக்கிறது என்பதை உணர்ந்து, 'தலைவர்களுக்கு' என்றே நூல் எழுதியிருக்கிறார். அதில் அவர் கேட்கிறார்: 'இது அரசியல் நூல் என்று சிலர் கருதக்கூடும். கட்சியியல் நூல் என்று சிலர் கருதக்கூடும். கேவலம் விற்பனைக்காக எழுதப்பட்ட் விலையியல் நூல் என்றும் சிலர் கருதக்கூடும்.' - அவரை அறிந்தவர்கள் அறிவார்கள். ஒருநாளும் பொருளுக்காகப் புத்தகம் எழுதியவரில்லை அவர். அப்படி எழுதுவதற்கு அவரால் இயலாது. சரியாகச் சொன்னால் அப்படிப்பட்ட ஒரு நேர்மை யாளரால் பணத்துக்குப் புத்தகம் எழுத இயலாது. - 'இந்நூல் என்னைப் பொறுத்தவரையில் ஒரு தொண்டியல் நூல்' என்றே அவர் குறிப்பிடுகிறார்.

இந்தியாவின் மொழிச்சிக்கல் பற்றிப் பேசுகிற நூல், 'தலைவர்களுக்கு' என்னும் நூல். அந்த நூல் வெளிவந்தது **1962** ஜூலை மாதம். **1965**க்கு ஒரு வரலாற்றுப் பின்புலம் உண்டு என்பதை நாம் அறிவோம்.

ஒரு மிகப்பெரிய இந்தியாதிக்க எதிர்ப்புப்போராட்டம் நடைபெற்று ஓய்ந்த நேரத்தில் அந்தப் புத்தகம் வெளிவருகிறது. ஐயா எழுதுகிறார்: 'இதை நான் மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் எழுத நினைத்திருந்தேன். எழுதவில்லை. சில மாதங்களுக்கு முன்புகூட உள்ளினேன். ஆனால், இன்றைக்கு நிலநடுக்கம்போல ஒரு மொழிப்போராட்டம் நேர்ந்திருக்கிற வேளையில் இப்போது எழுதாமல் வேறு எப்போது எழுதுவது?' என்று **1965** ஜூலையில் அவர் எழுதுகிறார். ஏறத்தாழ அரை நூற்றாண்டு காலம் கடந்து விட்டது. இன்னமும் அவர் எழுதிய அந்தச் சிக்கல்கள் அப்படியே இருக்கின்றன.

பேராசிரியர் வ.சுப.மா. அவர்களினுடைய நூலினை தமிழ் அறிஞர்கள், ஆய்வு மாணவர்கள்தான் போற்றுவார்கள் என்பது பொதுவாக இருக்கிற ஒரு எண்ணம். மறைந்து போன திரைப்பட இயக்குநர் மணிவண்ணன் அவர்கள் இந்தத் 'தலைவர்களுக்கு' என்கிற புத்தகத்தின் நூறு படிகளை வாங்கிக் கொண்டு வந்து அவரைப் பார்க்கிற வருகிறவர்களுக்கெல்லாம் கொடுத்துக்கொண்டிருந்தார். அப்போது நண்பர் நடிகர் சத்யராஜ் அவர்கள், 'என்ன இப்படித் திடீர்னு..?' என்று அவரைக் கேட்டார். அதற்கு



மணிவண்ணன் சொன்னார்: 'நானும் படித்ததில்லை. சுப.வீ. இந்தப் புத்தகத்தைப் பற்றி ரொம்பச் சொன்னார். நானும் படித்தேன். ஒவ்வொருவரும் படிக்க வேண்டிய நூல் என்று எனக்குத் தோன்றியது. எனவே நான் மட்டும் படித்தால் போதாது என்று ஒரு நூறு புத்தகங்களை வாங்கிப் படிக்கிறவர்களாகப் பார்த்துக் கொடுத்துக்கொண்டிருக்கிறேன். அந்த நம்பிக்கையில் தான் உங்களுக்கும் கொடுக்கிறேன் சத்யராஜ்!' என்று சொன்னார்.

அப்படி அந்தப் புத்தகம் படித்தால் அதில் இருக்கிற ஒரு அறிவுஇயல் அணுகுமுறை - ஒரு சிக்கலை எப்படி அணுகவேண்டும் என்று கற்றுக்கொள்வதற்கு அந்த நூல் உதவும். அந்த நூலில் மொழிச்சிக்கலை மிக விரிவாக இருபத்தைந்து கற்பனைக் கடிதங்களாக ஐயா எழுதியிருக்கிறார். அவை சின்னச் சின்னக் கடிதங்கள்தான். ஆனால் பெரிய பெரிய செய்திகள் உள்ளே புதைந்து கிடக்கின்றன. இந்த நாட்டிற்கு ஒரு மொழி போதும் என்கிறார்களே, அவர்களைப் பார்த்து ஐயா வ.சுப.மா. ஒரு கேள்வி கேட்கிறார்: 'ஒரு கைக்கு ஒரு விரல் போதுமா? ஒரு வாய்க்கு ஒரு பல் போதுமா? ஒரு கைக்கு ஒரு விரல் இருக்கலாமென்று நீங்கள் செயற்கையாக நினைக்கலாம். ஆனால் இயற்கை அப்படியில்லையே. ஒரு கை பல விரல்கள் - ஒருவாய் பல பற்கள் என்று இருப்பதைப் போல ஒரு நாடு பலமொழிகள் இருப்பது என்பதுதான் இயற்கையானது. இந்தியாவுக்கு ஏற்புடையது' என்று இன்றைய அரசியலை அவர் தெளிவாக எடுத்து வைத்துச் சொல்லுகிறபோது அதற்கு அவர் எடுத்துக்காட்டுகிற உவமை, அவர் தருகிற திருக்குறள் விளக்கம், செயற்கையை நாம் கற்று வைத்திருந்தால் கூட 'உலகத்து இயற்கை அறிந்து செயல்' எதைப் பின்பற்ற வேண்டும் என்று திருவள்ளுவர் சொல்லி வைத்திருக்கிறான்' என்று வ.சுப. அவர்கள் சொல்லுகிறார். 'எது உலகத்து இயற்கையோ அதைப் பின்பற்று.' இப்படி எல்லாவற்றுக்கும் மிக எளிமையான உவமைகளின் மூலம் விளக்கம் தருகிறார்.

'பத்துப்பேர் உண்ண அமர்கிறார்கள். அவர்களுள் ஒன்பது பேர் புலால் உண்ணிகள் என்பதால், பத்தாவது இலைக்கும் நீங்கள் புலாலைப் பரிமாறச் சொல்வது ஜனநாயகம் தானா?' என்று கேட்கிறார்.

விருப்பமில்லாதவர்களுக்குத் திணித்தால் அதற்குப்பெயர் ஜனநாயகமில்லை. பெரும்பான்மையினர்களின் கருத்துக்களைச் சிறுபான்மையினர்மீது திணிப்பதுதான் ஜனநாயகம் என்று பலர் கருதிக்கொண்டிருக்கிறோம். 'சிறுபான்மையினரின் கருத்தைப் பெரும்பான்மையினர் மதிப்பதே குடியரசு' என்பார். 'வன்முறையில் நம்பிக்கை இருப்பவர்கள், இந்திய ஒருமைப்பாட்டில் நம்பிக்கை இருப்பவர்கள், எல்லாரும் எல்லாருடைய மொழிகளையும் மதிக்கிறவர்கள் இந்த நூலைப் படியுங்கள்' என்கிறார். ஏழு தீர்வுகளை எழுதுகிறார்.

'இந்தியாவின் அட்டவணையில் ஏற்றுக்கொண்ட அனைத்துமொழிகளும் (அன்றைக்கு 14 மொழிகள்) பொதுமொழிகளாக ஆக்குங்கள். அதனால் நடைமுறைச்சிக்கல் வரும். எளிமைக்கு முன்னுரிமை தருவதைவிட, உரிமைக்கு முன்னுரிமை தரவேண்டும். அதுவரையில், ஆங்கிலத்தை நாம் புறக்கணிக்க முடியாது. கூடாது. ஆங்கிலம் உலக மொழியில்லை. உலகமதிப்பைப் பெற்றிருக்கிற மொழி. நடைமுறையில் ஆங்கிலம் உள்ளது. எட்டாம் வகுப்பு வரை தாய்மொழிக்கல்விதான் வேண்டும். ஆனால், ஆங்கிலம் பாடமாக இருக்க வேண்டும்' என்பார்.

'பல்வேறு மொழிகளைக் கற்றுக்கொள்கிற திட்டம் இருக்கிறதே, அது அறிவை வளர்க்காது. நீங்கள் நான்கு மொழிகளைக் கற்றுக்கொள்ளவேண்டும் என்றால், கல்விக்கூடங்கள் மொழிக்கூடங்களாக இருக்கும். பல்கலைக்கழகங்கள் மொழிக்கழகங்களாக இருக்குமே தவிர, அறிவை விரிவு செய்யும் தடங்களாக இருக்காது. எனவே, அறிவுதான் நமக்கு முதன்மையானது. ஒரு நாட்டின் எல்லா ஆதாரங்களுக்கும் மொழிதான் அடிவித்து. மொழியைப் போகிற போக்கில் கருவி என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். பற்றுக்கும் படிப்புக்கும், அறத்திற்கும் மறத்திற்கும் நடைக்கும் படைக்கும் தொழிலுக்கும் எழிலுக்கும் வணிகத்துக்கும் மொழிதான் மூலம்' என்கிறார்.

22 மொழிகளும் அரசு மொழிகளாக ஆக்கப்படும்போதுதான் இந்தச்சிக்கல் தீரும். இந்தி, ஆங்கிலம் என்று இரண்டாக இருக்கிற மொழிகள், 22 ஆக உயர்த்தப்படவேண்டுமே ஒழிய, இரண்டாக இருப்பது மறுபடியும் ஒன்றாகக் குறுக்கப்பட்டால், நாடு ஒன்றாக இருப்பதில் பல சிக்கல்களைச் சந்திக்க நேரும். வாய்ப்புக்கு நன்றி.

## 'இந்த மண்... சிறந்த மண் ... வசுப.மா. நடந்த மண்'

### திரு பழ.கருப்பையா

வ.சுப.கோணத்தில் தமிழ்நாட்டைப் பார்க்கின்ற இந்த வாய்ப்புக் கிடைத்ததை நினைத்துப் பெருமகிழ்ச்சி அடைகின்றேன். சுப.வீ. சொன்னார். அவரைப்போலவே, நானும் வ.சுப.மா.விடம் படிக்கவில்லை. ஆனாலும், 40 ஆண்டுகளுக்குமேலாக என்மீது தாக்கத்தை ஏற்படுத்தியவர் அவர். என் தாயாருக்குப் பிறகு, என்மீது பெருஞ் செல்வாக்குச் செலுத்தியவர் வ.சுப. மாணிக்கம் அவர்கள்தான். 'பணம்தான் முக்கியம் படிப்பு என்ன படிப்பு?' என்று எண்ணுகிற இந்தக்குலத்தில் பிறந்தவர் வ.சுப.மா.



பெருங்கவிஞர் வ.சுப.மா. அவரிடம் நெருங்கிப் பழகியிருக்கிறேன். சென்னையில் திரைப்படம் எடுத்துக்கொண்டிருந்த காலம் அது. அவர் சென்னை வருகிறபோது என் வீட்டுக்கு வருவார். சாப்பாடு எங்கள் வீட்டில். மாலை 4 மணியளவில் காபி குடித்துவிட்டு ஒரு மணிநேரத்துக்குக் குறையாமல் என்னோடு உரையாடுவார். எப்போது அவரைப் பார்த்தாலும் நான் அவரைக் கும்பிடுவேன். ஆனால், அவர் கும்பிட மாட்டார்; மேற்கொண்டு அவர் கேட்பார்:

'வர்றபோதெல்லாம் எதற்குக் கும்பிடுகிறாய்?'




'என்னய்யா, நீங்க ரொம்பப் பெரிய ஆளு. கும்பிடணுமால்லியா? நம்ம வாழ்க்கைக்கு உறுதுணையாக இருக்கிற கடவுளைக் கும்பிடுகிறோம். தமிழுக்கு உறுதுணையாக இருக்கிற உங்களையும் கும்பிடணும்ல. கையிருக்கிறது கடவுளைக் கும்பிடறதுக்கு, உங்களைக் கும்பிடறதுக்கு. பெண்களை அணைக்கிறதுக்கு...' என்று சொல்வேன்.

'ஓ. பன்மையில சொல்கிறாய். பலரோ?' என்று வேடிக்கையாகப் பேசுவார்.

நான் தேர்தலில் சட்டமன்றத்தேர்தலில் நின்றபோது வ.சுப. அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் டீனாக இருந்தார். அப்போது எனக்கு அஞ்சலட்டை எழுதியிருந்தார்: 'கருப்பையா உனக்கு வாக்களிப்பதற்காக நான் காரைக்குடிக்கு வருகிறேன். காலையில் வந்து வாக்களித்துவிட்டு மாலையில் திரும்பிவிடுவேன். என்னைச் சந்திக்க முயலவேண்டாம். உன்னுடைய வேலைகளை நீ பார். நீ வெற்றிபெற வாழ்த்துகிறேன்' என்று எழுதியிருந்தார்.

அந்தத் தேர்தலில் நான் தோற்றுப்போனேன். அதன்பிறகு நான் வ.சுப. வீட்டுக்குப்போனேன். அவர் ஒரே வார்த்தைதான் சொன்னார்: 'தோல்வி மனதை உறுத்த வேண்டிய ஒன்றல்ல. தோல்வி நல்லது. தோல்விதான் நம்மைப் பக்குவப்படுத்தும்; தோல்விதான் நம்மை மேல்நிலைக்கு உயர்த்தும்' என்று நாலு வரியில் அந்தச் செய்தியைச்சொல்லி முடித்துவிட்டார்.

உடனே, நான் அவரிடம் சொன்னேன்: "ஐயா, இத்தனை ஆயிரம் பேர் வாக்களித்ததைக் காட்டிலும் நீங்க ஒரு ஆளு வாக்களிச்சிங்களே, அதனோட கனம் கூட!" என்று சொன்னேன். (கூட்டத்தைப் பார்த்து) பாருங்க, நீங்களே கைதட்டுகிறீர்கள். மகிழ்கிறீர்கள். ஆனால், அவர் சிலை மாதிரி இருந்தார். ஒரு உணர்ச்சியும் இல்லை. பேசாமல் இருந்தார். அவருக்கு முகமன் கூறினால் பிடிக்காது. அவரை எதிரில் வைத்துக்கொண்டு பெருமையாகச் சொன்னால் அவர் ரசிக்க மாட்டார். "என் வாக்கு கனம் என்றால் நீ வெற்றிபெற்றிருப்பாய் அல்லவா? இதெல்லாம் என்ன பேச்சுன்னு கருப்பையா நீ பேசுகிறாய். மற்றவர்கள் பேசட்டும். விடு" என்றார்.

புகழ்வதையும் விரும்பமாட்டார்; மற்றவர்களையும் புகழ மாட்டார்.

தமிழ் ஈடுபாடு காரணமாக எனக்கு **25** வயதில் அவர் மீது ஈடுபாடு ஏற்பட்டது. அவர் தமிழைப்போற்றுகிறவன் என்பதனால் என்மீது அவருக்கும் அன்பு ஏற்பட்டது. மிகுந்த அன்போடு இருப்பார். நான் அவரைக் கேலி பண்ணினால்கூட அவர் சிரித்துக்கொள்வார். ரொம்ப அபூர்வமான மனிதர்.

நான் பரிமேலழகர் உரையை மட்டும்தான் வாய்விட்டுப்படிப்பேன். அவ்வளவு சிறந்த உரைநடையை நான் படித்ததில்லை. திருக்குறளுக்குப் பரிமேலழகனுடைய உரை கிடைத்திருக்காவிட்டால், திருக்குறளே நமக்குப் பாதி விளங்காமல் போயிருக்கும் என்று நான் நம்புவது வழக்கம்.

அப்படிச் சிறந்த உரை அது. அதை வாய்விட்டுப்படிப்பேன். என்னுடைய மனைவி கேட்பாள்: 'என்ன பள்ளிக்கூடத்துப் பையனாட்டம் படிச்சிட்டிருக்கீக?'ன்னு. மனம்

மட்டுமே அந்தச் சுகத்தை அடையாமல் காதும் அந்தச் சுகத்தை அடையட்டும் என்று வாய்விட்டுப் படிப்பேன். அதுமாதிரியாக நான் படித்தது வ.சுப.மா.வின் உரைநடையை மட்டும்தான். இந்த உரைநடையை இடத்தில் வைத்து, அந்த உரைநடையை வலத்தில் வைக்கவேண்டும். அவ்வளவு சிறந்த உரைநடை; செறிவு. எப்படி, பரிமேலழகரில் ஒரு சொல்கூடத் தேவையில்லாமல் இருக்காதோ, அது மாதிரி வ.சுப.மா.வின் நடையில் இருக்காது.

வ.சுப.மா.வுக்கு இவ்வளவு பெரிய புகழ் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் அவர் தமிழியக்கத்திற்குத் தலைவர். வ.சுப.மாணிக்கத்துடைய பெயர் - மனோன்மணியம் சுந்தரனார் பெயரைப்போல, மறைமலையடிகளுடைய பெயரைப்போல, தேவநேயப்பாவாணருடைய பெயரைப்போல, வ.சுப.மா.வின் பெயரும் தமிழ் உள்ளளவும் நிலைக்கும். அவ்வளவு ஆற்றலான அறிஞர்; அவ்வளவு உணர்வுமிக்கவர்.

மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை எழுதிய, 'நீராரும் கடலுடுத்த' என்ற பாட்டையும் அடுத்த பாட்டையும் தவிர, மற்றது எதையும் எழுதாமல் போயிருந்தாலும்கூட, வரலாற்றில் பூங்குன்றனுக்கு இருந்த இடம் நம்முடைய சுந்தரம்பிள்ளைக்கு இருந்திருக்கும்.

அவருக்குப் பின்னால் வந்த மறைமலையடிகள் மகத்தான பிறப்பு. மறைமலையடிகள் என்கிற மனிதன் பிறந்திருக்காவிட்டால் தமிழியக்கம் பிறந்திருக்காது. மறைமலையடிகளுக்குப் பிறகு வந்த தேவநேயப்பாவாணர் அதைத் தூக்கிநிறுத்தினார். அதற்குப்பிறகு வந்த வ.சுப. மாணிக்கம் அதற்குக் கட்டடம் கட்டினார்.

உ.வே.சா. போன்ற பலர் தொண்டுசெய்தார்கள். ஆனால், நமக்கு ஒரு இயக்கத்தை, நம்முடைய அடையாளத்தை, நம்முடைய இனத்தின் உணர்வை நமக்கு ஊட்டியவர்கள் யாரோ அவர்கள்தான் காலத்தால் நிற்கின்றவர்கள். இந்தக் காலக்கட்டத்திற்குத் தொண்டாற்றியவர்கள். ஆகவே, சொல்கிறேன்.

முதலிலே தமிழியக்கம் வள்ளலாரிடம்தான் ஆரம்பமாகிறது. அவர் பிறக்கிறபோதே, தாய் பட்டபாடுகளிலிருந்து விடுவித்த கடவுளுக்கு வந்தனம் சொல்லுகிறார். அப்படிச் சொல்லிக்கொண்டுவந்து சமஸ்கிருதத்திற்கு வருவார் அவர். "ஆரியம் போன்ற கடின மொழிகளில் என் மனத்தைப் பற்றவொட்டாது தடுத்துத் தமிழ்போன்ற இனிய எளிய மொழியில் என் மனதைப் பற்றவைத்த தேவரீர் பெருங்கருணைக்கு வந்தனம் வந்தனம்!" என்று சொல்லுவார். அவர்தான் தமிழ்இயக்கத்திற்கு முதல் தலைவர். கடைசித்தலைவர் நம்முடைய வ.சுப.மா.

ஒலிக்கற்பு என்று அவர் (வ.சுப.மா.) சொல்லுவார்; பெண் கற்புப்போல. 'விஷம் என்று சொல்லாதே. அதில் மொழி மாசுபட்டுவிடுகிறது. நஞ்சு என்று சொல். முடியாவிட்டால் விடம் என்று சொல்.' 'செய்தி என்று சொல். முடியாவிட்டால் விடயம் என்று சொல்.'

வ.சுப.மா.வினுடைய புத்தகம் எந்தவொன்றிலும் ஷ,ஸ எழுத்துக்கள் இருக்கவே இருக்காது. அதை 'ஒலிக்கற்பு' என்ற பெயராலே அவர் சொன்னார். எனக்குத் தெளிவாக இந்த ஒலி குறித்த கருத்து ஏற்படுவதற்கு வ.சுப.மாணிக்கம் காரணமாக இருந்தார்.



பெரியாருடைய எழுத்துச்சீர்திருத்தத்தால், இரண்டு உயிர் எழுத்துக்கள் (ஐ.ஔ) வழக்கொழிந்துபோகும் என்று அவர் வருத்தப்பட்டார். 'கருவிகளைத்தான் நமக்கு ஏற்ப அமைத்துக் கொள்ளவேண்டுமே ஒழிய, செருப்பைத்தான் காலுக்கேற்றாற்போல அமைத்துக் கொள்ளவேண்டுமே ஒழிய, செருப்புக்கேற்றாற்போல, நமது காலைச் சுருக்கிக்கொள்ளவோ, பெருக்கிக்கொள்ளவோ கூடாது. நவீன கருவிகளைக் காலத்தால் மாற்றிக் கொள்ளலாம். ஆனால், மொழி என்பதை அவ்வாறு மாற்றிக்கொள்ளக்கூடாது' என்று சொன்னார்.

அவர் அவருடைய வீட்டைப்பற்றிச் சிந்தித்ததைவிட, தமிழ்மொழியைப் பற்றித்தான் அதிகமாகச் சிந்தித்தார். கடைசியாக, 'குமரிக்கண்டத்திலே தமிழன் பிறந்தான். இந்த நாடு குமரி நாடு' என்பதை நிறுவ அவர் முயன்றார். அது ஒரு பெரிய செய்தி. நாட்டினுடைய போக்கை மாற்றிய செய்தி. அவர் பேசுகிறபோது சொல்கிறார்: 'இந்தத் தமிழன் தென்தமிழகத்திலேதான் பிறந்தான்.' பஃறுளியாறு என்று சொன்ன இளங்கோவடிகளின் கருத்தை எடுத்துக்கொள்கிறார். தேவநேயப்பாவாணர், மாந்தன் பிறந்த இடம் எதுவென்று குறிக்க மாநாடு நடத்துகிறார். அதற்கு வ.சுப.மாணிக்கம் போகிறார்.

அங்கே சொல்கிறார்: 'இந்த நாட்டில் குமரி மலை என்று இமயமலைக்கு நிகரான மலை ஒன்று இருந்தது. பஃறுளி யாறு இருந்தது. அந்த மலை கடல் கொண்டுவிட்டது. பூம்புகாரில் **25** கி.மீ. எப்படி முழுகிப்போய்விட்டதோ, அதுபோல, குமரிக்கண்டத்திலே தமிழர்களோடு சேர்ந்து அந்த மலை முழுகிவிட்டது. அதற்குப்பிறகு இமயம் எழுந்தது. கங்கை எழுந்தது. ஆகவே, பாண்டியன் முழுகிப்போன மலைக்கும், இல்லாமல் போன ஆற்றுக்கும் இணையாக இமயமலையையும் கங்கையையும் கொண்டு, வென்று தன்னுடைய நாட்டோடு இணைத்துக்கொண்டு, தன்னுடைய இழப்பை ஈடுசெய்ய முயல்கிறான்' என்று இளங்கோவடிகள் பேசுகிறார். அதை வ.சுப.மாணிக்கம் அடிப்படையாக எடுத்துக்கொண்டுபேசுகிறார்; 'பஃறுளியாற்றுப் பன்மலையடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள' என்ற பாடலை.

'தென்புலத்தார்' என்று திருவள்ளுவர் சொல்லுக்கு, 'மூதாதையர்' என்று வ.சுப. மாணிக்கம் சொல்வார். 'அவர்கள் குமரிக்கோட்டில் அழிந்துபோன நம்முடைய மூதாதையர்' என்று சொல்லுவார். 'வள்ளுவன் விசுவாசமாக தன்னுடைய பணத்தில் ஒரு பகுதியை அவர்கள் நினைவுக்குச் செலவு செய்யவேண்டுமென்று சொல்லுகிறான் 'என்று சொல்லுவார்.

எவ்வளவு உணர்வு; எவ்வளவு அறிவு; எவ்வளவு நேர்மை; எதில் அவர் குறைவு?

'ஐயா, தமிழ் வெறியர்கள் என்று நம்மைச் சொல்கிறார்களே?' என்று வ.சுப.மாவிடம் கேட்டேன். 'அவர்கள் கிடக்கிறார்கள் அப்பா, நம்முடைய துறவி இளங்கோவடிகள், அவரே வந்து நம்முடைய மக்களையெல்லாம் மூழ்கடித்த கடல் மூழ்கடித்தது என்று சாதாரணமாகச் சொல்லாமல், 'கொடுங்கடல் கொண்டது' என்று வாயார வைகிறார், அதை. நம்முடைய முன்னோர்களை இந்தக் கடல் விழுங்கிவிட்டதே என்பதைத் தாங்கமுடியாத இளங்கோவடிகள், 'கொடுங்கடல் கொள்ள' என்று வைகிறார் என்றால், அந்த இனப்பற்று,

மொழிப்பற்று இயற்கையானதல்லவா?' என்று அவர் என்னிடம் சொன்னார்.

20 வருடங்களாகத் தமிழ்இயக்கத்தோடுதான் வாழ்கிறேன். இதிலே பெரிய பங்களிப்பு அவருடைய உறவு, அவருடைய நட்பு என்று சொல்லி-

மொழி என்பது வெறும் மொழியல்ல. மொழியென்பது வெறும் ஒலியல்ல. மொழி என்பது இனத்தினுடைய அடையாளம். ஆகவே, மொழிக்கு ஊறுநேருமானால், அது இனத்துக்கு நேருகிற ஊறு. ஆகவே, வ.சுப.மா. சொன்ன ஒலிக்கற்பு, நிகரற்ற மிகப்பெரிய இலக்கணம். மிகப்பெரிய கொள்கை என்று சொல்லி-

அந்த மகத்தான மனிதருடைய உறவு எனக்கு மிகப்பெரிய உறுதுணையாக இருந்தது. இப்படிப் பலபேரை அவரது குடும்பத்திற்கு அப்பாற்பட்டு உருவாக்கி அவர்களைச் செம்மைப்படுத்திய பெருமைக்குரியவர் வ.சுப. மாணிக்கம். அவருடைய விழாவை இந்தநேரத்தில் கொண்டாடுவது பொருத்தமுடையது. மேலைச்சிவபுரி மண்ணுக்கே மிகப்பெரிய மதிப்பு வ.சுப.மாணிக்கம். அவரது எழுத்து 500ஆண்டுகளுக்கு நிற்கும். காலப்போக்கில் மாறுதல் ஏற்பட்டாலும் அதைக் கடந்து நிற்கும். அப்படிப்பட்ட நிலையில் அவர் பிறந்த ஊர் மேலைச்சிவபுரி என்று போற்றப்படும். அவர் கொண்டாடிய கொள்கைகள் எல்லாம் மிகப்பெரிய அளவுக்கு எடுத்துச் செல்லப்படும். ஒரு மகத்தான மனிதனை, பெரிய மனிதனை இந்த ஊர் பெற்றதன்மூலம் இந்த ஊர் பெற்றிருக்கின்ற பெருமை மகத்தானது என்று சொல்லி-

எல்லா மண்ணையும் போல இதுவும் சிறந்த மண் என்றாலும், வசுப.மாணிக்கம் போன்றவர்கள் நடந்த மண் என்பது மிகப்பெரிய வரலாற்றுப் பெருமைக்குரியது என்று சொல்லி - இந்த நல்லவாய்ப்பை எனக்குத் தந்தமைக்காக, என்னுடைய நெஞ்சார்ந்த நன்றியைச் சொல்லி உங்களிடமிருந்து விடைபெறுகின்றேன்.

## 'புதிய சிந்தனையைத் தூண்டிவிட்ட பேராசிரியப் பெருமகனார்'

## திரு தா.பாண்டியன்

என் சொந்தவாழ்க்கையில் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியவர் (என் பெயர் உட்பட) பேராசிரியப்பெருமகனார் வ.சுப.மாணிக்கனார் அவர்கள்தான். காரைக்குடி கல்லூரியிலே படிக்கிற, கொஞ்சக்காலம் பணியாற்றுகிற இரண்டு வாய்ப்புகளைப் பெற்றபோதுதான், பேராசிரியர் அவர்களைப் பார்க்கக்கூடிய, அவரிடம் பயிலக்கூடிய, பழகக்கூடிய அனைத்து வாய்ப்புக்களையும் பெற்றேன்.

நான் உயர்நிலைப்பள்ளியில் படிக்கிற காலத்திலிருந்தே பொதுவுடைமை இயக்கத்திலே பற்றுக்கொண்டவனாக வளர்ந்துவந்தேன். எனவே, கல்லூரியிலும் அதேபோலத்தான் இருந்தேன். தமிழ்ப்பேராசிரியராக, தலைமைப் பேராசிரியராக இருந்த ஆ.முத்துசிவன் இடையில் மாரடைப்பால் காலமான காரணத்தால், அவருக்கு அடுத்து இருந்த வ.சுப. மா. பேராசிரியராக ஆனார்கள். அப்போது நான் அந்தக்கல்லூரி மாணவர் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவனாக இருந்தேன்.

பேராசிரியருக்கு நான் பொதுவுடைமைக் கட்சிக்காரன் என்பது தெரியும். எனவேதான் அவர் என்னைப் பார்த்துக்கொண்டே சொல்லுவார்: "மார்க்ஸ் தமிழ்நாட்டில் தமிழனாகப் பிறந்திருந்தால், பொதுவுடைமைக்கருத்தை எந்தமொழியில் எழுதியிருப்பார்? பொதுவுடைமைவாதிகள் மார்க்சியத்தைப் புரிந்துகொண்டதாகக் கூறுகிறீர்கள். ஆனால் நீங்கள் எழுதுகிற தமிழ், தமிழனுக்குப் புரிகிற தமிழாக இருக்க வேண்டுமா? வேண்டாமா? எனவே, தமிழை நீங்கள் கற்றுக்கொண்டு தமிழனுக்குச் சொல்லாமல், முழுக்க முழுக்க ஆங்கிலத்திலே சிந்தித்துத் தமிழிலே பேசுகிறீர்கள். மேற்கோள் காட்டுவது முழுவதுமே ஐரோப்பிலே நடந்த வரலாறுகளைச் சுட்டிக்காட்டுகிறீர்கள். முழுக்க முழுக்க மக்கள் உங்களைப் புரிந்துகொள்வதற்காகவே, மக்கள் வேறுசில பாடங்களையும் மொழிகளையும் படிக்க வேண்டும்."

என்னைத் தனியாக அழைத்துச் சொன்னார்: "நான் இந்தக் கருத்தைப் பகிரங்கமாகச் சொல்ல விரும்பவில்லை. ஆனால் தெளிவாக விளங்கிக்கொள்ளுங்கள். 'மார்க்சியம் மட்டுமே வெளிநாட்டுச் சிந்தனையாக அங்கிருந்து வந்ததாகச் சிலர் சொல்லுகிறார்கள்.' இது காலங்காலமாக நம்முன்னோர்கள் விதைத்த விதைதான். அது ஒரு முழு வடிவம் கொடுக்கப்படாமல் இருந்தது. சிந்தனை உலகத்தில், இலக்கிய உலகத்தில் இருந்துவிட்டது. இதே தமிழகத்துக்கு இஸ்லாம் வந்தது, அதுவும் வெளிநாட்டுக்கருத்துத்தான். ஆன்மிகத்துறையில். கிறித்தவமும் வந்தது. வந்தவர்கள் அயல்நாட்டு மொழியில், அதன் தூதுவர்களாக வந்தார்கள். வந்தவர் தமிழைக் கற்று, இலக்கணம் பயின்று, விவிலிய நூலை உடனடியாகத் தமிழில் எழுதி அச்சிட்டு வெளியிட்டதோடு, தமிழிலேயே இலக்கியத்தையும் எழுதிவிட்டார். தம் பெயரையும் மாற்றிக்கொண்டார். பெஸ்கி முனிவர் வீரமாமுனிவராக மாறினார். தேம்பாவணி பாடினார். உங்களது இயக்கம் தொடங்கப்பட்டு எத்தனை ஆண்டுகள் ஆகின்றன? இன்னும் தமிழில் தமிழன் பாராட்டக்கூடிய வகையில், உங்களால் ஏன் சொல்ல முடியவில்லை?" என்று கேட்டார். ஒருமுறை கரும்பலகையிலே எழுதினார். 'தமிழ்நாட்டில் தமிழ் ஏட்டில் வந்த வரிகள். இதைத் தமிழில் எழுதுக' என்று எழுதினார்.



எல்லா மாணவர்களும் என்னைப் பார்த்துச் சிரித்தார்கள். ஏனென்றால், அது ஜனசக்தியில் வந்த இரண்டு வரிகள். அந்த இரண்டு வரிகளிலும் எத்தனை ஷ, ஜ உண்டோ வடமொழியில் உண்டோ, எல்லாம் இருந்தது தமிழைத்தவிர. எனவே, இதனைத் தமிழாக்கு என்று என்னைப் பார்த்துவிட்டுச் சிரித்தார். சிரித்ததோடு மட்டுமல்ல, வகுப்பு முடிந்தவுடன் சொன்னார்: "ஜீவா அதன் ஆசிரியர் என்கிறார்கள். ஜீவா அவர்களுக்குத் தமிழ்

இலக்கியத்திலே பற்று உண்டு. பயிற்சி உண்டு. இதையெல்லாம் எழுதக்கூடாது. தமிழில் எழுதி, தமிழில் பத்திரிகை நடத்தச்சொல்லுங்கள்'' என்றார். நான் இந்தப் பின்னணியைச் சொல்வதற்குக் காரணம், ஆங்கிலத்துறையிலே பணியாற்றினேன். நான் பயின்ற பாடம் பொருளாதாரம். பணியாற்றியது ஆங்கிலத்தில். ஆனால், பற்றுக்கொண்டது தமிழில் என்றால் அதற்குப் பேராசிரியர் வ.சுப.மாணிக்கனார் மட்டும் தான் காரணம். அதே முறையில்தான் என் பெயரையும் அவரேதான் மாற்றினார்.

ஆங்கிலத்திலே என்னுடைய தந்தையின் பெயர்ப்பிரகாரம், 'டி.பாண்டியன்' என்று போட்டுக்கொண்டிருந்தேன். என்னை ஒரு முறை அழைத்துச்சொன்னார்: 'அது என்ன டி?' 'என் அப்பா பெயர் டேவிட் அதனால் டி போட்டுக்கொள்கிறேன்' என்றேன். 'டேவிட் என்றால் டி வராதே. உன் பெயருக்கு முன்னால் 'டே' போடவேண்டும். ஆக, நீ அந்த முறையிலே எழுதி 'டே. பாண்டியன்' என்று போட்டுவிட்டால், எல்லோரும் உன்னைப் பார்த்து 'டே, பாண்டியன்' என்றுதான் கூப்பிடுவார்கள். நீ கிறித்துவமதத்திலே பிறந்தவனா?' 'ஆம். அந்தக் குடும்பத்திலே பிறந்தவன்தான்.' 'விவிலியம் படித்திருக்கிறாயா?' 'ஆமாம். பெற்றோர்கள் வற்புறுத்தியதால் படித்திருக்கிறேன்.' 'அதிலே டேவிட் என்பதை எப்படி மொழிபெயர்த்திருக்கிறார்கள்?' என்றார். 'தாவீது என்று போட்டிருக்கிறார்கள்.' 'பிறகு ஏன் உன் தந்தை பெயரை வைத்து, டே போட்டுக்கொண்டிருக்கிறாய்? தா. என்று போட வேண்டாமா?' என்றார். அன்றுமுதல் 'தா.பா.' ஆனவன்தான் இந்த, தா.பாண்டியன்! என் பெயரைப்போலவே, பலருக்கும் அவர் மாற்றியிருக்கிறார். இது ஏதோ ஒரு பெயர் மாற்றம் மட்டுமல்ல, சிந்தனை மாற்றத்தை உருவாக்கி யிருக்கிறார்.

இங்கே எனக்கு முன்னே பேசியவர்கள், 'ஊருணி நிறைந்தற்றே உலகவாம் பேரறிவாளன் திரு' என்பதற்கு இங்கே உள்ள ஊருணியையும், தங்களுடைய கிணற்றிலே தண்ணீர் இல்லாததையும் சுட்டிக்காட்டி, நல்லவேளை இப்பொழுது மழை பெய்கிறது' என்றார்கள். பொருளாதாரத்துறையிலே, பயின்று பணியாற்றுகிற எங்களுக்கு, இதற்கான ஒரு புது விளக்கத்தை, ஒரு கூட்டத்திலே பேசியபிறகு, எடுத்துச்சொன்னார் பேராசிரியப் பெருமகனார்.

"'ஊருணி நிறைந்தற்றே உலகவாம் பேரறிவாளன் திரு' - இதில் செல்வத்தை நீரோடு ஒப்பிடுகிறார். ஊரின் நடுவில் மையத்தில் வந்ததாகச் சொல்கிறார். பொதுவாகச் செல்வம் என்றவுடனே, தங்கம், வெள்ளி போன்ற விலை உயர்ந்த மதிப்புள்ள பொருளைத்தான் செல்வம் என்று சொல்வார்கள். எனவே, அந்தச் செல்வங்களைக் குறிப்பதற்குப் பதிலாக, தண்ணீரைக் குறிப்பிடுவது ஏன்? இன்றைக்கும் தண்ணீர் என்பது கொடுத்து வாங்கக்கூடிய மதிப்புள்ளதல்ல. எனவே, இந்த உவமையைச் சொல்வதற்குரிய காரணம் என்னவென்றால், தண்ணீர் ஒன்றைமட்டும்தான், எடுத்துக்கொள்கிறவன் தன் தேவைக்குள்ளதை மட்டும் எடுப்பான். ஊர் நடுவிலே இருக்கிறது என்பதால் குடிக்கப்போகிறவன், உட்கார்ந்து அதைக் குடித்துக் கொண்டே இருக்க மாட்டான்; இலவசமாகக் கிடைக்கிறது என்பதால். தாகம் தணிந்தது என்றால் போதும் என்று சொல்லுவான். அந்தத் தண்ணீருக்குப் பதிலாக



அங்கே தங்கம் இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அவனவன் தேவைக்கு எடுத்துக்கொள்ளுங்கள் என்று சொன்னால், ஒற்றைக் கையளவுக்குச் சுமக்கிற அளவுக்கு எடுத்துக்கொண்டுபோவோம் என்று போவானா? அனேகமாக, அதைத் தோண்டி எடுத்துக்கொண்டு அடுத்தவன் வராமல் பார்த்து அவன் அள்ளிக்கொள்ளத்தான் பார்ப்பான். அது எந்தப்பொருளாக இருந்தாலும் தனக்குப்போதும் என்று சொல்லமாட்டான். இந்த உணவையும் தண்ணீரையும் மட்டும்தான் மனிதன் போதும் என்று சொல்லுவான். இந்தச் செல்வம் என்பதையே வைத்திருக்கிற மனிதன் அதை எவ்வாறு கருத வேண்டும்? அது பொதுவாக இயற்கை கொடுத்த வரம். அது கொட்டி நிரப்பியது குளம். எனவே குடிக்கிற தண்ணீர் என்பது பறவைக்கும் கிடைக்கலாம்; கால் நடைக்கும் கிடைக்கலாம்; மனிதனுக்கும் கிடைக்கலாம். எவர்க்கும் தடையில்லை. எவனும் அள்ளிக்கொண்டுபோகமாட்டான். எனவே இருதரப்புக்கும் ஒரு கருத்து இருக்கவேண்டும். தன் தேவைக்குமேல் எடுக்க வேண்டாம் என்பது கையேந்தி வாங்குபவனுக்கும் இருக்கவேண்டும்; அதைப்பாதுகாத்துக் கொடுக்கிற மனிதனுக்கும் இருக்க வேண்டும். அவ்வாறு இருக்கிற பேரறிவாளனின் கையிலுள்ள சொத்து, மனிதகுலத்திற்குப் பொது என்ற உயரிய கருத்தை, வள்ளுவப்பெருந்தகை கூறியிருப்பதை, மார்க்சும் கூறியிருக்கிறாரா என்று நீங்கள் அதை எடுத்துப் படியுங்கள். எடுத்துக்காட்டுங்கள்" என்று கேட்டார்.

முழுக்க முழுக்கப் புரட்டிப்பார்த்தாலும் அந்தக் கருத்துக்கள் இல்லை. இந்த ஒப்புவமை வேறு ஏதாவது கதைகளிலே வருகிறதா என்று பார்த்தாலும் கண்டுபிடிக்க இயலவில்லை. இதற்கு முதல் விளக்கம் எனக்குக் கிடைத்தது என்பது பேராசிரியர் அவர்களிடமிருந்துதான்.

இந்தத்திருக்குறளிலிருந்து பொதுவுடைமைக்கே ஒரு புதுப்பொருள் காண்பதற்கு, எனக்கு உதவிற்று. அது வள்ளுவத்தில் இருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ள உதவிற்று. எனவே தமிழ் இலக்கியத்திலும் அந்தக்கருத்து இருக்கிறது என்று சொல்லுவதை, எனக்கு முன்னர்ப் பேசிய பழ.கருப்பையா அவர்களும், சுப.வீ. அவர்களும் திரும்பத்திரும்பச் சொன்னார்கள். தமிழனுடைய தனித்தன்மை, இந்தியநாடு ஒரு நாடு என்று இருந்தாலும் அதற்கு ஏற்பட்டுள்ள மொழிச்சிக்கல் இவை காரணமாக இந்த நாட்டினுடைய பாதுகாப்புக்கும் வருங்கால வளர்ச்சிக்குமே விடப்பட்டு வரக்கூடிய சவால்கள் இவையனைத்தையும் குறிப்பிட்டார்கள். நான் அனைத்தையும் திருப்பிச் சொல்லவில்லை.

சுருக்கமாகச் சொன்னால், 'தமிழா, உனக்கு என்ன வயது?' என்று கேட்டால், அவரவர் வயது தேதியைக் குறிப்பிட்டு, 45,55,70.80 என்றல்ல, உண்மையாகவே நம்முடைய தமிழனின் வயது 15,000 ஆண்டுகள். இந்த 15,000 ஆண்டுகளில் நம்மோடு இருந்து வாழ்ந்து மறைந்த அந்த அறிஞர்கள் விட்டுச்சென்ற செல்வங்களெல்லாம் வரிசை வரிசையாகப் பதிந்திருக்கிறது. அந்த எண்ணங்களைப் புதைந்துபோகவிடாமல் எடுத்து, உலகுக்கு எடுத்துச் சொல்லவேண்டிய பெரிய கடமை, சிந்தனையாளர்கள் அனைவருக்கும் வந்திருக்கிறது. அதற்கு முதலில் தாய்மொழியின் உரிமை பாதுகாக்கப்படவேண்டும். அந்த உணர்வு ஊட்டப்படவேண்டும். இவற்றை ஊட்டிய பெருமை பேராசிரியப்பெருமகனார் செம்மல் வ.சுப.மாணிக்கனாரையே முழுக்க முழுக்கச் சாரும்.

‘தினந்தோறும் 100 பக்கங்களையாவது படிக்க வேண்டும். பத்துப்பக்கங்களாவது எழுத வேண்டும்’ என்று திட்டம் வைத்திருந்தார். அவர் வழக்கமாக அதைச் செய்தார். (கணக்கப்பிள்ளை மேசையை வைத்து நேரே - வளைந்து எழுத மாட்டார். - நிமிர்ந்தபடியே அவர் எழுதுவதைப் பார்க்கலாம். நாங்கள் நின்று ஒரு ஐந்து நிமிடம் வேடிக்கை பார்ப்போம்.) ஆனால், எதையுமே, மேலோட்டமாக, போகிறபோக்கில், பொழுதுபோக்கிற்காகச் செய்ய மாட்டார். ஆடம்பரமாக எதையும் செய்து தனக்கெனப் பெயர் தேடவேண்டுமென்று எதையும் பேசமாட்டார். அமைதியாகத்தான் பேசுவார்.

இப்போது நீண்டகாலத்திற்குப் பிறகு திரும்பிப்பார்க்கிறபொழுது, அவர் கற்பித்தது மட்டுமல்ல, அவரது வாழ்க்கையே நமக்கொரு பாடம் என்பது தெளிவாகத் தெரிகிறது. அவர் வாழ்ந்து காட்டிய ஒழுக்கநெறி முறைகள், கட்டுக்கோப்போடு தன் வாழ்க்கையில் செலவழித்த முறைகள்.... ஒரு பேராசிரியன் என்று சொன்னால், அதனுடைய பதிப்பு-புத்தகத்தில் மட்டுமல்ல, அது ஒரு புதிய மனிதனைப் படைப்பதாகவும் இருக்கவேண்டும். அது எத்தனை பேரைப் படைத்ததோ எனக்குத் தெரியாது. என்னைப் பல வழிகளில் புதிய முறையில் சிந்திக்க வைத்த மாபெரும் பேராசான், வ.சுப.மாணிக்கனார் அவர்கள்தான். எனவேதான், தனிப்பட்ட முறையில் நன்றி கூறுகிறேன்.

பல பேராசிரியர்கள் இருந்தார்கள்; பலவற்றையும் கற்றுக்கொடுத்தார்கள். ஆனால், மனதுக்குள் பதிந்து ஒரு புதிய சிந்தனையைத் தூண்டிவிட்ட பேராசிரியப் பெருமகனார் என்று யாருடைய பெயரையாவது சொல்லச்சொன்னால், செம்மல், தமிழ்ப்பேராசிரியர் வ.சுப.மாணிக்கனார் மட்டும்தான் என்று கொஞ்சம் கூடப் பயப்படாமல் சொல்லுவேன்; தயக்கமில்லாமல் சொல்லுவேன்.

இந்தியா என்பது செயற்கையாக உருவாக்கப்பட்ட ஒரு ஒற்றுமையாக அல்லாமல் இயற்கையாக மாறவேண்டும் என்றுசொன்னால், அனைத்துமக்களும் பேசக்கூடிய தாய் மொழியை, அவை எத்தனை மொழிகளாக இருந்தாலும், அவை அனைத்தும் அவரவர் பகுதிக்குள்ள ஆட்சிமொழியாக, தேசிய மொழிகளாக, அங்கீகரிக்கப்பட்டால் அன்றி, இந்த நாடு ஒன்றுபட்டிருக்கும் என்பது இயலாது. துப்பாக்கிமுனையில் எந்தவொரு நாட்டையும் எந்தவொரு மொழியையும் கருத்தையும் அழிக்க முடியாது. கருத்துக்களோடு போராட விரும்புகிறவன் கருத்தோடுதான் மோத வேண்டும். எனவே, இந்த மொழி உரிமையையும் அதில் பொதிந்திருக்கக் கூடிய கலாச்சார உண்மைகளையும் மதிக்க முடியவில்லை என்றால், பிறகு மனிதர்கள் தங்களது உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்வதற்காக, இயற்கை கொடுத்திருக்கிற - ஒரே ஒருமுறை தான் வாழ்க்கை. அந்த ஒருமுறையிலும் - உரிமையை இழந்துவிட்டுச் செத்த பிணங்களாக வாழ முடியாது. எனவே, ஆள்பவனுக்கும் இருப்பது ஒரு உயிர், எனக்கும் இருப்பது ஒரு உயிர் பார்த்துக்கொள்ளலாம் என்ற முடிவுக்குத்தான் வருவார்கள். அவ்வாறுதான் இந்த உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்ளவேண்டி வரும்.

இந்த உணர்வுகளையெல்லாம் நன்னெறியோடு அறவழியிலே கற்பித்த பேராசிரியர் பெருமகனாருக்குச் சிலை எடுத்து, விழா எடுத்துச்சிறப்பித்த இந்த ஊர்ப்பெருமக்களுக்கும், அவர் பெற்றெடுத்த பிள்ளைகளுக்கும், மனமார்ந்த நன்றியைத் தெரிவித்து உங்களுக்கும் நன்றியைக் கூறி, விடைபெறுகிறேன். வணக்கம்.

## நூற்றாண்டுவிழாவினை ஒட்டி வெளிவந்த நூல்கள்

| நூலின் பெயர் | | ஆசிரியர் |
|---|---|---|
| 1. மாணிக்கக் கவிதைத் தமிழ் | - | புலவர் ஆ.பழநி |
| 2. மாணிக்கனார் பிள்ளைத் தமிழ் | - | சொ.சொ.மீ.சுந்தரம் |
| 3. மாணிக்க ஆய்வியல் | - | முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன் |
| 4. மாணிக்கனார் போற்றிய விழுமியங்கள் | - | நெல்லை. ந.சொக்கலிங்கம் |
| 5. தொல்காப்பியச் செல்வர் | - | முனைவர் பழ.முத்து வீரப்பன் |
| 6. மூதறிஞர் வ.சுப.மா | - | முனைவர் பழ. முத்து வீரப்பன் |
| 7. மாணிக்கக் குறளில் வ.சுப.மாணிக்கம் | - | முனைவர் மான்விழி இரஞ்சித் |
| 8. தமிழ் ஞாயிறு | - | முனைவர் அ.அறிவு நம்பி |
| 9. மாணிக்கப் பேரொளி | - | முனைவர் ச.சவகர்லால் |



| | | |
|---|---|---|
| 1. தமிழ்க்கதிர் வ.சுப.மாணிக்கனார் | - | முனைவர் இரா.மோகன் & முனைவர் நிர்மலா மோகன் |
| 2. செம்மல் வ.சுப.மாணிக்கனாரின் படைப்பும் ஆய்வும் | - | தமிழ் உயராய்வு மையம், மேலைச்சிவபுரி (சன்மார்க்க சபை வெளியீடு) |
| 3. மூதறிஞர் வ.சுப.மா.நூற்றாண்டு விழா, ஆய்வுக்கோவை. | - | உலகத்திருக்குறள் தகவல் மையம், நெல்லை. |
| 4. மூதறிஞர் செம்மல் வ.சுப.மாணிக்கம் ஆய்வுக்கோவை | - | தமிழ்த்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம் |
| 5. செந்தமிழ்செம்மல் வ.சுப.மாணிக்கனார் | - | தமிழ்த்துறை, பாரதியார் பல்கலைக்கழகம் |
| 6. தமிழ் இமயம் வ.சுப.மாணிக்கனார் | - | வா.மு.சே.தமிழ்மணிகண்டன், மேரிலாண்ட் |

தலையார் பொறுப்பு தமிழ்மொழி வாழப்
பலவாம் புதுநூற் படைப்பு — மாணிக்கக் குறள்

# செம்மலாரின் வாழ்க்கைக் குறிப்பு

| | |
|---|---|
| பிறப்பு | *17.04.1917* |
| ஊர் | மேலைச்சிவபுரி, புதுக்கோட்டை மாவட்டம். |
| பெற்றோர் | வ.சுப்பிரமணியன் செட்டியார் - சுப.தெய்வானை ஆச்சி |
| வைத்த பெயர் | *அண்ணாமலை* |
| நிலைத்த பெயர் | *மாணிக்கம்* |
| தாய் தந்தை மறைவு | *1925-1926* |
| தொடக்கப்பணி | வட்டிக்கடைக்கணக்கர். *(1928-1935)* |
| கல்வி | வித்துவான் - *(1936- 1940)* |
| | பி.ஓ.எல்- *1945* \| அண்ணாமலைப்பல்கலைக்கழகம்<br>எம்.ஓ.எல்- *1948* \| சென்னைப்பல்கலைக்கழகம்<br>எம்.ஏ- *1951* \| சென்னைப்பல்கலைக்கழகம்<br>பி.எச்.டி- *1957* \| சென்னைப்பல்கலைக்கழகம் |
| திருமணம் | *14.11.1945* |
| மனைவியார் | திருமதி ஏகம்மை ஆச்சி |
| மக்கட்செல்வங்கள் | 1. தொல்காப்பியன்- *1946*<br>2. பூங்குன்றன்- *1949*<br>3. தென்றல்- *1951*<br>4. பாரி- *1954*<br>5. மாதரி- *1958*<br>6. பொற்றொடி- *1960* |
| ஆய்வு மாணவர் | *1940-1941* அண்ணாமலைப்பல்கலைக்கழகம் |
| பணிகள் | விரிவுரையாளர்-*1941-1948* : அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.<br>பேராசிரியர் - *1948-1963* : அழகப்பா பல்கலைக்கழகம்.<br>முதுகலைப்பேராசிரியர்- *1964-1970* அழகப்பா பல்கலைக் கழகம். |
| | தமிழ்த்துறைத்தலைவர் \| இந்திய மொழிப்புல முதன்மையர்- *1970-1977* அண்ணாமலைப்பல்கலைக்கழகம் |
| | துணைவேந்தர் *1979-1982* மதுரைகாமராசர் பல்கலைக்கழகம் |
| | முதுபேராய்வாளர் திருவனந்தபுரம் திராவிட மொழியியற்கழகம்<br>தமிழ்ப்பல்கலைக்கழக வல்லுநர் குழுத்தலைவர்- தொல்காப்பியத் தகைஞர்- *1982-1987* |



| | |
|---|---|
| பெற்ற விருதுகள் | • சன்மார்க்கசபை-செம்மல்- 1969<br>• குன்றக்குடி திருவண்ணாமலைஆதீனம்- முதுபெரும்புலவர்-<br>• ஈப்போ பாவாணர் சங்கம்- பெருந்தமிழ்த் தலைவர்- 1968<br>• அண்ணாமலைப்பல்கலைக்கழகம்- மூதறிஞர் (டி.லிட்)- 1979<br>• மதிப்பியல் விருது<br>• தமிழ்நாடு அரசு வழங்கிய திருவள்ளுவர் விருது - 1990 |
| தோற்றிய இயக்கம்– நடத்திய போராட்டம் | • தமிழ்வழிக்கல்வி இயக்கம்<br>• திருமுறைகள் பொன்னம்பலத்தில் ஏறத் தலைமை தாங்கி நடத்திய போராட்டம் |
| தலைமைப் பொறுப்பு களும் பிறவும் | • தமிழகப் புலவர் குழு<br>• இந்தியப்பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்<br>• சன்மார்க்க சபை, கல்லூரிக்குழு.<br>• கணேசர் செந்தமிழ்க்கல்லூரி<br>• காரைக்குடி தமிழ்ச்சங்கம்<br>• தமிழ்ப்பல்கலைக்கழக வல்லுநர் குழு<br>• புதுச்சேரி பல்கலைக்கழக வல்லுநர் குழு<br>• காரைக்குடி உயர் ஆராய்ச்சி மையம்<br>• பண்டிதமணிகதிரேசன் செட்டியார் நூற்றாண்டு விழாக்குழு<br>• ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு அமைப்புக்குழு |
| எழுதியநூல்கள் | • மனைவியின் உரிமை- 1947<br>• வள்ளுவம்- 1953<br>• கொடை விளக்கு -1957<br>• இரட்டைக்காப்பியங்கள்- 1961<br>• தொல்காப்பியப்புதுமை-1958<br>• நகரத்தார் அறப்பட்டயங்கள்- 1961<br>• தமிழ்க்காதல்- 1962<br>• நெல்லிக்கனி<br>• உப்பங்கழி- 1962<br>• எந்தச் சிலம்பு? - 1964<br>• தலைவர்களுக்கு-1965<br>• கம்பர்- 1965<br>• இலக்கிய விளக்கம்- 1972<br>• ஒரு நொடியில்- 1972<br>• சிந்தனைக்களங்கள்- 1975<br>• ஒப்பியல் நோக்கு-1978 |

| | |
|---|---|
| எழுதியநூல்கள் | • *மாமலர்கள்-1978*<br>• *தொல்காப்பியக்கடல் -1987*<br>• *சங்கநெறி - 1987*<br>• *காப்பியப் பார்வை-1987*<br>• *திருக்குறட்சுடர் - 1987*<br>• *இலக்கியச் சாறு -1987*<br>• *தொல்காப்பிய எழுத்ததிகாரம். நூன்மரபும் மொழிமரபும் - 1989*<br>• *மாணிக்கக்குறள்- 1991*<br>• *திருக்குறள் தெளிவுரை- 1991*<br>• *நீதிநூல்கள் உரை- 1991* |
| ஆங்கில நூல்கள் | • **The Tamil Concept of Love**<br>• **A Study of Tamil Verbs**<br>• **Collected Papers**<br>• **Tamilology** |
| நிறைவு | ***24.04.1989 (புதுச்சேரி)*** |

திரு.வ.சுப.மா



திரு.கோ.சாரங்கபாணி



திரு. ஞானசேகரபாண்டியன்



திரு. விசுவநாதன்



# காரைக்குடி கண்ட நால்வர்

# ஆல்போல் தழைத்து...


வ.சுப்பையா செட்டியார் - தெய்வானை ஆச்சி
வ.சுப. மாணிக்கம் - ஏகம்மை
தொல்காப்பியன் இராசு
பூங்குன்றன் மீனாட்சி
தென்றல் அழகப்பன்
பாரி வள்ளிக்கண்ணு
மாதரி வெள்ளையப்பன்
பொற்றொடி செந்திவேலாயுதம்
மின்னொளி இராசா
மாணிக்கப் பாவை
அன்றில்
நெல்லிக்கனி
கபிலன் ஏகம்மை
வெண்ணிலா
அழகுநங்கை சுப்பிரமணியன்
கதிரவன்
கார்த்திகேயன்
ஆதித்யன்
நன்னாகன் நந்தினி
ஆர்த்தி மெய்யம்மை
சிவராம்
ஓவியா
ஆதவன்
அரன்
அபிராமிமங்கை கார்த்திகேயன்
குந்தவை வெங்கட்
சேயிழை கண்ணப்பன்
மாணிக்கக்கம்பன் நிவாசினி
அவிநயன் அபிநயா
யுகன் வள்ளியப்பன்
சபரீஷ் முத்தையா
வேதாத்ரி
ரிஷி தியாகராசன்
கிரீஷ் கணேஷ் பூங்குன்றன்
மாணிக்கச்செந்தில்

செம்மல்டாக்டர்

# வ. சுப. மாணிக்கனார்

## அறக்கட்டளை

**மேலைச்சிவபுரி**



செம்மல் டாக்டர் **வ. சுப. மாணிக்கனார்**

அறக்கட்டளைத்தொடக்க விழா

நாள்: 20—4—92 திங்கட்கிழமை

சன்மார்க்க சபை, மேலைச்சிவபுரி

புதுக்கோட்டை மாவட்டம்

---

செம்மல் டாக்டர் வ. சுப. மாணிக்கனார்

அறக்கட்டளைத் தொடக்க விழா

அன்புடையீர்,

வணக்கம். நிகழும் ஆங்கிரச ஸ்ரீ சித்திரை மீ 8 உ (20—4—92) திங்கட்கிழமை மாலை 4 மணிக்குச் செம்மல் டாக்டர் வ. சுப. மாணிக்கனார் அறக்கட்டளைத் தொடக்க விழா, முத்தமிழ்க் காவலர் **கி. ஆ. பெ. விசுவநாதம்** அவர்கள் தலைமையில் மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையில் நடைபெறும். அவ்வமயம் தமிழறிஞர்களும் சான்றோர்களும் பங்குபெறுவர்.

டாக்டர் **கா. நாகப்பன்** அவர்கள்
(துணைவேந்தர், அழகப்பா பல்கலைக் கழகம்)

அறக்கொடையைத் துவங்கி வைப்பார்கள்

தாங்கள் விழாவில் கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

**மா. தொல்காப்பியன்**
**மா. பாரி**
**ந. அழகப்பன்**
காப்பாளர்கள்

மேலைச்சிவபுரி
8—4—92

---

**நிகழ்ச்சி நிரல்**

**தமிழ்த்தாய் வாழ்த்து :**

வரவேற்புரை : மா. தொல்காப்பியன்

விருப்பமுறி வாசித்தல் : ந. அழகப்பன்

தலைமையுரை : முத்தமிழ்க்காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம்

**அறக்கொடை வழங்கல் :**

1 மாணாக்கர்களுக்கு முதன்மைப்பரிசு—டாக்டர் கா. நாகப்பன்
2 ஆடை வழங்கல்—டாக்டர் இரா. சாரங்கபாணி
3 மருந்துக்கொடை—திரு சி. ராம. நாகப்பன்
4 கருவுற்ற பெண்களுக்குக் காசோலை வழங்கல்—திரு ப. சா. பழநியப்ப செட்டியார்

**வாழ்த்துரை**

1. டாக்டர் தமிழண்ணல்
2. டாக்டர் எழில்முதல்வன்
3. டாக்டர் சவுரிராசன்
4. டாக்டர் க. ப. அறவாணன்
5. திரு இரா. இளங்குமரன்
6. டாக்டர் ச. மெய்யப்பன்

**நன்றியுரை :** மா. பாரி

**நாட்டுப்பண்**

---

**விருப்பமுறி (உயில்)**

**22—8—1986**

"என் எஞ்சிய உடைமைகளில் (Net assets) ஆறில் ஒரு பங்கினை அறநிலையத்தின் (Trust) வைப்பு முலநிதியாக (Capital Fund) வைத்து அதிலிருந்து வரும் வருமானத்தினை நான் பிறந்த ஊரான மேலைச்சிவபுரியில் கல்வி, மருத்துவம், நலவாழ்வு, குழந்தைகள் நலம், அஃறிணை உயிர்களின் நலம் முதலான ஊர்ப்பொது நலங்கட்குச் சாதிசமய எவ்வகை வேறுபாடுமின்றி இலவசமாகச் செலவு செய்யவேண்டியது.

மேற்சொன்ன அறநிலையத்தின் ஆயுட்காப்பாளர்களாக என் முதல் மகன் தொல்காப்பியனும், மூன்றும் மகன் பாரியும், முதல் மாப்பிள்ளை அழகப்பனும் அவர்கள் குடும்பத்தின் வழியினரும் இருப்பார்கள்.

என் நூலகத்தில் நான் தொகுத்து வைத்துள்ள நூல்கள் எல்லாவற்றையும் ஒவ்வொரு நூலிலும் இன்னார் அன்பளிப்பு என்று முத்திரையிட்டு, காரைக்குடி அழகப்பர் பல்கலைக் கழகத்துக்கு அன்பளிப்பாக வழங்க வேண்டியது". (நூல்கள் வழங்கப்பட்டன).




# தகுதியுரை

அண்ணாமலை என்னும் பிள்ளைத் திருப்பெயர் கொண்ட பேராசிரியர் முனைவர் **வ.சுப.மாணிக்கனார்** அவர்கள், 17-4-1917-இல் புதுக்கோட்டை மாவட்டம், மேலைச் சிவபுரியின் புகழ் விளக்காகத் தோன்றினார். திருவாளர் சுப்பையாச் செட்டியார் திருமதி தெய்வானை ஆச்சியார் ஆகியோர்க்கு அருமகனாய், தமிழ்த் தாய்க்குப் பெருமகனாய்ப் பிறந்து, திருமதி ஏகம்மை ஆச்சியார் அவர்களின் அன்புறு கணவராய்த் திகழ்ந்து சிறந்த பெருந்தகை. தகுதி சான்ற பேராசிரியராய், கல்லூரி முதல்வராய், துணைவேந்தராய் வளர்ந்து சிறந்தவர்.

புலவர் தொடங்கி டி.லிட்., பட்டம் வரை பெற்ற பெருமகனார். வள்ளுவம் இது என்று வரைந்து காட்டியவர். வள்ளுவர் வரைந்து காட்டிய அறவழி வாழ்ந்த அண்ணல். தனித் தமிழ் நலம் பேணும் தன்மான ஏந்தல். புதுச் சொற்கள் பலவற்றைப் புனைந்த புகழ்வளர் அறிஞர். நவில்தொறும் நயம் வழங்கும் நூல்களின் படைப்பாளர்.

வள்ளுவமும் தமிழும் இவரால் வளர்ந்தன. தமிழியக்கம் இவரால் தழைத்தது. இம்மாபெரும் மாணிக்கம் அண்மையில் மறைந்தது.

மறைந்தும் மறையாத இம் மீமாந்தரின் திருக்குறட் பணியைப் போற்றும் தமிழக அரசு, 1989-ஆம் ஆண்டிற்குரிய

## "திருவள்ளுவர் விருது"

வழங்கிச் சிறப்பிக்கின்றது.

கல்வியமைச்சர　　முதலமைச்சர்

சென்னை
15-1-1990



